தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - 153

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்

## பாட்டியல்









தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல்நிலையம்
1974

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - 153

வைத்தியநாத தேசிகர் இயற்றிய

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம் - பாட்டியல்

*பதிப்பாசிரியர் :*
பண்டித வித்துவான்
**தி. வே. கோபாலையர்**, எம். ஏ., பி. ஓ. எல்.,
திருவையாறு.




தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக் கமிட்டியினருக்காகக்
கௌரவ காரியதரிசி
*வித்துவான்* **அ. வடிவேலன்**
அவர்களால் வெளியிடப்பட்டது.

கி. பி. 1974 ] [ விலை ரூ. 18-00

# வெளியிடுவோர் உரை

இலக்கண விளக்கம் என்னும் இவ்வுயரிய தமிழ் இலக்கண நூல் இயற்றமிழ் இலக்கணங்களை மூன்று பகுதிகளாக முறையாக உரைப்பதாகும். தொல்காப்பிய நெறியை வகைப்படுத்தித் தந்த பெருமை இந் நூலுக்குண்டு. நூலகம் இதுவரை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரு பகுதிகளையும், மூன்றும் பகுதியாகிய பொருளதிகாரத்தில் புறத்திணையியல், அணியியல், செய்யுளியல் ஆகியவற்றையும் வெளியிட்டு உள்ளது. இப்பகுதியில் அகத்திணையியலை இரண்டு தொகுதிகளாக இப்பொழுது நாங்கள் அச்சிட்டுள்ளோம். விரைவில் வெளிவரவிருக்கிறது. இப்பொழுது வாசக அன்பர்களுக்குப் பாட்டியல் பிரிவை அளித்து மகிழ்வதோடு, இலக்கணவிளக்கத் தொகுதி இத்துடன் நிறைவு பெறுகிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலாசிரியராகிய **வைத்தியநாத தேசிகர்** அவர்கள் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த முப்பெரும் இலக்கணப் புலவர்களுள் தலையாயவர். தருமை ஆதீனத்தைச் சார்ந்த தமிழ்ப் புலவர் பரம்பரையில் தோன்றிய இவர் தென்னாட்டை ஆண்ட நாயக்க மன்னர்களின் கவர்னர் ஒருவரின் மக்களுக்குச் சிலகாலம் கல்வி புகட்டி வந்திருக்கிறார். இவர் இலக்கண மேதை, கவிஞர், அறிஞர், ஆசிரியர். இத்தகு பெருமை சான்ற இவருடைய புலமையாலும், விடா முயற்சியாலும் விளைந்த இந்நூல் இன்று நமக்கு உறுதுணையாயுள்ளது.

இந்நூலக வாயிலாக இலக்கண நூல்களை வெளியிட விழைந்தபோது, பல்வேறு ஒப்பு நூல்களின் ஆதாரங்களும், விரிவான முன்னுரையும், போதிய விளக்கமும், அரும்பத விளக்கமும், பல பிற்சேர்க்கைகளும், தந்து பதிப்பித்தால் மொழிநூல் ஆய்வாளருக்கும், தமிழை விரும்பிக் கற்கும் சான்றோர்களுக்கும், மாணவ அன்பர்களுக்கும் உதவியாய் இருக்குமென முன்னாள் மதிப்பியற் செயலாளர் அவர்கள் வெளியிடக் கருதி ஆவன செய்தவாறே இப்பதிப்பு வெளிவருகிறது.

இந்நூல் வெளியிட ஆதாரமாக அமைந்தது புகழ்மிகு தொழிலதிபரும், தமிழ்க் காவலருமான பொள்ளாச்சி உயர்திரு **ந. மகாலிங்கம்,** பி.எஸ்ஸி., எம். ஐ. இ., அவர்கள் நூலகத்திற்கு மனமுவந்து அளித்த கையெழுத்துப் படியேயாகும். இப் "படி" பல நாட்களுக்கு முன் அச்சிட்ட பழைய நூல் ஒன்றிலிருந்து எழுதப்பட்டுள்ளது. அன்னாருக்கு யாம் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையோம்.

இதனை மிகச் சிறப்பாக வகுத்தெழுதிப் பதிப்பித்துதவிய பண்டித வித்துவான் திரு **தி. வே. கோபாலையர்**, எம்.ஏ.,பி.ஓ.எல்., அவர்கட்கும், செம்மையோடு விரைவில் வெளிவரத் தக்க முறையில் செயலாற்றிய துணை நூலகர் திரு. **எம். சீராளன்,** பி. ஏ., அவர்கட்கும், காலத்தோடு நன்முறையில் அச்சிட்டுத் தந்த **குடந்தை ஜெமினி அச்சக உரிமையாளர்** அவர்களுக்கும் கனிந்த உள்ளத்தோடு நன்றி கூறிப் பாராட்டுகின்றோம்.

இத்தகைய பணிகளுக்கு ஆக்கமளித்துப் பேணி வரும் நமது **தமிழக அரசை** நன்றியோடு போற்றி மகிழ்கின்றோம்.

தஞ்சாவூர்
*3—7—1974*

**அ. வடிவேலன்,**
கௌரவ காரியதரிசி,
சரசுவதி மகால் நூல் நிலையம்.

# பதிப்பாசிரியர் முகவுரை

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கணப் பெரும்புலவரான திருவாரூர் **வைத்தியநாத தேசிகர்** தாமே உரையும் இயற்றி அமைத்த 'குட்டித் தொல்காப்பியம்' எனப்படும் இலக்கண விளக்கம் பொருட்படலப் பாட்டியலோடு நிறைவுறுகிறது. இந்நூலின் பாட்டியலை உரையுடன் இயற்றியவர் வைத்தியநாத தேசிகருடைய இளைய மகனாரான தியாகராச தேசிகர் என்னும் செய்தி 'பொன்மலை' என்று தொடங்கும் பாட்டியல் பதிகத்தான் (பக்கம்-384) போதருகிறது.

இந்நூலின் எழுத்துப்படலமும் சொற்படலமும் பொருட்படலத்தின் முன்னைய நான்கு இயல்களும் பதிப்பிக்கப்பெற்ற முறையைப் பின்பற்றியே பதிப்பிக்கப் பெற்றுள்ள பாட்டியலோடு இந்நூல் நிறைவுறுகிறது.

இந்நூலை இம்முறையில் பதிப்பித்தல் வேண்டும் என்று கூறி இவ்வாய்ப்பினை எனக்கு நல்கிய தஞ்சை சரசுவதி மகால் முன்னாள் கௌரவ காரியதரிசி முதுபெரும் புலவர் திருவாளர் **நீ. கந்தசாமி பிள்ளை** அவர்களுக்கும், அப்பணி தொடர்ந்து நிகழ்ந்து நன்முறையில் நிறைவேற ஆவன புரிந்துவரும் இந்நாள் மதிப்பியற் செயலர் திருவாளர் வித்துவான் **அ. வடிவேலனார்** அவர்களுக்கும், துணை நூலகர் திரு. **சீராளன்,** B.A. அவர்களுக்கும் பெரிதும் நன்றியறிதலுடையேன்.

இப்பதிப்பிற்குப் பெரிதும் பயன்பட்டுள்ள பிரபந்த மரபியல் என்னும் நூலைக்காணும் வாய்ப்பின்றி யான்

அலமந்தகாலேத் தம்மிடமுள்ள அந்நூலின் கையெழுத்துப் படியினை விரைவுடன் உதவிய பெருந்தகையாளர் திருவாளர் **மு. அருணாசலம் பிள்ளை**, M.A. அவர்கள் காலத்தினால் செய்த நன்றிக்கு என்றென்றும் கடப்பாடுடையேன்.

பிரபந்த தீபிகை என்ற நூலைப் படியெடுத்து எனக்கு அனுப்பிய என் இளவல். **Dr. பஞ்சாபகேசன், M.A., M.SC.** எண்ணில் வல்லவனாயிருப்பதோடு எழுத்திற்கும் பயன்பட்டுள்ள திறம் நினைந்து பெருமிதமுறுகிறேன்.

வழக்கம்போல இப்பதிப்பிற்குப் பல்லாற்றானும் உதவியுள்ள திரு. வித்துவான் **கங்காதரன், M.A.** உள்ளிட்ட என் உடன் பிறந்தார் அனைவருக்கும் என் ஆசிகள். இப்பதிப்பிற்குப் பயன்பட்டுள்ள நூல்களை யெல்லாம் பதிப்பித்துதவியுள்ள சான்றோர் அனைவருக்கும் என்நன்றி.

இதனையும் நன்முறையில் அச்சிட்டளித்த **குடந்தை ஜெமினி அச்சக** உரிமையாளருக்கும், அவ்வச்சகத் தொடர்பான பணிபுரியும் அலுவலர் அனைவருக்கும் என் கனிவான நன்றி.

இப்பதிப்பில் என் அயர்வான் ஏற்பட்டிருக்கக் கூடிய பிழைகளைப் பொறுத்தருளுமாறு தமிழ் கூறு நல்லுலகத்துக்கு என் வேண்டுகோள்.

இடையிடையே அவ்வப்போது ஏற்பட்ட இடையூறுகளையெல்லாம் செகுத்து இந்நூல்முழுமையும் இந்நூலக வாயிலாகப் பதிப்பித்தற்கு எனக்கு வாய்ப்பளித்த ஐயாற்றரசின் அடியிணைகளை வந்தித்து வாழ்த்துகிறேன்.

46, மேல மடவிளாகம்
திருவையாறு
28—5—1974

**ஐயாறன் கோபாலையன்**

# உள்ளுறை

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம் - பாட்டியல்

### முன்னுரை

---

தனிநிலைச் செய்யுளமைப்பை விரித்துரைக்கும் செய்யுளியலின் பிற்கூறு செய்யுளின் முதற்சீரின் பத்துவகைப் பொருத்தம், பலவகைப்பட்ட பொருள்தொடர்நிலை சொல்-தொடர்நிலைச்செய்யுட்கள் முதலியபற்றி நுவலும் பாட்டியலாகும்.

சங்ககாலத்துக்குப் பின் பாட்டியல் இலக்கணம் விரிவாக இயற்றப்படலாயிற்று. பாட்டியல்நூல் அமைக்கப்படுவதில் அகத்தியநெறி, இந்திரகாளீயநெறி என்ற இருவகை நெறிகள் நிலவியிருந்தன என்று கருதப்படுகிறது. அவிநயனார் கலாவியல், பொய்கையார் கலாவியல், செய்யுள் வகைமை, முள்ளியார் கலித்தொகை, கல்லாடர் பாட்டியல், வருணர் பாட்டியல் முதலிய பாட்டியல் நூல்கள் இக்காலத்தில் வழக்கொழிந்துவிட்டன. இனி, வழக்கிலுள்ள பாட்டியல் நூல்களை நோக்குவோம்.

**1. பன்னிரு பாட்டியல்**

இன்று வழக்கிலுள்ள பாட்டியல் நூல்களில் காலத்தால் முற்பட்டதும், விரிவாக அமைந்ததும், ஆசிரியர் பலருடைய நூற்பாக்களின் தொகுப்பாக அமைந்ததும் பன்னிரு பாட்டியல் என்ற நூலேயாகும். இது 360 நூற்பாக்களை உடையது. இது பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது.

## 2. வெண்பாப் பாட்டியல்

இது வெண்பா யாப்பில் அமைந்தது. குணவீர பண்டிதரால் இயற்றப்பட்டது. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டாகும். பாட்டியல் நூல்களில் இதுவே பெருவழக்கிலுள்ளது. இது இந்திரகாளீய நெறியைச் சேர்ந்தது. இதன்கண் 102 நூற்பாக்கள் உள்ளன.

## 3. நவநீதப் பாட்டியல்

நவநீத நடர் என்பவரால் கட்டளைக்கலித்துறை யாப்பில் 14ஆம் நூற்றாண்டில் அகத்திய நெறியை ஒட்டி 102 காரிகைகளில் அமைந்த இந்நூலுக்குப் பழைய உரையும் உள்ளது.

## 4. சிதம்பரப் பாட்டியல்

புராணத்திருமலைநாதருடைய மகனாராகிய பரஞ்சோதி-யாரால் 16ஆம் நூற்றாண்டில் ஆசிரிய விருத்தயாப்பில் பாடப்பட்ட இந்நூல் 5 இயல்களையும் 47 பாடல்களையும் கொண்டு செய்யுளியல்செய்திகள் பாட்டியல்செய்திகள் ஆகிய இரண்டனையும் விளக்கிச் செல்கிறது.

## 5. பிரபந்த மரபியல்

சிதம்பரப் பாட்டியலுக்குப் பின்னர்த் தோன்றிய பிரபந்த மரபியல் என்ற நூலில் பிரபந்தங்கள் 96 என்ற வரையறை குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்கண் ஏறத்தாழ 90 பிரபந்தங்களின் இலக்கணம் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

## 6. இலக்கணவிளக்கப் பாட்டியல்

பாட்டியல் நூல்களில் மிகத் தெளிவாகவும் சிறப்பாகவும் அமைந்து ஆசிரியராலேயே உரையும் வரையப்பெற்ற சிறப்பினை உடைய இப்பாட்டியல் 181 நூற்பாக்களை உடையது. இதன் காலம் 17ஆம் நூற்றாண்டாகும்.

### தொன்னூல் விளக்கம்

18ஆம் நூற்றுண்டினராகிய வீரமாமுனிவர் இயற்றிய யாப்பதிகாரத்துப் பாட்டியல் பற்றிய பகுதியிலும், சதுர அகராதியிலும் 96 வகைப் பிரபந்தங்கள் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

### 7. பிரபந்த தீபிகை

வேம்பத்தூர்ச் சங்க வித்துவான்களில் ஒருவராகிய பெரிய சாமாவையரவர்கள் புதல்வர் பாப்புவையர் என்ற முத்துவேங்கட சுப்பையர் என்பார் சென்ற நூற்றுண்டில் ஆசிரிய விருத்த யாப்பில் இயற்றிய பிரபந்த தீபிகை என்ற பாட்டியல் நூல் 26 விருத்தங்களில் அமைந்துள்ளது.

### 8. முத்துவீரியப் பாட்டியல்

சென்ற நூற்றுண்டில் இயற்றப்பட்ட முத்துவீரியம் என்ற ஐந்திலக்கண நூலின் யாப்பதிகாரத்தின் ஒழிபியற் பகுதியில் தொன்னூல் விளக்கத்தில் உரைநடையாக வரையப்பட்ட பிரபந்த இலக்கணங்கள் யாவும் நூற்பா வடிவில் அமைக்கப் பட்டுள்ளன.

இப்பாட்டியல் நூல்களின் பலவற்றில் காணப்படும் மங்கலம், சொல், பால், வருணம், உண்டி, தானம், அக்கரம், நாள், கதி, கணம் என்ற பத்துப் பொருத்தங்களேயும், ‘ தன்னுன் ஒருபொருள் கருதிக் கூறல்’ என்ற சிதைவிலக்கணத்துக்குப் பேராசிரியர் எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார். நச்சினர்க்கினியருக்கும் இப் பாட்டியல் மரபு உடன்பாடன்று. எனினும் உலக வழக்கில் பல நூற்றுண்டுகளாகப் பிரபந்தங்களின் இலக்கணங்கள் பெரும்பாலும் பாட்டியல் நூல்கள் வாயிலாகவே வெளியிடப் பட்டுள்ளமையின் அவற்றை நல்லன என்று கொண்டு அறிய முற்படுவதே நம்மனேர்க்கு ஏற்றதாகும். இனி இலக்கண விளக்கப் பாட்டியலே நோக்குவோம்.

# இயல் அமைப்பும் நுவல் பொருளும்

தனிநிலைச்செய்யுள் அமைப்புப்பற்றிச் செய்யுளியலில் விரித்துரைத்த ஆசிரியர் பொருள்தொடர்நிலை சொல்தொடர்-நிலைச் செய்யுட்களைப் பற்றியும், செய்யுள் முதற்சீர்ப் பொருத்தம் பற்றியும், அடிவரையறை இல்லாத செய்யுட்களாகிய உரை நூல் பிசி முதுசொல் மந்திரம் குறிப்புமொழி என்பன பற்றியும், வழக்கு செய்யுள் என்ற இருவகை மரபு இலக்கணம் பற்றியும், நான்கு வருணத்தவர் இலக்கணம், நால்வகைப்புலவர் இலக்கணம் அகலக்கவி அரங்கேற்றப்படும் அவையின் இலக்கணம், அகலக்கவியைச் செய்துகொடுப்போர் இலக்கணம் கொள்வோர் இலக்கணம் ஆகியவை பற்றியும் விரித்துரைக்கும் இப்பாட்டியலை இயற்றியுள்ளார்.

செய்யுளியலின் தொடக்கத்தில் செய்யுள் உறுப்புக்கள் எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்ற ஆறுமே என்று வைத்தியநாதநாவலர் கூறியிருப்பவும், இப்பாட்டியலின் தொடக்கநூற்பா 'மாத்திரைமுதலா யாத்து இனிது அமைத்த பாட்டு' என்று குறிப்பிடும் செய்தி 'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ' தொல். செய். 1. என்ற நூற்பாவினை ஒட்டி இருத்தலை நோக்கவும், எழுத்ததிகாரத்து 27ஆம் நூற்பாவில் வைத்தியநாத தேசிகர் சகரம் ஐ ஒள என்பனவற்றொடு மொழிக்கு முதலாக வாராது எனவும், யகரம் ஆகாரம் ஒன்றுடனேயே மொழிக்கு முதலாகும் எனவும் கூறியிருப்பவும், எழுத்துக்களுக்கு நாள் உரிமை கூறும் இடத்து, இப்பாட்டியலில்,

'சகர வருக்கந் தனில்முதல் நான்கும்
புகலுங் காலை புருட நாள்; மேல்
ஐந்து மூன்றச் சுவினி பரணி.' —28

'உற்றயா ஒன்றும் உத்திரட் டாதி;
யூயோ இரண்டும் ஏயும் மூலம்.' —34

என ஸை, ஸெள என்பனவும் யூயோ என்பனவும் மொழிக்கு முதலாம் என்று கூறப்பட்டிருத்தலை நோக்கவும், 'பொன்மலை நின்று' என்ற பதிகம் குறிப்பிட்டுள்ளபடி,

'இளவல்பன் நூலும் ஆராய்ந்து
உகந்துதொல் காப்பியத் துண்மை தோன்ற
ஐந்திய லுந்தன் புந்திசான் றுகத்
தந்தைமுன் உரைத்தநூல் தான்முடிவு எய்த
அந்தண் ஆரூர்ச் சந்திர மவுலி
அருள்உட் கொண்டு மருள்மனம் நீக்கி
புலங்கொளப் பாட்டியல் விளங்க உரைத்தனன்
வாய்மைதரு தியாக ராயதே சிகனே.'

என்ற கருத்தான் பாட்டியலை வரைந்தவர் வைத்தியநாத தேசிகரின் மகனார் தியாகராய தேசிகராவார் என்பது வலியுறுகிறது.

செய்யுள் என்பது எழுவகைப்படும்; அவ்வகையுள் முதலாவது பாட்டாகும். பாட்டுஎன்பது பரந்துபட்டுச் செல்வதோர் ஓசைத் தொகுதியாகிய பா என்ற உறுப்பினை உடையது.

அப்பாட்டு ஆசுகவி மதுரகவி சித்திரகவி வித்தாரகவி என்று நான்குவகைப்படும்.

## ஆசுகவி

புலவன் ஒருவன் இன்ன எழுத்து இன்னசொல் இன்ன பொருள் இன்னயாப்பு இன்னஅணி இன்னஎழுத்துமுதல் இன்னஎழுத்துஇறுதி என்றுகொண்டு பாடுக என்று சொல்லிய அப்பொழுதே அவன் கூறியாங்குப் பாடுவது ஆசுகவியாம்.

**மதுரகவி**

சொல் பொருள் தொடை அணி ஓசை என்பன இன்பமுறப் பொருந்தப் பாடப்படுவது மதுரகவி.

**சித்திரகவி**

சித்திரகவியாவது மடக்கும் கோமூத்திரிகை முதலியனவு மாகச் சொல்லணியில் கூறப்பட்டனவாம்.

**வித்தாரகவி**

வித்தாரகவியாவது செய்திகளை விரிவாகப்பாடும் பாடலாகும். அது பாட்டுக்கள் பொருள் தொடர்புஉறப் பலவாகத் தொடர்ந்து வரும் தொடர்நிலை, பல அடிகளாக அமைந்த ஒரே பாடல் ஆகிய தனிநிலை என இருவகைப்படும். அவற்றுள் தொடர்நிலைச் செய்யுளின் வகைகள் கணக்கில் அடங்கா.

**பொருத்தம் பத்து**

வித்தாரகவியை அமைக்கும்போது, அதன் முதற்பாடலின் முதற்சீர்க்கும் அக்கவியைக் கொள்ளும் பாட்டுடைத் தலைவன் பெயருக்கும் அமையவேண்டிய பொருத்தங்கள் பத்து ஆகும். அவை முறையே மங்கலம் சொல் பால் வருணம் உண்டி தானம் அக்கரம் நாள் கதி கணம் என்பனவாம்.

**1. மங்கலம்**

சீர் பொன் பூ மணி திங்கள் பரிதி கார் திரு எழுத்து கங்கை யானை கடல் நிலை மா உலகம் சொல் நீர் தேர் அமுதம் புகழ் நிலம் ஆரணம் கடவுள் திகிரி முதலியனவும் இவற்றின் பொருள் தரும் ஏனைய சொற்களும் முதற் சீர்க்கு மங்கலச் சொற்களாம்.

**2. சொல்**

முதற்சீராக அமையும் சொல் விழுமிய பொருள் தெரிவித்தல் வேண்டும்; பல வேறுபட்ட பொருள்செய்ய இடம் தருதல் கூடாது. வகையுளியாக அமைதல் கூடாது; ஈறுதிரியவும் கூடாது. இவ்வாறு அமைதலே சொல்பொருத்தமாம்,

**3. பால்**

ஆணுக்குக் குற்றெழுத்தும், பெண்ணுக்கு நெட்டெழுத்தும், பேட்டினுக்கு ஒற்றும் ஆய்தமும் பால் பொருத்தமான எழுத்துக் களாம்.

**4. வருணம்**

பன்னீருயிரும் க் ங் ச் ஞ் ட் ண் என்ற ஆறு ஒற்றும் அந்தணருக்கும், த் ந் ப் ம் ய் ர் என்ற ஆறுஒற்றும் அரசர்க்கும், ல் வ் ற் ன் என்ற நான்கு ஒற்றும் வணிகருக்கும், ழ் ள் என்ற இரண்டும் வேளாளருக்கும் உரிய வருணப் பொருத்தமான, எழுத்துக்களாம். இவற்றுள் பன்னிரண்டு உயிர்களையும் பிரமனும் க் ங் என்பனவற்றை அறனும், ச் ஞ் என்பனவற்றைத் திருமாலும், ட் ண் என்பனவற்றை முருகனும், த் ந் என்பனவற்றை இந்திரனும், ப் ம் என்பனவற்றைச் சூரியனும், ய் ர் என்பனவற்றைச் சந்திரனும், ல் வ் என்பனவற்றை இயமனும், ழ் ள் என்பனவற்றை வருணனும், ற் ன் என்பனவற்றைக் குபேரனும் படைத்தனர்.

**5. உண்டி**

க் ச் த் ப் ந் ம் வ் என்ற ஏழ் மெய்களும் அ இ உ எ என்ற நான்கு உயிர்களும் அமுத எழுத்துக்களாம். ய் ர் ல் ள் என்ற நான்கு மெய்களும், யா ரா லா ளா யோ ரோ லோ ளோ என்ற உயிர்மெய்களும் நச்செழுத்துக்களாம்.

அமுத எழுத்தும் நச்செழுத்தும் முதல்மொழிக்கே அன்றித் தசாங்கத்தயற்கும் கொள்க. மலை நதி நாடு ஊர் தார் குதிரை களிறு கொடி முரசு ஆணை என்ற பத்தும் தசாங்கமாம்.

**6. தானம்**

அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ என்பன தம்மில் ஒத்தனவாகப் பாட்டுடைத் தலைவன் பெயரின் முதல் எழுத்தைத் தொடங்கி இவ் வைவகை எழுத்துக்களையும் பால குமார ராச விருத்த மரணப் பொருத்தங்களாக அமைத்து முதல் மூன்று

பொருத்தங்களையும் ஏற்று, ஏனை இரண்டையும் விடுத்து ஏற்ற பொருத்தமுடைய எழுத்தை முதற்சீர் முதல் எழுத்தாகக் கோடலே தானப் பொருத்தமாம்.

### 7. அக்கரம்

முதற்சீர் எழுத்துப் பொருத்தத்திற்கு மூன்று ஐந்து ஏழ் ஒன்பது என்ற வியனிலை எழுத்துக்களே ஏற்றனவாம். சமனிலையாகிய நான்கு ஆறு எட்டு என்பன பொருந்தா.

### 8. நாள்

இனி, நாட்கு உரிமை கூறும் வழி அ ஆ இ ஈ என்ற நான்கு உயிரின் நாள் கார்த்திகை; உ ஊ எ ஏ ஐ என்பனவற்றின் நாள் பூராடம்; ஒ ஓ ஔ என்பனவற்றின் நாள் உத்திராடம்; க கா கி கீ – திருவோணம்; கு கூ – திருவாதிரை; கெ கே கை – புனர்பூசம்; கொ கோ கௌ – பூசம்; ச சா சி சீ – ரேவதி; சு சூ செ சே சை – அசுவினி; சொ சோ சௌ – பரணி; ஞா ஞெ ஞொ – அவிட்டம்; த தா – சோதி; தி தீ து தூ தெ தே தை – விசாகம்; தொ தோ தௌ – சதயம்; ந நா நி நீ நு நூ – அநுடம்; நெ நே நை – கேட்டை; நொ நோ நௌ – பூரட்டாதி ப பா பி பீ – உத்திரம்; பு பூ – அத்தம்; பெ பே பை பொ போ பௌ – சித்திரை; ம மா மி மீ மு மூ – மகம்; மெ மே மை – ஆயில்யம்; மொ மோ மௌ – பூரம்; யா – உத்திரட்டாதி; யூ யோ – மூலம்; வ வா வி வீ – ரோகிணி; வெ வே வை வௌ – மிருகசீரிடம் என முறையே எழுத்துக்களுக்கு உரிய நாள்கள் வரையறுக்கப்பட்டுள்ளன.

தலைவனுடைய பெயரின் முதலெழுத்திற்குரிய நாளைக் குறித்துக்கொண்டு அதுமுதல் 27 நாட்களையும் ஒன்பது ஒன்பதாகப் பிரித்துச் சன்மம் அநுசன்மம் உபசன்மம் என்று பெயரிட்டு அவற்றில் வரும் இரண்டு நான்கு ஆறு எட்டாம் நாள்களுக்கு உரிய எழுத்துக்களே நாட்பொருத்தம் உடைய எழுத்துக்கள் என்று கொள்ளுதல் வேண்டும்.

தலைவன் பெயருக்கு உரிய நட்சத்திரம் தொடங்கி அது தொடங்கிவரும் எட்டாம் இராசிக்குரிய இரண்டேகால் நட்சத்திரமும், எண்பத்தெட்டாம்கால் பொருந்திய அழிவுதரும் நாளும் நீக்கி ஏனை நாள்களுக்குரிய எழுத்துக்களை முதற்சீர்க்குக் கொள்க.

## 9. கதி

க ச ட த ப ற என்ற வல்லொற்றுக்களும் அ இ உ எ என்ற நான்கு குறில்களும் தேவர்கதிக்கும், ஆ ஈ ஊ ஏ என்ற நெடில்களும் ங ஞ ண ந ம என்ற மெல்லின மெய்களும் மக்கள் கதிக்கும், ஒ ஓ ய ர ல வ ழ ற என்பன விலங்கின் கதிக்கும் ஏனைய நரகர்கதிக்கும் உரிய எழுத்துக்களாம்.

## 10. கணம்

மூவசைச்சீர்களுள் ஆதிநேர் நீர்க்கணம், இடைநேர் தீக் கணம், இறுதிநேர் ஆகாயகணம், முற்றும் நேர் சுவர்க்க கணம், ஆதிநிரை சந்திரகணம், இடைநிரை சூரியகணம், இறுதிநிரை வாயுகணம், முற்றும்நிரை பூகணம் எனப்படும். இவற்றுள் ஆதி நேரும் முற்றும் நேரும் ஆதி நிரையும் முற்றும் நிரையும் முதற் சீர்க்குப் பொருத்தமுடைய கணங்களாம். தேமா புளிமா என்ற ஈரசைச் சீர்களைத் தேமாங்காய் புளிமாங்காய் போலவும், கருவிளம் கூவிளம் என்ற ஈரசைச்சீர்களைக் கருவிளங்கனி கூவிளங்கனிபோலவும் கொள்க. தேமா பிரமகணம், புளிமா இலக்குமிகணம், கருவிளம் சுரபிகணம் கூவிளம் கருடகணம் எனவும் பெயரிடப்படும்.

தானப்பொருத்தம், நாட்பொருத்தம், கணப்பொருத்தம் ஆகியவை தவறுதல் கூடா. மங்கலப் பொருத்தம் பிறழ்வதாயின் மங்கலச்சொற்கு அடைகொடுத்தும் பரியாயச் சொல் அமைத்தும் பாடலாம். அம்மங்கலச் சொல் முதற்சீரின் முதலில் அன்றி நடுவிலும் இறுதியிலும் கூட வரலாம். பாட்டுடைத் தலைவனுடைய தசாங்கங்களை ஒரு சீராலே பாடுதல் வேண்டும். பிரித்துப் பாடுவது குற்றமாம். பிரித்துக்கூறும் நிலை ஏற்பட்டால் தொகை கொடுத்து நச்செழுத்து அகற்றிக் கூறல் வேண்டும்.

இத்தகைய பத்துப்பொருத்தமும் முறையே அமையப் பெரும்பாலும் மூவசைச்சீரை முதற்சீராகக்கொண்டு அகலக்கவி இயற்றப்படும்.

அகலக் கவியுள் தொடர்நிலைச் செய்யுள் பிள்ளைத்தமிழ் முதலாகக் காப்பியம் ஈருகச் சொல்லப்படும் ஐம்பத்தைந்தும், அவை போல்வன பிறவும் ஆம்; அவற்றுள்,

### பிள்ளைத்தமிழ்

காப்பு செங்கீரை தால் சப்பாணி முத்தம் வருகை அம்புலி சிறுபறை சிற்றில் சிறுதேர் என்ற பத்துப் பருவங்களும் ஆண்பால் பிள்ளைத்தமிழின் பருவங்களாம். பெண்பால் பிள்ளைத்தமிழுக்குப் பின்மூன்று பருவங்களாக ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கு உரியன வற்றை நீக்கிக் கழங்கு அம்மானை ஊசல் என்ற பருவங்கள் கொள்ளப்படும். பிள்ளைத்தமிழ் சந்தவிருத்தத்தானும் அகவல் விருத்தத்தானும் பாடப்படும். காப்புப் பருவத்தில் காத்தற் கடவுளாகிய திருமால், சிவபெருமான், பார்வதி, பிரமன், இந்திரன், விநாயகன், முருகன், சத்தமாதர், திருமகள், கலைமகள், முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகியோர் முறையே காப்பாராக என்று பாடுதல் மரபு. பிள்ளைத்தமிழைக் குழந்தை பிறந்தபின் மூன்றும் திங்கள் முதல் இருபத்தொரு திங்களுக்குள் ஒற்றைப்படைத் திங்களில் வளர்பிறையில் பாடுதல் வேண்டும். அஃது இயலாத தாயின் மூன்றும் ஆண்டு ஐந்தாம் ஆண்டு ஏழாம் ஆண்டு இவற்றிலும் பாடலாம். பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில் ஒன்பது அல்லது பதினெரு பாடல்கள் அமைதல்வேண்டும். ஏனைய பருவங்கள் பப்பத்துப் பாடல்களைக் கொண்டனவாதல் வேண்டும்.

### 2. கலம்பகம்

முதற் பாடல் ஒருபோகாகவோ வெண்பாவாகவோ கலித்துறையாகவோ அமைதல் வேண்டும். புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண்,

களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்ற பதினெட்டு உறுப்புக்களை உடைத்தாய் மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம் கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை என்ற பாப்பாவினங்கள் அமைய இடைஇடையே வெண்பாவும் கலித்துறையும் கொண்டு அத்தாதித் தொடையாக இறுதியும் முதலும் மண்டலிக்கத் தேவருக்கு நூறு, அந்தணருக்குத் தொண்ணூற்றைந்து, அரசர்க்குத் தொண்ணூறு, அமைச்சருக்கு எழுபது, வணிகருக்கு ஐம்பது, வேளாளருக்கு முப்பது என்ற பாடல் வரையறை அமைய இந்நூல் பாடப்படுவதாகும்.

### 3. பன்மணி மாலை

கலம்பக உறுப்புக்கள் பதினெட்டனுள் ஒருபோகு அம்மானை ஊசல் என்பன தவிர ஏனைய அமையக் கலம்பக இலக்கணத்துள் ஏனையகொண்டு பாடப்படுவது.

### 4. மும்மணிக் கோவை

அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை மூன்றும் ஒன்றன் பின் ஒன்ருக அமைய இவ்வாறு அகவலை அடுத்து வெண்பாவும் வெண்பாவை அடுத்துக் கட்டளைக்கலித்துறையுமாக முப்பது பாடல்கள் அந்தாதித் தொடை அமையப் பாடப்படுவது.

### 5. அகப்பொருட்கோவை

முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் என்பனவற்றை உட்கொண்டு களவு கற்பு என்ற இரு பெரிய பிரிவுகளை உடையதாகி, நானூறு கட்டளைக்கலித்துறைப் பாடல்களால் திணை கைகோள்கள் முதலிய பன்னிரண்டு உறுப்புக்களும் குறைபாடின்றி விளங்கக் கூறப்படுவது அகப்பொருட் கோவை ஆகும்.

### 6. தொகைச் செய்யுள்

அளவால் நெடுந்தொகை குறுந்தொகை முதலாகவும் பாட்டால் கலித்தொகை முதலாகவும் கூறப்படும் தொகைச் செய்யுட்கள் பலவகைப்படும்.

### 7. இணைமணி மாலை

வெண்பாவும் அகவலும் அடுத்து அடுத்து இணையப் பாடப்படும் அந்தாதித் தொடையில் அமைந்த நூறு பாடல்கள் வெண்பா அகவல் இணைமணி மாலையாம். அவ்வாறு வெண்பாவும் கட்டளைக்கலித்துறையும் அந்தாதியாக நூறு செய்யுட்கள் அமையின் வெண்பாக் கலித்துறை இணைமணி மாலையாம்.

### 8. இரட்டை மணிமாலை

வெண்பாவும் கலித்துறையும் முறையான் அந்தாதித் தொடையான் இருபது செய்யுட்கள் பாடப்படின் இரட்டை மணிமாலை ஆகும்.

### 9. மும்மணி மாலை

வெண்பாவும் கட்டளைக்கலித்துறையும் ஆசிரியப்பாவும் அந்தாதித்தொடையான் முப்பது பாடல்கள் பாடப்பெறின் மும்மணிமாலை ஆகும்.

### 10. நான்மணி மாலை

வெண்பா கட்டளைக்கலித்துறை விருத்தம் அகவல் என்பன முறையானே அந்தாதித் தொடையான் நாற்பது பாடல்கள் பாடப்பெறின் நான்மணி மாலையாகும்.

### 11. இருபா இருபஃது

தொடர்ந்து பத்து வெண்பாவும் பின் தொடர்ந்து பத்து ஆசிரியப்பாவும் அந்தாதித் தொடையாக இணைந்துவரும் பிரபந்தம் இருபா இருபஃது ஆகும்.

### 12. ஒருபா ஒருபஃது

ஆசிரியப்பாவோ வெண்பாவோ கட்டளைக் கலித்துறையோ ஒருபொருள்மேல் பத்துப்பாடல்கள் அந்தாதித்தொடையில் அமைத்துப் பாடப்பெறின் ஒருபா ஒருபஃது ஆகும்.

### 13. ஒலி அந்தாதி

பதினாறு கலை வகுப்பான் பல சந்தங்களை உடைய முப்பது பாடல்கள் அந்தாதித்தொடையில் பாடப்படும் பிரபந்தம் ஒலி அந்தாதி ஆகும்.

### 14. பெயர் இன்னிசை, ஊர் இன்னிசை

பாட்டுடைத்தலைவன் பெயரைவைத்து அவன் சிறப்புக்களை 90, 70, 50 இன்னிசை வெண்பாக்களால் பாடும் பிரபந்தம் பெயர் இன்னிசை ஆகும்.

### 15. வருக்கமாலை

மொழிக்கு முதலாகும் வருக்க எழுத்து ஒவ்வொன்றையும் முதலெழுத்தாகக்கொண்டு ஒவ்வொரு கவிபாட, அவ்வாறு பாடப் படும் கவியின் தொகுப்பாகிய பிரபந்தம் வருக்கமாலையாகும்.

### 16. கைக்கிளை

ஒருதலைக் காமத்தினை ஐந்து விருத்தத்தால் சிறப்பித்துப் பாடும் பிரபந்தம் கைக்கிளை ஆகும்.

### 17. மங்கல வள்ளை

நல்ல சந்தத்தில் உயர்குல மடவரலை ஒன்பது வெண்பாக் களில் சிறப்பித்துப்பாடும் பிரபந்தம் மங்கல வள்ளை எனப்படும்.

### 18. இரட்டை மணிமாலை (பிறிதொரு வகை)

வெண்பாப்பத்தும் விருத்தம்பத்தும் அந்தாதித்தொடையான் பாடுதலும் இரட்டைமணி மாலையாம்.

### 19. நேரிசை

இன்னிசைவெண்பாவைப் போலத் தலைவன் பெயரையும் ஊரையும் சார்ந்துவர 90 70 50 பாடல்கள் நேரிசை வெண்பா-வாகப் பாடின் முறையே பெயர் நேரிசை எனவும், ஊர் நேரிசை எனவும் பெயர்பெறும்.

### 20. மெய்க்கீர்த்தி மாலை

சொற்சீரடியாலே அரசனுடைய செயல்கள் பற்றிய புகழைக் கூறும் பிரபந்தம் மெய்க்கீர்த்திமாலையாகும்.

### 21. காப்புமாலை

தலைவனைக் கடவுள் காக்க வேண்டும் என்று பாடப்படும் 3, 5 அல்லது 7 பாடல்கள் கொண்ட பிரபந்தம் காப்பு மாலையாகும்.

### 22. வேனில்மாலை

இளவேனிலையும் முதுவேனிலையும் சிறப்பித்துப் பாடப்படும் பாடல்களின் தொகுதி வேனில்மாலை ஆகும்.

### 23. பல்சந்தமாலை

பத்துவகைச் சந்தங்களில் ஒவ்வொரு சந்தத்திற்கும் ஒரு கவி முதல் பத்துக்கவிவரை பாடப்படும் பிரபந்தம் பல்சந்தமாலையாம்.

### 24. அங்கமாலை

வெண்பாவாலோ வெளிவிருத்தத்தாலோ ஆண்மகன் உறுப்புக்களையோ பெண்மகள் உறுப்புக்களையோ முறையாக அந்தாதித் தொடையுறப் பாடும் பிரபந்தம் அங்கமாலை ஆகும்.

### 25. வசந்தமாலை

தென்றலை வருணித்து அந்தாதியாகப் பாடப்படும் பாடல்களின் தொகுதி வசந்தமாலையாகும்.

### 26. நவமணிமாலை

வெண்பா முதலாகப் பாவும் பாவினமுமாக அந்தாதித் தொடையில் பாடப்படும் ஒன்பது பாடல்களின் தொகுப்பு நவமணி மாலையாகும்.

## 27. பரணி

ஆயிரம் யானைகளைப் போர்க்களத்தில் வென்ற வீரனைப்பற்றிப் பாடப்படும் பரணி என்ற பிரபந்தம் கடவுள் வாழ்த்து, கடை திறப்பு, பாலைவருணனை, காளிகோட்டவருணனை, பேய்க்கண வருணனை, காளிக்குக் கூளிகூறல், கூளிக்குக் காளிகூறல் இவற்றால் தலைவன் புகழை உரைத்து வெட்சிமுதல் வாகை ஈறாகிய அவன் சிறப்புக் கூறிக் களம் வேட்டல் என்ற பகுப்பு ஈறாக அளவடி முதலாக எனைத்துச்சீரானும் இரண்டுஅடிப் பாடல் களால் பாடப்படுவதாகும்.

## 28. தசாங்கப்பத்து

நேரிசை வெண்பாக்களால் தலைவனுடைய மலை கடல் நாடு ஊர் தார் குதிரை களிறு கொடி முரசு ஆணை என்ற பத்து அங்கங்களையும் பாடும் பிரபந்தம் தசாங்கப்பத்தாம். இது தலைப்புக்கு ஒன்றாகப் பத்து வெண்பாக்களை உடையது.

## 29. பதிற்றந்தாதி

பத்து வெண்பாவோ பத்துக் கட்டளைக்கலித்துறையோ பொருள் தன்மை அமையப் பாடும் பிரபந்தம் பதிற்றந்தாதி ஆகும்.

## 30. நூற்றந்தாதி

நூறு வெண்பாவோ நூறு கட்டளைக்கலித்துறையோ பொருள் தன்மை அமையப் பாடும் பிரபந்தம் நூற்றந்தாதி ஆகும்.

## 31. அட்டமங்கலம்

இறைவன் தலைவனைத் காப்பானாக என்று எட்டு அகவல் விருத்தத்தால் பொருள் தொடர்புஉறப் பாடும் பிரபந்தம் அட்டமங்கலமாகும்.

## 32. அலங்காரபஞ்சகம்

வெண்பா கட்டளைக்கலித்துறை அகவல் விருத்தம் சந்த விருத்தம் ஆகிய ஐந்தனால் தலைவன் புகழைப் பொருள் தொடர்பு உறப் பாடும் பிரபந்தம் அலங்காரப்பஞ்சகமாகும்.

### 33. ஊசல்

ஆசிரிய விருத்தத்தினலோ கலித்தாழிசையாலோ தலைவன் சுற்றத்தொடும் பொலிவாகுக என்று பொருள் தொடர்பு உறப் பாடும் பிரபந்தம் ஊசல் ஆகும்.

### 34. சின்னப்பூ

நேரிசை வெண்பாவினல் தலைவனுடைய தசாங்கத்தினை 100, 90, 70, 50, 30 பாடல்கள் அமையப் பாடும் பிரபந்தம் சின்னப்பூ ஆகும்.

### 35. சதகம்

அகப்பொருளைப்பற்றியோ புறப்பொருளைப்பற்றியோ நூறு கவிகள் பாடி அமைக்கும் பிரபந்தம் சதகமாகும். இது பெரும்பாலும் ஆசிரியவிருத்தமாக அமையும்.

### 36. எண் செய்யுள்

தலைவனுடைய ஊரையோ பெயரையோ, இரண்டனையுமோ விரும்பிப் பத்து முதல் ஆயிரம் அளவும் பொருள் தொடர்புறப் பாடும் செய்யுட்களைக்கொண்ட பிரபந்தம் எண் செய்யுள் ஆகும்.

### 37. ஐந்திணைச் செய்யுள்

புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என்ற ஐந்து உரிப்பொருள்களுக்கும் உரிய குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என்ற ஐந்து திணைகளையும் விளக்கிக்கூறும் செய்யுள்-தொகை ஐந்திணைச் செய்யுளாகும்.

### 38. நாழிகை வெண்பா

தேவரிடத்தும் அரசரிடத்தும் தோன்றி நடக்கும் செயல் ஒருநாழிகை அளவில் தோன்றி நடப்பதாக 32 வெண்பாக்கள்பாடி அமைக்கும் பிரபந்தம் நாழிகை வெண்பா ஆகும்.

**39. நானூற்பது**

காலம், இடம், பொருள் இவைபற்றிப் பொருள் தொடர்பு உறப் பாடும் நாற்பது வெண்பாக்கள் நானூற்பது ஆகும்.

**40. பயோதரப்பத்து**

தலைமகளுடைய நகில்களைச் சிறப்பித்துப் பாடும் பத்துப் பாடல்கள் கொண்ட பிரபந்தம் பயோதரப்பத்தாகும்.

**41. நயனப்பத்து**

தலைமகளுடைய கண்களைச் சிறப்பித்துப் பாடும் பத்துப் பாடல்களைக்கொண்ட பிரபந்தம் நயனப்பத்தாகும்.

**42. ஒன்பதுவகை விருத்தம்**

அரசனுடைய வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை இவை ஒவ்வொன்றையும் சிறப்பித்துப் பாடப்படும் பப்பத்து விருத்தங்கள் அமைந்த பிரபந்தங்கள் முறையே வில்விருத்தம் முதலாக அவ்வவற்றின் பெயர்பெறும்.

**43. பெருங்காப்பியம்**

அணியியலில் கூறப்பட்ட காப்பிய இலக்கணங்களான் நிறைந்து விளங்குவதாம்.

**44. சிறுகாப்பியம்**

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கனுள் ஒன்றோ சிலவோ குறைபாடு உற அமைவதாம்.

இணைமணிமாலை இரண்டு, இன்னிசை இரண்டு, நேரிசை இரண்டு, எண்செய்யுள் இரண்டு, வில்விருத்தம் முதலிய ஒன்பது இவற்றைத் தனித்தனியே எண்ணின் பொருள்-தொடர்நிலைச்செய்யுளாக இவ்வாசிரியர் குறிப்பிடும் எண் ஐம்பத்தைந்து ஆமாறு உணரப்படும்.

தனிநிலைச் செய்யுள் வளமடல் முதலாக மஞ்சரி ஈறுகச் சொல்லப்பட்ட இருபத்திரண்டும் பிறவும் ஆம் :

1. **வளமடல்**

அறம் பொருள் வீடு என்ற மூன்றனையும் இகழ்ந்து மகளிர் மாட்டு நுகரும் காம இன்பமே வாழ்க்கைப்பயன் என்று இன்னிசைக் கலிவெண்பாவால் தலைவன் பெயரை எதுகையாகக் கொண்டு பாடும் பிரபந்தம் வளமடல் ஆகும்.

( திருமங்கையாழ்வார் அருளியுள்ள பனுவல் ஆறனுள்ளும் திருநறையூர்ப் பெருமான்மீது அருளியுள்ள சிறியதிருமடல், பெரியதிருமடல் என்ற இரு பிரபந்தங்களும் தலைவன் பெயரை எதுகையாகக்கொண்டு பாடப்பட்டுக் கற்பார்க்குப் பெரு விருந்தாக அமைந்துள்ள திறம் காண்க. )

2. **உலாமடல்**

கனவில் தலைவி ஒருத்தியை எதிர்ப்பட்டுக் கூடிய தலைவன் நனவில் அவளை அடைவதற்காக மடல் ஊர்வானாகக் குறிப்பிடும் நேரிசைக் கலிவெண்பா உலாமடலாகும்.

3. **உலா**

தலைவனுடைய சிறப்புக்களைக் கூறி அவன் பரம்பரைச் சிறப்பை விளக்கி மகளிர் செறிந்த தெருக்களினூடே அவன் உலா வரவும் பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்ற ஏழு பருவத்துப் பரத்தையர் அவன் தொடர்பு கருதி எண்ணமிட்டு அவனைத் தொழ அவன் பவனி வருதலை நேரிசைக் கலிவெண்பாவால் பாடும் பிரபந்தம் உலாவாம். பேதைக்கு ஐந்து முதல் ஏழும், பெதும்பைக்கு எட்டுமுதல் பதினொன்றும், மங்கைக்குப் பன்னிரண்டும் பதின்மூன்றும், மடந்தைக்குப் பதினான்கு முதல் பத்தொன்பதும், அரிவைக்கு இருபதுமுதல் இருபத்தைந்தும், தெரிவைக்கு இருப்பத்தாறு முதல் முப்பத்தொன்றும், பேரிளம்பெண்ணிற்கு முப்பத்திரண்டு முதல் நாற்பதும் ஆண்டு வரையறையாம்.

**4. அநுராகமாலை**

கனவில் தலைவி ஒருத்தியிடம் ஐம்புல இன்பம் நுகர்ந்த தலைவன் நனவில் தான் கனாக்கண்ட நிகழ்ச்சியைப் பாங்கனிடம் தெரிவிப்பதாக அமையும் நேரிசைக் கலிவெண்பாப்பாடல் அநுராகமாலையாம்.

**5. மெய்க்கீர்த்திமாலை**

ஒரு பரம்பரையினர் செய்த நற்செயல்களைச் சொற்சீரடியால் அழகுறப் புனையும் செய்யுள் மெய்க்கீர்த்தி மாலையாம்.

**6. புகழ்ச்சிமாலை**

அகவல் அடியும் கலிஅடியும் விரவிய வஞ்சிப்பாவினால் வியக்கத்தகும் மகளிரின் சிறப்பினை உரைக்கும் பிரபந்தம் புகழ்ச்சிமாலையாகும்.

**7. நாமமாலை**

அகவலடியும் கலிஅடியும் விரவிய வஞ்சிப்பாவினால் மேம் பட்ட ஆண்மக்களைப் புகழ்ந்துரைக்கும் பிரபந்தம் நாம மாலையாகும்.

**8. தாரகைமாலை**

சந்தவிருத்தத்தால் கற்புடை மகளிரின் சிறப்பை உணர்த்தும் பிரபந்தம் தாரகை மாலையாம்.

**9. உற்பவமாலை**

திருமாலுடைய பத்து அவதாரங்களையும் ஆசிரிய விருத்தத்தால் பாடும் பிரபந்தம் உற்பவமாலையாம்.

**10. தானைமாலை**

ஆசிரியப்பாவினால் அரசனுடைய முன்னணிப் படையைப் பாடும் பிரபந்தம் தானைமாலையாம்.

### 11. வரலாற்றுவஞ்சி

போர்க்களத்தில் செல்லும் படைஎழுச்சியைப் பாடும் அகவற்பா வரலாற்று வஞ்சியாகும்.

### 12. செருக்களவஞ்சி

அகவற்பாவால் போர்க்கள நிகழ்ச்சியைக் கூறும் பிரபந்தம் செருக்களவஞ்சியாம்.

### 13. புறத்துறை

ஆசிரியப்பாவால் வெட்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, வாகை முதலியவற்றைப் பாடும் பிரபந்தங்கள் அவ்வப்பெயரான் அமையும்.

### 14. குழமகன்

கலிவெண்பாவினல் பெண்கள் கையில் வைத்திருக்கும் சிறுவனைப்பற்றிப் பாடும் பிரபந்தம் குழமகனாகும்.

### 15. பாதாதிகேசம்

கலிவெண்பாவினல் உத்தமமான ஆண்கள் பெண்கள் ஆகிய தெய்வங்களைப் பாதம்முதல் முடி ஈறாக வருணித்துப் பாடும் பிரபந்தம் பாதாதிகேசம் எனப்படும்.

### 16. கேசாதிபாதம்

கலிவெண்பாவினல் உத்தமமான ஆடவர் மகளிர் ஆகிய மக்களை முடிமுதல் அடி ஈறாகப் பாடும் பிரபந்தம் கேசாதி பாதமாகும்.

### 17. யானைத்தொழில்

யானை தோன்றும் இடம், அழகு, உயரம், வயது, குலநன்மை உடல் பரிமாணம், மும்மதம் கோடல், அடுத்த பொழுதில் கொல்லுதல், அரசனைக்கண்டு அறிதல் ஆகிய இவற்றை வஞ்சிப்பாவால் தொடுத்துப் பாடும் பிரபந்தம் யானைத்தொழில் ஆகும்.

## 18. ஆற்றுப்படை

கூத்தர் பாணர் பொருநர் விறலியர் ஆகியவர்களை ஆற்றுப்படுத்தும் செய்தியை ஆசிரியப்பாவால் பாடும் பிரபந்தம் ஆற்றுப்படையாம்.

## 19. தூது

கலிவெண்பாவினால் பிரிதல் துன்பமுற்ற தலைவனோ தலைவியோ உயர்திணைப்பொருளையும் அஃறிணைப்பொருளையும் தூது செல்லுமாறு அனுப்புதலைக் குறிப்பிட்டமைக்கும் பிரபந்தம் தூதாகும்.

ஆற்றுப்படை நான்காகவே தொகை இருபத்திரண்டு ஆயவாறு.

### பா வரையறை

அகப்பொருளைக் கூறும் ஆசிரியப்பாவினுள் வஞ்சி அடிகள் கலத்தல் கூடாது. கலிப்பா பெரும்பாலும் அகப்பொருள் பற்றியே அமையும். வஞ்சிப்பா தனிப்பாடலாக அமையுமேயன்றித் தொடர்ந்த பலபாடல்களாக இயற்றப்படாது.

### அகலக்கவிக்குப் பெயரிடல்

அகலக்கவிக்குப் பெயரிடுங்கால் பொருள், இடம், காலம், தொழில், உறுப்பு, எல்லை, செய்தோன், செய்வித்தோன் பெயராலே முறையே ஆசாரக்கோவை, மதுரைக்காஞ்சி, வேனில் விருத்தம், ஊசல், நயனப்பத்து, பாதாதிகேசம், அகத்தியம், பாண்டிக்கோவை என்பனபோலப் பெயரிடுதல் வேண்டும்.

### பா – வருணம்

வெண்பா அந்தணர் பா எனவும் ஆசிரியப்பா அரசர் பா எனவும் கலிப்பா வணிகர் பா எனவும் வஞ்சிப்பா வேளாளர் பா எனவும் வரையறுத்துக் கூறப்படும்.

**பா – திணை**

வெண்பாவிற்கு முல்லையும், ஆசிரியப்பாவிற்குக் குறிஞ்சியும், கலிப்பாவிற்கு மருதமும், வஞ்சிப்பாவிற்கு நெய்தலும், மருட்பாவிற்குப் பாலையும் உரிய திணைகளாம்.

**பா – நிறம்**

வெண்பாவிற்கு வெள்ளை நிறனும், ஆசிரியப்பாவிற்குச் செம்மை நிறனும், கலிப்பாவிற்குக் கருமை நிறனும், வஞ்சிப்பாவிற்குப் பொன்மை நிறனும் உரியனவாம்.

**பா – நாள்**

கார்த்திகை முதலாக ஆயில்யம் ஈறாகிய ஏழு நாள்களும் வெண்பாவிற்கும், மகம் முதலாக விசாகம் ஈறாகிய ஏழு நாள்களும் ஆசிரியப்பாவிற்கும், அநுடம் முதலாக அவிட்டம் ஈறாகிய ஏழு நாள்களும் கலிப்பாவிற்கும், சதயம் முதலாக பரணி ஈறாகிய ஆறு நாள்களும் வஞ்சிப்பாவிற்கும் உரியனவாம்.

**பா – இராசி**

வெண்பாவின் இராசிகள் கடகம் விருச்சிகம் மீனம் என்பன. ஆசிரியப்பாவின் இராசிகள் மேடம் சிங்கம் தநு என்பன. கலிப்பாவின் இராசிகள் மிதுனம் துலாம் கும்பம் என்பன. வஞ்சிப்பாவின் இராசிகள் இடபம் கன்னி மகரம் என்பன.

**பா – கோள்**

திங்களும் வியாழமும் வெண்பாவிற்கும், சூரியனும் செவ்வாயும் ஆசிரியப்பாவிற்கும், புதனும் சனியும் கலிப்பாவிற்கும், சுக்கிரனும் இராகு கேதுக்களும் வஞ்சிப்பாவிற்கும் உரிய கோள்களாம்.

**பா – மலர் முதலியன**

பூவும் சந்தனமும் கலையும் அணியும் வெண்பாவிற்கு வெள்ளை நிறத்தனவாயும், ஆசிரியப்பாவிற்குச் செம்மை நிறத்தனவாயும், கலிப்பாவிற்குக் கருமை நிறத்தனவாயும் வஞ்சிப்பாவிற்குப் பொன்மை நிறத்தனவாயும் கொள்ளுதல் வேண்டும்.

**அகலக்கவிச் சிறப்பு**

அகலக்கவியில் தலைவனுடைய பெயரையும் அவனது ஊர்ப் பெயரையும் எதுகையில் அமைத்துப் பாடுதல் அதற்குத் தனிச் சிறப்பாகும்.

**பா – வழு**

தெளிந்த வழக்கினையும் சிறந்த பொருளையும் விடுத்துச் செவி யின்பம் நீக்கி வடசொற்களை மிகுத்து இலக்கணச் சொற்களை விடுத்து வழூஉச் சொற்களைப் புணர்த்தலும் வினையின்றி மயங்கக் கூறுதலும் வழுவாகும்.

**அறுவகை ஆனந்தம்**

ஆனந்தம் ஆகிய எழுத்தானந்தம், சொல்லானந்தம், பொருளானந்தம், யாப்பானந்தம், தூக்கானந்தம், தொடை-யானந்தம் என்ற அறுவகைக் குற்றமும் அகற்றிப் பிரபந்தங்கள் அமையப்பெறல் வேண்டும்.

**அவையடக்கியல்**

நன்கு கற்றவன் பிரபந்தம் இயற்றினாலும் அரங்கேற்றும் அவையில் உள்ளாரிடம் தான் குறையுடையவனாகக் கூறித் தன் குற்றங் களைந்து குணம் கொள்ளுமாறு வேண்டுதல் அவை-யடக்கியல் ஆகும்.

**பாயிரமும் நூலும்**

எல்லா நூல் முகத்தும் உரைக்கப்படும் பொதுப்பாயிரமும், ஒவ்வொரு நூலுக்கும் சிறப்பாக அமையும் சிறப்புப் பாயிரமும் எனப் பாயிரம் இரு வகைப்படும்.

நூல் என்று சொல்லப்படும் இலக்கணம் - முதலும் முடிவும் மாறுபடாமல் தொகையினும் வகையினும் பொருளை விளக்கி, தன்கண் சிறந்த உரை அமையப்பெற்றுப் பத்து வகைக் குற்றமும் நீங்கி அக்குற்றங்களை எதிர்மறுத்துக் கொள்ளப்படும் பத்து வகை

அழகும் பெற்று, முப்பத்திரண்டு உத்தியும் அமையப்பெற்று, ஒரு பொருளையே தான் குறிப்பிடும் நூற்பா, இனமான பல நூற்பாக்களின் தொகுப்பாகிய ஓத்து, பல ஓத்துக்களின் தொகுப்பாகிய படலம், பல படலங்களின் தொகுப்பாகிய பிண்டம் ஆகியவற்றால் தோன்றும் என்பர் புலவர்.

**சூத்திரம்**

சூத்திரமாவது சிறிய கண்ணாடியில் காணப்படும் நிழலாகிய மாயா பிம்பம் போலப் பொருளை விளங்கத் தோற்றுவித்துச் செய்திகள் தன்னிடம் தெளிவாக விளங்கத் தொகைவகைவிரி என்னும் நூல் யாப்பினுள் ஒன்றுபற்றி அமைவதாம்.

ஆற்றொழுக்கு, தவளைப்பாய்த்து, சிங்கநோக்கு, பருந்தின் வீழ்வு என்று சூத்திரக் கிடக்கை நான்கு வகையுள் அடங்கும்.

சூத்திரத்துக்குமுன் காணப்படவேண்டிய சூத்திரப் பாயிரத்தைச் சூத்திரமாகக்கொண்டு செய்தலும், காண்டிகை உரையைக் குற்றமற்ற சூத்திரமாகச் செய்தலும், கருத்துப் பொருளாய்க் கிடந்ததனை எடுத்துக் கூறுதலும், எய்தியதனை விலக்கிக் கூறுதலும், பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்று எழுந்த கிளவி, பொருளொடு புணராப் பொய்மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்ற நால்வகை உரையான் ஓரும் திறத்துடன் குற்றமற நாடிப் புணர்க்கப்படுதலும், சில்வகைப் பட்ட எழுத்துக்களால் சுருங்கச் சொல்லப்பட்டுச் சொல்லுங்கால் பலவகை உரைகளையும் அகத்தடக்கி நுண்மையும் வண்மையும் பெற்றுத் துளக்கலாகாத் துணைமை எய்தி அளக்கலாகா அரும் பொருளது ஆதலும் சூத்திரத்து இயல்பாகும்.

**ஓத்து**

இனமான மணிகளை வரிசைப்பட வைப்பதுபோல இனமான பொருளை ஓரிடத்துத் தொகுத்து வைப்பதே ஓத்தாகும்.

**படலம்**

பலவேறு வகையான செய்திகளைப் பலவேறு இயலாகத் தொகுத்துக் கூறுவது படலமாகும்.

### பிண்டம்

சூத்திரம் ஒத்துப் படலம் என்ற மூன்றனையும் கொண்டு நடப்பது பிண்டமாகும்.

### குற்றம்

கூறியது கூறல், மாறுகொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில மொழிதல், மயங்கக் கூறல், கேட்போர்க்கு இன்னா யாப்பிற்று ஆதல், பழித்த மொழியான் இழுக்கம் கூறல், தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல், என்ன வகையினும் மனங்கோளின்மை முதலியவை குற்றங்களாம்.

### உத்தி வகை

நுதலியது அறிதல் முதலாக உத்திவகை முப்பத்திரண்டு எனப்படும். இவற்றிற்கு இனமும் கொள்ளப்படும்.

### முதல் நூல்

வினையின் நீங்கி விளங்கிய அறிவாகிய பரஞானத்தான் உளதாய சீவன்முத்தி பெற்றோரால் செய்யப்படுவது முதல் நூலாம்.

### வழி நூல்

முதல்நூலின் வழியே வழிநூல் - தொகுத்தும், விரித்தும், தொகைவிரியாகவும், மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தும் இயற்றப்படும்.

### சார்பு நூல்

முதல்நூல் வழிநூல் இவற்றை ஓரளவு ஏற்றுக்கொண்டு வேறுபாடுகள் சில கொண்டு அமைவது சார்பு நூலாகும்.

### உரைவகை

பாட்டிடை வைத்த குறிப்பு, பா இல்லாது உரைநடையாகவே அமைந்த கிளவி, பொருளொடு புணராத பொய்மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என உரைவகை நான்காகும்.

### பிசி

உவமையை அடிப்படையாகவும், ஒன்று சொல்ல மற்றொன்று தோன்றுதலைச் செய்யும் சுட்டினை அடிப்படையாகவும், கொண்டு, இருவகையாகப் பிசிச் செய்யுள் தோன்றும்.

### முதுமொழி

ஏது நுதலிய முதுமொழி, நுண்மை சுருக்கம் ஒளிஉடைமை வெண்மை என்பன விளங்கத் தோன்றிக் குறித்த பொருளை முடித்தற்கு வர உதவுவதாகும்.

### மந்திரம்

நிறைமொழி மாந்தர் ஆணையான் உரைத்த மறைமொழிகளே மந்திரம் என்று கூறப்படும்.

### குறிப்பு

எழுத்தினொடும் சொல்லினொடும் புணராவாகிப் பொருட்கண் அபிநயத்தால் கிடப்பனவே குறிப்புச் சொல்லாம்.

### மரபு வகை

மரபாவது வழக்கு மரபு செய்யுள் மரபு என்று இரு வகைப்படும்.

### வழக்கு

அவற்றுள் வழக்காவது அகத்தியனும் மார்க்கண்டேயனும் தலைச்சங்கத்தாரும் போல்வாரிடம் காணப்படுவதாம்.

### இளமைப் பெயர்

இளமைப் பெயர்கள் பார்ப்பு பறழ் குட்டி குருளை கன்று பிள்ளை மக மறி முதலியனவாம். பெரும்பாலும் இவைகளே இளமைப் பெயர்களாம்.

### அறிவுகள்

ஊற்றான் அறிவதே ஓரறிவு; ஊறும் சுவையும் ஈரறிவு; ஊறும் சுவையும் நாற்றமும் மூவறிவு; ஊறும் சுவையும் நாற்றமும் ஒளியும் நாலறிவு; ஊறும் சுவையும் நாற்றமும் ஒளியும் ஒலியும் ஐயறிவு. ஊறு சுவை நாற்றம் ஒளி ஒலி இவற்றொடு மன அறிவும் சேர ஆறறிவாம் என்று சான்றோர் வரையறுத்தனர்,

புல்லும் மரனும் ஓரறிவின; முரளும் நந்தும் ஈரறிவின; சிதலும் எலும்பும் மூவறிவின; நெண்டும் தும்பியும் நாலறிவின; மாக்கள் ஐயறிவின; மக்களே ஆறறிவினர். இவற்றிற்குக் கிளையும் பிறப்பும் உண்டு என்பதும் கொள்ளப்படும்.

மக்கள் யாக்கையில் பிறந்து ஆறறிவுற்ற உயிர்கள் வினைவயத்தால் கசேந்திரனைப்போல விலங்காய்ப் பிறந்தவழியும் முன்னை ஆறறிவு உறுதலும் ஒரோவழி உண்டு.

## ஆண்பாற் பெயர்

ஆண்பால் மரபுபெயர்கள் ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், உம்பல், போத்து, கடுவன், கண்டி முதலியனவாம்.

## பெண்பாற் பெயர்

பெண்பால் மரபுபெயர்கள் பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி முதலியனவாம்.

## புல்லும் மரனும்

புறத்தே வயிரமுடையன புல் எனவும் அகக்தே வயிரம் உடையன மரம் எனவும் வழங்கப்பெறும்.

தோடு மடல் ஓலை ஏடு இதழ் பாளை ஈர்க்கு குலை முதலியன புல்லின் உறுப்புக்களாம்.

இலை முறி தளிர் தோடு சினை குழை பூ அரும்பு நனை முதலியன மரத்தின் உறுப்புக்களாம்.

காய் பழம் தோடு செதிள் வீழ் என்பன புல் மரம் என்ற இரண்டற்கும் பொதுவான உறுப்புக்களாம்.

## சில மரபுகள்

அரசர்க்கு உரிய தலைமைச் சிறப்புக்களை முகமன்பற்றித் தானைத்தலைவர் குறுநிலமன்னர் முதலியோர்க்குக் கூறும் மரபும் வழக்கினுள் உண்டு.

நூல் கரகம் முக்கோல் மணை என்பன அந்தணர்க்கு உரிய

படை குடை கொடி முரசு புரவி களிறு தேர் தார் முடி செங்கோல் போல்வன அரசர்க்கு உரிய.

வாணிகஞ் செய்யுந்தொழில் வணிகருக்கு உரியது.

உழுது உணவு உண்டாக்குதலே வேளாளர்க்கு உரியது.

அந்தணர்களும் அரசுரிமை எய்துதல் உண்டு.

**புலவர்வகை**

புலவர் கவி கமகன் வாதி வாக்கி என நால்வகையர்.

**கவி**

ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்ற கவி வகைகளைப் பாடும் புலவன் கவி எனப்படுவான்.

**கமகன்**

நிறைந்த கல்வியும் அறிவும் உடையவனாய் ஒரு பொருளைத் தெளிவாக விளக்கும் ஆற்றலுடைய புலவன் கமகன் எனப்படுவான்.

**வாதி**

காரணமும் மேற்கோளும் எடுத்துக்காட்டித் தன் கருத்தை நிறுவிப் பிறர்கருத்தை மறுத்து நீக்கும் ஆற்றல் உடைய புலவன் வாதி எனப்படுவான்.

**வாக்கி**

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற்பொருளையும் முறை பிறழாமல் அருளான் மக்கட்கு உபதேசம் செய்யும் ஆற்றலுடைய புலவன் வாக்கியாவான்.

**கவி – வகை**

ஒருவன் பாடிவைத்த பாட்டைத் தான் தன் பாடல்போலக் கொண்டு கூறுபவன் சோரகவி ஆவான். ஒருவன்பாடிய

செய்தியை விரும்பி உட்கொண்டு பாராட்டி உரைப்பவன் சாத்துக்கவியாவான். முன்னவர் பாடல் அடிகளைப் பெரும்பாலும் தான் கொண்டு சில புனைவுகளுடன் பாடுபவன் பிள்ளைக்கவி ஆவான். வழக்குச்சொற்கள் மிகச் சிவணப் பாடுபவன் வெள்ளைக்கவி ஆவான்.

### நல்லவை – நிறையவை

காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் மானம் உவகை மதம் என்ற உட்பகை ஆறனையும் நீக்கி நற்கலைகளை ஆராய்ந்து புகழ்பெற்றவர் தங்கியிருக்கும் அவை நல்லவை ஆகும். அடக்கம், வாய்மை, நடுவுநிலைமை, நன்மை இவற்றை உடைய சான்றோர் கூடிப் பிறர் குற்றத்தை நீக்கிக் குணத்தை உட்கொண்டு பாராட்டுமாறு அமைந்த அவை நிறையவை ஆகும்.

### நல்லோரை

அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ என முதற்பாடல் முதல் எழுத்தை ஐவகை ஆக்கி 1-6, 7-12, 13-18, 19-24, 25-30 என்று வரையறுத்த, பகல் முப்பது நாழிகைக்குள் ஒவ்வொன்றற்கும் முதல் மும்மூன்று நாழிகைக்குள் அகலக்கவி அரங்கேற்றத்தைத் தொடங்குக. ஆறுநாழி ஓர் ஓரையாம். முதல் மும்மூன்று நாழியே நல்லோரையாம்.

### அகலக்கவி செய்வோன்

அகலக்கவி செய்யும் புலவர் ஆசிரியருக்கு ஓதிய நற்குண நற்செய்கைகள் அமையப்பெற்றவராய் நாற்கவியும் முத்தமிழும் வல்லவராய் இருபதுமுதல் எழுபது வயதுக்கு உட்பட்டவராய் இருத்தல் வேண்டும்.

### அகலக்கவி கொள்வோன் திறம்

அகலக்கவியைக் கொள்ளும் வள்ளல் அச்செய்யுளை, நல்லவை நிறையவை கூடிய மன்றத்தில் அழகிய விளக்கு ஏற்றி வைத்து ஏனைய மங்கலங்களும் பொலிய, மறையோர் ஆசி கூற,

மாலைகள் கமழ, வாத்தியங்கள் ஒலிக்க, சுமங்கலி மங்கையர் வாழ்த்த, வெளியது உடுத்துப் புலவனையும் வெளியது உடுக்கச் செய்து, அவனைத் தக்க ஆசனத்து அமர்த்தித் திசையிலுள்ளார் புகழ இயற்றிய செய்யுளை ஏற்றுக்கொண்டு, அவனுக்கு மருதநிலம் பேரணிகள் பொன் யானை அணிசெய்யப்பட்ட தேர் குதிரை ஆகியவற்றைப் பரிசில் நல்கி, ஏழடி பின்சென்று அவனை அவன் இல்லத்துக்கு அனுப்பி மீளுதல் வேண்டும் என்று சான்றோர் வகுத்துள்ளனர்.

## புரவலன் சிறப்பு

பத்துவகைப் பொருத்தமும் அமைந்த முதற்பா முதற் சீரைக் கொண்ட நன்மைதரும் பிரபந்தத்தைப் பெற்ற புரவலன் புகழால் நிறைமதி போலவும் உருவத்தால் இளஞாயிறு போலவும் சிறந்து இந்நிலவுலகில் சிறப்போடு வீற்றிருப்பான்.

## நூற்புறனடை

பலபகுதியாகப் பரந்துபட்ட பொருளிலக்கணத்தைச் சொற்களின் துணைகொண்டு இத்துணைத்து என்று வரையறுத்து உணர்த்துதல் இயலாது எனினும் சொல்லப்பட்டவற்றைக் கொண்டு அவற்றொடு தொடர்புடைய ஏனையவற்றையும் கூறவல்ல சான்றோர்கள் இவ்வுலகில் சூரியனைப்போன்ற பிரகாசத்துடன் கலைமகளும் திருமகளும் தம்மிடம் நிலைபெற, மலைமகளை ஒருபாகமாகக் கொண்டுள்ள சிவபெருமானைப்போல உலகிற்கு இன்பம் செய்து நெடுங்காலம் நீடு வாழ்வர்.

என்ற செய்திகள் பாட்டியலில் கூறப்பட்டுள்ளன.

# பொருள் அடக்கம்

---

## தொல்காப்பிய நூற்பாக்கள்

பாட்டியலில் எடுத்தாளப்பட்டுள்ள தொல்காப்பிய நூற்பாக்கள் 37 ஆகும்; அவை வருமாறு:

128. 'அவ்வயடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லோன் கூறினும் வகுத்தனர் கொண்மின்என்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.'
– தொல். பொ. 425

129. 'நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுஅதன் பண்பே.'
– தொல். பொ. 478

'ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப்பு அடக்கிய பிண்டத் தானும்என்று
ஆங்குஅனை மரபின் இயலும் என்ப.'
– தொல். பொ. 480

'ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு பொருந்தின்
நூல்என மொழிப நுணங்குமொழிப்புலவர்.'
– தொல். பொ. 653

இம்மூன்று நூற்பாக்களும் சில திரிபுகளுடன் இணைந்து ஒன்றாகக் கூறப்பட்டுள்ளன.

**131.** 'அவற்றுள்,

சூத்திரந் தானே
யாடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே.'

– தொல். பொ. 481

**133.** 'உரைஎடுத்து அதன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விளம்பலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே.'

– தொல். பொ. 654

'மேற்கிளந்து எடுத்த யாப்பினுள் பொருளொடு
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரைஅகத்து அடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத்து ஆகித்
துளக்க லாகாத் துணைமை எய்தி
அளக்க லாகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரிபு உடையது
சூத்திரத்து இயல்பென யாத்தனர் புலவர்.'

– தொல். பொ. 655

இவ்விரு நூற்பாக்களும் சிற்சில திரிபுகளோடு இணைத்து ஒன்றாகக் கூறப்பட்டுள்ளன.

**134.** 'நேர்இன மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓர்இனப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்துஎன மொழிப உயர்மொழிப் புலவர்.'

– தொல். பொ. 482

135. 'ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின்அது படலம் ஆகும்.'
– தொல். பொ. 483

136. 'மூன்றுறுப்பு அடக்கிய தன்மைத்து ஆயின்
தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப.
– தொல். பொ. 484

137. 'சிதைவுஎனப் படுபவை வசையற நாடின்
(ஈரைங் குற்றமும் நேரிதின் நாடின்)
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதல் மயங்கக் கூறல்
கேட்போர்க்கு இன்னா யாப்பிற்று ஆதல்
பழித்த மொழியான் இழுக்கம் கூறல்
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி ஆகும்.' – தொல். பொ. 363

138. 'ஒத்த காட்சியின் உத்திவகை விரிப்பின்
நுதலியது அறிதல் அதிகார முறையே
தொகுத்துச் சுட்டல் வகுத்துமெய்ந் நிறுத்தல்
மொழிந்த பொருளொடு ஒன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்
வாரா ததனால் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழிதல்
தன்கோள் கூறல் முறைபிற ழாமை
பிறனுடன் பட்டது தான்உடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற்று என்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை அன்மை

முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்
பிறன்கோள் கூறல் அறியாது உடன்படல்
பொருள்இடை இடுதல் எதிர்பொருள் உணர்த்தல்
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்தல்
தந்துபுணர்ந்து உரைத்தல் ஞாபகம் கூறல்
உய்த்துக்கொண்டு உணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய அல்ல பிறஅவண் வரினும்
சொல்லிய வகையான் சுருங்க நாடி
மனத்தின் எண்ணி மாசுஅறத் தெரிந்துகொண்டு
இனத்தில் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே.' – தொல். பொ. 665

140. 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.'
– தொல். பொ. 649

141. 'வழிஎனப் படுவது அதன்வழித் தாகும்.'
– தொல். பொ. 650

'தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே.'
– தொல். பொ. 652

(இவ்விரு நூற்பாக்களும் இணைத்துக் கொள்ளப்பட்டுள்ளன.)

143. 'பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாஇன்று எழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்என்று
உரைவகை நடையே நான்கென மொழிப.'
– தொல். பொ. 485

144. 'ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றுஇரு வகைத்தே பிசிவரு நிலையே.'
– தொல். பொ. 488

145. 'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
மென்மையும் என்றுஇவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப.' – தொல். பொ. 489

146. 'நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப.'
– தொல். பொ. 490

147. 'எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப.'
– தொல். பொ. 491

149. 'வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்டு ஆக லான.'
– தொல். பொ. 647

150. 'பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும்
ஒன்பதும் குழவியோடு இளமைப் பெயரே.'
– தொல். பொ. 556

(குழவியும் என்றிவை)

151. 'சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையலது இலவே.'
– தொல். பொ. 581

152. 'ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனன்என
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தனரே.'

– தொல். பொ. 582

156. 'ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் உம்பலும் (அப்பரும்)
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பால் பெயர்என மொழிப.'

– தொல். பொ. 557

157. 'பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தம் சான்ற பிடியொடு பெண்ணே.'

– தொல். பொ. 558

158. 'புறக்கா ழனவே புல்என மொழிப.'

– தொல். பொ. 640

159. 'அகக்கா ழனவே மரம்என மொழிப.'

– தொல். பொ. 640

160. 'தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா
ஈர்க்கே குலைஎன நேர்ந்தன பிறவும்
புல்லொடு வரும்எனச் சொல்லினர் புலவர்.'

– தொல். பொ. 641

161. 'இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனைஉள் ளுறுத்த அனையவை எல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி என்ப.'

– தொல். பொ. 642

162. 'காயே பழமே தோலே செதிளே
வீழோடு என்றாங்கு அவையும் அன்ன.'

– தொல். பொ. 643

163. 'தலைமைக் குணச்சொலும் தத்தமக்கு உரியதோர்
நிலைமைக்கு ஏற்ப நிகழ்த்துக என்ப.'

– தொல். பொ. 630

164. 'நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க்கு உரிய.'

– தொல். பொ. 625

165. 'படையும் குடையும் கொடியும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய.'

– தொல். பொ. 629

166. 'வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.'

– தொல். பொ. 632

167. 'வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.'

– தொல். பொ. 635

168. 'அந்த ணாளர்க்கு அரசுவரைவு இன்றே.'

– தொல். பொ. 637

# பன்னிரு பாட்டியல்

இலக்கணவிளக்கப் பாட்டியலில் கூறப்படாதனவாகப் பன்னிரு பாட்டியலில் காணப்படுவன பின்வருமாறு :

## கன்னல்

72. 'குணபால் பரிதி தென்பால் இயமன்
குடபால் வருணன் வடபால் சோமன்
திசைமுகன் நடுவாம் தெய்வ நிலைகளில்
குறில்ஐந்து அமைத்துமுதல் மூன்றும் கொள்கென
நெறியறி புலமை அறிஞர்நேர்ந் தனரே.'

73. 'அருக்கன் இயமன் வருணன் சோமன்
பிரமனும் தெய்வ நிலையெனப் பேசுவர்.'

74. 'அகரமுத லாக முறையான் எய்தஅத்
தெய்வம் தம்மேல் வைக்கப் படுமே.' – கபிலர்

75. 'உரைத்த குறில்ஐந்து ஓரோஒன் றாக
அருக்கனொடு ஆறும் அவ்வாறு நாழிகை.'

76. 'அகரம் தானே அருக்கனோடு உதிப்ப
இகரம் இன்புறவு எய்தி இருக்கும்
உகரம் நடக்கும் எகரம் உறங்கும்
ஒகரம் துஞ்சும்என்று உரைத்தனர் புலவர்.'

77. 'அவர்அவர் பெயர்முதல் எழுத்துவந்து உதிப்ப
அவர்அவர்ப் பாடின் ஆக்கம் தருமே.' – இந்திரகாளியார்

78. 'இராப் பொழுதிற்கும் இவ்வகை கொள்க.'

## புள்

79. 'ஐவகைக் குறிலும் அகரமுத லாக
வல்லூறு ஆந்தை வலியன் குருகே
மெல்லியல் மயிலென விளம்பினர் இவற்றின்
பொருத்தமும் விருத்தமும் பகையும் பலனும்
விரித்துஇனிது எண்ணி மேவினர் கொளலே.'

80. 'எண்ணப் பட்ட அகரமுதல் ஐந்தும்
வல்லூறு ஆந்தை வலியான் குருகே
மெல்லியல் மயிலென விளம்பிய இயற்கையின்
புள்என விளம்பும் புலவரும் உளரே.' — பரணர்

## பெயர்ப்பொருத்தம்

144. 'எண்வகைப் பெயரும் நண்ணுதல் செப்பின்
குலம்குடி கோத்திரம் நலம்பெறு குணமே
மனமே ஆணை மன்னிய சிறப்பே
இயற்பெயர் என்றிவை தம்முள் இயன்ற
சிறப்புஇயற் பெயர்எனும் இருதிறத் திற்கும்
மயக்குஅற மொழிமுதல் எடுக்கும் சொல்லுடன்
பொருத்தம் கொள்வர் கருத்துஉணர்ந் தோரே.'

145. 'பார்ப்பார் அரசர் வணிகர்வே ளாளரெனப்
பாற்படு நாற்பெயர் குலப்பெய ராகும்.'

146. 'குடிப்பெயர் ஆவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றுஇவை
போல்வன பிறவும் பொருத்தம் கொளலே.'

147. 'கோத்திரப் பெயரே கூறுங் காலைச்
தாதைகுடிப் பெயரைத் தக்கவற்று இயற்றல்.'

148. 'குணப்பெயர் ஏனைப் புலவோர் கொடுப்பத்
தணப்பில வாகித் தழுவும் பெயரே.'

149. 'மனப்பெயர் ஆவன தனக்குத் தானே
எனக்குஇது வேண்டும்என்று எய்தும் பெயரே.'
(இஃது இராசாக்கணுயனடியார் தோழன்)

150. 'ஆணைப் பெயரே வலியோர் அஞ்சப்
பேணி உலகம் பேசும் பெயரே.'

151. 'சிறப்புப் பெயரே தெரியுங் காலைச்
சிறப்புடை வேந்தன் கொடுக்கும் பெயரே.'

152. 'சாதியில் உள்ளோர் தமக்குத் தாமே
நீதிகொள் சிறப்புஇயற் பெயர்கொளற்கு உரியர்.'

153. 'முடியுடை வேந்தன்முற் குலத்தோர்க்கு அல்லது
பட்டமும் பூணும் பூவும் ஆழியும்
நட்டமில் நலமலி சிறப்புப் பெயரும்
கொடாஅன் எனமொழிப குலமொழிப் புலவர்.'

154. 'வினைசெயல் மருங்கின்மிக் கோரும் பெறுப.'

155. 'தந்தை மகப்பெயர் முந்திய குலப்பெயர்
மனப்பெயர் கோத்திரக் குலப்பெயர் ஆணை
இயற்பெயர் சிறப்புடைப் பெயர்இரண் டாகும்,
கயக்கறு முதன்மொழிப் பொருத்தம் கொளலே. 1

'கோத்திரப் பெயரே கூறுங் காலை
காப்பியன் கவுணியன் காசிபன் என்றிவை
போல்வன பிறவும் பூசுரர்க்கு ஆகும்.' 2

'அரசர் கோத்திரப் பெயரே கூறின்
குடிப்பெயர் அதனை வைத்தவர்க்கு இயற்றல்.' 3

'தந்தையர் பெயர்வழிப் பெயரன்பெயர் என்று
சிந்தித்து இடுவது இயற்பெயர் ஆகும்.' 4

'தந்தைக்கு முந்திய தெய்வப் பெயரும்
மிக்கோர் பெயரும் விதியில் புனைவது
இயற்பெயர் என்ப இயல்புஉணர்ந் தோரே.' 5

'எண்வகைப் பெயரின் இருமூன்று பெயர்ஒழித்து
இயற்பெயர் சிறப்புப் பெயர்இரண் டிற்கும்
மயக்குஅறு மொழிமுதல் பொருத்தம் கொளலே.' 6

'பாடும் குரிசில் இயற்பெயர்க்கு முன்வந்து
கூறும் குறிநிலை கொண்டு சிறப்பின்
ஆகிய பாலர் ஆதி பெயர்......
நீக்கி இயற்பெயர் கொண்டமுதல் எழுத்து
நின்ற நிலனே பாலன் ஆகத்
தென்தமிழ்ப் புலவர் திண்ணிதின் கொளலே.' 7

## இனவியல்

156. 'வெள்ளை அகவல் துள்ளுகலி வஞ்சி
என்னும் நாற்பா இவற்றுடன் இயன்மருள்
தாழிசை துறைவிருத் தங்கள்என்று இவற்றின்
சூழ்வகை இனம்பல சொல்லுதல் இனவியல்.'

157. 'ஒன்றே ஆகியும் ஒன்றுபல ஆகியும்
பலஒன்று ஆகியும் பாற்படும் இனமே.'

158. 'அவற்றுள்,
ஒன்றா கியஇனம் எனப்பட் டனஉலா
ஆற்றுப் படைவகை மடல்முத லாயின.'

159. 'ஒன்றுபல ஆகிய இனம்அந் தாதி
கோவை காப்பியம் ஆதியாக் கூறுவன.'

160. 'பலஒன் றாகிய இனம்எனப் பட்டன
கலித்தொகை குறுந்தொகை நெடுந்தொகை முதல.'

161. 'பலஒன் றாகிய இனம்எனப் பட்டன
கலம்பகம் மும்மணிக் கோவைமுத லாயின.'

### சாதகம்

173\. 'தோற்றிய சாதகம் சாற்றுங் காலைப்
பற்றிய கலியுகத்து உற்ற ஆண்டில்
திருந்திய சகாத்தமும் ஆண்டும் பொருந்திய
ஞாயிறும் பக்கமும் மேய வாரமும்
இராசியும் மன்னுற மொழிதற் குரிய.'

### வேந்தன் குடை மங்கலம்

199\. 'முன்னீர டியினும் குடைத்தொழில் இயம்பியும்
பின்னீ ரடியில் தனிநிலை இரட்டியும்
கொற்றவற் புகழ்ந்து குடைஎன முடிக்கும்
நற்றிற நேரிசைக் குடைவெண் பாட்டே.'

200\. 'அதுவே,
குடைச்சொல் சிந்தடி ஈற்றில்வைத்து அந்தக்
குடைச்சொல் ஆதிக் குறளகத்து அடக்கி
ஈற்றயல் அடியினும் ஈற்றினும் இறைவனைப்
போற்றிப் புகழ்ந்து புகறல் வேண்டும்.'

– இந்திரகாளியார்.

201\. 'ஒட்டிய குடைப்பொருள் உரைக்கும் நேரசை
கட்டளை ஆகுதல் கடன்என மொழிப.'

202\. 'கட்டளை என்பது கருதுங் காலை
ஈற்றடி ஒழிய ஏனைமூன்று அடியும்
பாற்படும் எழுத்தின் பகுதிஒப் பதுவே.'

203\. 'இதற்கே யாம்எழுத்து எண்ணுங் காலை
குற்றிய லிகரமும் குற்றிய லுகரமும்
ஒற்றும் ஒழித்துயிர் உயிர்மெய்யும் கொளலே.'

204\. 'மோனையும் எதுகையும் தொடையென மொழிப.'

205. 'சாற்றியமா றொத்தல் தனிமை மிகுதிசமம்
போற்றுமுடம் பாடு புலனுண்மை – ஏற்றும்
தலைப்பாடு பாதி தருகொடை பத்து
நிலைப்பாடு நேரசை யாம்.'

'கொடைமங் கலப்பொருள் குறித்த நேரிசைத்
தொடைஅமை வெள்ளை சுடர்முடி சூடிய
மொய்கழல் மன்னைமுன் பாடும் கவிஎன
மையறு புலவர் வகுத்துரைத் தனரே.'

## ஒருபோகு

206. 'தன்மை முன்னிலை படர்க்கையுள் தன்மை
ஒழித்திரு வகையுள் ஒன்றால் கடவுள்
பழிச்சும் ஒருபோகு இருமூன்று உறுப்பும்
அமைந்துஒருங்கு இயலும் நயம்திகழ் கலியுள்
வண்ணகம் போதினும் எண்ணே போதினும்
ஓதிய உறுப்பால் பேர்புகன் றனரே.'

207. 'வரன்முறை பிறழ உறுப்பு மயங்கி
மிக்கும் குறைந்தும் வருவது கொச்சக
ஒருபோ காமென உரைத்தனர் புலவர்.'

208. 'கொச்சகத் தன்மையின் கொச்சகம் என்ப.'
– நற்றத்தனார்.

209. 'தேவப் பிரணமம் எனும்வட மொழியைத்
தேவபா ணியெனத் திரித்துவழங் கினரே.'
– செயிற்றியனார்.

210. 'தேவ பாணி தெரியுங் காலை
மாசறு துழாய்முடி மலைந்த சென்னி
நீள்நிலம் அளந்த நெடியோன் மேற்றே.'

211. 'சுடர்கதிர்த் திங்கள் சூடி யோற்கும்
படர்திரைப் பனிக்கடல் மாதடிந் தோற்கும்
உரிய காலமும் உளஎன மொழிப.' – செயிற்றியனார்.

212. 'வேந்தன் வேண்டும் நெறிசெய் தாலும்
வாய்ந்த மதியும் மரபும் வாழ்த்தலும்
விதிஎன மொழிப மெய்நெறிப் புலவர்.'

## மறம்

250. 'பெருநில வேந்தன் மகட்பால் வேண்டி
ஒருபெருந் தூதன் உரைத்தமொழி கேட்டுக்
குறுநில மறவன் வெஞ்சினம் திருகி
மாற்றம்மிக உரைப்பது மறம்என மொழிப.'

'கூடாக் குலமுதல் மன்னன் மகள்வேண்டத்
தாதையும் தாயும் தன்னையர் அனைவரும்
மாறுசொல் மகட்பால் காஞ்சியும் மறனே.'

## கலம்பகமாலை

260. 'ஒருபோ குடனே அம்மனை நீக்கி
வெள்ளை முதலா எல்லா உறுப்பும்
தள்ளா இயலது கலம்பக மாலை.'

261. 'ஒருபோகு அம்மனை ஒழித்துவெண் பாமுதல்
கருதின் பேரது கலம்பக மாலை.' - பி. தீ. 12

## கலியந்தாதி

265. 'வல்லினம் மெல்லினம் இடையின எழுத்துப்
புல்லி மருங்கு போகாது ஒன்றிக்
குறிலெனின் குறிலே நெடிலெனின் நெடிலே
பொருந்தி நாற்கலை கொண்டுஓர் அடியாய்த்
திருந்தும் இவ்வகை நான்கடி யாகியும்
ஓரொலி ஆகியும் எண்ணான்கு ஆகிய
கலையொடு பொருந்தியும் குறிலும் குறிலும்
நெடிலும் நெடிலும் இம்முறை முதல்வர
அவ்வெழுத்து ஆகியும் இப்பரிசு இயன்ற
முப்பது கட்டளை கலிஅந் தாதி
ஆகும் பெயர்என்று அறைதல் வேண்டும்.

### ஐம்படை விருத்தம்

*291.* ‘சக்கரம் தநுவாள் சங்கொடு தண்டுஇவை
ஐம்படை அகவல் விருத்தம் ஆகும்.’

### இல்லற வெள்ளை

*301.* ‘கலைதரு வண்ணமும் வெள்ளையும் ஒன்பான்
நிலைபெறப் புணர்ப்பின்அஃது இல்லற வெள்ளை.’

(கலைதரு வண்ணம் என்றதனல் வெண்கலிப்பா ஒன்ருனும் நிலைபெற என்றதனல் சந்தவகை ஒன்பதினுலும் வெண்பா ஒன்பதினுலும் பாடுவாரும் உளர்.)

### தாரகைமாலை

*305.* ‘இரண்டு பொருள்புணர் இருபத் தெழுவகைச்
சீரிய பாட்டே தாரகை மாலை.’

(இஃது இலக்கண விளக்கப் பாட்டியல் கூறும் தாரகை மாலையின் வேருயது.)

### செந்தமிழ்மாலை

*306.* ‘எப்பொரு ளேனும் இருபத் தெழுவகை
செப்பிய நெறியது செந்தமிழ் மாலை.’

### தாண்டகம்

*307.* ‘மூவிரண் டேனும் இருநான் கேனும்
சீர்வகை நாட்டிச் செய்யுளின் ஆடவர்
கடவுளர்ப் புகழ்வன தாண்டகம் அவற்றுள்
அறுசீர் குறியது நெடியதுஎண் சீராம்.’

*308.* ‘அறுசீர் எண்சீர் அடிநான்கு ஒத்துஅங்கு
இறுவது தாண்டகம் இருமுச் சீரடி
குறியது நெடியது இருநாற் சீரே.’ – பல்காயனர்

*309.* ‘மங்கல மரபின் மானிடர் கடவுளர்
தம்புகழ் உரைப்பது தாண்டக வகையே.’

310. 'தாண்டகம் மானிடர் கடவுளர்க்கு உரித்தே.'
– மாபூதனார்.

311. 'அடிவரை நான்கும் வரும்எழுத்து எண்ணி
நேரடி வருவது தாண்டகம் ஆகும்.' – சீத்தலையார்.

## பதிகம்

312. 'ஆசிரி யத்துறை அதனது விருத்தம்
கலியின் விருத்தம் அவற்றின் நான்கடி
எட்டின் காறும் உயர்ந்த வெண்பா
மிசைவைத்து ஈரைந்து நாலைந்து என்னப்
பாட்டுவரத் தொடுப்பது பதிகம் ஆகும்.'

## செருக்களவழி

315. 'தலைவன் செய்த நிலைபெறு புகழ்பு்னை
நேரிசை வெண்பா இன்னிசை வெண்பாப்
பஃறொடை வெண்பா மறக்கள வழியே.'

316. 'நேரிசை இன்னிசை பஃறொடை வெண்பா
போரின் களவழி புகலப் படுமே.'

## செருக்களவஞ்சி

319. 'விருத்தவகை பத்தான் விளம்பும் அதனைச்
செருக்களம் எனவே செப்பினர் புலவர்.'
'செருக்கள வஞ்சியாம் செருமுகத்து ஆயவை
சுருக்கிய வஞ்சி தொடுத்துப் பாடலே.'
– தொ. வி. 270

## மறக்களவஞ்சி

317. 'குறள்சிந்து அளவடி அகவல் அடிவிராய்
வஞ்சிச் செய்யுளின் மன்னவர் மறக்களம்
எஞ்சாது உரைப்பது மறக்கள வஞ்சி.'

318. 'இயங்குபடை மன்னர் இகற்களம் புகழ்ந்த
மயங்கியல் வஞ்சி மறக்கள வஞ்சி.'

### கண்படைநிலை

323. 'காலைபகல் மாலை யாழ்முறை அறத்தியல்
அமைச்சியல் அரசியல் ஏனை இயல்இசை
நாடக த்திய லோடு நான்மறை
முறையே எய்தினை ஊழி வாழி
இனிய மகளிரோடு இன்பத்துயில் கொள்கென்று
இங்ஙனம் உரைப்பது கண்படை ஆகும்.'

### துயில்எடைநிலை

324. 'கண்படை மன்னர் முன்னர்த் தண்பதம்
விடியல் எல்லை இயல்புறச் சொல்லி
தந்த திறையரும் தாராத் திறையரும்
ஏத்தி நின்மொழி கேட்டுஇனிது இயங்க
வேண்டினர் இத்துயில் எழுகென விளம்பின்
அதுவே மன்னவர் துயில்எடை நிலையே.'

### விளக்குநிலை

325. 'துளக்கம்இல் மன்னர்க்கு ஆம்விளக்கு உரைப்பது
விளக்கு நிலையென வேண்டினர் புலவர்.'

### கடாநிலை

326. 'கொற்றவை தனக்குக் கொற்றவர் எறியும்
கடாநிலை உரைப்பது கடாநிலை ஆகும்.'

327. 'வடாஅதுறை கன்னிக்கு மன்னவர் எறிந்த
கடாநிலை உரைப்பது கடாநிலை ஆகும்.'
– பெருங்குன்றூர்கிழார்

### யாண்டுநிலை

328. 'வையக மன்னவன் மன்னுக பல்யாண்டு
எய்துக என்பது யாண்டுநிலை ஆகும்.'

(இது பெரும்பான்மை நேரிசை வெண்பாவானும் சிறுபான்மை ஏனைய பா, பாவினங்களானும் பாடப்பெறும்.)

### பறைநிலை

329. 'காவலர் இனிதுறத் தேவர்காத்து அளிக்கஎனக்
கடவுளர் விழவினும் கதிர்முடி விழவினும்
நாடும் நகரமும் நலம்பெற இயம்பி
வருநெறி வஞ்சி வழங்கப் பற்றிய
மொழிவரத் தொடுப்பது பறைநிலை ஆகும்.'

### அந்தாதித்தொகை

330. 'வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளின்
பண்பா உரைப்பதுஅந் தாதித் தொகையே.'

### புறநிலை வாயுறை செவியறிவுறூஉ

331. 'புறநிலை வாயுறை செவியறி வுறூஉஎனத்
திறமையின் மருட்பாச் செய்யுளின் வருமே.'

### உழத்திப்பாட்டு

335. 'புரவலற் கூறி அவன்வா ழியவென்று
அகல்வயல் தொழிலை ஒருமை உணர்ந்தனள்
எனவரும் ஈரைந்து உழத்திப் பாட்டே.'

### குறத்திப் பாட்டு

336. 'இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும்முக் காலமும்
திறப்பட உரைப்பது குறத்திப் பாட்டே.'

337. 'குறத்திப் பாட்டும் அதனோ ரற்றே.' (10 பாடல்கள்)

### கணக்கு

344. 'மேல்கீழ்க் கணக்கென இருவகைக் கணக்கே.

345. 'மேற்கணக்கு எனவும் கீழ்க்கணக்கு எனவும்
பாற்படு வகையான் பகர்ந்தனர் கொளலே.'

346. 'அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்பது ஈரு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு எனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே.'

347. 'ஐம்பது முதலா ஐந்நூறு ஈரு
ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபின்
தொகுக்கப் படுவது மேற்கணக்கு ஆகும்.'

348. 'அடிநிமிர்பு இல்லாச் செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட உரைப்பது கீழ்க்கணக்கு ஆகும்.'

## பாட்டு

353. 'நூறடிச் சிறுமை நூற்றுப்பத்து அளவே
ஏறிய அடியின் ஈரைம் பாட்டுத்
தொகுப்பது பத்துப் பாட்டெனப் படுமே.'

354. 'அதுவே, அகவலின் வருமென அறைகுநர் புலவர்.'

## கடைநிலை

355. 'கடைநிலை என்பது காணுங் காலை
பரிசில் உழப்பும் குரிசிலை முனிந்தோர்
கடையகத்து இயம்பும் காட்சித்து என்ப.'

356. 'பரிசில்நீட் டித்தல் அஞ்சி வெறுத்தோர்
கடைநின்று உரைப்பது கடைநிலை என்ப.'

(கடைஎனினும் அங்கதம் எனினும் ஒக்கும்)

## கையறுநிலை

357. 'வலங்கெழு வேந்தன் வான்புகக் கவிஞர்
கலங்கித் தொடுப்பது கையறு நிலையே.'

358. 'வெற்றி வேந்தன் விண்ணகம் அடைந்தபின்
கற்றோர் உரைப்பது கையறு நிலையே.'

359. 'கலியொடு வஞ்சியில் கையறவு உரையார்.'

## நவநீதப் பாட்டியல்

இலக்கண விளக்கப் பாட்டியலில் கூறப்படாதனவாக நவநீதப் பாட்டியல் மிகைச்செய்யுட்கள் கூறும் பிரபந்த வகைகள் பின் வருமாறு :-

### வருக்கக்கோவை

3. 'பாடும்மொழிக்கு முதலாம்எழுத்து அம்முறைபிறழாக்
கோடல்வரக் காரிகை வருக்கக்கோவை.'

### பவனிக்காதல்

10. 'செயல்மீறச், சீரைப் பிறர்க்கு உரைத்தால் பவனிக்காதல்.'

### பெருமங்கலம்

19. 'ஆழ்சிறை மீட்டல் முதல் காரணமான நாள்நிகழ
வாழ் வெள்ளணியைச் சொலல் பெருமங்கலம்.'

### குறவஞ்சி

20. 'தலைவன் பவனிவரல் நங்கை காமம்உறல் மோகினி
வரல் உலாப்போந்தோனவனைத் தெரியமாலாய் மதித்துஎன்
றலும்முதலியவும் ஆலம்பனம் பாங்கி வினவல் உரைத்
தலும் அவனைப்பழித்தல் புகழ்தல் தூது வேண்டலுமே.'

21. 'அவன் அடையாளம் குறத்தி வரல் கல்வளம் வினைச்சொல்
உவன் ஊர் கிளைவளம் சொற்குறி சொன்னவை கூறல்வினை
அவள்தேப்பரவல் குறி நல்வரவு பரிசில் ஈ கு
றவன் வரல் புள்வரல் கண்ணி குத்தல் புள்படுத்தலுமே.'

22. 'குறத்தியைக் காமுற்றுத் தேடல் குறவன்நற் பாங்கனொடு
குறத்தி அடையாளம் கூறல் குறவன்குறத்தி காண்டல்
குறவன் அணிமுதற் கண்டு ஐயுறவினைவல் உரைத்தல்
குறத்தி இவை உறுப்பு எஞ்சாப் பாவான் குறவஞ்சியதே.'

வீரமாமுனிவருடைய தொன்னூல் விளக்கத்து 283ஆம் நூற்பாவில் உரைநடையாக வரையப்பட்ட பிரபந்த இலக்கணம்

பலவும் முத்துவீரியத்தில் நூற்பாவாக அமைக்கப்பட்டுள்ளமையால் தொன்னூல்விளக்கச் செய்தியை எடுத்து வரையாது முத்துவீரியத்தை ஒட்டித் தொன்னூல் விளக்க 283ஆம் நூற்பா உரை என்பதுமட்டுமே சுட்டப்பட்டுள்ளது.

வீரமாமுனிவரின் சதுரஅகராதி 96 வகைப் பிரபந்தங்களின் இலக்கணத்தையும் சுருங்க உரைப்பது.

## சிதம்பரப் பாட்டியல்

இலக்கண விளக்கப் பாட்டியலில் கூறப்படாது சிதம்பரப் பாட்டியல் கூறும் பிரபந்த வகை.

### அந்தாதி

30, 'மொழி வெள்ளை நூறு கலித்துறை நூறுதல்
நன்குறின் அந்தாதி.'

### வெள்ளை

31. 'நூறு வெள்ளை.'

### மாலை

39. 'மகிழ்நிரை கொள்வதுவெட்சி, கரந்தைமீட்டல்,
மாற்றூர்பாற் செலல் வஞ்சி, ஊன்றல் காஞ்சி,
பகர்மதிலைக் காக்குமது நொச்சி, சுற்றிப்
படைவளைத்தல் உழிஞை, பொரல்தும்பை, வென்று
புகழ்படைத்தல் வாகையது மாலைப் பேரால்
போற்றுவது மாலையாம்மாப் புலவர் தானை
அகலமுரைப்பது தானைமாலை தூசி
அணிவகுப்பின் தாரகைமாலையைச்சொல் ஆய்ந்தே.'

## பிரபந்த தீபிகை

### சாதகக் கவி

அலகுறு சகாப்தம் ஆண்டு

தேதிஉடு ஓரையும் திங்களும் சாதகன்திசை சித்ரம் அபகாரமும்
திரமான கிரகநிலை அறிந்துசொல் சாதகம் – 5

## கலம்பக மாலை

அலகுறு கலம்பகத் துள்வரும் ஒருபோகு அம்மானை ஊசல் மூன்றும்
அன்றி மேல்சொல்லிய உறுப்புஅமைத்து அவ்வாறரற்றல் பன்மணிமாலையாம்
சொல அரிதுவே கலம்பக மாலையாகுமே. – 12

## தண்டகமாலை

வெண்பா முந்நூறு கவிபாடல் தண்டகமாலையாம் – 14

## வீரவெட்சிமாலை

மிகுசுத்தவீரன் மாற்றார்புரம் சென்று பசுவேட்டுநிரை கவருதற்கு
வெட்சியின்மாலை சூடிய வண்ணம் ஏகியே மீட்டு ஆவின் நிரை கவர்ந்தே
இகல்துறந்து ஊர்வரும் தலைவன்மேல் பாவினுக்கு இயை தசாங்கம் பொருந்த
இசை வெற்றியைக் கருதியே பாடலது வீரமெனும் வெட்சி மாலையாமே – 14

## வெற்றிக்கரந்தைமஞ்சரி

மாற்றலர்கள் கொண்டநிரை மீட்போர் கரந்தைப் பூமாலைசூடிப் போகி மீள்
வகையினை விரித்தோதல் வெற்றிக்கரந்தையின் மஞ்சரி எனக்கூறுவார். – 15

## வஞ்சிமாலை

வேற்றுமைப் பகைவர்மேல் போர்குறித்து ஏகுவது வேந்தர்பூ வஞ்சிமாலை – 15

### போர்க்கெழு வஞ்சி

வேய்ந்தெழு படைச்சிறப்பு ஆசிரிய வகையினைல்விள்ளல்
போர்க்கெழு வஞ்சியாம்

### காஞ்சிமாலை

அலர்காஞ்சி மாலைசூடிப் பகைவரூர்ப் புறத்ததினூன்றல்
காஞ்சிமாலை. — 16

### நொச்சிமாலை

கமையாய்ப் புறத்தகத் தூன்றிவ்வி பேசிடும் கள்ளர்கள்
கோடலின்றிக்
கந்தநொச்சியின் மாலைசூடித் தன்மதில் காத்தல்
கழறல் நொச்சியின்மாலையே. — 16

### உழிஞைமாலை

மருவலர்கள் ஊர்ப்புறஞ் சூழவே உழிஞைப் பூமாலைசூடித்
தானையான்
மதியினை ஊர்வளைந்தாலென வளைப்பதை வழுத்தலே
உழிஞைமாலை — 17

### தும்பைமாலை

பொருதும் மாற்றலரோடு தும்பைமாலி கைவேய்ந்து
பொருதுவது தும்பைமாலை. — 17

### வாகைமாலை

பொருபகை யைவென்று வாகைமாலை அணிவதைப்
புகல்வது ஆசிரிய கவியா
வரும் வாகை மாலையாம். — 17

### வாதோரணமஞ்சரி

கொலைபுரி களிற்றினை அடக்கினவருக்கும் எதிரா
அடல்புரி களிற்றைச் சிதைத் தடக்கினவர்க்கும் அமைதல்
விட்டோடு களிற்றை

உரமுடன் பற்றிப்பிடித்த டக்கினவர்க்கும் உறும் வீரமும்
சிறப்பும்
ஓதுவஞ்சிப் பாவினாற் சொல்வா தோரணத்துலவு
மஞ்சரியாகுமே. – 17

### புறநிலை

நீவணங்குதெய்வமே
நினைப்பாது காப்ப நின்வழிவழியும் மிகுவதாய் நிகழ்த்தல்
புறநிலையாகுமே – 21

### கண்படை நிலை

வேந்தரும் வேந்தரைப் போல்வாரும் அவையின்கண்
மிகநெடிது வைகிய வழி
விறல் மருத்துவரும் அமைச்சரும் முதலியோர்க்கு
விழிதுயில் கொளும் இடமதைச்
சார்ந்து கருதிக்கூறல் கண்படைநிலை. – 22

### துயிலெடைநிலை

தன்வலியினாற் பாசறை
தனில் ஒருமனக்கவலை இன்றித் துயின்ற அரசர்க்கு
நற்புகழ் கொடுத்தல்
நேர்ந்து கருதிய தூதர் துயிலெடுப்புதல் ஆய
நிகழ்த்தல் துயிலெடை நிலையதாம். – 22

### ஊர் வெண்பா

வெண்பாவினால் ஊர்சிறக்க ஈரைந்து செய்யுள்
விள்ளும் ஊர்வெண்பா வதாம். – 23

### விளக்குநிலை

ஊட்டுதசை புட்குதவும் வேலும் அவ்வேல்தலையும்
ஒன்றாக ஓங்குவது போல
ஊன்று கோலொடு விளக்கு ஒன்றுபட்டோங்குமாறு
ஓங்குதல்
விளக்குநிலையாம். – 23

### 'தசாங்கத்தயல்

பெருமன்பல் அங்கத்தை ஆசிரியம் ஈரேமு பேசல்
தசாங்கத்தயல். – 24

### அரசன் விருத்தம்

பத்துக்கலித்துறையும் முப்பதுவிருத்தமும் பகர்கலித்
தாழிசையுமாய்ப்
பகர்நாடு மலைகடல் நிலவருணனைநீடு பரவுதோள்
வாண்மங்கலம்
பெற்றிடப் பாடிமுடி வேந்தர்க்கு உரைப்பதாய்ப்
பேசல் அரசன்விருத்தம். – 24

### கையறுநிலை

அவனியின் கணவனோடு இல்லாள் கழிந்துழி அவர்
கடப்பட்ட வழுவின்
அப்பொருளெல்லாம் பிறர்க்கு அறிவுறுத்து
அப்போது இறந்தேபடாது
அவர்தாம் ஒழிந்தபல ஆயத்தார்களும் பரிசில்பெறும்
விறலி யோரும்
செயல் தனிப் படர் உழந்திடு செயலின் அறுநிலை
செப்பிடும் கையறுநிலை – 25

### பதிகம்

ஒரு பொருளைக் குறித்துப் பன்செய்யுள் பதிகம் – 26

## பிரபந்த மரபியல்

### கையறத்துக்கு ஆகாப் பா

'கலியும் வஞ்சியும் கையறம் உரைத்தற்கு
ஆகா என்ப அறிந்திசி னோரே'

### வாழ்த்துப் பற்றிய பா

'எவையும்வாழ்த் தினுக்கா மேவும் பாவே'

## முத்துவீரியம்

இலக்கணவிளக்கப்பாட்டியலில் கூறப்படாதனவாய் முத்துவீரியம் கூறுவன பின்வருமாறு:

[முத்துவீரியம் – யாப்பதிகாரம் – ஒழிபியல் நூற்பாக்கள்]

### வித்தாரகவி ஆவான் இலக்கணம்

59. 'மறம்கலி வெண்பா மடலூர்தல் இயல்இசை
பாசண் டத்துறை பன்மணி மாலை
தசாங்கம் மும்மணிக் கோவை கிரீடை
இவைமுத லாக விரித்திசைத்துப் பாடுவான்
வித்தா ரக்கவி யாம்விளம் பிடினே.'

### சாதகக்கவி

60. 'ஓரை திதிநிலை யோகம் நாள் மீன்நிலை
வாரம் கரணம் நிலைவரு கிரகம்
நிலைஎழு அவயவம் நிலையையும் உணர்வுற்று
அவற்றை அமைத்துஅவற் றுல்தலை மகனுக்கு
அடைவன அறைதல்சா தகமென மொழிப.'

### மணிமாலை

95. 'எப்பொருள் மேலும் வெண்பா இருபதும்
கலித்துறை நாற்பதும் கலந்து வருவது
மணிமாலை ஆகும் வழுத்துங் காலே.'

– தொ. வி. 279

### பெருமகிழ்ச்சிமாலை

97. 'தெரிவை எழில்குணம் ஆக்கம்சிறப்பு உரைப்பது
பெருமகிழ்ச்சி மாலைஎனப் பேசப் படுமே.'

– தொ. வி. 283. உரை.

### தண்டகமாலை

107. 'வெண்பா வான்முந் நூறு விரிப்பது
தண்டக மாலையாம் சாற்றுங் காலே.'

– தொ. வி. 283. உரை.

## வீர வெட்சிமாலை

108. 'ஆனிரை கவர்ந்து வருபவன் வெற்றி
விளம்புதல் வீர வெட்சி மாலை.'

– தொ. வி. 283. உரை.

## வெற்றிக் கரந்தை மஞ்சரி

109. 'தழுவார் கொண்ட தம்நிரை மீட்போர்
கரந்தை புனைந்து கனன்றுஉல வையின்செலீஇ
மீட்பதைக் கூறல் வெற்றிக் கரந்தை.'

– தொ. வி. 283. உரை.

## போர்க்கெழு வஞ்சி

110. 'போர்க்கெழு மன்னவன் வஞ்சிப் பூந்தொடை
அணிந்து புறப்படும் அடுபடை எழுச்சிச்
சிறப்புஅக வலினல் செப்புதல் போர்க்கெழு
வஞ்சி எனப்பெயர் வைக்கப் படுமே.'

– தொ. வி. 283. உரை.

## காஞ்சி மாலை

113. 'காஞ்சி புனைந்து கருதார் ஊர்ப்புறம்
ஊன்றலை உரைப்பது காஞ்சி மாலை.'

– தொ. வி. 283 உரை.

## நொச்சி மாலை

114. 'கோலிய மாற்றார் கோடல் இன்றி
நொச்சி வேய்ந்தகல் எயில்நோக்குந் திறனை
வழுத்துதல் நொச்சி மாலை ஆகும்.'

– தொ. வி. 283 உரை.

## உழிஞை மாலை

115. 'மாற்றார் ஊர்ப்புறம் வளைதர உழிஞை
வனைந்து காலான் வளைப்பது கூறல்
உழிஞை மாலையாம் உணருங் காலே.

– தொ. வி. 283 உரை.

### தும்பை மாலை

*116.* 'தும்பைவேய்ந்து ஒன்றொரொடு சூழ்ந்து பொருவது
சொல்வது தும்பை மாலை ஆகும்.'

— *தொ. வி. 283 உரை.*

### வாகை மாலை

*117.* 'மாற்றாரை வென்று வாகைசூ டுவதை
அகவலினால் அறைவது வாகை மாலை.'

### தோரண மஞ்சரி

*118.* 'யானைவயப் படுத்தி அடக்கி னவருக்கும்
எதிர்பொரும் யானையை ஈர வெட்டி
அடக்கின வருக்கும் அதட்டிப் பிடித்துச்
சேர்த்த வருக்கும் வீரச் சிறப்பை
வஞ்சியால் பாடுவது அதுவாம் தோரண
மஞ்சரி எனப்பெயர் வைக்கப் படுமே.'

— *தொ. வி. 283 உரை.*

### கண்படைநிலை (வேறு)

*130.* 'அரசரும் அரசர் தமைப்போல் வாரும்
அவைக்கண் நெடிது நாளாக வைகிய
வழிமருத் துவரும் மந்திரி மாரும்
முதலியோர் தமக்குக் கண்துயில் கோடலைக்
கருதி உரைப்பது கண்படை நிலையே.'

— *தொ. வி. 283 உரை.*

### விளக்கு நிலை (வேறு)

*136.* 'வேலும்வேல் தலையும் விலங்காது ஓங்கிய
ஆறுபோல் கோலொடு விளக்கும் ஒன்றுபட்டு
ஓங்குமா று ஓங்குவ தாக உரைப்பது
விளக்கு நிலையென விளம்பப் படுமே.'

— *தொ. வி. 283 உரை.*

### புறநிலை

137\. ‘நீவணங்கு ஒருவன் நினைப்பாது காப்ப
நின்னுடை வழிவழி நீளுவ தாக
எனஇயம் புவது புறநிலை என்ப.’ – தொ.வி. 283 உரை.

### கடைநிலை

138\. ‘பெரியோர் சேணிடை வருதலால் பிறந்த
வருத்தம் தீர வாயில்காக் கின்றோற்கு
என்வர வினை இறைக்கு இயம்புதி நீஎனக்
கடைக்கண் நின்று உரைப்பது கடைநிலை ஆகும்.’
– தொ. வி. 283 உரை.

### கையறுநிலை (வேறு)

139\. ‘கணவனொடு மனைவி கழிந்துழி அவர்கண்
பட்ட அழிவுப் பாக்கியம் எல்லாம்
பிறருக்கு எடுத்தறி வுறுத்தித் தாமும்
இறந்துபடா தொழிந்த ஆயத் தாரும்
வேண்டு வனபெறும் விறலியர் குழாமும்
தனிப்படர் உழந்த செயலறு நிலையை
நிகழ்த்துவது கையறு நிலையா கும்மே.’
– தொ. வி. 283 உரை.

### தசாங்கத்தயல்

141\. ‘அரசன் தசாங்கம் ஆசிரிய விருத்தம்
ஐயிரண்டு அறைவது தசாங்கத் தயலே.’
– தொ. வி. 283 உரை.

### அரசன் விருத்தம்

143\. ‘கலித்துறை பத்தும் கலித்தா ழிசையும்
விருத்தம் முப்பதும் வெற்புநீர் நாடு
வருணனை யொடுநில வருணனை தாமும்
வாள்மங் கலமும் தோள்மங் கலமும்
அறைகுவது அரசன் விருத்தம் ஆகும்’
– தொ. வி. 283 உரை.

## அளவியல் அளவழித் தாண்டகங்கள்

154. 'இருபத்து ஏழு எழுத்து ஆதி ஆக
உயர்ந்த எழுத்தடி யினவாய் எழுத்தும்
குருவும் இலகுவும் ஒத்து வந்தன
அளவியல் தாண்டகம் எனவும் அக்கரம்
ஒவ்வாதும் எழுத்துஅலகு ஒவ்வாதும் வந்தன
அளவழித் தாண்டகம் எனவும் பெயர்பெறும்.'
– தொ. வி. 283 உரை.

## செவியறிவுறூஉ

157. 'பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல்கடன் எனஅவை அடக்கியல் பொருளும்
மருட்பாவால் உரைப்பது செவியறி வுறூஉவே'
–தொ. வி. 283 உரை.

## வாயுறை வாழ்த்து

158. 'கடுவும் வேம்பும் கடுப்பன ஆகிய
வெஞ்சொல் தாங்க மேவாது ஆயினும்
பின்னர்ப் பெரிதும் பயன்தரும் என்ன
மெய்ப்பொருள் உறமருட் பாவால் விளம்புதல்
வாயுறை வாழ்த்துஎன வைக்கப் படுமே.'

## புறநிலை வாழ்த்து

159. 'வழிபடு தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமோடு ஒருகாற்கு ஒருகால்
சிறந்து பொலிவாய் எனமருட் பாவால்
பகர்வது புறநிலை வாழ்த்தெனப் படுமே'

## எழுகூற்றிருக்கை

162. 'கோதில் ஏழுஅறை ஆக்கிக் குறுமக்கள்
முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும்
பெற்றி யால்வழு வாமை ஒன்று
முதலாய் ஏழ்ஈ றுய்முறை யானே
இயம்புவது எழுகூற் றிருக்கை ஆகும்.'

## முதுகாஞ்சி

166. 'இளமை கழிந்தறிவு மிக்கோர் இளமை
கழியாத அறிவுஇல் மக்கள் தமக்கு
மொழியப் படுவது முதுகாஞ்சி ஆகும்.'

–தொ. வி. 283 உரை.

## இயன்மொழி வாழ்த்து

167. 'இக்குடிப் பிறந்தோர்க்கு எல்லாம் இக்குணம்
இயல்பென்றும் நீயும் அவற்றை உடையை
என்றும்இன் னோர்போல் நீயும்இயல் பாக
ஈஎன்றும் உயர்ந்தோர் எடுத்துமற்று அவனை
வாழ்த்துவ தாக வழுத்துதல் இயன்மொழி
வாழ்த்தாம் என்ன வழுத்தினர் புலவர்.'

–தொ. வி. 283 உரை.

# பிரபந்த வகைகள்

## இலக்கண விளக்கப் பாட்டியல்

1 பிள்ளைக்கவி
2 கலம்பகம்
3 பன்மணிமாலை
4 மும்மணிக்கோவை
5 அகப்பொருட்கோவை
6 தொகைச் செய்யுள்
7 வெண்பா அகவல் இணைமணிமாலை
8 வெண்பாக் கலித்துறை இணைமணிமாலை
9 இரட்டைமணிமாலை
10 மும்மணிமாலை
11 நான்மணிமாலை
12 இருபா இருபஃது
13 ஒருபா ஒருபஃது
14 ஒலி அந்தாதி
15 பெயர் இன்னிசை
16 ஊர் இன்னிசை
17 வருக்கமாலை
18 கைக்கிளை
19 மங்கலவள்ளை
20 பிறிதொருவகை இரட்டைமணிமாலை
21 பெயர் நேரிசை
22 ஊர் நேரிசை
23 மெய்க்கீர்த்திமாலை
24 காப்புமாலை
25 வேனில்மாலை
26 பல்சந்தமாலை
27 அங்கமாலை
28 வசந்தமாலை
29 நவமணிமாலை
30 பரணி
31 தசாங்கப்பத்து
32 வெண்பாப்பதிற்றந்தாதி
33 கலித்துறைப்பதிற்றந்தாதி
34 வெண்பா நூற்றந்தாதி
35 கலித்துறை நூற்றந்தாதி
36 அட்டமங்கலம்
37 அலங்காரப்பஞ்சகம்
38 ஊசல்
39 சின்னப்பூ
40 சதகம்
41 எண் செய்யுள்
42 ஐந்திணைச் செய்யுள்
43 நாழிகை வெண்பா
44 நானாற்பது
45 பயோதரப்பத்து
46 நயனப்பத்து
47 வில்விருத்தம்
48 வாள்விருத்தம்
49 வேல்விருத்தம்
50 செங்கோல் விருத்தம்
51 யானை விருத்தம்
52 குதிரை விருத்தம்
53 நாட்டு விருத்தம்

| | | | |
|---|---|---|---|
| 54 | ஊர் விருத்தம் | 65 | தாரகைமாலை |
| 55 | கொடை விருத்தம் | 66 | உற்பவமாலை |
| 56 | பெருங்காப்பியம் | 67 | தானைமாலை |
| 57 | காப்பியம் | 68 | வரலாற்று வஞ்சி |
| 58 | வளமடல் | 69 | செருக்கள வஞ்சி |
| 59 | உலாமடல் | 70 | குழமகன் |
| 60 | உலா | 71 | பாதாதிகேசம் |
| 61 | அநுராகமாலை | 72 | கேசாதிபாதம் |
| 62 | மெய்க்கீர்த்திமாலை | 73 | யானைத்தொழில் |
| 63 | புகழ்ச்சிமாலை | 74 | ஆற்றுப்படை |
| 64 | நாமமாலை | 75 | தூது |

## சிதம்பரப் பாட்டியல்

(இலக்கண விளக்கம் கூறுதன)

| | | | |
|---|---|---|---|
| 76 | அந்தாதி | 81 | காஞ்சிமாலை |
| 77 | வெள்ளை | 82 | நொச்சிமாலை |
| 78 | வெட்சிமாலை | 83 | உழிஞைமாலை |
| 79 | கரந்தைமாலை | 84 | தும்பைமாலை |
| 80 | வஞ்சிமாலை | 85 | வாகைமாலை |

## பன்னிரு பாட்டியல்

(இலக்கண விளக்கம் கூறுதன)

| | | | |
|---|---|---|---|
| 86 | சாதகம் | 95 | செந்தமிழ்மாலை |
| 87 | குடைமங்கலம் | 96 | தாண்டகம் |
| 88 | ஒருபோகு | 97 | பதிகம் |
| 89 | கலம்பகமாலை | 98 | செருக்களவஞ்சி |
| 90 | கலி அந்தாதி | 99 | மறக்களவஞ்சி |
| 91 | ஐம்படை விருத்தம் | 100 | கண்படைநிலை |
| 92 | இல்லற வெள்ளை | 101 | துயில் எடைநிலை |
| 93 | தாரகைமாலை (வேறு) | 102 | விளக்குநிலை |
| 94 | கையறுநிலை | 103 | கடாநிலை |

104 யாண்டுநிலை
105 பறைநிலை
106 அந்தாதித்தொகை
107 உழத்திப் பாட்டு
108 குறத்திப் பாட்டு
109 கணக்கு
110 பாட்டு
111 கடைநிலை

## நவநீதப் பாட்டியல்

(இலக்கண விளக்கம் கூறாதன)

112 பவனிக்காதல்
113 பெருமங்கலம்
114 குறவஞ்சி
115 வருக்கக்கோவை

## முத்துவீரியம்

(இலக்கண விளக்கம் கூறாதன)

116 மணிமாலை
117 பெருமகிழ்ச்சிமாலை
118 தண்டகமாலை
119 கரந்தைமாலை
120 போர்க்கெழு வஞ்சி
121 தோரணமஞ்சரி
122 தசாங்கத்தயல்
123 புறநிலை
124 அரசர் விருத்தம்
125 எழுகூற்றிருக்கை
126 முதுகாஞ்சி
127 செவியுறை
128 வாயுறை வாழ்த்து
129 இயன்மொழி வாழ்த்து
130 தாண்டகம்
என்பன

இவற்றைத் தவிர வேறுசில பிரபந்தங்களும் வழக்கில் உள்ளன. அவற்றின் பட்டியல் பிற்சேர்க்கையில் தரப்பெறும்.

---

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்

## ஐந்தாவது - பாட்டியல்

---

### பாட்டியல் நுவல்வன

761. எஞ்சிய இலக்கணம் எல்லாம் சொல்லின்
மாத்திரை முதலா யாத்துஇனிது அமைத்த
பாட்டின் இயலும் நூலின் இயலும்
உரையின் இயலும் பிசியின் இயலும்
முதுசொல் இயலும் மந்திர இயலும்
குறிப்புரை இயலொடு திறப்படு மரபும்
வருணத்து இயலும் புலவர் இயலும்
அவையின் இயலும் அகலக் கவியைக்
கொடுப்போர் இயலும் கொள்வோர் இயலொடு
அடுத்த ஈரேழும் பிறவுமாம் என்ப.

என்பது சூத்திரம். நிறுத்த முறையானே அகத்திணை இலக்கணமும் புறத்திணை இலக்கணமும் அணி இலக்கணமும் செய்யுள் இலக்கணமும் உணர்த்தி அந்நான்கற்கும் பொதுவாய் எஞ்சிநின்ற அகலக்கவி இலக்கணமும், அளவியற்படாத ஏனை அறுவகைச் செய்யுள் இலக்கணமும் உணர்த்தினமையான் இவ் வோத்துப் பாட்டியல் என்னும் பெயர்த்து. இதனுன் மேல் ஓத்திேனோடு இயைபு உடைமையும் விளங்கும்.

அற்றேல், மரபு இலக்கணமும் வருணத்து இலக்கணமும் புலவர் இலக்கணமும் அவை இலக்கணமும் அகலக்கவியைப் பாடுவோர் இலக்கணமும் அதனைக் கொள்வோர் இலக்கணமும் பிறவும் உணர்த்துமாறு என்னை எனின், அது, பாட்டின் கண்ணவாகிய இலக்கணம் உணர்த்தித் தன்னோடு இயைபு இன்மை நீக்கித் தலைமை பற்றிய பெயராம், வெண்குடைப் பெருவிறல் வழுதிபோல, என்க. அற்றேல், இவ்வியலோடு செய்யுளியற்கு வேற்றுமை என்னை எனின், அது செய்தல் செய்யுள் எனநின்று செய்யுள் செய்தல் இலக்கணமாயிற்று, பாய்தல் பாய்த்துள், விக்கல் விக்குள் என்றாற்போல, என்க.

இதனுள், இத் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், எஞ்சிய இலக்கணங்கள் இவைஎன அவற்றின் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

இ-ள்: இவ்வதிகாரத்துள்ளும் முன் நின்ற இரண்டு அதிகாரத்துள்ளும் கூறாது ஒழிந்த இலக்கணங்கள் எல்லாவற்றையும் சொல்லுமிடத்து, மாத்திரை என்னும் உறுப்பு ஆதியாக யாப்புறுத்த பாட்டின்கண்ணவாகிய இலக்கணமும் நூலின்கண்ணவாகிய இலக்கணமும் உரையின்கண்ணவாகிய இலக்கணமும் பிசியின்கண்ணவாகிய இலக்கணமும், முதுசொற்கண்ணவாகிய இலக்கணமும் மந்திர வாய்மைக்கண்ணவாகிய இலக்கணமும், குறிப்புமொழிக்கண்ணவாகிய இலக்கணத்துடனே, வழக்கு இடத்தும் செய்யுள் இடத்தும் நடக்கும் இருவகை மரபின் இலக்கணமும் நாற்புலவர் இலக்கணமும் அவை இலக்கணமும் அகலக்கவியைச் செய்து கொடுப்போர்

இலக்கணமும் அதனைக் கொள்வோர் இலக்கணமும் ஆகிய பதினைன்கனோடும் ஏற்பன பிறவுமாம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

பாட்டு முற்கூறப்பட்டது, ஆசிரிய அடியான் இற்ற சூத்திரம் செய்யுள் ஆதலானும், குறிப்புமொழி பாட்டின்கண்ண ஆதலானும் மேல் ஓத்தினோடு இயைபு உடைமையானும் என்க. 'மாத்திரை முதலா யாத்துஇனிது அமைத்தபாட்டு' என்றதனால் போந்தது அளவியற் செய்யுள் எல்லா உறுப்பும் பெறும் என்றும், ஏனைச் செய்யுள் அவ்வாறு பெருது குறையப்பெறும் என்றும் கூறியவாரும். 'குறிப்புரை இயலொடு' என ஒடுக்கொடுத்தது பாட்டுமுதலிய ஏழும் படலத்து ஒழிபு எனவும், ஏனைய பிண்டத்து ஒழிபு எனவும் அறிதற்கு எனக்கொள்க. 'மாத்திரைமுதலா யாத்து இனிது அமைத்த பாட்டு' என்றது அநுவாதம். முதலாக என்பது முதலா எனச் செய்யுள்முடிபு எய்தி நின்றது. ஆசிரியர் என வெளிப்படாத எழுவாய் சொல்லெச்சமாக இசைந்தது.

பிற இலக்கணங்களாவன நான்குபாவிற்கும் வருண உரிமையும் நில உரிமையும் நிற உரிமையும் நாள் உரிமையும் இராசி உரிமையும் கோள் உரிமையும் அக்கோள்கட்கு உரிய பூவும் சாந்தும் கலையும் அகலக்கவியைக் கொள்ளும் ஓரையும் என்றவாறு. 1

விளக்கம்

*நிறுத்தமுறை என்பது அகத்திணைஇயல் இரண்டாம் நூற்பாவில்,*

'அகனும் புறனும்என்று ஆயிரு பாற்ருய்,
வகைபட வந்த அணிநலம் தழீஇச்,
செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே'

என்று கூறிய செய்தியாகும். அகலக்கவி இலக்கணம் – சொல்தொடர்நிலை பொருள்தொடர்நிலைச் செய்யுள் இலக்கணம்.

'எழுநிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவறை இல்லனஆறு எனமொழிப' -தொல். பொ. 476

ஆதலின் பாவும் இனமும் அடிவரையறை உடையன என்பதும், உரை நூல் மந்திரம் பிசி முதுசொல் குறிப்புரை என்ற ஆறும் அடிவரையறை இல்லன என்பதும் கொள்ளப்படும்.

இவ்வியல் பாட்டியல் என்ற பெயரை உடைத்தாய்ப் பாட்டு அல்லாத ஏனைய செய்திகளையும் உணர்த்துதல் பொருந்துமோ எனின், வெண்குடைப் பெருவிறல் வழுதி என்புழி, வழுதிக்குச் செங்குடை முதலிய ஏனைய குடைகளும் உளவேனும், ஏனையோரிடம் இல்லாத வெண்குடையைப் பெற்றிருக்கும் சிறப்புப்பற்றி அவன் வெண்குடைப் பெருவிறல் வழுதி என்று அழைக்கப்பட்டாற்போல, இவ்வியலின்கண் ஏனைய இலக்கணங்களும் கூறப்பெறினும் மற்ற இயல்களில் கூறப்பெருத பாட்டிலக்கணத்தைத் தானே உணர்த்தி நிற்றலின் அத்தலைமை பற்றிய சிறப்புப்பற்றிப் பாட்டியல் என்று பெயரிடப்பட்டது. பிறிதின் இயைபு நீக்கல், தன்னோடு இயைபின்மை நீக்கல் என்ற அடைமொழி இலக்கணம் இரண்டனுள் இது தன்னோடு இயைபின்மை நீக்கல் என்ற அடைமொழி இலக்கண வகையைச் சேர்ந்தது.

செய்யுளியலில் தனிப்பட்ட முறையில் செய்யுள் இயற்றுமாற்றிற்கு இலக்கணம் கூறப்பட்டது. இப்பாட்டியலில் சொல் தொடர்நிலை பொருள்தொடர்நிலைச் செய்யுட்களின் பொது அமைப்பும் பொருள்அமைப்பும் கூறப்படுகின்றன. எனவே தனிநிலைச்செய்யுள் இலக்கணம் செய்யுளியலுள்ளும் தொடர்-

நிலைச் செய்யுள் இலக்கணம் பாட்டியலுள்ளும் கூறப்படும் எனலாம். செய்தல் செய்யுள் என்பனவற்றில் தல், உள் என்பன தொழிற் பெயர் விகுதிகளாம்.

செய்யுளியலில் தனிப்பட்ட வகையில் பாவும் பாவினமும் விளக்கப்பட்டுள்ளன. தொடர்நிலைச் செய்யுள்கள் அவற்ருலேயே அமைக்கப்பட்டுள்ளன. நூற்பா ஆகிய சூத்திரம் பெரும்பாலும் ஆசிரிய அடியாலேயே யாக்கப்படுகிறது. குறிப்பு என்பது இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டும் ஞானிகளது நிலை. அந்நிலையில் அவர் யாதும் உரையார் ஆயினும் அவர் நிலையை உணர்த்துவதற்கும் பாட்டே கருவியாகப் பயன்படுகிறது. இம்மூன்று காரணங்களானும் இந்நூற்பாவில் பாட்டு முதலாவதாகக் கூறப்பட்டுள்ளது.

'மாத்திரை முதலா யாந்து இனிது அமைத்த' என்ற அடை பாட்டிற்கே முற்றும் பொருந்துவது. மாத்திரை முதலாக வண்ணம் ஈருகச் சொல்லப்பட்ட இருபத்தாறு சிறப்பு உறுப்புக்களும், அம்மை முதல் இழைபு ஈருகச் சொல்லப்பட்ட எண்வகைப் பொது வனப்புக்களும், அடிவரையறை உடையனவாகிய பாக்களின்கண்ணும் பாவினங்களின்கண்ணுமே காணப்படும் என்பதும் ஏனைய நூல் முதலியவற்றில் அம்முப்பத்துநான்கும் குறைவறக் காணப்பெறு என்பதும் கொள்க.

பாட்டு முதல் குறிப்புரை ஈருகக் கிடந்தன இப்பொருளதிகாரத்தின் தொடர்பு உடையன. மரபு முதலிய இந்நூலின் மூன்று அதிகாரங்களுக்கும் தொடர்பு உடையன.

'மாத்திரை முதலா யாத்து இனிது அமைத்த பாட்டு' என்பது அநுவாதம் என்கின்ருர். முன்பு கூறப்பட்டது ஒன்றனையே பின்னும் இயைபுபற்றி மீண்டும் கூறுதல் அநுவாதம் என்பது பொதுவான கருத்து. இலக்கணவிளக்கத்துள் பாட்டின் உறுப்புக்கள் எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்ற ஆருகவே குறிக்கப்பட்டுள்ளன. ஆனால் தொல்காப்பியத்திலேயே, மாத்திரை எழுத்தியல் அசைவகை சீர் அடி யாப்பு மரபு

தூக்கு தொடை நோக்கு பா அளவியல் திணை கைகோள் கூற்று கேட்போர் களன் காலம் பயன் மெய்ப்பாடு எச்சம் முன்னம் பொருள் துறை மாட்டு வண்ணம் என்பனவும் அம்மை அழகு தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு என்ற எண்வகை வனப்பும் ஆகிய முப்பத்துநான்கு உறுப்புக்களும் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியம் கூறிய செய்யுளுறுப்பைப் பாட்டியல் ஈண்டுக் குறிப்பிடுவது அநுவாதம் என்கின்றது. முன்பு கூறப்படாத பொருளையும் கூறப்பட்டது போல எடுத்துக் கூறுதலும் அநுவாதத்தில் அடங்கும் என்பது,

'அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப'

– தொல். சொ. 125

என்ற சொற்படல நூற்பா உரையுள் சேனவரையர் இகரம் அளபெடுத்தலை அநுவாதம் என்றார். அகர உகர எகர ஒகரங்களாகிய எழுத்துப் பேறளபெடையை எழுத்துப்படலத்தில் சொற்ற தொல்காப்பியனார், இகரமாகிய எழுத்துப் பேறளபெடையை முன்னர்ச் சுட்டாமலேயே சொற்படலத்துள், 'அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்' என்று குறிப்பிட்டதைச் சேனவரையர் இகரம் மிகும் என அநுவதித்தார் என்ற கருத்தைப் பின்பற்றியே மாத்திரை முதலாயாத்து இனிது அமைத்த பாட்டு என்பது அநுவாதம் என்று சுட்டப்பட்டது போலும். முதலாக என்பது முதலா என்று தொகுக்கும்வழி தொகுத்தது. ஒருசொல் எஞ்சி நிற்பதனைச் சொல்லெச்சம் என்று கொள்வது இவ்வாசிரியர் கருத்தாம்.

நான்கு பாவிற்கும் உரிய வருண உரிமை முதலியன பிற என்பதனுல் கொள்ளப்பட்டன.

'வெண்பா முதல்வஞ் சிப்பா இறுதி
நான்குபா வினுக்கும் நாளும் கிரகமும்
நிலனும் குலனும் நிறமும் இராசியும்,
ஆகிய இருமூன்று இலக்கணப் பகுதி
குறித்தார் முற்றுணர் குறவர் என்ப.'– மு. வீ. யா. ஒ. 50

## பாட்டின் இலக்கணம்

762. அவற்றுள்,
பாட்டெனப் படுவது பைந்தமிழ் நாட்டகத்து
யாப்புறச் செய்பா உறுப்புளமுந்து இசைக்கும்.

**இது நிறுத்த முறையானே முதற்கண் நின்ற பாட்டு இவ்வியல்பிற்று என்கின்றது.**

[இ-ள்] முற்கூறிய எழுவகைச் செய்யுளுள் பாட்டு என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது மூவேந்தரது குளிர்ந்த தமிழ்நாட்டு எல்லைக்கண் தொன்றுதொட்டு வழங்கும் யாப்புறச் செய் பா என்னும் உறுப்பான் மிக்கு ஒலிக்கும் என்றவாறு.

எனவே, ஏனை அறுவகைச் செய்யுளும் அடிவரை இன்றிப் பாஉறுப்பாக இசைக்கப்படா என்பதூஉம் பெற்றும். பெறவே, பா என்பது பாவின்வேருய் நின்று உறுப்பு ஆமாறு என்னை எனின், அது சேட்புலத்து ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடம் ஓதுங்கால் அவன் பாடுகின்ற செய்யுளை விகற்பித்து இன்னது என்று உணர்தற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசையே பா என நின்று பா என்பதற்கு உறுப்பான் வந்த பெயர் ஆயிற்று.

பாட்டு என்பது, ஆடல் ஆட்டு என்றாற்போலப் பாடல் பாட்டு என நின்று ஆகுபெயரான் அத்தொழில் உறுகின்ற ஓசைமேல் நின்று அது பாட்டாயிற்று. அன்றியும் பாணை உடையது பாட்டு எனக் குறிப்பு வினைமுற்று என்பதூஉம் ஆம்.

## விளக்கம்

நிறுத்தமுறை - பாட்டியல் முதல் நூற்பாவில் நிறுத்தமுறை செய்யுள் என்ற பொதுத் தலைப்பில் பா முதலிய ஏழும் அடங்கும். பா என்ற தலைப்பில் ஐவகைப்பாக்களும் பதினான்கு வகைப் பாவினங்களும் அடங்கும். பாவும் பாவினமும் அடிவரையறை உடையன. நூல் உரை பிசி மந்திரம் முதுசொல் குறிப்புரை என்ற ஆறும் அடிவரையறை இல்லன ; இவை ஏழும் பொதுவாகச் செய்யுள் என்றே வழங்கப்பெறும் என்பது உணரப்படும்.

பா என்பதற்கு விளக்கம் பேராசிரியர் நச்சினார்க்கினியர் என்பாரைப் பின்பற்றியே கூறப்பட்டுள்ளது. ( தொ. பொ. 313 ) பாடலில் உள்ள எழுத்துக்களும் சொற்களும் விளங்காது போயினும், அது இன்ன பா என்பதனை அதன் ஓசையைக் கொண்டே உணரலாம் என்றவாறு. ஓசையாவன - செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் என்பன. பாடல் ஆடல் - அல் தொழிற்பெயர் விகுதி. பாட்டு ஆட்டு - து தொழிற்பெயர் விகுதி அன்று. பாடு ஆடு என்ற பகுதி இரட்டித்துத் தொழிற்பெயர் ஆயின. அத்தொழிற்பெயர் ஆகுபெயரால் ஓசையைக் குறித்து நின்றது. இனி, து என்பது குறிப்பு வினைமுற்று விகுதி-யாகுங்கால் பாண் + து என்று பிரித்துக்காண்க. 2

## பாட்டின் வகை

763. ஆசு மதுரம் சித்திரம் அகலம்என்று
ஓசை எழும்பாட்டு ஒருநால் வகைத்தே.

**இஃது அப்பாட்டின் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.**

**இ - ள் : பாஉறுப்பு மேற்கொண்டு ஒலிக்கும் பாட்டு ஆசுகவி என்றும் மதுரகவி என்றும் சித்திரகவி என்றும் வித்தாரகவி என்றும் நான்கு கூற்றினை உடைத்து என்றவாறு.** 3

### விளக்கம்

'யாப்புறச் செய்பா உறுப்பு எழுந்து இசைக்கும்' என்பதனை மீண்டும் வலியுறுத்தவே, பாட்டு என வாளாகூறது 'ஓசை எழும் பாட்டு' என்றார்.

பாட்டு என்பது பால்பகா அஃறிணைப்பெயர் ஆதலான் அஃது ஒருமையையும் பன்மையையும் குறிக்கும்.

ஆசு முதலியவற்றின் இலக்கணம் மேல் விரித்துக் கூறப்படும். கவி என்பது பாட்டினையும் பாடுவோனையும் குறிக்கும் சொல்லாம்; ஈண்டுப் பாட்டு என்னும் பொருளதாய் உரையில் கொள்ளப் பட்டுள்ளது. எனவே, கவி என்பது பாட்டு என்பதனோடு ஒருபொருட்கிளவி ஆகவும், வேறுபொருட் கிளவியாகவும் வருமாறு உணரப்படும்.

### ஒத்த நூற்பாக்கள்

'ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் எனும்
பாவகை பாடுவோன் கவிஎனப் படுமே.'
– திவாகரம். 12-44

'கவிகள்தாம்,
ஆசு மதுரமே சித்திரம் வித் தாரமெனப்
பேசுவார் நால்வருக்கும் பேர்.' – வெண். பா. செ. 1

'ஆய்ந்தவல் ஆசு மதுரமும் சித்ர வித்தாரமுமே
ஏய்ந்த கவி நான்கும்.' – நவநீத 85

'ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
ஏசில் கவிநான்கு இவை என்ப.' – தொ. வி. 299

'ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
ஆகும் நாற்கவி அறையுங் காலே.' – மு. வீ. யா. ஒ. 55

## ஆசு கவி

764. எழுத்துச் சொற்பொருள் அணியாப்பு இவையின்
விழுத்தக ஒருவன் விளம்பிய உள்ளுறை
அப்பொழுது உரைப்பது ஆசு கவியே.

இது நிறுத்த முறையானே ஆசுகவி இலக்கணம் கூறுகின்றது.

[இ-ள்] ஒரு புலவன் இவ்வெழுத்தான் ஆதல், இச்சொல்லான் ஆதல், இப்பொருளான் ஆதல், இவ்வணியான் ஆதல், இப்பாட்டான் ஆதல், இவ்வெழுத்து ஆதி, இவ்வெழுத்து அந்தம், இச்சொல் ஆதி, இச்சொல் அந்தமாகப் பாடுவாய் என்றுகூற அப்போதே அவன் கருத்துக்கு ஒப்பப் பாடுவது ஆசுகவியாம் என்றவாறு. 4

### விளக்கம்

*நிறுத்தமுறை: சென்ற நூற்பாவில் நிறுத்தியமுறை. இதனை அடுத்த மூன்று நூற்பாக்களுக்கும் கொள்க.*

*'எவன்ஒரு நொடியில் எண்ணுது இசைத்ததோர் செய்யுள்மற்றைக்*
*கவிபன்னுள் நினைந்து சொற்ற சாத்திரங் கட்கு மேலாம்'*

*என்ப ஆதலின் ஆசுகவி பாடுவோன் இறைவன் அருள் நிரம்பப் பெற்றவனைக் கொண்ட சான்றோர், கவிகளுள் ஆசுகவிக்கு முதல் இடம் கொடுத்தனர் என்பது. 'ஆசுகவியால் அகில உலகெங்கும், வீசுபுகழ்க் காள மேகமே' என்பதனல் ஆசுகவி மக்களிடையே பெரிதும் புகழப்படுவான் என்பதும் உணரப்படும்.*

### ஒத்த நூற்பாக்கள்

*'கொடுத்த பொருளில் தொடுத்த இனத்தில்*
*எடுத்த பொழுதில் பாடுவது ஆசுகவி.' – திவா - 12 - 48*

'பேரெழுத்தின் சொல்லின் பொருளின் பெருங்கவியின்
சீரலங் காரத்தில் தெரிந்தொருவன் – நேர்கொடுத்த
உள்ளுறைக்(கு) அப்போது உரைப்பதனை ஆசு என்றார்
எள்ளாத நூலோர் எடுத்து.' – வெண். பா. செ. 2

'எடுத்த பொருளில் தொடுத்தஇன் பத்தில்
அடுத்த பொழுதில் பாடுவது ஆசே.' – தொ. வி. 299.

'பொருள்அடி பாஅணி முதலிய கொடுத்துப்
பாடுஎனப் பாடுவோ னேயாசு கவியே.'

– மு. வீ. யா. ஒ. 56

4

## மதுரகவி

765. சொல்லும் பொருளும் சுவைபட நிறீஇச்
செல்வுழித் தொடையும் விகற்பமும் செறீஇ
உள்ளத் துள்ளே கொள்ளும் அமுதெனத்
தன்மை உவமை பின்வரு பெற்றியின்
உருவகம் முதலுற்று ஓசை பொலியப்
பாடுதல் மதுர கவிஎனப் படுமே.

**இது நிறுத்த முறையானே மதுரகவி இலக்கணம் கூறுகின்றது.**

**இ – ள் : சொல்லிலக்கணத்தினும் பொருள் இலக்கணத்தினும் சிதையாமல் மெய்ப்பாடு தோன்றக் கூறி அடிசேர்ந்து நடக்கும் இடத்து முதல் தொடையும் விகற்பத்தொடையும் நெருங்கி, உய்த்து உணர்வோர் மனத்தகத்து ஊறும் அமுதம் போலத் தன்மை உவமை உவமையும் பொருளும் வேற்றுமை இன்றி ஒன்று என மாட்டிக் கூறும் உருவகம் முதலிய அணிகளான் அலங்கரிக்கப்பட்டுக் கேட்போர் செவிக்கு இனிய ஓசை மேற்பட்டுத் தோன்றப் பாடுவது மதுரகவியாம் என்றவாறு.** 5

## விளக்கம்

சொல் பொருள் யாப்பு அணி மெய்ப்பாடு ஓசை யாவும் செம்மையுற அமையும் பாடல் மதுரகவியாம்.

மெய்ப்பாடு : நகை முதலிய எட்டும், நடுவுநிலையும்.

முதல்தொடை : மோனை முதலிய ஐந்தும் அந்தாதியும் இரட்டையும் செந்தொடையும்.

விகற்பத்தொடை : இணை முதல் முற்று ஈருகியன.

'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பதிகத்தைப் பாடிய ஆழ்வார் மதுரகவியார் என்று வழங்கப்படுதலும் நோக்குக. பாடலின் பயன் மன இன்பம். அதனைத் தருவது மதுரகவியாம்.

## ஒத்த நூற்பாக்கள்

'பொருளின் பொலிவும் சொல்லின் செல்வமும்
தொடையும் தொடைக்கண் விகற்பமும் துதைந்த
உருவகம் முதலாம் அலங்காரம் உட்கொண்டு
ஓசைப்பொலி வுற்று உணர்வோர் உளங்கட்கு
பாக்கடல் அமுதம்போல் பாடுதல் மதுரகவி.'
– திவா. 12 - 49

'எடுத்த பொருளினேடு ஓசை இனிதாய்
அடுத்தவைசெஞ் சொல்லாய் அணியும் – தொடுத்த
தொடையும் விளங்க அவைதுதிப்பச் சொல்லின்
இடமுடைய மாமதுர யாப்பு.' – வெண். பா. செ. 3

'உடைப்பொருட் பொலிவும் உரிச்சொல் செல்வமும்
தொடைப்பொலி விகற்பமும் தொடர்அணிச் சிறப்பும்
இசைபெற ஓசையும் இயலப் பாடி
வசையில வருங்கவி மதுரம் ஆமே.' – தொ. வி. 299

'தொடையும் தொடையின் விகற்பமும் செறியச்
சொற்சுவை பொருட்சுவை தோன்ற உருவகம்
ஆதிய அணிகளோடு அணிபெறப் பாடுவோன்
மதுர கவிஎன வழுத்தப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 57

## சித்திரகவி

**766.** சித்திர கவிமேற் செப்பியது ஆகும்.

**இது நிறுத்த முறையானே சித்திரகவி இலக்கணம் மாட்டேற்ருன் எய்துவிக்கின்றது.**

**இ–ள்: சித்திரகவியாவது மேல் சொல்லணியில் கூறிய சித்திரகவியே ஈண்டுக்கூறும் சித்திரகவியாம். என்றவாறு. அது மடக்கும் அதன் வழிப்படு உம் சித்திரமும் ஆம் என்றவாறு. 6**

### விளக்கம்

பொருட் சிறப்பையே பெரிதும் கருதாது, சொல்லடுக்கையே குறிக்கோளாகக் கொண்டு சொல்லழகு காணும் விருப்பம் உடையார் உள்ளம் உவகை உறும் வகையில் பாடப்படும் நூற்றைந்து வகை மடக்கும், கோமூத்திரி முதலாக இருபது திறத்தனவாகக் கூறப்பட்ட மிறைக்கவிகளும் சித்திரகவிகளாம். ' இனி, நிறைமொழி மாந்தர் மறைமொழி போல்வன சில மிறைக் கவி பாடினர் உளர் என்பதே பற்றி அல்லாதாரும் அவ்வாறு செய்யுள் செய்தல் மரபு அன்று; அவை சக்கரம், சுழிகுளம் கோமூத்திரிகை, ஏகபாதம், எழுகூற்றிருக்கை, மாலைமாற்று என்றாற்போல்வன. இவை மந்திரவகையான் அன்றி வாளாது மக்களைச் செய்யுள் செய்வார்க்கு அகன் ஐந்திணைக்கும் மரபு அன்று என்பது கருத்து ……… அவற்றிற்கு வரையறை வகையான் இலக்கணம் கூறலாகாது என்பது.'

– தொ. பொ. 645. பே.

### ஒத்த நூற்பாக்கள்

'மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்
ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறை பாட்டே

பாத மயக்கே பாவின் புணர்ப்பே
கூட சதுக்கம் கோமூத் திரியே
ஓரினத்து எழுத்தால் உயர்ந்த பாட்டே
ஒற்றுப் பெயர்த்தல் ஒருபொருட் பாட்டே
சித்திரப் பாவே விசித்திரப் பாவே
விகற்ப நடையே வினா உத்தரமே
சருப்பதோ பத்திரம் சார்ந்த எழுத்தே
வருக்கமும் மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்தும் மறைத்தும் மிறைக்கவிப் பாட்டு
தெரித்துப் பாடுவது சித்திர கவியே.' – திவா. 12–50

'யாப்புடைய மாலைமாற்று ஆதியா ஏனையவும்
வாய்ப்புடைய சொல்லின் வகுத்தமைத்து – நீப்பிலா
வண்ணமும் தொன்னூல் மரபும் வழுவாமல்
பன்னுவது சித்திரத்தின் பா.' – வெண். பா. செ. 4

'கோமூத் திரிமுதல் கூறிய மிறைக்கவி
சித்திரம் என்பர் சிறுபான்மை அவைஎனப்
பத்திரம் முதல்நுண் பத்தியில் பாடிச்
சித்திரம் போல்வன சித்திர கவியே.' – தொ. வி. 299

'ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்புக் கரந்துறை செய்யுள்
கூட சதுக்கம் கோமூத் திரிமுதல்
தெரிந்து பாடுவோன் சித்திர கவியே.'

– மு. வீ. யா. ஒ. 58

6

## வித்தாரகவி

767. வித்தார கவியை விளம்புங் காலை
அத்திறம் தொடர்நிலை அடிபல நடக்கும்
தனிப்பா என்னத் தான்இரண்டு ஆகும்.

**இது வித்தாரகவியின் பாகுபாடு கூறுகின்றது.**

இ-ள்: வித்தார கவியைச் சொல்லும் இடத்துத் தொடர்நிலைப் பாட்டு என்றும் பல அடியான் நடக்கும் தனிப்பாட்டு என்றும் இரண்டுகூறும் என்றவாறு.

என்ன என்பதனைத் தொடர்நிலை என்பதனோடும், பிரித்துக் கூட்டுக.

ஈண்டுக் கூறிய அகலக்கவிக்கு இலக்கணம் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறார் ஆயினார்; என்னை எனின், அவர்

'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி.'

– தொல், சிறப்புப்பாயிரம்.

எனக் கருதிப் புகுதலானும்,

'முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
யாற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்.'

– தொல். சொ. 462.

என அகலக்கவியைச் சொல்முடிபு கூறும் முகத்தான் கூறுதலானும்,

புறத்திணைக்கண்,

'தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில்எடை நிலையும்,
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளணி செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்,
சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமும்,
நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்,

மாஞர்ச் சுட்டிய வாள்மங் கலமும்,
மன்எயில் அழித்த மண்ணுமங் கலமும்,
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்,
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயின் தோன்றும் இருவகை விடையும்,
அச்சமும், உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலம் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
காலம் மூன்ெருடு கண்ணிய வருமே.' - தொ. பொ. 91

என அகலக்கவியை விதந்து கூறுதலானும், செய்யுள் ஓத்தில்,

'அகன்று பொருள்கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்று பொருள்முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டென மொழிப, பாட்டியல் வழக்கின்.'
– தொல். பொ. 522

என்றதனுல் பொருள் தொடர்நிலைச் செய்யுளும்,

'மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடனிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே.'
- தொல். பொ. 523

என்றதனுல் சொல்தொடர்நிலைச் செய்யுளும் பெறப் படூஉம் என்க. அவற்றைப் பின்னுள்ளோர் பலரும் பாட்டியல் என விரித்துக் கூறினுர் ஆகலான், இந்நூல் உடையாரும் அகலக்கவிக்கு இலக்கணம் கூறினுர் என்று உணர்க. 7

விளக்கம்

'தொடர்நிலை என்ன, அடிபல நடக்கும் தனிப்பா என்ன அத்திறம்தான் இரண்டாகும்' எனப் பிரித்துக்கூட்டிப் பொருள் கொள்க. என்ன என்பது எண் இடைச்சொல்,

'வழக்கும் செய்யுளும்' என்புழிச் செய்யுள் எனவே தனிநிலைச் செய்யுளும் தொடர்நிலைச் செய்யுளும் பொதுவகையான் அடங்குதலானும், 'ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்' எனவே ஆற்றுப்படைச் செய்யுட்கள் அவர் காலத்து இருந்தமை போதருதலானும், துயில் எடைநிலை, கூத்தர் ஆற்றுப்படை, பாண்ஆற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை, விறலி ஆற்றுப் படை, பெருமங்கலம், மண்ணுமங்கலம், குடைநிழல்மரபு, வாள் மங்கலம், எயில் அழித்த மண்ணுமங்கலம், கடைக்கூட்டுநிலை, இருவகைவிடை, ஓம்படை என்பன பற்றி அகலக்கவி அமையு-மாற்றைக் குறிப்பால் சுட்டுதலானும், பாடல்கள் பல அடிகளாக வருதலை யாட்டு என்ற உறுப்பினை விளக்கும் முகத்தான் குறிப்பிடுதலானும், தொல்காப்பியனார் தனிப்பட்ட வகையில் அகலக்கவிகளைச் சுட்டி அவற்றின் செய்யுள் அமைப்புமுறை முதலியவற்றை விளக்காதுபோயினும் தம் காலத்திலேயே அகலக்கவி பலவும் உளவாதலைச் சுட்டியுள்ளமை தேற்றம்.

பின்னுள்ளோர் – பன்னிருபாட்டியல் ஆசிரியர்கள், வெண்பாப் பாட்டியல் ஆசிரியர், நவநீதப் பாட்டியல் ஆசிரியர், சிதம்பரப் பாட்டியல் ஆசிரியர், பிரபந்த மரபியல் ஆசிரியர் முதலியோரும் இவ்வாசிரியருக்குப் பிற்பட்டவராக நாம் அறியும் தொன்னூல்-விளக்க ஆசிரியரும் முத்துவீரிய ஆசிரியரும் பிரபந்ததீபிகை ஆசிரியரும் முதலாயினர்.

## ஒத்த நூற்பாக்கள்

'ஒன்றே ஆகியும் ஒன்றுபல ஆகியும்
பலஒன்று ஆகியும் பாற்படும் இனமே.' – பன். பாட். 157.

'அவற்றுள்,
ஒன்று கியஇனம் எனப்பட் டனஉலா
ஆற்றுப் படைவகை மடல்முத லாயின.' – 158.

'ஒன்றுபல ஆகிய இனம்அந் தாதி
கோவை காப்பியம் ஆதியாக் கூறுவன.' – 159.

'பலஒன்று ஆகிய இனம்எனப் பட்டன
கலித்தொகை குறுந்தொகை நெடுந்தொகை முதலன.'
– பன். பாட். 160.

'பலஒன் றாகிய இனம்எனப் பட்டன
கலம்பகம் மும்மணிக் கோவைமுத லாயின.' – 161.

'மும்மணிக் கோவையும் பன்மணி மாலையும்
மறமும் கலிவெண் பாட்டும் மடல்ஊர்ச்சியும்
பாசண்டத் துறையும் கிரீடையும் கூத்தும்
விருத்தக் கவிதையும் இயல்இசை நாடகத்தொடு
விரித்துப் பாடுவது வித்தார கவியே.' – திவா. 12-51

'பாங்கார் தொடர்நிலைப்பாப் பல்பாதம் சேர்தனிப்பா
ஈங்கிவற்றின் பாக்கள் இரண்டாகும்; – ஆங்குத்
தொடர்நிலைப்பா வின்விகற்பம், சூழ்வளையாய்! சொல்லின்,
கடையிலவே என்றுரைத்தார் கண்டு.'
– வெண். பா. செ. 5.

'தொடர்நிலை தொகைநிலை தொடுத்தபல் பாவும்
தொடைபல வாகத் தொடுத்தஒரு பாவும்
வித்தாரக் கவியென விளம்பினர் புலவர்.'
– தொ. வி. 299.

'மறக்கலி வெண்பா மடலூர்தல் இயல்இசை
பாசண்டத்துறை பன்மணி மாலை
தசாங்கம் மும்மணிக் கோவை கிரீடை
இவைமுத லியவிரித்து இசைத்துப் பாடுவோன்
வித்தா ரக்கவி யாம்விளம் பிடினே.' – மு. வீ. யா. ஒ. 59

7

## தொடர்நிலைச் செய்யுள்

768. அவற்றுள்,
தொடர்நிலை விகற்பம் கடையில என்ப.

இது முதற்கண் நின்ற தொடர்நிலைச் செய்யுட்கு ஆவதொரு புறனடை கூறுகின்றது.

இ-ள்: தொடர்நிலை தனிநிலை என்னும் இரண்டனுள் தொடர்நிலைச் செய்யுட்களின் வேறுபாடுகளைக் கூறும் இடத்து முடிவுடைய அல்ல என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. 8

## விளக்கம்

*முதற்கண் நிற்றல் - சென்ற நூற்பாவில் முதல்வகையாகக் கூறப்படல்.*

*தொடர்நிலைச் செய்யுள் வேறுபாடுகளைப் பாட்டியல் வரைந்த ஆசிரியர் பலரும் தத்தம் கருத்திற்கு ஏற்பப் பலவகைகளாகப் பிரித்து எண்ணியுள்ளனர். தொடர்நிலைச் செய்யுட்கள் இவ்வளவே வரையறை உடையன என்ற யாப்புறவு இல்லை. ஆசிரியர்களிடையே வரையறையில் வேறுபாடு உள்ள செய்தி இவ்வியல் முகவுரையில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.*

*வீரமாமுனிவர் சதுரகராதியில் 96 என்ற வரையறையை வற்புறுத்தியுள்ளார். பிரபந்தமரபியலும் 96 என்ற வரையறையைக் கூறியுள்ளது. சதுரகராதி கூறுவனவற்றைப் பிற்சேர்க்கையில் காண்க.*

*'வானவர் ஏத்தும் மறையோர் முதலிய*
*மக்களின் னோர்க்குத் தக்க தன்மையின்*
*பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறாத்*
*தொண்ணூற் றாறுஎனும் தொகை யதாம்முற்*
*பகர்இயல் முன்னுறப் பாடும் பிரபந்த*
*மரபிய லதுபிர பந்தமர பியலே.'* – *பி. ம. 1.*

*'தொடர்நிலை பொருளினும் சொல்லினும் ஆகும்;*
*பொருட்டொடர் நிலைதற் பொருள்தரத் தானே*
*பற்பல பாட்டாய்ப் பயனில் தொடரும்;*
*சொற்றொடர் நிலையெனின் தூக்கந் தாதியே.'*
– தொ. வி. 254.

*'பொருட்டொடர் நிலையே புகலின் காப்பியம்*
*பெருங்காப் பியமெனப் பிரிவிரண்டு; அவற்றுள்*
*காப்பியம் அறம்முதல் நான்கில் குறைநவும்*
*புராணம் பல்கதை புனைநவும் என்ப.' – தொ. வி. 255.*

*ஏனைய செய்திகளை அணியியலில் காண்க.* *8*

## பொருத்தம் பத்து என்பது

**769.** விரித்தபா மகட்கும் வேட்கும் இறைக்கும்
பொருத்தப் பத்தும் போற்றல் வேண்டும்.

**இது, மேல் வகுத்துக்கொண்ட அகலக்கவிக்கு இன்றியமையாச் சிறப்புக் கூறுகின்றது.**

**இ-ள்: மேற்கூறிப்போந்த துறைப்பொருளை விரித்துக்கூறும் பாமடந்தைக்கும் அப் பாமகளை மணம் புணரும் தலைவனுக்கும் பொருத்தம் பத்தும் சிதையாமல் பாதுகாத்துச் சொல்லுதலை விரும்பும் ஆசிரியன் என்றவாறு.** **9**

### விளக்கம்

*அகலக்கவியைத் தொடங்குங்கால் அதன் முதல்பாட்டின் முதற்சீர்க்கும் பாட்டுடைத் தலைவன் பெயருக்கும் பொருத்தங்கள் பத்து அமைதல் வேண்டும் – என்ற கொள்கை தொல்காப்பியனுருக்குப் பிற்பட்ட காலத்திலே நாட்டில் நிலவவே, பாட்டியல் நூல்கள் பலவும் இப்பத்துப் பொருத்தங்களையும் குறிப்பிடத் தொடங்கிவிட்டன. பாட்டுடைத்தலைவன் புலவன் தன்மீது இயற்றிய அகலக்கவியைக் கோடலைப் பாமகளை மணம் செய்து கோடலாகவே கருதும் மரபு ஏற்பட்டுவிட்டது.*

*சீவகன் கல்வி பயிலத் தொடங்கிய செய்தி,*

*'குழைமுக ஞானம் என்னும் குமரியைப் புணர்க்க லுற்றார்.'*
*– சிந்தா. 368.*

*ஏன்றே கூறப்படுமாற்றையும் அறிக,* *9*

## பத்துப் பொருத்தங்கள்

770. மங்கலம் சொல்பால் வருணம் உண்டி
தானம்அக் கரம்நாள் தப்பாக் கதிகணம்
ஆனஈ ரைந்தும் அம்முதல் சீர்க்குப்
பொருத்தம் என்னத் தெரித்தனர் புலவர்.

இது வித்தாரகவிக்கு வேண்டுவன இவை எனத் தொகுத்துக் கூறுகின்றது.

இ-ள்: மங்கலமும் சொல்லும் பாலும் வருணமும் உண்டியும் தானமும் எழுத்தும் நாளும் தவறுதகதியும் கணமும் ஆகிய பத்தும் அகலக்கவிக்கு முதற்கண் நின்ற சீர்க்குப் பார்க்கும் பொருத்தம் எனத் தெரிந்து கூறுவர் புலவர் என்றவாறு.

ஆகுபெயரான் மங்கலச்சொல்லை மங்கலம் என்றார். 10

### ஒத்த நூற்பாக்கள்

*'ஏத்திய ஓத்தியல் எழுத்தியல் இயம்பின்*
*பிறப்பும் வருணமும் சிறப்பாம் கதியும்*
*இருவகை உண்டியும் மூவகைப் பாலும்*
*பொருவில் தானமும் கன்னலும் புள்ளும்*
*நயம்பெறு நாளும் இயம்புதல் கடனே.* – பன். பாட். 1

*'தொகுத்துரைத்த மங்கலம் சொல்எழுத்துத் தானம்*
*வகுத்தபால் உண்டி வருணம் — பகுத்தநாள்*
*தப்பாக் கதிகணம் என் (று) ஈரைந்தின் தன்மையினைச்*
*செப்புவதாம் முன்மொழியின் சீர்.'* – வெண். பாட். 1

*'மங்கலம் சொல்எழுத்து ஒன்றிய தானம் வரும்இருபால்*
*பொங்கிய உண்டி வருணம் பகுத்திடு நாள்பொருத்தம்*
*தங்கிய நாற்கதி எண்கணம் என்று தமிழ்தெரிந்தோர்*
*இங்குஇவை பத்தும் முதல்மொழிக்கு ஆம்என்று*
*இயம்பினரே.'* – நவ. 2

'விளக்கிய மங்கலமே முதலாக விரித்த பத்தும்
துளக்கற நாடும் பொருத்தமன்றே.' – வரை. பாட். 3

'பகர்செய்யுள் மங்கலம்சொல் எழுத்துத் தானம்
பால்உண்டி வருணம்நாள் கதியே என்று
புகரில்கணம் எனப்பத்தும் பிறங்கு கேள்விப்
புலவர்புகழ் முன்மொழிக்குப் புகல்வர்.'
– சிதம். பாட். 17

'முதல்மொழிப் பொருத்தம் தந்திடுங் காலை
மங்கலம் சொல்எழுத்துத் தானம் பால்உணு
கங்கில் வருணம்நாள் கதிகணம் ஈரைந்தே'
– தொ. வி. 284.

'துகளறு மங்கலம் சொல்லுடன் எழுத்து
தானம் பால்உணுச் சாதிநாள் கதி
கணம்ஒரு பத்துர்முற் காணுவ பொருத்தம்.'
– மு. வீ. யா. 65
10

## மங்கலச் சொற்கள்

771. சீர்பொன் பூமணி திங்கள் பரிதி
கார்திரு எழுத்துக் கங்கை யானை
கடல்நிலை மாஉல கம்சொல் நீர்தேர்
அமுதம் புகழ்நிலம் ஆரணம் கடவுள்
திகிரி பிறவும் செப்புமங் கலமே.

இது நிறுத்தமுறையானே முதற்கண் நின்ற மங்கல மொழி இவை என்கின்றது.

இ – ள் : சீர் முதலாகத்திகிரி ஈருக நின்ற இருபத்து நான்கு சொல்லும் அவை போல்வன பிறவும் அகலக் கவிக்கு முதற்கண் நிற்கும் மங்கலச் சொற்களாம் என்றவாறு.

பிற என்றதனால் வாழி மாலை சங்கு தார் விசும்பு கவி கயல் சுடர் முரசு கவரி தோகை நன்று தாமரை விளக்கு மலர் பழனம் இடபம் என்பனவும் செல்வம் சீர்த்தி கீர்த்தி ஞாயிறு புயல் புனம் வேழம் களிறு பரி மதியம் தீபம் முதலிய பரியாயச் சொற்களும் கொள்க.

## விளக்கம்

*நிறுத்தமுறை* – சென்ற நூற்பாவில் நிறுத்திய முறை. *பிற* என்பதனால் ஏனைய மங்கலச் சொற்களும், சொல்லப்பட்ட மங்கலச் சொற்களின் பொருள்தரும் ஏனைய சொற்களும் கொள்ளப்பட்டன.

செல்வம், சீர்த்தி கீர்த்தி, ஞாயிறு. புயல், புனல், வேழம் களிறு, பரி மதியம் தீபம் என்பன முறையே திரு, புகழ், பரிதி, கார், நீர், யானை, மா, திங்கள், மணி என்பனவற்றின் பொருள வாதல் உணரப்படும்.

## ஒத்த நூற்பாக்கள்

### மங்கலச்சொல்

*'பொன்பூத் திருமணி புனல்ஆ ரணம்கடல்*
*செங்கதிர் திகிரி தேர்பரி எழுத்தே*
*மாநிலம் கங்கை மலைபுகழ் அமுதம்*
*கார்புயல் உலகம் களிறே அருந்ததி*
*பார்மதி நாள்சீர் ஜெண்டுடன் என்ன*
*எண்ணிய சொல்லே அவையல பிறவும்*
*கண்ணிய மங்கலச் சொல்லெனக் காட்டினர்.'*

– பொய்கையார். பன். பாட். 133.

'சொல்லெனப் படுமவை சொல்லுங் காலைத்
திரு பொன் பூமி புனல் மணி கடல் யாறு
எழுத்து அமுது எழில் மழை பசுங்கதிர் செஞ்சுடர்

நாள் சொல் ஞெண்டு நாட்டிய பரி மலை
கருடன் அருந்ததி மற்றிவை என்ப
நிலைபெறு மங்கல நெறிசிற் பனவே.'

– பொய்கையார். பன். பாட். 134

'செப்பிய உடம்பொடு சேராது உயிர்முதல்
நிற்பன மக்கட்கு ஆம்என நேர்ந்திலர்;
மற்றவை கடவுளர் முனிவர்க்கு ஆமே.' ,, 135

'உயிரொடு புணரா மென்மையும் இடைமையும்
செயிரில் தீமையும் செப்பத் தருமே.' ,, 136

'ஓதிய மெய்யொடு புணராது உயிரெழுத்து
ஆதியின் நிற்பின் ஆனந் தம்மே.' ,, 137

'உடம்பு பிரிஉயிர் சாதல் தானே.' ,, 138

– இந்திரகாளியர்.

'நரகரும் விலங்கும் அமுதொடு வரின்அவை
புகரில என்ப புலமை யோரே.' - பரணர். ,, 139

'சொல்லிய மரபின் மங்கலம் சிதைத்துப்
புல்லுதல் குற்றம் பொருள்தலை மகற்கே.' ,, 142

'தொடுகழல் வேந்தன் துன்னு தோறும்
வடுஅறு பரிசில் வழங்கா தோறும்
கெடுதல் வேண்டிச் சிதைத்தலும் உரித்தே.' ,, 143

'திருவே பூவே திங்கள் ஞாயிறு
கடலே மலையே கார்மழை பசும்பொன்
மணியே மாநிலம் வருபுனல் அமிழ்தம்
தேர்பரி களிறு சீர்முதல் என்றிவை
போல்வன பிறவும் புகழ்ந்தநற் சொல்லே.' – பன். பாட்.

'திருப்பொன் கடலே தேர்பரி களிறே
பொருப்பே மணிப்பூப் புகழ்இவை பிறவும்
வந்தன விதிக்கும் மங்கலச் சொல்லே.' ,,

'சீரெழுத்துப் பொன்பூ திருமணிநீர் திங்கள்சொல்
கார்பரிதி யானை கடல்உலகம் — தேர்மலைமா
கங்கை நிலம்பிறவும் காண்தகைய முன்மொழிக்கு
மங்கலமாம் சொல்லின் வகை.' – வெண். பாட். 2

## சீர், எழுத்து

'வருகின்ற மங்கலச் சொல்லினுள் சீர்கொள்க
வாய்ந்தகக்கா
அருகுஒன்று கிக்கீசொச் சோக்கள்நந் நாவொ
டடுத்தநிந்நீ
தருகின்ற யாவொடு வல்வாவிவ் வீப்பெயர்
தங்களுக்கு
முருகுஒன்று எழுத்துநுந் நூயூப் பெயர்க்கும்
மொழிய நன்றே.' – வரை. பாட். 4

## பொன் பூ

'மொழிபொன்குக் கூவும்சௌ காரந்துத்தூவு
முரணிதெத்தே
அழிவில்நெந் நேயொடு புப்பூமெம் மேயொ
டகன்றமொம்மோ
வழுவில்மௌ காரப் பெயர்க்குரை பூக்கொண்
டிசைக்கதௌசை
வழிகொள்மம் மாமிம்மீ மும்மூவை காரவௌ
காரங்கட்கே.' – வரை. பாட். 5

## திரு திங்கள் மணி நீர்

'வௌவும் திருத்திங்கள் என்சொற்கள் கொக்கோ
வரும்பெயர்க்காம்
'செவ்வுள் மணிச்சொல்கெக் கேப்பெயர்க் காம்செழு
நீர்ச்சொற்கு ஐஓடு
இவ்வுள்சிச் சீயொடு தித்தீத்தை நெந்நோ
வுடன்இசையக்
கௌவும்பை காரப் பெயர்க்குநன் றும்படி
கட்டுரையே.' – வரை. பாட். 6

### சொல் கங்கை வாரணம்

'கட்டுரை சொற்கொள் ஒள காரஞ்சுச் சூக்கள்
செச்சேக்கள் தௌநௌ
ஒட்டுரை பேர்க்கினி தாம்கங்கை அஆ
ஓஓக்கள் தத்தா
விட்டுரை தொத்தோ விழையோப் பெயர்க்குயர்
யானையின்பேர்ப்
பட்டுரை வாரணம் கொண்டுஞெஞ் ஞொப்பெயர்
பாடுகவே.' – வரை. பாட். 7

### குஞ்சரம் உலகு பார்

'பாடுயர் குஞ்சரம் இஈயும் ஞாவும் பகர்பெயர்க்காம்;
நீடுல கங்கொடு பப்பாப் பெயர்க்கு நிரந்துரைக்க;
பீடுறு பார்கொடு ச,சா பெ,பேயொ டொளிர்ந்தபொ,போ
நாடுவெவ் வேமுதல் நண்ணியபேர்க்கு நயந்துரையே.'
– வரை. பாட். 8

### தேர்

'உரைதரு தேர்கொடு உஊஎ ஏஐ உவந்த நைமை
விரைதரு பேர்கட்கு நேரேவிளம்புக; மேவுதண்ணீர்த்
திருதரு வேலை யுடனேசெஞ் சேலையும் சேரவென்று
வரைதரும் அஞ்சனந் தோய்ந்துஅரி சிந்திய
வாள்விழியே.' – வரை. பாட். 9

'திருமணி பூத்திங்கள் சொல்சீர் எழுத்துப்பொன் தேர்அழகு
வருபுனல் கார்புயல் மாநிலம் கங்கை உலகம்
பரிகடல் யானை பரிதி அமுதம் பகர்முதற்சீர்க்கு
உரியநன் மங்கலச் சொல்என்று நாவலர் ஓதினரே.'
– நவ. 3

'மாமணிதேர் புகழமுதம் எழுத்துக் கங்கை
மதிபரிதி களிறுபரி உலகம் சீர்நாள்
பூமலைகார் திருக்கடல்நீர் பழனம் பார்சொல்
பொன்திகிரி பிறவும்முதல் மொழிச்சீர்க்கு ஆகும்.'
– சிதம். பாட். 18

'மங்கலப் பொருத்தமே கங்கை மலைநிலம்
கார்புயல் பொன்மணி கடல்சொல் கரிபரி
சீர்புகழ் எழுத்துஅலர் திங்கள் தினகரன்
தேர்வயல் அமுதம் திருஉலகு ஆரணம்
நீர்பிற வருமுத னிலைச்சொல் இயல்பே.' –தொ. வி. 285

'மங்கலம் கார்புயல் மாமணி வாருதி
ஆரணம் உலகுஅலர் அமுதம் தேர்வயல்
திங்கள் பொன்எழுத்துத் திவாகரன் கரிபரி
ஆகும் என்மனர் அறிந்திசி னோரே.' – மு. வீ. யா. 66

### மங்கலப் பொருத்த விளக்கம்

'அரியதமிழ் பத்துப் பொருத்தங்களைத் தெரிந்து
அபிதானமாம் பொருத்தம்
அகரம்முதல் நான்கிற்கும் முந்நீரது ஆகுமே;
அஆ இரண்டினுக்கும்
அருமணி கடல்காரு டன்பூவும் எய்துமே
யாம்; உஊமுதல் ஐந்தினுக்கு
ஆனபொன் நேமியும், ஒகரம்முதல் மூன்றுக்கும்
ஆழிநீர் கார்பொருந்தும்,

தரு ககாவின்சீர், கிகீக்குறும்சீர் வேலை
தானே, குகூச்சொல் ஆகும்,
சாருமணி கெக்கேகை, கொக்கோ இரண்டினுக்கும்
சானவியுடன் காருமாம்;
சகரமொடு சகரஆகாரம் மணிபால் சுதை,
தருவேழமே சிச்சீக்கு,
சாற்றிய சுசூமுதல் ஐந்துக்கு உறும்பூவை,
சாதருபம்சீர் சொசோ;

தெரிஞுஞாவுக்கு அமுதம்ஆழி; தத்தாவைத் திருத்
திகிரியே பொருந்தும்,
தித்தீ எனும்சொல்லுக்கு நீரே, துத்தூ வைந்து
செல்வமும், வேலைத் தொத்தோ;

சீர்மதி நந்நாமுத லாறும்உலகம் எய்துமே,
சீர்நிந்நீ ஆதியாகும்,
சேருமே நுந்நூச்சொல், நெந்நேநை அமுதமணி
சிந்து, நொந்நோ அமுதமாம் ;
பரவு பம்முதல்நான்கும் பூத்தரணி தேர், புப்பூபார்
பொன்சொல், பெப்பேஉறும்
பார்தருவும்; மகரம்முதல் நான்குபூ, மும்மூபூ
பாரும், மெம்மேமை பிறையாம்,
பகர்மொம்மோ பிறை; யயா சீர், யுயோ புவி; வவா
பங்கசைதேர், விவ்வீக்குப்
பதுமை, பின் நான்கிற்கும் மதிஅணி; யெனத் தேர்ந்த
பாவலர்கள் உரைசெய்வரே.'

| முதற்சீர் முதலெழுத்து | | மங்கலச் சொல் |
|---|---|---|
| அ ஆ | — | மணி, கடல், கார், பூ. |
| அ ஆ இ ஈ | — | கடல். |
| உ ஊ எ ஏ ஐ | — | பொன், நேமி. |
| ஒ ஓ ஔ | — | ஆழி, நீர், கார். |
| க கா | — | தரு. |
| கி கீ | — | வேலை. |
| கு கூ | — | சொல். |
| கெ கே கை | — | மணி. |
| கொ கோ | — | கங்கை, கார். |
| ச சா | — | மணி, பால், அமுதம். |
| சி சீ | — | யானை. |
| சு சூ செ சே சை | — | பூவை. |
| சொ சோ | — | பொன். |
| ஞ ஞா | — | அமுதம், ஆழி. |
| த தா | — | திகிரி. |
| தி தீ | — | நீர். |
| து தூ தெ தே தை | — | செல்வம். |

| | | |
|---|---|---|
| தொ தோ | — | கடல். |
| ந - நூ | — | மதி, உலகம். |
| நி நீ | — | சீர். |
| நு நூ | — | சொல். |
| நெ நே நை | — | அமுதம், மணி, கடல். |
| நொ நோ | — | அமுதம். |
| ப - பீ | — | பூ, தரணி, தேர். |
| பு பூ | — | பார், பொன், சொல். |
| பெ பே பை | — | பார், தரு. |
| ம மா மி மீ | — | பூ. |
| மு மூ | — | பார். |
| மெ - மோ | — | பிறை. |
| ய யா | — | சீர். |
| யு யூ யோ | — | புவி. |
| வ வா | — | தேர். |
| வி வீ | — | திரு. |
| வெ வே வை வௌ | — | மதி. - பிரபந்த தீபிகை 3 |

11

## சொற்பொருத்தம்

772. விழுப்பொருள் தோன்றல் வேறுபல் பொருளின்
ஒழுக்கல் வகையுளி உறுதல் ஈறு
திரிதல் இன்றிச் செய்வது சொல்லே.

இது நிறுத்த முறையானே இரண்டாம் எண்ணு முறைமைக் கண் நின்ற சொற்பொருத்தம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : முதற்கண் எடுத்த மங்கலச்சொல் விழுமிய பொருள் தன்கண் தோன்ற நிற்றலுடனே, பல்வேறு பொருள்படக் கூறுதலும் வகையுளி உறுதலும் ஈறு திரிதலுமாகிய குற்றம் மூன்றும் இன்றிப் புலவரால் செய்வது சொற்பொருத்தமாம் என்றவாறு.

ஏற்புழிக் கோடலான் மங்கலச்சொல்லை இடைக்கண் வைப்புழி ஈறு திரிதலும் உண்டு என்றவாறு. (12)

## விளக்கம்

நிறுத்தமுறை – இவ்வியல் பத்தாம் நூற்பாவில் நிறுத்தமுறை. ஏனைய பொருத்தங்களின் நிறுத்தமுறையும் அதுவே. உரையை, நிற்றலுடனே, குற்றம் மூன்றும் இன்றிச் செய்யப்படுவது என முடிபு கொள்க.

முதற்சொல், பலபொருள் தருதலும் வகையுளியாய்ப் பிரிக்கப் படுதலும் ஈறுதிரிதலும் இல்லாது, விழுமிய பொருள் தரும் மங்கலச்சொல்லாக அமைதல் வேண்டும் என்பது.

மங்கலச் சொல்லிற்கு ஏனைய பொருத்தங்கள் கருதி அடைமொழியை முன்புணர்த்தால் மங்கலச்சொல் சீரின் இடையே வரும். அத்தகைய நிலையில் அடையடுத்த மங்கலச்சொல்லாலாகிய முதற்சீர் ஈறுதிரியினும் இழுக்கு இன்று; அந்நிலையிலும் திரியாமையே மேதக்கது என்பதாம்.

## ஒத்த நூற்பாக்கள்

‘மூன்றுஐந்து ஏழ்ஒன் பான்எழுத்து ஆன்ற
ஒற்றுடன் எண்ணிமுன் சொற்ற முறையின்
பல்பொருள் படவரூஉம் சொல்லால் அகற்றி
ஒருபொருட் டாகி வருமொழி பற்றித்
திரிதல் ஒழியத் திருந்திய சொல்லினுள்
தெரிவோர் வகையுளி மறுத்து நட்டது
மங்கலச் சொல்என வகுத்தனர் புலவர்.’

– பன். பாட். 140.

‘முன்னிலை எழுத்தின் வியநிலை நலனே;
சமநிலை ஆயின் முதல்வற்கு ஊனம்.’ – பன். பாட். 141.

'எடுத்த முதல்மொழி ஈறுதிரிந்து ஒன்றலும்
வகுத்த அச்சீர் வகையுளி சேர்தலும்
பொதுப்பட மொழிதலும் பொருட்புலன் இன்மையும்
சிறப்பொடு படாமையும் சிறுபெயர் பிளத்தலும்
அறத்துள் வழீஇய ஆனந் தம்மே' – பன். பாட்.

'வகையுளி சேர்தல் வனப்பின்றாய் நிற்றல்
தொகையார் பொருள்பலவாத் தோன்றல் – தகையில்
பொருள்இன்மை ஈறு திரிதலே போல்வ
தருமுதற்சீர்ச் சொற்காகும் தப்பு.' – வெண். பாட். 3

'பொருள்தெரியாமை, சிறப்பின்றி நிற்றல், பொருள்பலவாய்
வருமொழிஆதல், வகையுளி சேர்தல், வருஞ்சீருடன்
திரிதரும் ஈறுஉடைத்தாதல், எடுத்தஅச்சீர்ச் செய்யுமேல்
சரிவளையாய்! அதுதான் அமையாதுஎன்று சாற்றுவரே.'
– நவ. 4

'நாமவகை யுளிசேர்தல், பொருளது இன்மை,
நலமிலதாய் வைத்தல், பல பொருளாய்த் தோன்றல்,
ஆம்இனிய சொல்ஈறு திரிதல், போலும்
ஆதிமொழிக்கு ஆகாஆ னந்தம் ஆமே.'
– சிதம். பாட். 18

'சொல்லின் பொருத்தம் சொல்லுங் காலை
அரிதுணர் சொல்லும் அருந்திரி சொல்லும்
திரிபுடைச் சீரும் தீதாம் முதற்கே.' – தொ. வி. 286

'சீர்நனி திரிதல், சிறப்பின்றாய் நிற்றல்,
ஈறு திரிதல், இரும்பொருள் இன்மை,
பலபொருள் பயத்தல், முதலிய பிறவும்
முதற்சீர் மொழிக்குஆ காவென மொழிப.'
– மு. வீ. யா. 67

## பால் பொருத்தம்

773. ஆடூஉக் குறில்நெடில் மகடூஉ
பேடுஒற்று ஆய்தம் பெண்ஆண் புகழ்ச்சிக்கு
அவ்வெழுத்து மயங்கினும் அமையும் என்ப

இது நிறுத்த முறையானே பால்பொருத்தம் ஆமாறு கூறுகின்றது-

இ-ள்: குற்றெழுத்து ஐந்தும் ஆண்பாலாம்; நெட்டெழுத்து ஏழும் பெண்பாலாம்; ஒற்றும் ஆய்தமும் பேடாம். ஆண்பாலைக் கூறுமிடத்து ஆண்பால் எழுத்துக்களாம்; பெண்பாலைக் கூறுமிடத்துப் பெண்பால் எழுத்துக்களாம்; மயங்கினும் ஆம் என்றவாறு.

ஒற்றும் ஆய்தமும் முதலாகா எனினும் பால் உரிமை கூறும் முகத்தான் உரிமை கூறினர். மேலும் இவ்வாறு பின்னுள்ளோர் கூறியவாறே கூறினும் பயனில் கூற்றென விலக்கற்பால அல்ல என்று உய்த்துணர்ந்து கொள்க. (13)

### விளக்கம்

ஒற்றும் ஆய்தமும் பேட்டிற்கு உரிய முதல் எழுத்துக்கள் முதலாக வாராதது போலவே பேடுபற்றிப் பாடல்களும் பாடுவார் ஒருவரும் இரார் என்பதும், பாடுங்கால் பேட்டினை ஆணுகை ஆவது பெண்ணுகை ஆவது உடல் அமைப்புப்பற்றி அமைத்துப் பாடுங்கால் அவ்வப்பாலுக்கு உரிய எழுத்துக்களைக் கொள்வர் என்பதும் உய்த்து உணரப்படும்.

### ஒத்த நூற்பாக்கள்

'ஆண்பால் பெண்பால் அலிஎன நின்ற
மூன்றே பால்என மொழிந்தனர் புலவர்.'

- புன். பாட். 45

‘இருவகை ஐங்குறில் ஆண்பால் என்ப.’ „ 46
‘அகரமோடு ஐங்குறில் என்றூர் ஆண்பால்.’ „ 47
‘நெடில்ஏழ் இருவகை பெண்பால் என்ப.’ „ 48
‘ஒற்றும் ஆய்தமும் அலிஎனப் படுமே.’ „ 49
‘ஒற்றின் வருக்கம் ஒன்பதிற்று இரட்டியும்
பெற்ற ஆய்தமும் பேடுஎனப் படுமே.’ „ 50
‘அவ்வவ் வெழுத்தே அப்பாற்கு உரிய;
விரவினும் வரையார், அலிஎழுத்து ஒழித்தே.’ „ 51
‘அவ்விரு பாற்கும் அலிஎழுத்து ஆகா,
தம்முள் மயங்கினும் தாவின்று என்ப.’ „ 52
‘உயிரீ ராறும் ஆண்என மொழிப;
உயிர்மெய் எல்லாம் பெண்என மொழிப;
உடம்பெழுத்து எல்லாம் நபுஞ்சகம் ஆகும்.’
– பொய்கையார், „ 53

‘எண்ணும் குறில்ஆண், இயைந்த நெடிலெல்லாம்
பெண்ணுகும், ஒற்ருய்தம் பேடாகும், – பெண்ணிஞே(டு)
ஆண்புணர்ச்சிக்(கு) அவ்வவ் வெழுத்தே மயங்கினுமாம்,
மாண்பில்பே(டு) என்ருர் மதித்து.’ – வெண். பாட். 7

‘குற்றெழுத்து ஆடுஉமகடூஉ நெடில்நல்ல என்றுகொள்வர்
ஒற்றெழுத்து ஆய்தம்அலிஎன்று பாட்டின்முன் ஓதலொட்டார்
மற்றெழுத்தாய உயிர்மெய்க் குறில்நெடில் அவ்வகையே.’
– நவ. 7

‘மருவு குறில்ஆண் நெடில்பெண்ணவர் இவர்க்காம்
மயங்கினும்ஆம்; வரல்ஆகா பேடுஒற்று ஆய்தம்.’
சிதம். பாட். 20

‘பால்எனக்,
குறில்ஆண் நெடில்பெண் மற்றுயிர் ஆண்உயிர்
மெய்பெண் என்மரும் உளரே அவைதாம்
பாஇயல் கெடினும்ஆம் மற்றவை அலியே.’
– தொ. வி. 289

‘குறில்ஆண், நெடில்பெண் ணும், தனி நிலைமெய்
அலியாம், பெண்ணிஞேடு ஆண்பால் புணர்ச்சிக்கு
அவ்வவ் வெழுத்தாம், மயங்கின்ஆம் வழுவே.’
– மு. வீ. யா. 70

13

## வருணப் பொருத்தம் - அந்தணர் வருணம்

774. பன்னீ ருயிரும் முன்னெற்று ஆறும்
மன்னிய அந்தணர் வருணம் ஆகும்.

இது நிறுத்தமுறையானே வருணப் பொருத்தம் கூறுவன வற்றுள் மறையோர் வருணத்திற்கு உரிய எழுத்துக்கள் இவை என்கின்றது.

இ – ள்: பன்னிரண்டு உயிரும் க ங ச ஞ ட ண என்னும் ஆறு ஒற்றும் மறையோர் வருணத்திற்கு உரிய எழுத்தாம் என்றவாறு.

ஒற்று எனப் பொதுப்படக் கூறினரேனும் உயிரோடு கூடிய மெய் என்றே கோடும். மேல் வருவனவற்றிற்கும் ஈது ஒக்கும். (14)

### விளக்கம்

*முன்னர்த் தனி மெய்யினைப் பேட்டிற்கு உரிய எழுத்து என்றலின் அஃது எடுத்து விளக்கப்பெறுது என்ற கருத்தான் மெய் உயிரோடு கூடிய மெய்யாகவே கொள்ளப்படுகிறது.*

### ஒத்த நூற்பாக்கள்

*‘நறுமலர்த் திசைமுகன் ஈசன் நாரணன்
அறுமுகன் படைத்தனர் அந்தணர் சாதி
அவையே, அகர முதல பன்னீருயிரும்
கஙவும் சஞவும் டணவும் ஆகும்.’* – பன். பாட். 6

*‘ஒழியா உயிர்அனைத்தும் ஒற்றுமுதல் ஆறும்
அழியா மறையோர்க்(கு) ஆம் என்பர்.’* – வெ. பாட். 10

*‘விதியவன் முந்நான்கு உயிர்தரச் செய்ய விரிசடைமேல்
நதியவன் நாரணன் சேய் இந்திரன் ஞாலம் சூழவரு
கதிரவன் சோமன் தருமன் வருணன் கனகநிதிப்
பதியவன் என்றிவர் மூவாறுடம்பு படைத்தனரே.’* –நவ. 11

'மால்அயன் சேய்அரன் கண்டனமா மறையோர்க்கு.'
– நவ. 12

'தீதுஇல்உயிர் ஈராறும் முதல்ஒற்று ஆறும்
திருமறை யோர்க்கு அடைவே.' – சித. பாட். 21

'வரும்உயிர் அடங்கலும் வல்லினப் புள்ளியும்
அந்த ணர்க்காம்.' – மு. வீ. யா. ஒ. 71

14

## அரசர் வருணம்

775. தநபம யரஎனச் சாற்றிய ஆறும்
மனம்மகிழ் அரசர் வருணம் ஆகும்.

இஃது அரசர் வருணம் கூறுகின்றது.

இ-ள்: தநபமயர என்னும் ஆறும் அரசர்க்கு உரிய என்றவாறு. 15

### ஒத்த நூற்பாக்கள்

'துன்னருஞ் சிறப்பின் மன்னவர் சாதி
தநவும் பமவும் யரவும் ஆகும்.' – பன். பாட். 8

'அடைவே ஓர்ஆறும் அரசர்க்காம் என்பர்
படையாத சாதிகளின் பண்பு.' – வெண். பாட். 10

'காலயன் (சூரியன்) இந்திரன் சந்திரன் கண்டன
காவலர்க்கு.' – நவ. 12

'அடைவே ஓர்ஆறு வேந்தர்க்கு.' – சித. பாட். 21

'தந யர பமப் புள்ளி மன்னவர்க்காம்.'
– மு. வீ. யா. ஒ. 72

1

## வணிகர் வருணம்

**776.** லவறன என்னும் நான்கு புள்ளியும்
இவர்தரு வணிகர்க்கு எய்தும் என்ப.

**இது வணிகர் வருணம் கூறுகின்றது.**

**இ-ள்:** ல வ ற ன என்னும் நான்கு மெய்யும் **பொருட்கண் விரும்பும் வணிகர்க்கு உரிய எழுத்துக்கள் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.** **16**

ஒத்த நூற்பாக்கள்

*'அணிமிகு சிறப்பின் வணிகர் சாதி*
*லகரமும் வகரமும் றகர னகரமும்.'* – பன். பாட். *10*

*'பண்பார் வணிகர்க்காம் பாங்கில் லவறனக்கள்.'*
– வெண். பாட். *11*

*'நிதிக்காலையன் (குபேரன்) அந்தகன் கண்டன ஆகும்*
*வணிகர்க்கு.'* – நவ. *12*

*'ஏதில் லவறனக்கள் வணிகர்க்காம்.'* – சித. பாட். *21*

*'லவறன வணிகர்க்காம்.'* – மு. வீ. யா. ஓ. *72*

*16*

## வேளாளர் வருணம்

**777.** ழளஎனும் இரண்டும் வளமையர்க் காகும்.

**இது நான்காம் வருணத்திற்கு உரிய எழுத்துக்கள் இவை என்கின்றது.**

**இ-ள்:** ழ ள என்னும் இரண்டு எழுத்தும் சூத்திர **வருணத்திற்கு உரிய எழுத்துக்களாம் என்றவாறு.** **17**

### ஒத்த நூற்பாக்கள்

'ஏத்திய மரபின் சூத்திரர் சாதி
மூகரமும் ளகரமும் ஆகும் என்ப.' - *பன். பாட். 13*

'பண்பாவும் சூத்திரர்க்காம் மற்றையவை.'
- *வெண். பாட். 11*

'வேலையன் (வருணன்) கண்டன வேளாளருக்கு
விலக்கல்லவே.' - *நவ. 12*

'மற்றை, எழுத்துளவை சூத்திரர்க்காம் இயன்றசாதி.'
- *சித. பாட். 21*

'வருணப் பொருத்தமே வரும்உயிர் அடங்கலும்
கம்முதல் ஆறும் கைசிகர்க்கு ஆகும்;
தம்முதல் ஆறும் தகும்மன் னவர்க்கே;
லவறன வணிகர்க்காம்; ழளச் சூத்திரர்க்கே;
இம்முறை நஞ்செழுத்து இயலினும் இழுக்கா.'
- *தொ. வி. 291*

'பின்னவர் காம் ழள பேசுங்காலே.' - *மு. வீ. யா. ஒ. 72*
*17*

## எழுத்துக்களைப் படைத்த இறைவர்

778. பன்னீ ருயிரும் முன்அயன் படைத்தனன்;
மன்னிய அரன்அரி மயிலோன் புனிதன்
ஞாயிறு திங்கள் நடுவன் வருணன்
ஏயும் நிதிக்கோன் இரண்டுஇரண்டு ஆகப்
படைத்தனர் ஈரொன் பான்ஒற் றையுமே.

**இது மேற்கூறிய உயிர் ஒற்றுக்களுக்கு எய்தாதது எய்துவிக்கின்றது.**

**இ-ள்: பன்னிரண்டு உயிர்களையும் பிரமன் உண்டாக்கினன். பதினெட்டு மெய்யினையும் இரண்டு**

இரண்டாக முறையே எக்காலத்தும் எப்பொருட்கண்ணும் உளன் என நிலைபெற்ற அரனும் அரியும் முருகனும் இந்திரனும் ஆதித்தனும் சந்திரனும் இயமனும் வருணனும் குபேரனும் ஆகிய ஒன்பதின்மரும் படைத்தனர் என்றவாறு. (18)

### ஒத்த நூற்பாக்கள்

'நறுமலர்த் திசைமுகன் ஈசன் நாரணன்
அறுமுகன் படைத்தனர் அந்தணர் சாதி.' – பன். பாட். 6

'திருமால் அரனே திசைமுகன் குமரன்
மரபில் படைத்தனர் மறையவர் சாதி.' ,, 7

'இந்திரன் வெங்கதிர் சந்திரன் படைத்தனர்
துன்னருஞ் சிறப்பின் மன்னவர் சாதி.' ,, 8

'இந்திரன் இரவி சோமன் இம்மூவர்
தந்த எழுத்தே அரசர் சாதி.' ,, 9

'திருமிகு நிதிக்கோன் வருணன் படைத்தன
அணிமிகு சிறப்பின் வணிகர் சாதி.' ,, 10

'இயமன் நிதிக்கோன் என்றிவர் படைத்தன
வசைதீர் சிறப்பின் வணிகர் சாதி.' ,, 11

'கூற்றுவன் படைத்தனன் கூற்றன இரண்டும்
ஏத்தியல் மரபின் சூத்திரர் சாதி.' ,, 12

'இயமன் படைத்தனன் இருவகை எழுத்தும்
துகளறு மரபின் சூத்திரர் சாதி.' ,, 13

'ஒற்றுமைக் காலையும் வேற்றுமைக் காலையும்
பிறவியும் வருணமும் பெறும்என மொழிப.' ,, 14

'நால்வகை வருணத் தோர்க்கும் நால்வகை
இயம்பும் எழுத்தை இயம்புவர் முதல்மொழி;
மற்றவை மயங்கினும் வரையார் ஆண்டே.' ,, 17

'மக்கட்சாதி நான்கிற்கும் வகுத்த
தத்தம் சாதி எழுத்தே அவரவர்க்கு
வைத்துமுன் எடுப்பின்அது மாண்பு உடைத்தே;
மயங்கினும் வரையார் பயன்பட வரினே.' – பன்.பாட். 18

'அரன்அரிசேய் மால்கதிர்கூற் றுய்மழைபொன் மெய்க்கும்
பிரமன் படைப்புயிர்க்கும் பேசு.' – வெண். பாட். 11

'ஓதிமன்றன் படைப்புயிரே; அரன்மால் செவ்வேள்
உம்பர்கோன் பரிதிமதி மறலி நீர்க்கோன்
காதல்அள கேசன்முதல் இவ்விரண்டாய்க்
கம்முதல்மூ வாறெற்றும் கருதிச் செய்தார்.' – சித. பாட். 21

18

## அமுத எழுத்து

779. கசதப நமவ ஏழொடும் அகரம்
இகரம் உகரம் எகரம் நான்கும்
அமுத எழுத்தென்று அறைந்தனர் புலவர்.

இது நிறுத்த முறையானே உண்டி கூறுவனவற்றுள் அமுத உண்டி இவை என்கின்றது.

இ – ள்: கசதபநமவ என்னும் ஏழொடும் அகரமும் இகரமும் உகரமும் எகரமும் என்னும் நான்கு உயிரும் முன்மொழிக்கு ஆம் அமுத எழுத்துக்கள் என்று கூறினர் புலவர் என்றவாறு. (19)

### ஒத்த நூற்பாக்கள்

'அமுதென விடமென வரும்இரு வகையும்
உணவுஎனப் புலவர் உரைத்தனர் உளரே.'
– பன். பாட். 31

'நஞ்சென அமுதென நவிலவும் படுமே.' ,, 32

'உணவே அமுதமும் விடமும் ஆகும்.' — பன். பாட். 33

'உயிர்க்குறில் நான்கொடு க ச த ப ந ம வ
மயக்கற அமுத எழுத்தாகும் என்ப.' „ 34

'இவ்வுயிர் மெய்யோடு இயைந்தன கொளலே.' „ 35

'நஞ்சாம் ஒற்றொடு நடந்த உயிர்களும்
வஞ்சமில் புலவர் மறுத்திலர் என்ப.' „ 40

'இருவகை உண்டிஎன்று எடுத்தன அல்ல
தாமே நிற்பினும் தோமில என்ப.' „ 41

'நஞ்சம் அமுதமாம் மங்கலம் புகினே.' „ 42

'அமுதஎழுத் தென்ற ஆதிஉயிர் நான்கொடும்
புணர்ந்த மெய்யை உணர்ந்துஅமுது என்ப.' „ 43

'மெய்யாம் அமுதின் மேவிய உயிரும்
பொய்தீர் புலவர் பொருந்தின என்ப.' „ 44

'மதித் கசதநப மவ்வோடு வவ்வும்
உதித்தமைந்த நாற்குற் றுயிரும் — துதித்தமுதென் (று)
ஆதி மொழிக்கும் தசாங்கத் தயலுக்கும்
தீதிலவே என்றார் தெரிந்து.' — வெண். பாட். 8

'குறில்முதல் நான்கும் கசதந பமவக் குற்றெழுத்தும்
அறிவோர் அமுதஎழுத்தாம் என்று அறைவர்;
தசாங்கத்தயல்
உறுவனவாயின் உலகோர் புகழ்நன்மை எய்தும்என்ப.'
— நவ. 8

'உரியகச தநபமவ ஏழோடு ஆதி
உயிர்க்குறில் நான் கிவைஅமுதம் ஆதிச்சீர்க்கும்
அரியதசாங்கத் தயற்கும் நலமதாகும்.' — சித. பாட். 20

'உணவுஎண,
அ இ உ எ க ச த ந ப ம வ என்று
அமுதெழுத் தாகி ஆதிச் சீர்க்கும்
தசாங்கத் தயற்கும் தருவன என்ப.' — தொ. வி. 290.

'அ இ உ எ க ச த ந ப ம வவும்
அமுத எழுத்து.' — மு. வீ. யா. ஒ. 71

## நச்செழுத்து

780. யரலள என்னும் எழுத்தினை ஊர்ந்த
ஆவும் ஓவும் அந்நாற் புள்ளியும்
ஆய்தமும் மஃகான் குறுக்கமும் அளபும்
எய்தா நஞ்சுஎன்று இகழ்ந்தனர் புலவர்.

**இது நச்செழுத்து இவைஎன விலக்குகின்றது.**

**இ-ள்: யரலள என்னும் ஒற்றினை ஊர்ந்த ஆகாரமும் ஓகாரமும் அவ்வொற்றுக்களும் ஆய்தமும் மகரக்குறுக்கமும் அளபெடையும் நச்செழுத்தாம்; இவை ஆதிமொழிக்கு ஆகாதன என்று கூறுவர் புலவர் என்றவாறு.**

**எய்தா என்ற மிகையான் எடுத்த மங்கல மொழிக்கண் இவ்வெழுத்துக்கள் வரின் அவை குற்றம் உடைய அல்ல எனக்கொள்க.** (20)

### ஒத்த நூற்பாக்கள்

*'அஆ இரண்டும் யரல மூன்றும்*
*தாவில்இவ் விருவகைக் கூட்டத்து இயைந்தவும்*
*அளபும் ஆய்தமும் ஐவகைக் குறுக்கமும்*
*உளமலி புலவர் உரைத்தனர் நஞ்சென்று;*
*அவைஒரு பெயர்மருங்கு அணைய நிற்பின்*
*நவையுறு துஞ்சலும் நடுக்கமும் செய்யும்.'*

*- பன். பாட். 36*

*'இருவகைக் கூட்டத்து இயைந்தமேற் கூறிய*
*ஆகார ஓகாரத் தொடுய ரலக்கள்*
*என்றும் ஒற்றொடு இயைந்தஉயிர் அளபெடை.'*

*- பன். பாட். 37*

'ஐவகைக் குறுக்கமும் அறையுங் காலை
இகர உகர ஐகார ஔகார
மகரம் என்னும் இவற்றின் குறுக்காம்.' ,, 38

'ஆஓ யரல முதலிய அளபெடை
ஆய்தம்ஐங் குறுக்கம் உளப்பட எல்லாம்
விடம்என மொழிப மெய்உணர்ந் தோரே.' ,, 39

'நெட்டுயிர் ஆஓ யரல இயைந்தவும்
அளபெடை ஆய்தக் குறுக்கம் உளப்பட
விடம்என மொழிப மெய்உணர்ந் தோரே.' ,,

'நஞ்செனப் படுபவை நாடுங் காலை
யரல ஆஓ இயைந்தவும் அளபும்
குறுகிய ஒற்றெழுத்து இரண்டும் கொளலே.' ,,

'நஞ்செனப் படுபவை பெயரொடு நிற்பின்
துஞ்சல் கெடுதல் சொல்லினர் புலவர்.' ,,

'தெரிந்த யரலமேல் சேர்ந்த ஆஓவும்
புரிந்தவற் றொற்றாய்தப் புள்ளி — விரிந்த
அளவொடுகால் மாத்திரையும் ஆமென்று அறிந்தோர்
உளவென்றார் நஞ்சென்று ஒழி.' – வெண். பாட். 9

'கூறும் அளவும் மகரக்குறுக்கமும் யரலவினில்
ஏறும் ஆஓவும் யரலஒற்றும் ஏழு நெட்டெழுத்தும்
வேறுள ஆய்தமும் நஞ்செழுத்தாகும்; வெற்புஆதிபத்தின்
ஈறும்முதலும் இயலப்பெறா என்பர்; ஏந்திழையே.'
– நவ. 9

'அமுதமொழிக்கு அல்லாத எழுத்தும் கால்மாத்
திரையளவு அஃகேனமுடன் மூன்றும் நஞ்சாய்ச்
செப்பும் எழுத்திவை யெல்லாம் தீதாமன்றே.'
– சித. பாட். 20

'உணவு எண,
யா யோ ராரோ லாலோ அவற்றொற்றும்
அளபெடை மக்குறள் ஆய்தம்நஞ் செழுத்தே.' – தொ. வி. 290

'யா யோ ராரோ லாலோ
அவற்றின் ஒற்றும் அளபெடை மக்குறள்
ஆய்தமும் நஞ்செழுத் தாம்முத லாம்பின்
ஆகா என்மனார் அறிந்திசி னோரே.' – மு. வீ. யா. ஒ. 71

20

## உண்டிப்பொருத்தப் புறனடை

**781. இத்திறம் தசாங்கத் தயற்கும் இயையும்**

**இது மேற்கூறியதற்கு எய்தாதது எய்துவிக்கின்றது.**

**இ–ள்: அமுத எழுத்தும் நச்செழுத்தும் முதல் மொழிக்கே அன்றித் தசாங்கத்தயலிலும் வருதலும் வாராமையும் பொருந்தும் என்றவாறு.**

**இச்சூத்திரம் பருந்தின் வீழ்வு.** (21)

### விளக்கம்

*அரசனுடைய பத்து அங்கங்களையும் பத்து ஆசிரிய விருத்தங்களால் ஒவ்வோரங்கத்தினையும் சிறப்பித்து ஒவ்வொரு பாடலாக அமைக்கும் பிரபந்தம் தசாங்கத்தயலாகும். அதற்கும் பாட்டுடைத்தலைவனுக்கு ஏற்ற அமுத எழுத்தாலேயே பிரபந்தத்தைத் தொடங்குதல் வேண்டும் என்பது.*

*இந்நூற்பா 468ஆம் நூற்பாவோடு தொடர்புகோடல் பருந்தின் வீழ்வாம்.*

### ஒத்த நூற்பாக்கள்

*தசாங்கத்தயலின் இலக்கணத்தை,*

'அரசன் தசாங்கம் ஆசிரிய விருத்தம்
ஐயிரண்டு அறைவது தசாங்கத் தயலே.'
– மு. வீ. யா. ஒ. 141. தொ. வி. 283 உரை

**என்பதனான் அறிக.**

'அமுதென்று, ஆதிமொழிக்கும் தசாங்கத் தயலுக்கும்
தீதிலவே என்றூர் தெரிந்து.' – வெண். பாட். 8

'மலையாறு நாடுஊர் மலர்த்தார் வயப்பரி மாமதத்த
கொலைஆர் களிறு கொடிமுரசு ஆணை குவலயத்தும்
தலையான நூலோர் தசாங்கமது என்பர்; தமதுஅயலே
கொலையான சொற்பொருள் தோன்றிடில் ஆனந்தம்
கூறுவரே.' – நவ. 10

'அமுதம் ஆதிச்சீர்க்கும் அரிய தசாங்கத்து
அயற்கும் அமைவதாகும்.' – சிதம். பாட். 20

'உணவெண, தசாங்கத் தயற்கும் தகுவன என்ப.'
– தொ. வி. 29
21

## தசாங்கம்

782. மலைநதி நாடுஊர் வனைதார் இவுளி
கொலைமத களிறு கொடிமுரசு ஆணை
இவையே தசாங்கம் என்மனூர் புலவர்.

இது தசாங்கம் ஆவன இவை என அவற்றின் பெயரும் முறையும் கூறுகின்றது.

இ – ள் : மலையும் நதியும் நாடும் ஊரும் புனைதாரும் குதிரையும் கோறல்தொழில் உற்ற மதவேழமும் கொடியும் முரசும் ஆக்கினையும் ஆகிய இவை பத்தும் தசாங்கம் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

இச்சூத்திரம் பொருள் இயைபு பற்றிக் கூறினூர், சார்பு நூல் ஆகலான். (22)

### ஒத்த நூற்பாக்கள்

'மலையே யாறே நாடே ஊரே
பறையே பரியே களிறே தாரே
பெயரே கொடியே என்றிவை தசாங்கம்.'
– பன். பாட். 240

'புல்லும் மலையாறு நாடூர் புனைதார்மா
கொல்லும் களிறு கொடிமுரசும் — வல்லகோல்
என்றிவை நஞ்செழுத்தோ டேலா வகையுரைப்ப
நின்ற தசாங்கமென நேர்.' – வெண். பாட். செ. 19

'......மலைநதி நாடுஊர்தார், பரிகளிறு கொடிமுரசு
செங்கோல்......மெத்துதசாங்கம்.' – சித. பாட். 32

22

## தானப்பொருத்தம்

783. குற்றெழுந்து ஐந்தும் ஒத்தநெட் டெழுத்தொடு
ஐஔ என்னும் ஆயி ரெழுத்தை
இஉ என்னும் இரண்டொடும் சேர்த்திப்
பால குமார இராச விருத்த
மரணம் என்ன வகுத்துஇறை வன்பெயர்
முதல்எழுத் தினைமுதல் பொருத்தம தாக
முதற்சீர் இடத்து முதற்கண் நின்ற
எழுத்தொடு தாக்கி இடம்முதல் மூன்றும்
விழுத்தகு மூப்பும் மரணமும் விலக்கே.

இது தானப்பொருத்தம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: குற்றெழுத்துக்கள் ஐந்தும் தமக்கு இனம்ஒத்த நெட்டெழுத்துக்களோடும், ஐகாரஔகாரம் என்று கூறப்படும் அவ்விரண்டெழுத்தை இகரஉகரம் என்னும் இரண்டு எழுத்தோடும், சேர்த்திப் பாலப் பொருத்தம் குமாரப்பொருத்தம் இராசப்பொருத்தம் விருத்தப்பொருத்தம் மரணப்பொருத்தம் என வகுத்து, இறைவன் பெயர் முதல்எழுத்தினைப் பாலப்பொருத்த மாகக் கொண்டு, முதல்மொழி முதலெழுத்தை நேரிட்டுப் பார்க்க, முதற்கண் நின்ற மூன்றும் நன்மைதரும் பொருத்தம் உடையன; பின்நின்ற விருத்தப்பொருத் தமும் மரணப்பொருத்தமும் விலக்கப்படும் என்றவாறு.

'நட்புஅரண் எதிபகை மரணம் ஐந்தனுள்
ஒப்புடைக் குறிக்கோள் ஒருமூன்று ஆகும்.'

என்றார் மாமூலர். (23)

விளக்கம்

அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ என்பன இனங்களாம். தலைவன் இயற்பெயர் முதலெழுத்து அ ஆ வருக்கத்தினது ஆயின் அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ எள்பனவற்றுள் ஒன்று முதலாகிய முதற்சீரே ஏற்றது.

தலைவன் இயற்பெயர் முதலெழுத்து இ ஈ ஐ வருக்கத்தினது ஆயின் இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ என்பனவற்றுள் ஒன்று முதலாகிய முதற்சீரே ஏற்றது.

தலைவன் இயற்பெயர் முதலெழுத்து உ ஊ ஔ என்பனவற்றுள் ஒன்றுஆயின், உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ என்பனவற்றுள் ஒன்று முதலாகிய முதற்சீரே ஏற்றது.

தலைவன் இயற்பெயர் முதல் எழுத்து எ ஏ என்பனவற்றுள் ஒன்றாயின், எ ஏ, ஒ ஓ, அ ஆ என்பனவற்றுள் ஒன்று முதலாகிய முதற்சீரே ஏற்றது.

தலைவன் இயற்பெயர் முதல் எழுத்து ஒ ஓ என்பனவற்றுள் ஒன்றாயின் ஒ ஓ, அ ஆ, இ ஈ என்பனவற்றுள் ஒன்று முதலாகிய முதற்சீரே ஏற்றது.

அ ஆ இயற்பெயர் முதலெழுத்தாயின் அ ஆ பாலப் பொருத்தம்; இ ஈ ஐ குமாரப்பொருத்தம்; உ ஊ ஔ இராசப் பொருத்தம்; எ ஏ விருத்தப்பொருத்தம்; ஒ ஓ மரணப் பொருத்தமாம்.

பிறவும் இவ்வாறே இயைத்துக் காண்க. விருத்தப் பொருத்தமும் மரணப்பொருத்தமும் கொள்ளத்தக்கன அல்ல. பால குமார ராச விருத்த மரணப் பொருத்தங்கள் மாமூலனரால் முறையே நட்பு அரண் எதி பகை மரணம் எனப் பெயரிடப் பட்டன.

## ஒத்த நூற்பாக்கள்

'குறில்ஐந் துடன்நெடில் கூட்டி நின்ற
ஐ ஔ இரண்டும் இஉ அடக்கிப்
பால குமார அரசு மூப்பு
மரணம்என்று ஐவகைத் தானம் வகுத்தனர்.'

– பன். பாட். 54

'முன்பின் செய்யுள் முதலெழுத்து அதற்குப்
பொருத்தமும் விருத்தமும் பகையும் கொளலே.' „ 55

'நட்பே உதாசீ னம்பகை என்னும்
ஒப்புடைக் குறிப்பின் ஒருமூன்று ஆகும்.' „ 56

'பால குமார அரச என்னும்
மூவகைத் தானமும் நட்புஎனப் படுமே.' „ 57

'ஒழிந்த இரண்டும் உதாசீ னம்பகை.' „ 58

'பாட்டுடைத் தலைவன் இயற்பெயர் முன்னெழுத்துப்
பால ஞகை நால்வகை எழுத்தும்
வட்டமாய் முறைமையின் இயலும் என்ப.' „ 59

'பெயர்முதல் எழுத்துப் பால ஞகை
நால்வகை எழுத்தினும் வட்ட மாக
முறையே நட்புஉதா சீனம் பகைவரும்.' – பன். பாட். 60

'அகரம் தனக்காய நட்பென்று உரைப்பர்
இகர உகரங்கள் தாம்.' „ 61

'அகரக்கு எகரம் உதாசீனம் ஆகும்;
அகரக்கு ஒகரம் பகை.' „ 62

'உகரம் எகரம் எனஇரண்டும் என்ப
இகரம் தனக்காய நட்பு.' „ 63

'இகரக்கு ஒகரம் உதாசீனம் ஆகும்;
இகரக்கு அகரம் பகை.' „ 64

'உகர எழுத்துக்கு நட்பாய் வருமே
எகர ஒகரங்கள் தாம்.' „ 65

'உகரக்கு அகரம் உதாசீனம் என்ப;
உகரக்கு இகரம் பகை.' „ 66

'எகரக்கு ஒகரம் அகரம் நட்பாகும்;
இகரம் உதாசீனம் ஆம்.' „ 67

'எகரம் தனக்குப் பகைஎன்று உரைப்பது
உகர எழுத்தென்று உணர்.' „ 68

'ஒகர எழுத்துக்கு அகர எழுத்தும்
இகர எழுத்தும்நட் பாம்.' „ 69

'ஒகரக்கு உகரம் உதாசீனம் ஆகும்;
எகரம் பகையாம் எனல்.' „ 70

'நட்புப் பகையாம் பகையும்நட் பாம்அவை
வைத்த முறையே கொளல்.' „ 71

'உய்த்துணர்ந்து நாடில் உயிர்மெய்க்கும் இவ்வகையே
வைத்துணர்ந்து கொள்க வகுத்து.' „ 72

'குறில்ஐந்தும் தம்நெடில்கொண்(டு) இஉஐ ஒளசேர்ந்(து)
அறிபாலன் ஆதியா ஐந்தும் — இறைவன்பேர்
முன்எழுத்துப் பாலனில் வைத்(து) எண்ணிமூப் பேமரணம்
என்னுமிவை தீதென்றே எண்.' – வெண். பாட். 6

'குறில்ஐந்தும் தம்நெடில் கூட்டி இஉஐஒள கொண்டு அடைவே
முறைமையின் பாலன்குமாரன் அரசன் மூப்பே மரணம்
இறையென ஏத்துமவன்பெயர் பாலனு எண்ணிவந்த
நெறிமையின் மூப்பும் மரணமும் பாட்டிடை நீக்கினவே.'

– நவ. 6

'அஆ இஈ ஐயும் உஊ
ஔவும் எஏ ஒஓ என்றிவை
பாலன் குமாரன் இராசன் மூப்பு
மரணம் முறையே ஐந்தும் எண்ணுக;
மூப்பும் மரணமும் முதற்சீர்க்கு ஆகா.'

– வெ. பா. மேற். மு. வீ. யா. ஒ. 69

'ஊனமிலா அஆவும் இஈஐயும்,
உஊவும் எஏயும் ஒஓ ஔவும்
தானமிதுஐ வகையாம்அந் தாதிதன்னில்,
தலைவன்பேர் முதலெழுத்தில் பாலனாதி
மேல்நிரை எண்ணிற்பால குமாரராச வேண்டிடும்
வேண்டா விருத்த மரணந்தானே.' – சித. பாட். 19

'தானமே,
குறில்நெடில் தம்முள் இணைந்துஇ உவ்வுடன்
ஐஔவும் சேர்புழி ஐந்தாம்; அவற்றுள்
தலைமகன் இயற்பெயர் தானம் முதலாப்
பாலன் குமரன் இராசன் மூப்பு
மரணம்முறை எண்ணி வரும்முதல் எழுத்தின்
தானம்ஈற்று இரண்டெனின் தவிர்க என்ப.'

– தொ. வி. 288

23

## எழுத்துப் பொருத்தம்

784. எண்ணின் மூன்றுஐந்து ஏழ்ஒன் பான்முதல்
நண்ணும் அக்கரம்; நாலுஆறு எட்டுஉரு.

இஃது எழுத்துப் பொருத்தம் ஆமாறு கூறுகின்றது.

இ – ள் : முதற்சீர் எழுத்தினை எண்ணுமிடத்து வியனிலை ஆகிய மூன்றெழுத்தும் ஐந்தெழுத்தும் ஏழெழுத்தும் ஒன்பதெழுத்தும் பொருத்தம் உடையனவாம்; சமனிலை ஆகிய நான்கெழுத்தும் ஆறெழுத்தும் எட்டெழுத்தும் பொருந்தா என்றவாறு.

'எண்ணின்' என்ற மிகையானே உலகம் அமுதம் ஆரணம் எழுத்து எனப் பிறழ்ந்து வருமேனும் மங்கலத்தான் அமைவுடைய என்பது. (24)

விளக்கம்

முதற் சீர்க்கு ஒற்றைப்படை எண்ணுள்ள எழுத்தே வரல் வேண்டும் என்ற வரையறை, மங்கலச் சொற்களுக்காயின் இல்லை என்பது.

ஒத்த நூற்பாக்கள்

'முன்னிலை எழுத்தின் வியநிலை நலனே;
சமநிலை யாயின் முதல்வற்கு ஊனம்.' – பன். பாட். 141

'தப்பாத மூன்றைந்தேழ் ஒன்பான் தவறிலஎன்(று)
ஒப்பா முதற்சீர்க்(கு) உரைசெய்வர் — செப்புங்கால்
தண்டாத நான்காறெட்(டு) ஆகா தவிர்கென்று
கொண்டார் எழுத்தின் குறி.' – வெண். பாட். 5

'மூன்றுஐந்துஏழ் ஒன்பதுஎழுத்தாய் வியனிலையாய் முதற்சீர்
தோன்றிடின் நன்று; இரண்டு ஈரிரண்டு ஆறுஎட்டு
எழுத்துத் தொன்னூல்
சான்றவர் கொள்ளார் சமநிலைதான் என்று.' – நவ. 5

'ஆனஎழுத்து ஒன்பதுஏழ் ஐந்துமூன்றும்
ஆகாதுஎட் டாறுநான்கு ஆதிச் சீர்க்கே.
– சிதம். பாட். 19

'எழுத்தின் பொருத்தமே எழுவாய்ச் சீர்க்கண்மூன்று
ஐந்துஏழ் ஒன்பது வியனிலை நன்றாம்;
இரண்டுநான்கு ஆறெட்டுச் சமனிலை வழுவாம்.'
– தொ. வி. 287

'ஐந்தொடு மூன்றுஏழ் ஆறெடு மூன்றும்
ஆகும்; நாலாறு எட்டெழுத்து ஆகாவே.'
– மு. வீ. யா. ஒ. 68

## முதல் ஒன்பது உயிர்களின் நாள்கள்

785. ஆவி முதல்நான்கு ஆரல்; அப்பால்
மேவிய ஐந்தும் வியன்பூ ராடம்.

நிறுத்த முறையானே நாட்பொருத்தம் கூறுவான் தொடங்கினவற்றுள் இஃது உயிருள் முதல் ஒன்பது எழுத்திற்கும் நாள்உரிமை கூறுகின்றது.

இ-து: உயிருள் அ ஆ இ ஈ என்னும் நான்கு எழுத்தும் கார்த்திகை நாளாம்; உ ஊ எ ஏ ஐ என்னும் அப்பால் ஐந்து எழுத்தும் பூராட நாளாம் என்றவாறு.

(25)

### விளக்கம்

நாட்பொருத்தம் காண எழுத்துக்களுக்கு நாள் வரையறை செய்யப்பட்டுள்ளது. பாட்டு முதற்சீர் முதல் எழுத்தின் நாள் பாட்டுடைத்தலைவன் பெயர் முதலெழுத்து நாளோடு ஒத்ததாதல் வேண்டும். சில இடங்களில் பாட்டுடைத்தலைவன் பிறந்த நட்சத்திரத்தினைப் பொருத்தம் காண்டலும் உண்டு.

### ஒத்த நூற்பாக்கள்

'மொழிக்கு முதலா கியஎழுத் துக்கட்கு
ஓதிய நாள்வகை இயற்றுதல் கடனே.' - பன். பாட். 81

'உயிர்முதல் நான்கும் செயிர்தபு கார்த்திகை
ஐந்தும் மூன்றும் அவற்றின் அடைவே
வந்தபூ ராடம் உத்திரா டம்மே.' - பன். பாட். 82

'பேசும்உயிர் அடைவே நான்குஆரல் பின்ஐந்தும்
மாசிலாப் பூராடம்.' - வெண். பாட். 12

'அகரம்முதல் நான்கும் கார்த்திகை, மற்று அவற்றின் அடைவே
ஊகரம்முதல் ஐந்தும்பூராடம், உத்திரா டம்ஒழிந்த.' - நவ. 13

'கருதும்உயிர் அடைவே நான்கைந்து மூன்று
கார்த்திகை பூராடம் உத்திராடம்.' – சித. பாட். 22

'ஆவிநான்கு ஐந்தொடு நான்குமாய்ப் பிரிவது
கார்த்திகை பூராடம் உத்தி ராடமாம்.' – மு. வீ. யா. ஒ. 73

25

## கடைமூன்று உயிர்களின் நாள்

186. மற்றைய மூன்றும் உத்திரா டம்மே.

இதுமுதல் பதினொரு சூத்திரங்காறும் சூத்திரத்தால் பொருள் விளங்கக் கிடந்தன. (26)

## உயிர்மெய் வருக்க நாள்கள்

187. ககர வருக்கத்து ஒருநான்கும் இரண்டும்
திகழ்திரு வோணம் திருவா திரையாம்;
பிற்பால் மூன்றும் மூன்றும் பேசின்
பொற்புறு புனர்தம் பூச மாகும்.

188. சகர வருக்கம் தனில்முதல் நான்கும்
புகலுங் காலைப் புருட நாள்;மேல்
ஐந்து மூன்றுஅச் சுவினி பரணி.

189. உற்ற ஞகரத்து ஒருமூன் றினையும்
மற்றை அவிட்டம் ஆம்எனப் பகர்வர்.

190. மன்னிய தகரத்து இரண்டுஏழ் மூன்று
தன்னியல் சோதி விசாகம் சதயம்.

191. ஆங்குறு நகரத்து ஆறு மூன்றுமூன்று
ஓங்கும் பனைதுளங்கு ஒளிபுரட் டாதி.

(பனை என்பது அனுடம். துளங்கொளி என்பது கேட்டை.)

192. நற்பக ரத்தின் நான்குஇரண்டு ஆறு
முற்படும் உத்திரம் தொட்டு மூன்றே.

193. ஆறு மூன்றுமூன்று ஆம்மக ரத்தின்
தேறும் மகம்கட் செவிஒண் பூரம்.

(கட்செவி – ஆயில்யம்.)

194. உற்றயா ஒன்றும் உத்திரட் டாதி
யூ யோ இரண்டும் ஏயும் மூலம்.

195. எடுத்த வகரத்து இருநான் கிற்கும்
மடுத்த ரோகணி மான்தலை ஆகும்.

(மான்தலை – மிருகசீரிடம்) (35)

## நாள் பொருத்தம்

196. இறைவன் பெயர்முதல் எழுத்தை நோக்கி
வருநா ளினைமூ வொன்ப தாக்கி
ஒன்றுமூன்று ஐந்துஏழ் ஒருமுத் திறத்தினும்
ஒன்ரு வண்ணம் உரைமுதற் சீர்க்கே.

இது நாள்பொருத்தம் கொள்ளுமாறு எதிர்மறை முகத்தான் உணர்த்துகின்றது.

இ - ள்: பாட்டுடைத்தலைவன் பெயரின் முதல் எழுத்திற்கு உரியநாள் தொடங்கி உறுகின்ற இருபத்தேழு நாளினையும் ஒன்பது ஒன்பதாகப் பகுத்துச் சென்மம் அநுசென்மம் உபசென்மம் என்று கூறப்பட்ட முப்பகுதியினும் ஒன்று மூன்று ஐந்து ஏழ் எண்ணின் வந்தநாள்கள் பொருத்தம் உடைய அல்ல எனக்கொண்டு இரண்டு நான்கு ஆறு எட்டு இவைகளின் நின்ற நாள்களைப் பொருத்தம் உடையவாக முதற்சீரை எடுத்துச் சொல்லுவர் என்றவாறு.

'பிறநூல் முடிந்தது தான் உடன்படுதல்' என்னும் நியாய நூல்வழக்கால் இறைவன் பெயர் நாட்கு மூன்றும் பரியாயத்தின் நின்ற மூன்று ஐந்து ஏழ் பொருத்தம் உடைய என்று கோடலும், சென்மநாள் தொடங்கிப் பொருத்தம் கோடலும் கொள்க. (36)

விளக்கம்

அ ஆ இ ஈ - கார்த்திகை; உ ஊ எ ஏ ஐ - பூராடம்; ஒ ஓ ஔ - உத்திராடம்; க கா கி கீ - திருவோணம்; கு கூ - திருவாதிரை; கெ கே கை - புனர்பூசம்; கொ கோ கௌ - பூசம்; ச சா சி சீ - ரேவதி; சு சூ செ சே சை - அசுவினி; சொ சோ சௌ - பரணி; ஞா ஞி ஞெ ஞொ - அவிட்டம்; த தா - சுவாதி; தி தீ து தூ தெ தே தை - விசாகம்; தொ தோ தௌ - சதயம்; ந நா நி நீ நு நூ - அனுடம்; நெ நே நை - கேட்டை; நொ நோ நௌ - பூரட்டாதி; ப பா பி பீ - உத்திரம்; பு பூ - அத்தம்; பெ பே பை பொ போ பௌ - சித்திரை; ம மா மி மீ மு மூ - மகம்; மெ மே மை - ஆயில்யம்; மொ மோ மௌ - பூரம்; யா - உத்திரட்டாதி; யூ யோ - மூலம்; வ வா வி வீ - உரோகிணி; வெ வே வை வௌ - மிருகசீரிடம். என்று பதினொரு நூற்பாக்களால் மொழிமுதலாகும் எழுத்துக்கட்கு நாட்பொருத்தம் கூறப்பட்டது.

நாட்பொருத்தம் கொள்ளுமாறு.

தலைவன் இயற்பெயர் இராமன் எனக்கொள்வோம். அப்பெயரின் முதலெழுத்து இகரம். அதற்குரிய நாள் கார்த்திகை. கார்த்திகையைத் தொடங்கி நாள்கள் இருபத்தேழனையும் மூன்று கூறுகளாகக் கொண்டு அவற்றிற்குச் சன்மம் அனுசன்மம் உபசன்மம் என்று பெயரிடல் வேண்டும்.

| | சன்மம் | அனுசன்மம் | உபசன்மம் |
|---|---|---|---|
| 1. | கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |
| 2. | உரோகிணி * | அத்தம் * | திருவோணம் * |
| 3. | மிருகசீரிடம் | சித்திரை | அவிட்டம் ‡ |
| 4. | திருவாதிரை * | சுவாதி * | சதையம் * |
| 5. | புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி ‡ |
| 6. | பூசம் * | அனுடம் * | உத்திரட்டாதி * |
| 7. | ஆயில்யம் | கேட்டை | இரேவதி ‡ |
| 8. | மகம் * | மூலம் * | அசுவனி * |
| 9. | பூரம் | பூராடம் | பரணி. |

உரோகணி முதலாகக் குறியிடப்பட்ட நாள்களுக்கு உரிய எழுத்துக்களுள் ஒன்றே முதற்சீர் முதல் எழுத்தாகக் கொள்வதற்கு ஏற்றது. அவிட்டம், பூரட்டாதி, இரேவதி இவற்றிற்கு உரிய எழுத்துக்களுள் ஒன்றனையும் கொள்ளலாம் என்பதும் கொள்ளத்தகும்.

இராமனுடைய பிறந்த நாளாகிய புனர்பூசத்தைக்கொண்டு கணக்கிடுமாறு :

| | சன்மம் | அனுசன்மம் | உபசன்மம் |
|---|---|---|---|
| 1 | புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| 2 | பூசம் * | அனுடம் * | உத்திரட்டாதி * |
| 3 | ஆயில்யம் | கேட்டை | இரேவதி † |
| 4 | மகம் * | மூலம் * | அசுவனி * |
| 5 | பூரம் | பூராடம் | பரணி † |
| 6 | உத்திரம் * | உத்திராடம் * | கார்த்திகை * |
| 7 | அத்தம் | திருவோணம் | உரோகணி † |
| 8 | சித்திரை * | அவிட்டம் * | மிருகசீரிடம் * |
| 9 | சுவாதி | சதையம் | திருவாதிரை |

பூசம் முதலிய குறியிட்ட நாள்களுக்குரிய எழுத்துக்களுள் ஒன்றனைப் பாட்டு முதற்சீரின் முதல்எழுத்தாகக் கொள்ளல் வேண்டும்.

இரேவதி பரணி உரோகணி என்பனவற்றிற்குரிய எழுத்துக்களுள் ஒன்றனைப் பாட்டு முதற்சீர் முதல் எழுத்தாகக் கொள்ளுவாரும் உளர் என்பதும் கொள்ளத்தகும்.

## ஒத்த நூற்பாக்கள்

'மொழிக்கு முதலா கியஎழுத் துக்கட்கு
ஓதிய நாள்வகை இயற்றுதல் கடனே.' – பன். பாட். 81

'உயிர்முதல் நான்கும் செயிர்தபு கார்த்திகை;
ஐந்தும் மூன்றும் அவற்றின் அடைவே
வந்தபூ ராடம் உத்திரா டம்மே.' ,, 82

'ககர வருக்க வகைநாள் விரிப்பின்
நான்கும் இரண்டும் மூன்றும் மூன்றும்
ஓணம் ஆதிரை புனர்பூசம் பூசம்.' ,, 83

'சகரம் நான்குஐந்து ஒருமூன்று இவற்றின்
வகைநாள் இரேவதி முதல்மூன்று என்ப.' ,, 84

'ஞகர வருக்கத்து ஒருமூன்று அவிட்டம்.' ,, 85

'தகர வருக்கத்து இரண்டுஏழ் மூன்றற்கு
வகைநாள் சோதி விசாகம் சதயம்.' ,, 86

'நகரத்து ஆறும் அனுடத்து அடைவே
ஏனைஆறும் கேட்டைபூ ரட்டாதி.' ,, 87

'பத்திய பகரத்து ஒருநான்கு இரண்டுஆறு
உத்திரம் அத்தம் சித்திரை ஆகும்.' ,, 88

'மகரத்து ஆறும் மூன்றும் மூன்றும்
மகம்ஆ யில்யம் பூரம் ஆகும்.' ,, 89

'யாவே உத்திரட் டாதி; ஏனை
யூயோ மூலம்என்று உணர்ந்திசி னோரே.' ,, 90

'யூயோ இரண்டும் மேனாள் மூலம்;
யாவே உத்திரட் டாதிநாள் பெறுமே.' ,, 91

'ஒருநான்கு உரோகணி வகரம் அவ்வகை
மற்றை நான்கும் மகசிரம் ஆகும்.' ,, 93

'இரண்டுஈ ரிரண்டுஆறு எட்டுஒன் பானெனத்
திரண்ட நாளே செல்வம் புகுதரும்.' ,, 94

'நன்மை பொருள்பேறு இன்பம் தரும்எனத்
தொன்னெறிப் புலவர் உரைத்தனர் துணிந்தே.' ,, 95

'அவை,மூவகை ஒன்பதின் முதன்முதல் நாளாம்.' ,, 96

'சிறந்தசீர்த் தலைவன் பிறந்தநாள் ஆயினும்
பெயர்நாள் ஆயினும் இயல்உற உணர்ந்தபின்
ஒன்றற் கேனும் இரண்டற் கேனும்
மூன்றுஇகழ் பொருத்தம் மொழிவது கடனே. ,, 97

'ஆரியச் சிதைவும் அழிந்த வழக்கும்
சீரிய மொழிமுதற்கு ஆம்எனப் புணர்க்கும்
வம்பப் புலவரும் மன்னுவர் ஆதலின்
மொழிமு தலாவ கையெழுத் தெல்லாம்
பன்னீ ருயிரும் மன்ன அடக்கி
அந்நாள் பெறும்என்று அறைகுநர் உளரே.'

'இருப துடனேழ் இயன்ற நாளை
ஒருவகை ஒன்பான் ஆக்கி இவ்வகை
மூவகை யாய்ச்செய்து ஒன்றுமூன்று ஐந்துஏழ்
அட்டம ராசி வைநா சியக்கால்
விட்டனர் பின்னர் மேவினர் கொளலே.' – பண். பாட்.

'பேசும் உயிர்அடைவே நான்காரல் பின்னைந்தும்
மாசிலாப் பூராடம் மற்றொருமூன் (று) – ஆசிலா
பேருத்தி ராடமாம் என்று பெரிதுணர்ந்தோர்
பாரித்தார் நாளின் பரிசு.' – வெண். பாட். 12

'பரிசுடைய கவ்வரியில் நான்கிரண்டும் மூன்றும்
தெரிவுடைய மூன்றடைவே செப்பின் – பிரிவுடைய
ஓணமே ஆதிரையே ஒண்புனர்பூ சம்பூசம்
பேணி உரைத்தார் பிரித்து.' – வெண். பாட். 13

'பிரிந்த சகரத்து நான்கைந் (து) பின்மூன் (று)
அறிந்த கலமுதல் மூன்றாகும் – செறிந்த
ஞகரத் தொருமூன் றும் நன்குணர்ந்தோர் ஆய்ந்த
புகர்தீர் அவிட்டமாம் போற்று.' „ 14

'போற்றும் தகரம்இரண் டேழ்மூன் றும் பொய்தீர்ந்தோர்
சாற்றுவர் சோதி முறம் சதயம் – வேற்றனுடம்
கேட்டைபூ ரட்டாதி கேள்நகரத் தோராறும்
வாட்டமிலா மும்மூன் றும் வந்து.' – வெண். பாட். 15

'வந்த பகரத்து நான்கிரண்டா றுத்திரந்தொட் (டு)
அந்தமிலா மூன்றாகும் அவ்வடைவே – வந்ததற்பின்
ஆறுமகம் மூன் றுடன்மூன் (று) ஆயிலியம் பூரமாம்
மாறில் மகரத்தின் மாட்டு.' – வெண். பாட். 16

'மாட்டும் யகரத்துள் யாவுத் திரட்டாதி
ஈட்டியயூ காரயோ காரங்கள் – காட்டிய
மூலம் வகரத் தொருநான்கு ரோகணியாம்
தோலாத நான்கெனவே சொல்.' – வெண். பாட். 17

'சொல்லியநாள் மூவொன்ப தாகத் துணிந்தொன் று
புல்லிய மூன்றைந்தேழ் பொருந்தாவாம் – அல்லனவற் (று)
அட்டம ராசி வயினு சியமிவையும்
விட்டொழித்தல் நன்றெனவே வேண்டு.' – வெண். பாட் 18

'உயிர் மெய்யில்,
ககரம்முதல் நான்கும் ஓணம்என் று ஓதுவர்கற்றவரே.'
– ந. 13

'ஏனைக் குகரம்முதல்இரண்டு ஆதிரை,என்பர், அப்பால்
ஆனஎழுத்து ஒருமூன் றும் புனர்பூசமாம் அடைவே
போனபின், நின்றன மூன்றெழுத்தும் பூசம்என்ப.'
– ந. 14

'ஏய்ந்த சகரம் இரேவதிநாள்முதல் மூன் றினுக்கும்
வாய்ந்தஎழுத்து ஒருநான்கு ஐந்துமூன்றாம் அவற்றின்வர்க்கத்து
ஆய்ந்த ஞம்மூன் றும் அவிட்டம் என்றாயின.' – ந. 15

'ஓதும்தகரம் இரண்டுஏழுமூன்று அடைவே உலவாச்
சோதிவிசாகம் சதையமும் ஆம்;என் தொடர்நகர
ஆதியில்ஆறும் அனுடம்; அல்லாதன ஆறெழுத்தும்
ஏதமில் கேட்டை பூரட்டாதி யான இருவகையே.' – ந. *16*

'சொல்லும் பகரத்துள் உத்திரநாள் முதல்மூன்றும்பற்றிச்
செல்லும் ஒருநான்கு இரண்டுஆறும் சென்றபின், மவ்வருக்கம்
புல்லும்மகம் இருமூன்று, மூன்றுஆயிலியம், புயலும்
அல்லும்பொருங்குழல்! அல்லாதன பூரம்ஆயினவே.'

– ந. *17*

'யகரத்துள் யாஉத்திரட்டாதி; பின்னும் யகரத்துள்ளும்
பகரச்செய் மூலம்யூகாரம்; யோகாரம் அப்பால்மருவும்;
வகரத்து இருநான்கும் ரோகணியோடு மகசிரமாம்.' – ந. *18*

'மொழிந்த அந்நாள்களை மூஒன்பதாக்கி அவற்றின்முன்னர்
இழிந்தன ஒன்றுமூன்று ஐந்துஏழ்இவைஒக்க ஏனையவுள்
அழிந்தன அல்லன; அட்டம ராசி வைநாசிகம்
கழிந்தன நின்றன தாம்இயல் பாகக் கருதுகவே.' – ந. *19*

'கருதுமுயிர் அடைவேநான்கு ஐந்து மூன்று
கார்த்திகையே பூராடம் உத்தி ராடம்;
உரைதருகவ் வரியில்நான்கு இரண்டு மூன்று
மூன்றுஓணம் ஆதிரையே புனர்தம் பூசம்;
இருமைகொள் சவ்,வரியின்நான்கு ஐந்து மூன்று
இரேவதிஅச் வனிபரணி; ஞகரம் மூன்றும்
வரும்அவிட்டம்; தகரம்இரண்டு ஏழு மூன்று
வளர்சோதி விசாகமே சதயம் மன்னும்.'

– சித. பாட் *22*

'சதிநிகழ்நவ் வினில் ஆறும் மூன்று மூன்றும்
தரும்அனுடம் கேட்டையே பூரட் டாதி;
திதமிகுபவ் வரியின்நான்கு இரண்டோடு ஆறுஉத்
திரம்முதல் மூன்றும்;மவ்வில் ஆறும் மூன்றும்

மிதமுடன்மூன் றும்மகம்ஆ யிலியம் பூரம்;
யாஉத்தி ரட்டாதி யூயோ மூலம்;
உதவியவம் முதல்நான்கும் ஒழிந்தநான்கும்
உரோகணியாம் மிருகசீ ரிடமாப் பேர்நாள்.' „ 23

'பேர்நாள்உற் பவநா ளாதல்மு ஒன்பான்
பிரித்துஒன் று மூன்றுஐந்து ஏழ்ஆகாது, எட்டாம்
கூர்இராசியும்வயின சிகமும் ஆகா.' „ 24

'நாளின் பொருத்தம் நவிலுங் காலை
நான்கும் ஐந்தும் மூன்றுமாய்ப் பிரிஉயிர்
கார்த்திகை பூராடம் உத்திரா டம்மே;
கவ்வரி நான்கிரண்டு இருமுறை மூன்றுஇவை
ஓணம் ஆதிரை உரைஇரு பூசமே;
சவ்வரி நான்குஐந்தும் தருங்கடை மூன்றுஎன
அவ்வவை இரேவதி அசுவதி பரணியே;
ஞவ்வரி ஞாஞெ ஞொவ்வாம் அவிட்டமே;
தவ்வரி இரண்டுஏமு தன்கடை மூன்று
சோதி விசாகம் தூயோனிச் சதையமே;
நவ்வரி ஆறும் நண்ணும்இரு மூன்றும்
பொற்பனை கேட்டை பூரட் டாதியே;
பவ்வரி நான்கும் பிற்பகர் இரண்டுஆறு
எனஉத் திரம்அத்தம் ஒளிசித் திரையே,
மவ்வரி ஆறும் மற்றிரு மூன்றும்
மகம்ஆ யில்யம் மகம்தொடர் பூரமே;
யாவுத் திரட்டாதி யூயோ மூலமே;
வவ்வரி நன்னான்கு உரோகணி இந்திரன்;
அவ்வவ் வெழுத்திற்கு அவ்வவை குறித்தபின்
நாள்மு வொன்பதாம் நாயகன் இயற்பெயர்
நாள்முதல் மங்கலம் நவில்சொல் ஈரு
எண்ணி இரண்டுநான்கு ஆறுஎட்டு ஒன்பதாம்
அன்றி ஒன்றுமூன்று ஐந்துஏழ் ஆகா.' – தொ. வி. 292

'ஆவிநான்கு ஐந்தொடு நான்குமாய்ப் பிரிவது
கார்த்திகை பூராடம்உத் திராடமாம்; மெய்யில்
ககரம்நான்கு இரண்டு மூன்று மூன்றுஇவை
ஓணம்ஆ திரைஇரு பூசமாம் முறையே ;
சகரம்நான்கு ஐந்துமூன்று இரேவதி அச்சுவினி
பரணி; ஞ ஞாஞெஞொ அவிட்டம்; ஏனைய
தகரம் இரண்டுஏழு தான்கடை மூன்று
சோதி விசாகமே தூயவான் சதயம்;
நவ்வரி ஆறுடன் நாடும்மும் மூன்றும்
அனுடம் கேட்டை ஆய்பூரட் டாதி;
பகரம்நான்கு இரண்டொடு ஆறும்உத் திராடம்
அத்தம் சித்திரை; மவ் வாரேடு மூன்றும்
மூன்றும் மகம்ஆ யிலியம் பூரம் ;
யய்யா உத்திரட் டாதி, யுய்யோ
மூலம்; வவா விவீரோகணி, வெவ்வே வைவெள
மிருகசீ ரிடமென விளம்பினர் புலவர்.'

– மு. வீ. யா. ஒ. 73

'நாயகன் முதற்பெயர் ஆதிஎழுத் தின்நாள்
முதற்கொண்டு ஒன்பது ஒன்பது ஆக
மங்கலச் சொல்முதல் எழுத்தின்நாள் அளவும்
எண்ணி இரண்டும் நான்கும் ஆறும்
எட்டும் ஒன்பதும் காணின் நல்லவாம்;
ஒன்றும் மூன்றும் ஐந்தும் ஏழும்
காணின் தீங்குஎனக் கருதப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 74

36

## முதற்சீர்க்கு ஒருதனி இலக்கணம்

**197.** எட்டாம் இராசியும் வைநா சிகமும்
விட்டு முதற்சீர் விளம்புதல் மரபே.

**இஃது அம் முதல்சீர்க்கு எய்தாதது எய்துவிக்கிறது.**

இ-ள்: இறைவன் பெயர் நாள் தொடங்கி எட்டாம் இராசிக்கண் உற்ற இரண்டேகால் நாளும் எண்பத்தெட்டாம்கால் பொருந்திய வைநாசிக நாளும் தள்ளிப் பொருத்தம் உடைய நாள்களைக் கொண்டு இறைவன் பெயர்க்கு முதற்சீர் எடுத்துக்கூறல் மரபு என்றவாறு.

உம்மையை எச்சப்படுத்திக் கணநாளின் விலக்கியன ஒழித்துக் கூறப்படும் என்பதூஉம் கொள்க. (37)

இச்சூத்திரம் பருந்தின் வீழ்வு.

விளக்கம்

*இறைவன் பெயர் இராமன். அவன் பெயர் நாள் கார்த்திகை. அதற்கு உரிய இராசி இடபம். அதனுடைய எட்டாம் இராசி தநுர் ராசி. அதற்குரிய நாள்கள் மூலம் பூராடம் உத்திராடம் முதல்பாதம் என்பன. அவற்றிற்கு உரிய எழுத்துக்கள் யூ யோ – மூலம்; உ ஊ எ ஏ ஐ – பூராடம்; ஒ – உத்திராடம் முதல் பாதம்; இவ்வெழுத்துக்களான் முதற்சீர் முதலெழுத்து அமைதல் கூடாது. விநாசத்தைத் தரும் வைநாசிகம் இயற்பெயருக்கு உரிய நாள் ஆகிய கார்த்திகைக்கு இருபத்திரண்டாம் நாளாகிய சதயத்தின் நான்காம்பாதம். அதற்குரிய எழுத்து தௌ என்பது. இதனும் பாட்டின் முதற்சீரின் முதல் எழுத்து அமைதல் கூடாது என்பதாம். கணநாளில் விலக்கியன தீக்கணம், அந்தரகணம், சூரியகணம், மாருதகணம் என்பன; தீக்கணம் கார்த்திகை, அந்தரகணம் புனர்பூசம், சூரியகணம் பூசம், வாயுகணம் சுவாதி. இவற்றிற்கு முறையே அ அ இ ஈ; கெ கே கை; கொ கோ கௌ; த தா என்பன உரிய எழுத்துக்களாம். இவையும் கூடா என்பது.*

*இக் கணநாள்களை நீக்குதல் தீப்பயன் பற்றி எல்லா முதற் சீர்களுக்கும் ஒக்கும் நிலையது ஆதலும் கொள்க. இனிப் பாட்டுடைத்தலைவன் பிறந்த நாள் பற்றியும் நோக்குவோம்.*

பாட்டுடைத் தலைவன் சச்சந்தன்; அவன் பிறந்தநாள் பரணி; அதன் இராசி மேடம்; அதற்கு எட்டாம் இராசி விருச்சிகம். அதற்குரிய நாள்கள் விசாகம் நான்காம் பாதம், அனுடம், கேட்டை என்பன; அவற்றிற்கு உரிய எழுத்துக்கள் தே தை, ந நா நி நீ நு நூ, நெ நே நை என்பன. இவற்றைப் பாடல் முதல் சீரின் முதலெழுத்தாகக் கோடல் கூடாது. வைநாசிகமாவது அவிட்ட நாளின் நான்காம் கூறு; அதற்கு உரிய எழுத்து ஞொ என்பது இவ்வெழுத்தும் பாடல் முதற்சீர் முதலெழுத்து ஆதல் கூடாது. வழக்கம்போலத் தீக்கணம், அந்தரகணம், சூரியகணம், மாருத கணம் இவற்றிற்குரிய நாள்களாய் முறையே அமைந்த கார்த்திகை புனர்பூசம், பூசம் சுவாதி என்பனவற்றிற்கு முறையே அமைந்த அ ஆ இ ஈ; கெ கே கை; கொ கோ கௌ; த தா என்பனவும் விலக்கிக்கொள்ளப்படும்.

இது முற்கூறிய எழுத்துப் பொருத்தத்தோடு தொடர்பு கோடல் பருந்தின் வீழ்வாம்.

### ஒத்த நூற்பாக்கள்

*'அட்டமராசி வைநா சியக்கால்,*
*விட்டனர் பின்னர் மேவினர் கொளலே.'– பன். பாட். 93*

*'அட்டமராசி வைநாசிய மிவையும்*
*விட்டொழித்தல் நன்றெனவே வேண்டு.'*
*– வெண். பாட். 18*

*'அட்டமராசி வைநாசிகம், கழிந்தன நின்றன' – நவ. 19*

*'எட்டாம் கூர்இராசியும் வைநாசிகமும் ஆகா'*
*– சித. பாட். 24*

*37*

## தேவர் கதியும் மக்கள் கதியும்

798. ஈறில் வன்மை குறில்இமை யோர்க்காம்;
கூறும் நெடில்முதல் நான்கும் மென்மை
அந்தம் ஒன்றுஒழித்து அல்லன மக்கள்;
முந்தும் கதிஇவை முதல்மொழிக்கு ஆகும்.

இது நிறுத்தமுறையானே கதி கூறுவனவற்றுள் முதல் மொழிக்குப் பொருத்தமுடைய கதிகள் ஆமாறு கூறுகின்றது.

இ - ள் : றகர ஒற்று அல்லாத ஏனைய வல்லொற்று ஐந்தும் ஒ என்னும் குற்றுயிர் அல்லாத ஏனை நாற் குற்றுயிரும் தேவர் கதியின் கூறும்; ஆ ஈ ஊ ஏ என்னும் நான்கு எழுத்தும் னகர ஒற்று அல்லாத ஏனை ஐந்து மெல்லொற்றும் மக்கட் கதிக்கு உரிய எழுத்துக் களாம்; இவ்விரு கதியும் முதல் மொழிக்குப் பொருந்தும் என்றவாறு. (38)

விளக்கம்

தேவர் கதி எழுத்துக்கள் – க் ச் ட் த் ப், அ இ, உ, எ என்பன.

மக்கள் கதி எழுத்துக்கள் – ஆ ஈ ஊ ஏ ங் ஞ் ண் ந் ம் என்பன.

ஈண்டும் மெய் எனவே உயிர்மெய் கொள்க. இவற்றுள்ளும் மொழி முதற்கண் வரும் ஆற்றல் உடையன ஙகர டகர ணகரங்கள் அல்லாதனவே என்பதும் கொள்க.

ஒத்த நூற்பாக்கள்

'வானவர் மக்கள் நரகர் விலங்குஎன
ஊனமில் கதியே ஒருநான்கு ஆகும்.' – பன். பாட். 19

'கதிஎனப் படுபவை காண்டக விரிப்பின்
தேவர் மக்கள் நரகர் விலங்குஎன
மேவிய கதிகள் ஈரிரண்டு ஆகும்.' – பன். பாட். 20

'தேவர் மக்கள் நரகர் விலங்கென
மேவிய நான்கே எழுத்தியல் கதியே.' – 21

அவற்றுள்,

'உயிர்க்குறில் வல்லினம் ஈற்றெழுத்து ஒழியப்
பயிர்ப்புறு வானவர் கதிஎனப் படுமே.' – 22

'தேவர் கதியே தெரியுங் காலை
அஇ உஎ கசட தபவே.' – 23

'மக்கட் கதியே நெட்டுயிர் நான்கொடு
மிக்க சிறப்பின் ஙஞண நமவே.' – 24

அவைதாம்,

'ஆஈ ஊஏ ஙஞண நமக்கள்
மேவிய மக்கள் கதிஎன விளம்புவர்.' – 25

'மன்னுவ தேவர் மக்கள் செய்யுளுள்.' – 28

'தேவரும் மக்களும் மேவின பாட்டே.' – 30

'வேண்டும் குறில்வன்மை ஈறொழித்தால் விண்ணோர்க்காம்
ஆண்ட நெடில்முதல்நான்(கு) அந்தமொழித்(து) — ஈண்டிய
மென்மையாம் மக்கட்(கு) இவைஇரண்டும் மெய்க்கதிக்கு
நன்மையா முன்மொழிக்கு நாட்டு.' – வெண். பாட். 19

'வல்லினம் குற்றெழுத்து ஈறுஇன்றியே வரின்வானோர்கதி
மெல்லினம் ஈறுஇன்றியே மேவும் நெடில்முதல்
நான்கும் வந்தால்
சொல்லுவர் மக்கள் கதி.' – நவ. 20

'குறில்வன்மை ஈறுஒழிக்கில் வானோர்க் காகும்
நேர்நெடிலின் முதல்நான்கு ஈறில்லா மென்மை
நிலமக்கள் கதிமுதல் சீர்க்கு ஆகும்.'– சிதம். பாட். 24

'கதியின் பொருத்த விதியைக் கூறின்
ஒவ்வொழி குறிலே றவ்வொழி வலியே
செவ்வி தாகும் தேவர் கதியே;
னவ்வொழி மெலியே நெடில்முதல் நான்கும்
வவ்வில் அஃதாகும் மக்கள் கதியே.' – தொ. வி. 293

'அஇஉ எவொடு கசட தபவாம்
ஒன்பதும் தேவர் கதியாம், ஆஈ
ஊஏ ஙஞண நமவாம் ஒன்பதும்
மாந்தர்கதி......நல்லன. – மு. வீ. யா. ஒ. 75
38

## விலங்கின்கதியும் நரகர்கதியும்

**799.** ஒ ஓ ய ர ல ழ ற எனும் ஏழும்
தொக்க விலங்கின் சூழ்கதி, ஏனைய
நரகர் கதிஇவை நவைஎனப் புகல்வர்.

இது விலக்கப்படும் கதிஆமாறு கூறுகின்றது.

இ-ள்: ஒகரமும் ஓகாரமும் யகர ரகர லகர ழகர றகரமும் ஆகிய ஏழ் எழுத்தும் பலவாகிய விலங்கின் கதியைக் கூறும் எழுத்துக்களாம்; ஒழிந்த ஐகார ஔகாரமும் வகர ளகர னகரமும் என்னும் ஐந்து எழுத்துக்களும் நரகர் கதிக்கு ஓதிய எழுத்துக்களாம். இவ்விருகதியையும் குற்றமுடைய கதியென முதல் மொழிக்கு ஆகா என்று கூறுவர் புலவர் என்றவாறு.

தொக்க என்ற மிகையானே எடுத்த மங்கலச் சொல்லின் முதல் எழுத்தாமாயின் குற்றமுடைய அல்ல என்றவாறு. (39)

### விளக்கம்

*விலங்கின் கதிக்கு உரிய எழுத்துக்கள் – ஒ ஓ ய ர ல ழ ற என்பன.*

*நரகர் கதிக்குரிய எழுத்துக்கள் – ஐ ஔ வ ள ன என்பன.*

*இவற்றுள் ழகர றகர ளகர னகர உயிர்மெய்கள் ஒருவாற்றானும் மொழிக்கு முதலாகா. யகர ரகர உயிர்மெய்கள்*

உயிர்க்குற்றெழுத்து ஒன்றனைச் சார்ந்தே மொழிமுதலாகும். எனவே தெளிவாக மொழிமுதலாவன ஐ ஒ ஓ ஔ வ என்பனவே. இவை மங்கலச்சொல்லின் முதலெழுத்து ஆதல் ஐயை, ஒண்கதிர், ஓங்கல், ஔடதம், வாரிதி (திரு, திங்கள், மலை, அமுதம், கடல்) முதலியவற்றில் காண்க.

## ஒத்த நூற்பாக்கள்

'ஒழிந்த ஐ ஔ ஆய்த எழுத்தும்
கழிந்த ளனவும் நரகர் கதியே.' – பண். பாட். 26

'ஒ ஓ இரண்டும் ய ர ல ற ழ எனத்
தொக்கன ஐந்தும் விலங்கின் கதியே.' ,, 27

'மன்னு விலங்கொடு நரகர் கதியே.' ,, 28

'விலங்கும் நரகும் விலங்கின என்ப.' ,, 29

'தேவரும் மக்களும் மேவின பாட்டே.' ,, 30

'நாட்டிய ஒ ஓ ய ர ல ழ நல்வன்மைக் (கு)
ஈட்டிய அந்தம் இவை விலங்காம் – காட்டா (து)
ஒழித்த நரகர்க்கென் (று) ஓதினர் இன்ன
எழுத்தாகா ஆதி இடை.' – வெண். பாட். 20

'பன்னொன்று பத்துயிர் யம்முதல்மூன்று பன்னேழ்பதினைந்து
என்னும் இவையே விலங்கின்கதி, இயம்பாளழுத்துத்
தன்னை நரகர்கதி என்றுசாற்றுவர்; தாம்உணர்ந்தோர்
முன்னை மொழிக்கண் வரத்தகாது என்று மொழிவர்களே.'
– நவ. 21

'ஒ ஓ, ஏர்மருவு ய ர ல ழ ற விலங்காம்; மற்றை
எழுத்துநர கக்கதி,முன் இவைவா ராதால்.'
– சித. பாட். 24

'ஒ ஓ ய ர ல ழ றவும் விலங்கின் கதியே;
ணவள ஐ ஔவும் நரகர் கதியே.' – தொ. வி. 293

'ஒ ஓ ய ர ல ழ ற
விலங்கின் கதிஐ ஔவொடு வளன
ஐந்தும் நரகர் கதியாம் ... தீயன.' – மு. வீ. யா. ஒ. 75

## கணப் பொருத்தம்

800. ஆதியும் இடையும் இறுதியும் முற்றும்
ஓதிய நேரும் நிரையும் உற்றிடின்
நீர்தீ மாகம் நிகரில் சுவர்க்கம்
மாமதி பரிதி வாயு பூகணம்
ஆம்முற்று ஆதி யாம்முதற் சீர்க்கே.

இது நிறுத்த முறையானே கணப் பொருத்தம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: ஆதியினும் இடையினும் இறுதியினும் முற்றினும் மேல் செய்யுளியலில் கூறிய நேரசையும் நிரையசையுமாய் வரின் ஆதிநேர் நீர்க்கணம் எனவும், இடைநேர் தீக்கணம் எனவும், இறுதிநேர் ஆகாயகணம் எனவும், முற்றுநேர் சுவர்க்க கணம் எனவும், ஆதிநிரை சந்திரகணம் எனவும், இடைநிரை சூரியகணம் எனவும், இறுதிநிரை வாயுகணம் எனவும் முற்றுநிரை பூகணம் எனவும் ஆகும்; இவற்றுள் முற்றுநேரும் முற்று நிரையும் ஆதிநேரும் ஆதிநிரையும் முதற்சீர்க்குப் பொருத்தம் உடையனவாம் என்றவாறு.

'நீரது கணமே சீர்சிறப்பு எய்தும்;
தீயின் கணமே நோயது சேரும்;
அந்தர கணமே வாழ்நாள் அகற்றும்;
இந்திர கணமே பெருக்கம் செய்யும்;
சந்திர கணமே வாழ்நாள் தருஉம்;
சூரிய கணமே வீரியம் போக்கும்;
மாருத கணமே சீர்சிறப்பு அகற்றும்;
நிலக்கணந் தானே மலர்த்திரு விளங்கும்.'

என்றார் மாமூலர்.

'நேரசை ஆகவும் நிரைஅசை ஆகவும்;
சீர்பெற எடுத்தல் சில்லிடத் துளவே'

என்றார் இந்திரகாளியர். இவை சிறப்பின்மையின் ஈண்டுத் தொக்கினார் எனக்கொள்க.

ஓதிய என்ற மிகையானே கணநாள் பொருத்தமும் கொள்க. அவையாமாறு;

'வருண கணமே சதயம் என்ப,
சந்திர கணமே மிருக சீரிடம்,
அந்தர கணமே புனர்பூச மாகும்,
வாயு கணமே சோதி ஆகும்,
சூரிய கணமே பூசம் என்ப,
தீக்கணம் தானே கார்த்திகை என்ப,
யமான கணமே பரணி என்ப,
பூமி கணமே கேட்டை ஆகும்.'

எனக் கணநாள் கூறி,

'நிலையே, செல்வம், சூலை, நலன்நீக்கல்,
கொலை, பிணி, நன்மை, இன்பம் கூறே.'

என இந்திரகாளியர் பலமும் கூறியவாறு அறிந்து கொள்க, (40)

விளக்கம்

கணப்பொருத்தம் மூவசைச்சீர்க்கே சிறப்பாகக் கொள்ளப் படும்.

| சீர் | கணம் | நாள் | பயன் |
|---|---|---|---|
| கூவிளங்கனி | – நீர்க்கணம் | – சதயம் | – சீர்சிறப்பு. |
| புளிமாங்கனி | – தீக்கணம் | – கார்த்திகை | – நோய். |
| கருவிளங்காய் | – ஆகாயகணம் | – புனர்பூசம் | – வாழ்நாள்நீக்கம். |

| சீர் | கணம் | நாள் | பயன் |
|---|---|---|---|
| தேமாங்காய் | – சுவர்க்ககணம் | – பரணி | – பெருக்கம். |
| புளிமாங்காய் | – சந்திரகணம் | – மிருகசீரிடம் | – வாழ்நாள் தருதல். |
| கூவிளங்காய் | – சூரியகணம் | – பூசம் | – வீரியம்போக்கல். |
| தேமாங்கனி | – வாயுகணம் | – சுவாதி | – சீர்சிறப்புநீக்கம். |
| கருவிளங்கனி | – பூகணம் | – கேட்டை | – செல்வம். |

கணங்களுக்குச் சீர், நாள், பயன் என்பன இவ்வாறு கொள்ளப்பட்டுள்ளன.

## ஒத்த நூற்பாக்கள்

'ஈரசைச் சீரே மூவசைச் சீரே
நாலசைச் சீரே ஓரசைச் சீர்எனச்
சீர்வகை நான்கும் தெரிந்தனர் புலவர்.' – பன். பாட். 98

'ஈரசை அகவல், மூவசை நான்கும்
நேர்இறில் வெள்ளை, நிரைஇறில் வஞ்சி,
நாலசை பொது, மற்று ஓரசைச் சீரே.' ,, 99

'மூவசை எண்சீர் கணம்என மொழிந்தனர்
ஈரசை நாலசை ஓரசை ஒழித்தே.' ,, 100

'கணமே மூவசைக் கூட்ட மாகும்.' ,, 101

'முற்பாட்டு எடுப்பின் முதல்ஈர் அசைச்சொல்
சொற்பால் மங்கலச் சொல்லொடு தோன்றி
நிற்பினும் கொள்ளார் நெறிஉணர்ந் தோரே.' ,, 102

'நன்மைசெய் கடவுள் நாடின் அவற்றிற்குத்
தொன்னெறி மரபின் இன்மை யானே
நாலசைச் சீரும் மேலோர் ஒழித்தனர்.' ,, 103

'நீடுஇய மானன், திங்கள், நிலம், நீர்,
சூரியன், வானம், அங்கி, காற்று, என
இயம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்.' ,, 104

'நேரசை மூன்றுஇய மானன், அதற்குச்
சீர்புணை நாளே பரணி, வாழ்நாள்
மற்றுஅது பயக்கும்என்று உய்த்துஉரைத் தனரே.' - 105

'நிரைநேர் நேர்நீள் மதியம், அதற்கு
வருநாள் மகசிரம், மலிபுகழ் ஆகும்.' - 106

'நிரைஅசை மூன்றும் நிலக்கணம், அதற்குத்
தருநாள் கேட்டை, திருமிகத் தருமே.' - 107

'நீர்க்கணம் நேர்நிரை நிரை, நாள் சதயம்,
பார்க்கதிர்ப் பெருக்கம் பார்க்கும் என்ப.' - 108

'கண்ணிய நேர்நிரை நேர்வரின் நெடுங்கதிர்,
நண்ணிய நோய்தரும், நாள்புனர் பூசம்.' 109

'நிரைநிரை நேர்தாம் வரின்அது வானம்
பெருகிய கேடுஅது தரும், நாள் ஓணம்.' - 110

'நெருப்பின் கணம்நிரை நேர்நிரை, கார்த்திகை
விருப்புறு நாள், அது இடுக்கண் செய்யும்.' - 111

'காட்டிய நேர்நேர் நிரைவரின் காற்று, அது
நாட்டுஅறை போக்கும், நாள் சோதி ஆகும்.' - 112

'நிற்பன தீக்கணம் நான்குஅவை நீக்கி,
நற்கணம் நான்குஅவை நாட்டினர் கொளலே.' - 113

'நீரே நிலனே வானே நீள்மதி
சீர்இய மானன் செந்தீத் தெறுகதிர்
காற்றுஎனக் கிளர்ந்த கூற்றன என்ப.' - 114

'அவைதாம்,
நேர்முதல் ஆகிய நிரைஇணை பின்வரின்
நீர்க்கணம் என்ப நெறிஉணர்ந் தோரே.' - 115

'நிரைமூன்று இயைந்தது நிலன்எனத் தகுமே.' - 116

'முந்துநிரை இணைந்து நேர்இறு மூவசை
அந்தர கணம்என்று அறிதல் வேண்டும்.' - 117

'முதல்நிரை ஆகி இணைநேர் வழிவரின்
அதுமதிக் கணம்என்று அறிந்தனர் கொளலே.' – 118

'நேர்அசை மூன்றுஇய மானன் கணமே.' – 119

'நேர்நடு வாகி நிரைஇரு பாலும்
சேரு மாயின் செந்தீக் கணமே.' – 120

'நிரைநடு வாகி நேர்இரு பால்வரின்
அலர்கதிர்க் கணம்என்று அறிந்தனர் கொளலே.'– 121

'ஈறுநிரை ஆகி இணைநேர் முன்வரின்
மாறி வந்த மாருத கணமே.' – 122

'நிலனும் மதியும் நீரும்இய மானனும்
நலம்மிகும் முதல்வரின் ; பிறநான் கும்பகை.' – 123

'யாவர்செய் யுட்கும் இனமொடு புணரும்
மூவகைச் சீரே முதல்நிற் பனவே.' – 124

'அவைதாம்,
பெருக்கம் செய்தலின், வாழ்நாள் பயத்தலின்,
தருக்கிய சீர்த்தி தன்னைத் தருதலின்,
மிகுதிரு ஆக்கலின், வேந்தர்க்கும் பிறர்க்கும்
தகும்எனப் பகரினும், தகாதுமற்(று) அச்சீர்க்கு
உரிய நாளொடு செய்யுள் செய்யும்
பொருபடைக் குரிசில்நாள் பொருந்தாக் கடையே.'– 125

'அவைதாம்,
தேயம் போக்குதல், செல்வத்து விளிதல்,
சூனியம் ஆதல், சுழல்நோய் உறுதல்,
ஊனம் பயக்கும்என்று உரைத்தனர் ஆயினும்
ஆதி அமுதெழுத்து ஆகிய சீர்கட்கு
ஓதிய தெய்வத் திற்குரித் தாக
ஓதிய நாளொடு, பாடப் படுமே.' – 126

'எல்லாக் கணமும் நாள்நலம் இலஎனின்
பொல்லாங்கு தரும்எனப் புகல வேண்டும்.' – 127

'மங்கலம் அமைந்த சொல்லொடு பொருந்திய
நிலனும் நீரும் நிலவிய மதியும்
இயமானனும் நல்ல வகுக்குங் காலே.' – பன். பாட்.

'ஏனை நான்கும் ஊனம் பயக்கும்.' „

'சந்திரன் தீஎல் அந்தரம் அதனொடு
பூமி தேவிஎனப் புகலும் .........
நிரைநேர் நிரைப்பின் நேர்நிரை நிரைவரும்
ஒருநால் சீரும் ஒத்தமுறை உடைமையின்
மற்றக் கடவுட்கு வன்முறை யாகப்
பெற்றிடற்கு உரிய சீரும் பெறுமே.'

'எண்வகைச் சீரும் இயலும்அச் சீருள்
வருணன் நாளே சதயம் பெறுமே;
இயமானன் நாளே பரணி ஆகும்;
சந்திரன் நாளே மகசிரம் ஆகும்;
தண்பூமி தேவிநாள் கேட்டை ஆகும்;
எஞ்சிய சீர்கள் இரண்ட னுள்ளும்
வஞ்சமில் மாருத நாளே சோதி;
எரிநாள் கார்த்திகை, அந்தர கணத்திற்கு
உரிய நாள்அது ஓணம் ஆகும்.'

'சூரியன் நாளே புனர்பூ சம்மே;'

'நீர்க்கணம் முதல்நேர், நேர்ஈறு அந்தரம்,
பார்க்கணம் முந்நிரை, பால்மதி நிரைமுதல்,
இயம்பினர் வரும்என நயம்பெறு முன்னோர்.'

'நிரைநடு வாம்எரி; நேர்நடு வாம்கதிர்;
பின்நிரை காற்று;முன் நிரைஇய மானன்,
நயம்பெறு கணம்என இயம்பினர் புலவர்.'

'நலனும் தீமையும் நாடுங் காலை,
நிலனே திருவாம், நீரே பெருக்கம்,
மதியம் சீர்த்தி, இயமானன் வாழ்நாள்,
வாயுநாடு அகற்றல், வான்தீ விளிதல்,
நோயிடைக் குறுகல் சூரிய கணமே.'

'வானின் கணமே சூரிய கணமே
வாயுக் கணமே தீயின் கணமே
சூனியம் ஆம்எனத் துணிந்தனர் கொளலே.'

'காவலன் நாளொடு கணத்தின் நன்னாள்
மேவப் புணர்த்தல் மெய்ந்நெறி வழக்கே.'

'நிலைபெறு கணத்தின் முதல்நிலை எழுத்தே
தலைவன் நாளொடு தாஅன் இருவகைப்
பெயர்முதல் எழுத்தொடு கொள்ளும் பெற்றித்
தான வகைய தா, பால் கணம்கதி
ஊனம் இன்றி ஒற்றுமை பற்றிய
உயிர்மெய் வல்லெழுத்து ஆக்கிச் செயிர்தீர்
வேற்றுமை ஆகா விதியின் மாறி
நஞ்செனப் படாஅ அமிழ்தெனத் தோன்றி
எஞ்சிய இலக்கணம் எல்லாம் உடைத்தாய்
ஏதம் தீர்ந்த இயல்பின என்ப.'

'ஆதி இடைஇறுதி முற்றும்நேர் ஆம்நிரைஎன்(று)
ஓதுவர்நீர் தீமாகம் ஒண்சுவர்க்கம் – தீதிலோர்
சொற்றூர் மதிபரிதி கால்நிலம்மா நீர்மதியும்
முற்றுகி யாம்முன் மொழிக்கு.' – வெண். பாட். 21

'முன்மொழி ஆகலான் மூவசைச்சீர் அல்லன
நன்மைசால் தெய்வம் நவிலாமை – முன்மொழிக்(கு)
ஈட்டிய தொன்மை இலக்கணங்கள் இவ்வகையே
காட்டும் அகலக் கவிக்கு.' ,, 22

'நேரசைமூன்று இயமானன், நிரைப்பின்பு நேர்இரண்டு
சேர்வனதிங்கள், நிரைஅசை மூன்றும் செழுநிலமாம்,
நேரசைப்பின்னர் நிரைஇரண் டாய்வரின் நீர்க்கணமாம்;
தேர்இயல் அல்குல் திருவே! இதுநல்ல சீர்க்கணமே.'
– நவ. 22

'நிரைஇரண்டாய்ப் பின்புநேர்இறின் அந்தரம்,
நேர்இரண்டாய்
நிரைஇறின் மாருதம், நேர்நடுவாகி நிரைஇருபால்
விரைதருகோதை! வெந்தீக்கணம், நேர்இரண்டின் நடுவே
நிரைவருமாயின் பருதி; இந்நாற்கணம் நீக்கினவே.'

– நவ. 23

துறக்கம்மதி வான்பரிதி காய்ச்சீர் முன்னும்,
சூழ்காற்றுத் தீநிலம்நீர் கனிச்சீர்ப் பின்னும்,
நிறுத்து,கணம் இவ்விரண்டாம்; அகவற் சீரின்
நேர்ஈறு வெள்ளைச்சீர், நிரைவஞ் சிச்சீர்,
சிறப்புடைஇவ் விரண்டுமாம், கணப்பேர் மற்றும்
திகழ்இயற்சீர் அயன்திருக்கோக் கருடன் முன்னும்
வெறுத்தபின்னும் ஆம்என்ப, இறைவன் நாட்கு
மேவுகண நாட்பொருத்தம் வேண்டும் மாதோ.'

– சிதம். பாட். 26

'கணம்இயல் பொருத்தமே கணம்எனும் சீரினுள்
முன்னர் இந்திரன், முன்நிரை நிலனே,
நிரைநேர் நேர்மதி, நேர்நிரை நிரைநீர்,
இந்நாற்கணம் நன்றும் இவைமுதல் சீர்க்கே;
இருவிளங் காய்முறை அந்தரம் சூரியன்;
இருமாங் கனிமுறை வாயு தீஇவை;
வருமுதற் சீர்க்கு வழுக்கணம் என்ப.' – தொ. வி. 294

'தேமாங் காய்இந் திரகணம், புளிமாங்
காய்சந் திரகணம், கருவிள மென்கனி
நிலக்கணம், கூவிளங் கனிநீர்க் கணமிவை
ஆகும்; கருவிளங் காய்அந் தரகணம்,
கூவிளங் காய்இர விக்கணம், தேமாங்
கனிகால் கணம், புளி மாங்கனி தீக்கணம்.'

– மு. வீ. யா. ஓ. 76

40

## மங்கலச் சொற்குச் சிறப்புவிதி

801. தானமும் நாளும் கணமும் தவரு;
ஊனமுற் றிடின்அடை உறுதலும் உறுங்கால்
பரியா யச்சொல் பகர்தலும் மங்கலக்கு
உரியமற் றதுநடு உறும்இறு தியினும்.

இது மங்கலச்சொற்கு ஒரோவழி வேண்டும் சிறப்புவிதி கூறுகின்றது.

இ-ள்: தானப்பொருத்தமும் நாள்பொருத்தமும் கணப்பொருத்தமும் குற்றம்வரல் ஆகா; தலைவன் இயற்பெயரைக் குறித்து மங்கலச்சொற்குக் குற்றப்பாடு உளதாயின் அம் மங்கலச்சொற்கு அடை கொடுத்துக் கூறுதலும் பரியாயச்சொல் கூறுதலும் உரியனவாம் அம்மங்கலச்சொல் முதற்கண் அன்றி நடுவிலும் இறுதியிலும் நிற்கவும்பெறும் என்றவாறு.

மங்கலத்திற்கு என்பது மங்கலக்கு என விகாரப்பட்டு நின்றது. ஆகுபெயரான் மங்கலச்சொல்லை மங்கலம் என்ருர்.

இங்ஙனம் இவ்வாறு கூறுதலானும் மேற் கூறப்பட்டதனுலும் மங்கலத்தைக் குறித்துச் சொற்பொருத்தமும் உண்டிப்பொருத்தமும் எழுத்துப் பொருத்தமும் வேறுபடினும் அமையும் எனவும், தானத்தினையும் நாளினையும் கணத்தினையும் குறித்து மங்கலச்சொல் வேறுபடினும் அமையும் எனவும் கொள்க. (41)

விளக்கம்

முதல் பொருத்தமாகிய மங்கலப்பொருத்தம், சொல், எழுத்து, உண்டி என்ற பொருத்தங்களினும் சிறந்தது; ஆதலின் மங்கலப் பொருத்தம் சிறந்து இருப்பின் சொல் எழுத்து உண்டிப் பொருத்தங்கள் ஏற்றன அல்லவாயினும் கவலையில்லை. ஆனால் மங்கலப் பொருத்தத்தினும் தானம் நாள் கணப்பொருத்தங்கள் சிறப்புடையன; அவற்றின் பொருத்தம் நோக்கி மங்கலச்சொல்லை அடைகொடுத்துச் சீரின் இடையும் இறுதியும் ஆக்கியும், இன்றேல் மங்கலச் சொல்லின் பரியாயப் பெயர் கூறி மாற்றியும் அமைத்தல் வேண்டும் என்பது.

ஒத்த நூற்பாக்கள்

'நிலைபெறு கணத்தின்..............இயல்பின என்ப.'

– பன். பாட்.

'ஆவதுமங் கலத்துஏற்ற பரியா யச்சொல்
அடைகொடுத்து முதற்சீருக்கு அடுத்த செய்யுள்
மேவுதலை இடைகடைமங் கலச்சொல் வைத்து
விதிஎழுத்துப் பால்வருணம் மயங்கும் என்ப;
வாவும்ஒரு நற்கதியால் முன்னோர் நூலின்
மங்கலத்தால் நஞ்சுசில அமுத மாகும்;
தூஅமுதம் எனின்கதியில் பழுதுபோ மேல்
தொடர்கலப்பாம்; மரபினது தொடக்கம் சொல்வாம்.'

– சிதம். பாட். 27

41

## இயற்சீரின் கணம்

802. நேர்ஈற்று இயற்சீர் வெண்சீர் முன்னும்
நிரைஈற்று இயற்சீர் கனிச்சீர்ப் பின்னும்
தேருங் காலைச் சிறப்புறும்; அவையே,
அயன்திரு கோ-கரு டன்கணம் என்னப்
பயின்றிடும் இயற்சீர்ப் பரிசுஉரைத் திடவே.

இஃது ஆசிரிய உரிச்சீர்க்குக் கணப்பொருத்தம் மாட்டேற்றான் எய்துவித்தலே அன்றி, வேறுகணமும் கூறுகின்றது.

இ-ள்: நேரசை இறுதி ஆகிய தேமா புளிமா என்னும் இயற்சீர் இரண்டும் வெண்பா உரிச்சீரின் முன்னர் நின்ற தேமாங்காய் புளிமாங்காய்போல முறையே சுவர்க்ககணமும் சந்திரகணமுமாம் எனவும், நிரையசை இறுதி ஆகிய கருவிளம் கூவிளம் என்னும் இயற்சீர் இரண்டும் வஞ்சி உரிச்சீரின் பின்நின்ற கருவிளங்கனி கூவிளங்கனிபோல நிலக்கணமும் நீர்க்கணமும் ஆம் எனவும் சிறப்புப்பெற்று நடக்கும். அன்றியும் அவை பிரமகணமும் இலக்குமிகணமும் சுரபிகணமும் கருடகணமும் என உரிமை கூறப்பட்டு அகலக்கவி முதற்கண் பயின்று நடக்கும் என்றவாறு.

பாட்டியல் செய்தோர் பலர் ஆகலான், ஒரு சாரார் மூவசைச்சீரே வரும் எனக் கூறுதலானும், ஒரு சாரார் ஈரசைச்சீர் உடன்கொண்டு கூறுதலானும் ஈரசைச் சீரும் இலக்கியத்தில் பயின்று வருதலானும் இவ்வாசிரியர் இரு திறனும் நேர்ந்தார் என்பதாம். (42)

விளக்கம்

சேக்கிழார் பெருமான், கம்பர் பெருமான் போன்றாராகிய பெருங்கவிஞர்தம் தொடர்நிலைச் செய்யுட்களின் முதல்சீர் ஈரசைச் சீராக உண்மையான், அவற்றிற்கு இலக்கணம் கூறும் முகத்தான் இவ்வாசிரியர் ஈரசைச் சீரும் கொண்டார். ஒரு சாரார் ஈரசைச் சீர்களுள்ளும் நிரையீறே கொண்டனர். இவர் தேமா புளிமா கருவிளம் கூவிளம் என்ற ஈரசைச்சீர் நான்கனையும் கொண்டுள்ளார்.

| அசைகள் | வாய்பாடு | ஒப்பன | கணம் | தெய்வம் |
|---|---|---|---|---|
| நேர்நேர் | - தேமா | - தேமாங்காய் | - சுவர்க்கம் | - பிரமன். |
| நிரைநேர் | - புளிமா | - புளிமாங்காய் | - சந்திரன் | - இலக்குமி. |
| நிரைநிரை | - கருவிளம் | - கருவிளங்கனி | - நிலம் | - சுரபி. |
| நேர்நிரை | - கூவிளம் | - கூவிளங்கனி | - நீர் | - கருடன். |

மூவசைச்சீர்க் கணங்களுக்குக் கூறிய பயனே, ஒத்தனவாகக் கொள்ளப்படும் ஈரசைச்சீர்க் கணங்களுக்கும் கொள்ளப்படும்.

## ஒத்த நூற்பாக்கள்

'ஈரசை நான்கினுள் நேர்ஈறு ஒழித்து
நிரைஈற்று இயற்சீர் முதற்கண் நிற்பினும்
வரையார் மூவசை வாராக் காலே.' – பன். பாட். 128

'ஈரசை முதலா நேர்ஈறு ஒழித்து
நிரைஈற்று மங்கலம் புணர்த்தனர் கொளலே.' ,, 129

'நிரைநிரை கொற்றவை நேர்நிரை சாத்தன்.' ,, 130

'அவைதாம்,
மிகுதரு திருவும் புகழும் செய்யும்.' ,, 131

'ஓரசைச் சீரும் நாலசைச் சீரும்
ஈரசைச் சீருள் நேர்இறு சீரும்
மங்கலம் புணரினும் மங்குதல் செய்யும்.' ,, 132

'ஈரசை முதல வாறோ ரேனும்
நேர்நேர் நிரைநேர் ஒழிந்து நிரைஇறு
மங்கலம் புணர வந்தன கொளலே.' ,,

'நிறுத்துகணம் இவ்விரண்டாம் அகவற் சீரின்
நேர்ஈறு வெள்ளைச்சீர் நிரைவஞ் சிச்சீர்
சிறப்புடைய இவ்விரண்டும் ஆம்; கணப் பேர், மற்றும்
திகழ்இயற்சீர் அயன்திரு கோ கருடன் முன்னும்.'
– சித. பாட். 26

## தசாங்கத்திற்குச் சிறப்புவிதி

803. உற்ற தசாங்கத் தினைஒரு சீரான்
முற்ற உரைத்தல்; முறைபிரித்து இசைப்பின்
பிழையாம்; புணர்மொழிப் பெயர்ஈற் றின்தொகின்
வழுவா காஎன வகுத்தனர் புலவர்.

இது தசாங்கத்தினைப் புணர்க்கும் திறத்து ஆவது ஒரு சிறப்புக் கூறுகின்றது.

இ-ள்: பாட்டுடைத்தலைவற்குப் பொருந்திய தசாங்கத்தினை ஒரு சீராலே முடிவுபெறப் பாடுவது இலக்கணமாம்; பிரித்து வேறு சொல் முடிபு கொடுத்துக் கூறல் குற்றமாம்; பிரித்தவழிப் புணர்மொழிப் பெயர் இறுதிக்கண் தொகைச்சொல் கொடுத்து நச்செழுத்து அகற்றிக் கூறின் குற்றமாகாது என்றவாறு. (43)

### விளக்கம்

*மலைமுதலிய பத்து அங்கங்களும் தனித்தோ அடையடுத்தோ ஒரேசீராக அமைக்கப்பட்டமை சான்றோர் செய்யுட்களில் காணப்படும்.*

'புகலாகும் இன்பப் பொருப்பும்.' – மலை
'தேர்இன்பம் நல்கும் திருநாடும்.' – நாடு
'அல்லாது உயர்ந்த அணிநகரும்.' – நகர்
'கூறி நடாத்தும் குரகதமும்.' – பரி
'காய்ந்த சிவஞானக் கடாக்களிறும்.' – யானை
'நார்அகத்துக் கட்டும் நறுந்தொடையும்.' – மாலை
'வந்த நவநாத மணிமுரசும்.' – முரசு
'ஆக்கி அசைத்தருளும் ஆணையும்.' – ஆணை

'பேரின்ப வெள்ளப் பெருக்காறும்.' – ஆறு

'ஐந்தொழிலும்ஓவாது தனித்துயர்ந்த
வான்கொடியும்.' – கொடி

'பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே.' – முதலியவற்றைக் காண்க. கந்தர் கலிவெண்பா (64 – 74)

'மன்னு தசாங்கம் ஒருசீரதனுள் உரைப்பதன்றிப்
பின்நின்ற சீரொடு சேர்ந்தே பிளவுபடின் பிழையாம்
இன்னும் அவைதாம் புணர்மொழிஆயின் இயல்புபெறும்.'
– நவ. 24

43

## அகலக்கவிக்குப் புறனடை

804. கூறிய இலக்கணம் குறைபா டின்றித்
தேறிய மூவசைச் சீர்முத லாக
அகலக் கவிதான் அமையும் என்ப.

இஃது அகலக்கவிக்கு ஆவது ஒரு புறனடை கூறுகின்றது.

இ-ள்: கூறப்பட்ட பத்துவகைப் பொருத்த இலக்கணத்தில் குறைவின்றிப் பலவாற்றானும் தெளிந்த மூவசைச்சீர் முதலாக அகலக்கவி பாடப்படும் என்றவாறு.

தேறிய என்றதனால் உண்டியின் விலக்கிய நச்சு எழுத்தும் கதியின் விலக்கிய எழுத்தும் எடுத்த மங்கலச்சொல்லில் வரின் அமுதமாய் அமைவு உடைத்து எனவும் கொள்க. அவை முறையே சீர் சொல் யானை எனவும், எழுத்து பொன் கார் சொல் அமிர்தம் எனவும் வருவன.

இன்னும் அதனானே மங்கலத்திற்கு அடைகொடுத்த அடைசொல்லின் முதல் நின்ற எழுத்தே பற்றி எழுத்திலக்கணம் கொள்க.

இவ்வாறு கூறிய இலக்கணங்களால் போந்த பொருள் மங்கலமும் சொல்லும் சொல்நோக்கியும், கணம் சீர் நோக்கியும், பால்முதலிய ஏழும் எழுத்து நோக்கியும் கூறினர் என்பது.

இத்துணையும் அகலக்கவி முதற்சீர்க்கு வேண்டும் பொருத்த இலக்கணம் கூறி, இனி அகலக்கவி இலக்கணம் கூறுகின்றார். (44)

## தொடர்நிலைச் செய்யுள் வகைப் பெயர்

805. பிள்ளைக் கவி[1]மேல் கொள்ளும் கலம்பகம்[2]
பன்மணி மாலை[3] மும்மணிக் கோவை[4]
அகப்பொருட் கோவை[5] தொகைப்படு செய்யுள்[6]
இணைமணி மாலை[7] இரட்டைமணி மாலை[8]
மும்மணி மாலை[9] நான்மணி மாலை[10]
இருபா இருபஃது[11] ஒருபா ஒருபஃது[12]
ஒலிஅந் தாதி[13] மலிபுகழ் இன்னிசை[14]
வருக்க மாலை[15] திருத்தகு கைக்கிளை[16]
மங்கல வள்ளை[17] மற்றை இரட்டை[18]
நற்கீர்த்தி நேரிசை[19] மெய்க்கீர்த்தி மாலை[20]
காப்பு மாலை[21] வேனில் மாலை[22]
பல்சந்த மாலை[23] அங்க மாலை[24]
வசந்த மாலை[25] நவமணி மாலை[26]
பரணி[27] தசாங்கப் பத்து[28]இரு பகுதிய
பதிற்றந் தாதி[29,30] நூற்றந் தாதி[31]
அட்ட மங்கலம்[32] அலங்கார பஞ்சகம்[33]
ஊசல்[34] சின்னப் பூ[35]ஒரு பொருள்மேல்
பேசும் சதகம்[36] பிறஎண் ணலும்
கூறுதல்[37] ஐந்திணைக் கோவை[38] உற்ற
நாழிகை வெண்பா[39] நானூற் பதனோடு[40-3]

யாழின் மொழிவிழி[44] இணைமுலைப் பத்து[45]
வில்வாள் வேல்கோல் வேழம் குதிரை
நாடுஊர் கொடையை நயந்த விருத்தம்[46-54]
மாப்பெரும் புலவர்சொல் காப்பியம்[55] என்னப்
பெயர்பெறும் தொடர்நிலை பிறவும் அன்ன.

**இஃது அகலக்கவி இரண்டனுள் தொடர்நிலைச் செய்யுள் பெறும் பெயர்வேற்றுமை கூறுகின்றது.**

**இ – ள் : பிள்ளைக்கவி முதலாகக் காப்பியம் ஈருகச் சொல்லப்பட்ட ஐம்பத்தைந்தும் அவற்றுள் தொகை பெற வகுத்த அகலக்கவி வேறுபாடும் அவை போல்வன பிறவும் எல்லாம் தொடர்நிலைச் செய்யுளாம் என்றவாறு.**

**(45)**

### விளக்கம்

*பல பாடல்களில் தொகுப்பாகப் பொருள் தொடர்போ, சொல் தொடர்போ, இரண்டுமோ பொருந்த அமையும் தொடர்நிலைச் செய்யுட்களின் வகைகள் இந்நூற்பாவில் சுட்டப்பட்டுள்ளன.*

### ஒத்த நூற்பா

*'சாதகம் பிள்ளைக்கவி பரணி கோவைஅர*
*சன்விருத்தம் தொகைநிலை*
*சாரும்ஐந்திணை எண்தரும் செய்யுள் அங்கமொடு*
*தானை அநுராகம் நாமம்*
*தாரகை இரட்டைமணி பன்மணி புகழ்ச்சிபல*
*சந்தம் மெய்க்கீர்த்தி காப்பு*
*தண்டகம் தும்பைஇணை மணிவேனில் மும்மணிவ*
*சந்தம் உற்பவம் நான்மணி*
*ஓதுநவமணி வீரவெட்சி யுடனே வாகை*
*உழிஞை மணி நொச்சி காஞ்சி*

உயர்வருக்கம் பெருமகிழ்ச்சி நூறொடு பதிற்று
ஒலியலந்தாதி தூதோடு
உலவு அலங்கார பஞ்சகமும் வாயுறை வாழ்த்து
உலா வளமடல் கைக்கிளை
ஊர்பெயர்கொள் நேரிசையோடு இன்னிசை குறத்தியொடு
உழத்திப் பாட்டுக் குழமகன்
பாதாதிகேச வரலாற்றுச் செருக்களம்
படுவஞ்சி பெருமங்கலம்
பதிகமும் செவியறி வுறூஉவொடு ஊர்கடிகைவெண்
பா அட்டமங்கலமும் நாற்
பதுசதகம் எழுகூற்றிருக்கை சின்னப்பூ ஒரு
பாஒருபது இருபா இரு
பது தசாங்கப் பத்துநயனப் பயோதரப்
பத்து தசாங்கத்தயல்
காதும் ஆற்றுப்படை விருத்தலக்கணம் ஊசல்
காப்பியம் இரண்டு பவனிக்
காதல்வா தோரணம் வெற்றிக்கரந்தை மஞ்சரி
கலம்பகம் விளக்கு
கண்படை புறம்கையறு துயிலெடை கடையெனும்
கருதுநிலை ஆறொடும்முது
காஞ்சிமங்கல வெள்ளை தாண்டகம் இரண்டொடு
கண்டபுறநிலை வாழ்த்துக்களே.' – பி. தீ. 4

## பிள்ளைத்தமிழின் பருவங்கள்

806. கடுங்கொலை நீக்கிக் கடவுள் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்னப்
பெறுமுறை ஆண்பால் பிள்ளைப் பாட்டே.

**இது பிள்ளைக் கவிக்கு இலக்கணம் கூறுகின்றது.**

இ – ள்: கடிய கொலைத்தொழிலை அகற்றி அருள் நீர்மை தோன்றக் கடவுளைப் புகழ்ந்து கூறி அக்கடவுள் காக்க எனக் கூறும் காப்பு முதலாகச் சிறுதேர் ஈறாக முறையான் வகுத்த பத்து நிலமும் பெறும் ஆண்பாற் பிள்ளைக்கவி என்றவாறு.

செங்கீரை தலைஎடுத்து முகம் அசைத்தல். சிறுபறை முழக்கலையும் சிற்றில் சிதைத்தலையும், சிறுதேர் உருட்டலையும், சிறுபறை சிற்றில் சிறுதேர் என்றார், பெயரொடு தொழிற்கு ஒற்றுமையான். (46)

விளக்கம்

*சப்பாணி – சக பாணி, கைகொட்டுதல்.*

*தால் – தாலாட்டிக் குழந்தையை உறங்கச்செய்தல்.*

*வாரானை – ஆனை தொழிற்பெயர் விகுதி. வருதல் என்பது பொருள். குழந்தையை வருக என்று அழைத்தல்.*

*அம்புலி – இப்பருவத்தில் குழந்தை அம்புலியோடு விளையாடுதலை விரும்புதலால் அம்புலியைக் குழந்தையிடம் வருமாறு சாம தான பேத தண்டங்களால் வசப்படுத்தி அழைத்தல்' இதுவே பிள்ளைத்தமிழில் மிகச் சிறந்த பருவம் என்பர். 46*

## பெண்பால் பிள்ளைத்தமிழும் பிள்ளைத்தமிழ்ப் பாடல் வகையும்

**807.** அவற்றுள்,
பின்னைய மூன்றும் பேதையர்க்கு ஆகா;
ஆடும் கழங்குஅம் மானை ஊசல்;

பாடும் கவியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத் தாற்கிளை அளவாம்.

இது பெண்பால் பிள்ளைக்கவிக்கு எய்தியதன்மேல் சில வேறுபாடும், பொது இலக்கணமும் கூறுகின்றது.

இ-ள் : அப்பருவம் பத்தனுள்ளும் பிற்கூறப்படும் சிறுபறை முழக்கலும் சிற்றில் சிதைத்தலும் சிறுதேர் உருட்டலும் பெண்பாற்கு ஆகா; கழங்கு அம்மானை ஊசல் பாடுங் கவிகளால் பாடப்பட்டு வகுப்பானும் அகவல் விருத்தத்தானும் சுற்றமுறப் பாடப்படும் என்றவாறு. (47)

### விளக்கம்

*கழங்கு அம்மானை ஊசல் என்பன எல்லாப் பெண்பாற் பிள்ளைத்தமிழ்களிலும் தவறாது இடம்பெறுதல் இல்லை. அம்மானை நீராடல் ஊசல் என்ற அமைப்புடைய பருவங்களும் உள.*

*பிள்ளைத்தமிழ் சந்தவிருத்தத்தாலும் ஆசிரிய விருத்தத்தாலும் பாடப்படும் என்பது.* *47*

## காப்புப்பருவக் கடவுளர்

808. மங்கலம் பொலியும் செங்கண் மாலே
சங்கு சக்கரம் தரித்த லானும்
காவற் கடவுள் ஆக லானும்
பூவினள் புணர்த லானும்முற் கூறி,
கங்கையும் பிறையும் கடுக்கையும் புனைஉமை
பங்கனென்று இறைவனைப் பகர்ந்து, முறையே
முழுதுஉலகு ஈன்ற பழுதுஅறும் இமையப்
பருப்பதச் செல்வியை விருப்புற உரைத்து,

நாமகள் கொழுநன், மாமுகில் ஊர்தி,
ஒற்றைக் கொம்பன், வெற்றி வேலன்,
எழுவர் மங்கையர், இந்திரை, வாணி,
உருத்திரர் அருக்கர் மருத்துவர் வசுக்கள்,
பூப்புனை ஊர்தியில் பொலிவோர், அனைவரும்
காப்ப தாகக் காப்புக் கூறல்.

இது பருவம் பத்தனுள்ளும் முதற் பருவமாகிய காப்பினுக்கு உரைக்கப்படும் கடவுளர் பெயரும் முறையும் கூறுகின்றது.

இ-ள்: சுபங்கள் எல்லாம் பொலியும் சிவந்த கண்ணை உடைய மாயோன், சங்கத்தினையும் சக்கரத்தினையும் கைக்கோடலானும் காத்தல் தொழில் உரிமை பூணுதலானும், பூமடந்தையைப் புணர்தலானும் முன்னர்க் கூறி, உலகம் பொலிதற்கு ஏதுவாகிய கங்கையாற்றினையும் நிறைநீர் வான் பிறை மதியினையும் கார்ப்பருவத்தில் பொலியும் கொன்றை மாலையினையும் சூடிய உமையோர்பாகன் என்று இமையோர் நாதனைப் புகழ்ந்து கூறி, உலகம் முழுது ஈன்ற பனிவரைச் செல்வியை விருப்பம் மேன்மேல் கிளைப்பக் கூறி, நாமடந்தை கேள்வன் ஆகிய அயனைப் புகழ்ந்து கூறி, கறுத்த மேகவாகனனை அதன்பின் புகழ்ந்து கூறி, ஒற்றைக் கொம்பனைப் புகழ்ந்து கூறி, வீரத்தன்மையைப் பொருந்திய வேலனைப் புகழ்ந்து கூறி, சத்தமாதர்களைப் புகழ்ந்து கூறி, திருவினைப் புகழ்ந்து கூறி, வாணியைப் புகழ்ந்து கூறி, பதினொருகோடி உருத்திரரையும் பன்னிரண்டு கோடி ஆதித்தரையும் இரண்டுகோடி மருத்துவரையும் எட்டுக்கோடி வசுக்களையும், புட்பக விமானத்தினை உடைய சந்திரனையும் குபேரனையும்,

அனைவோர் என்றதனால் காரி முதலிய தேவரையும், பிள்ளையைப் பாதுகாத்தற் பொருட்டுக் காப்புக் கூறுக என்றவாறு.

இரட்டுற மொழிந்ததனால், 'பூப்புனை ஊர்தியில் பொலிவோர் என்றது பிரயோக விபாகத்தான் இருவரையும் கொள்ளக் கிடந்த தொடர்மொழி. (48)

(குறிப்பு :- இம்முறையிலும் சில மாறுபாடுகள் உண்டு.)

## பிள்ளைத் தமிழ் கொள்ளும் காலம்

809. மூன்று முதல்மூ வேழு திங்களின்
ஒற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே.

இது பிள்ளைக்கவி கொள்ளும் காலம் கூறுகின்றது.

இ - ள்: பிறந்து மூன்றும் திங்கள் முதல் இருபத்தொரு திங்கள்காறும் ஒற்றித்த திங்களில் நிறைமதிப் பக்கத்தில் பிள்ளைக்கவியை விரும்பிக் கொள்ளுக என்றவாறு. (49)

### விளக்கம்

*பிள்ளைத்தமிழ் குழந்தையைப் பற்றிப் பாடும் நூல் ஆதலின் பிள்ளைப்பருவம் கழியும் முன்னரே பாடுதல் வேண்டும் என்ற கருத்தான் 21ஆம் திங்களுக்குள் பாடுதல் வேண்டும் என்று கொண்டனர். முதியோர்களைப் பிள்ளைகளாகக் கற்பனை செய்து பாடும் இடத்தும் இப் பிள்ளைப்பருவத்தினராகவே கொண்டு பாடுவர் என்பது. ஒற்றைத் திங்கள் மங்கலம் தருவது. நிறைமதிப்பக்கம் வளர்ச்சிதருவது. ஆதலின் ஒற்றை பெற்ற முற்றுறு மதி கொள்ளப்பட்டது.* *49*

## காலத்துக்குப் புறனடை

810. மூன்றுஐந்து ஏழாம் ஆண்டினும் ஆகும்.

இது மேலதற்கு ஒரு புறனடை.

இ - ள்: மூன்றும் ஆண்டினும் ஐந்தாம் ஆண்டினும் ஏழாம் ஆண்டினும் அப்பிள்ளைக் கவியைக் கொள்ளவும் பெறும் என்றவாறு. (50)

### விளக்கம்

*மூன்று திங்கள் முதல் இருபத்தொரு திங்களுக்குள் பாடுதலே சிறப்பு. அஃது இயலாதவிடத்து மூன்று, ஐந்து, ஏழ் என்ற ஒற்றை பெற்ற ஆண்டினைக் கொள்க என்பது. 50*

## காப்புப் பருவம்

811. ஒன்பது பதினொன்று என்பது காப்பே.

இது பாடும் வரையறை கூறுகின்றது.

இ - ள்: பிள்ளைக்கவியைப் பாடுங்கால் ஒன்பது பாட்டானும் பதினொரு பாட்டானும் காப்புப்பாடுக என்றவாறு.

நிலங்கள் பத்தும் தம்மில் ஒப்பக்கொண்டு பாடும்இடத்து ஒற்றைபடப் பாடுதல் சிறப்புடைத்து. இரட்டிக்கப் பாடும் இடத்தும் ஓசை பெயர்த்துப் பாடுக,

உரையிற்கோடலான் காப்பு முதற்கண் எடுத்த அகவல் விருத்தம் நான்கு அடிக்கும் எழுத்து ஒப்பப் பாடுதல் வேண்டும் எனக் கொள்க.

'முதற்கண் எடுத்த அகவல் விருத்தம்
எழுத்தின் தொகுதி எண்ணினர் கொளலே' — பன். பாட். 191

என்ப ஆகலின். (51)

## ஒத்த நூற்பாக்கள்

இனி, பிள்ளைத்தமிழ் பற்றிய ஏனைய நூல்களின் நூற்பாக்களைக் காண்போம்.

'பிள்ளைப் பாட்டே தெள்ளிதின் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே.' – பன். பாட். 174

'ஒன்றுமுதல் ஐயாண்டு ஓதினும் வரையார்.' – 175

'தோற்றம் முதல்யாண்டு ஈரெட்டு அளவும்
ஆற்றல் சான்ற ஆண்பாற்கு உரிய.' – 176

'காப்புமுதல் ஆகிய யாப்புவகை எல்லாம்
பூப்புநிகழ் வளவும் பெண்பாற்கு உரிய.' – 177

'தொன்னில வேந்தர் சுடர்முடி சூடிய
பின்னர்ப் பெருஅர் பிள்ளைப் பாட்டே.' – 178

'காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்.' – 179

'தந்தை தாயே பாட்டன் பாட்டி
முந்துற உரைத்தல் முறைமை என்ப.' – 180

'திருந்திய பெண்மகவு ஆயின் விரும்பிய
பின்னர் மூன்றும் மன்னுநீக்கு என்றனர்.' – 181

'சிற்றில் சிறுதேர் சிறுபறை ஒழித்து
மற்றவை மகளிர்க்கு வைப்ப தாகும்.' – 182

'சிற்றில் இழைத்தல் சிறுசோறு ஆக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்
யாண்டுஈ ராறுஅதில் எழில்காம நோன்பொடு
வேண்டுதல் தான்உள விளம்பினர் புலவர்.' – 183

'திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுகன்
எழுவர் மங்கையர் இந்திரன் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே.' - பன். பாட். 184

'காப்பின்முதல் எடுக்கும் கடவுள் தானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்.' - 185

'அவன்தான்,
காவல் கிழவன் ஆக லானும்,
பூவின் கிழத்தியைப் புணர்த லானும்,
முடியும் கடகமும் மொய்பூந் தாரும்
குழையும் நூலும் குருமணிப் பூணும்
அணியும் செம்மல் ஆக லானும்,
முன்னுற மொழிதற்கு உரியன் என்ப.' - 186

'விரிசடைக் கடவுளும் வேய்த்தோள் எழுவரும்
அருளொடு காக்கஎன்று அறையுங் காலைக்
கொலையும் கொடுமையும் கூறுர் ஆகிப்
பெயரும் சின்னமும் பிறவும் தோன்றக்
கங்கை திங்கள் கடுக்கை மாலை
மங்கல மழுவொடு மலைமகள் என்றிவை
விளங்கக் கூறல் விளம்பிய மரபே.' - 187

'ஒன்பது பதினொன்று என்பது காப்பே.' - 188

'அகவல் விருத்தமும் கட்டளை ஒலியும்
கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே.' - 189

'பிள்ளைப் பாட்டே நெடுவெண் பாட்டுஎனத்
தெள்ளிதின் செப்பும் புலவரும் உளரே.' - 190

'முதற்கண் எடுக்கும் அகவல் விருத்தம்
எழுத்தின் பகுதி எண்ணினர் கொளலே.' - 191

'நீள்நெறி உவகை ஆண்மக விற்குஏழ்
ஐம்மூ வாண்டே அவர்முதல் சாற்றல்.' – பன். பாட். 192

'பொங்குகதிர் இளம்பிறை புலியின் சிறுபறழ்
குஞ்சரக் குழவி கோள்அரிக் குருளை
அடல்இள விடையே ஆறிரண்டு ஆண்டின்
இடைநிகழ் உவமை என்மனர் புலவர்.' – 193

'பெண்மக விற்குப் பேசு மிடத்து
மானின் கன்று மயிலின் பிள்ளை
தேனின் இன்பம் தெள்ளாத் தேறல்
கரும்பின் இளமுளை கல்லாக் கிள்ளை
இளந்தளிர் வல்லி என்றுஇவை எல்லாம்
பெய்வளை மகளிர்க்கு எய்திய உவமை.' – 194

'இளங்கதிர்த் திங்கள் எல்லார்க்கும் உரித்தே.' – 195

'அவைதாம்,
பிள்ளையைப் பாடலின் பிள்ளைப் பாட்டாய்ப்
பிறப்பே ஓகை காப்பே வளர்ச்சி
அச்சம் உறுத்த லுடன்செங் கீரை
தால்சப் பாணி முத்தம்வா ரானை
அம்புலி சிற்றில் குழமகன் ஊசல்
என்றனர் பிறவும் தொன்னெறி மரபின்
தத்தம் தொழிற்குத் தகுவன புகறல்
எத்திறத் தோர்க்கும் உரிய என்ப,
கொச்சகக் கலியொடு நெடுவெண் பாட்டே.' – 196

'நெடுவெண் பாட்டின் முந்நான்கு இறவாது,
தொழிலொடு குறித்துத் தோன்றும் செய்யுள்,
ஒன்றுமூன்று ஐந்தேழ் ஒன்பான் பதினொன்று
என்றிவை இவற்றின் இகந்தன இழுக்கே.' – 197

'பிறப்பே ஓகை பேணுறு வளர்ச்சி
சிறைப்பட அச்சம் உறுத்தலொடு நான்கும்
ஆரா யுங்கால் ஐந்துமுன்று இடையாய்,
ஓர்ஏமு ஒருபொருட்கு உயர்ச்சிஇழிபு ஒன்றே.' – 198

'கண்டுரைக்கின் பிள்ளைக் கவிதெய்வம் காக்கவெனக்
கொண்டுரைக்கும் தேவர் கொலைஅகற்றி — ஒண்டொடியாய்
சுற்றத் தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை.' – வெண். பாட். செ. 6

'முறைதருமூன் று ஆதிமூ வேழீரும் திங்கள்
அறைகநிலம் பத்தும்ஆண்(டு) ஐந்தேழ் —
இறைவனையார்க்கு,
அந்தம் சிறுபறையே, ஆதியாம் மூன்றொழித்துத்
தந்தநிலம் ஓரேழும் சாற்று.' – வெண். பாட். செ. 7

'சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை — போற்றரிய
அம்புலியே ஆய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து.' – வெண். பாட். செ. 8

'விரிசடைப் பிஞ்ஞகன் வேய்த்தோள்எழுவர் முன்காக்கஎன
அருள்பெறக்கூறின் அவரவர் செய்யும் கொலைஅகற்றி
உரியநற் கங்கை உமையாள் மதியூர்விடை கடுக்கை
விரைமலர்த் தார்மற்றும் மங்கலமாக விளம்புவரே.'
– நவ. 26

'பதினொரு மூவரும் பங்கயத் தோனும் பகவதியும்
நிதிமுதலோனும் பரிதியும் சாத்தனும் நீள்அமரர்க்கு
அதிபதிதானும் அறுமுகன் ஐங்கரத்து அற்புதனும்
மதிபுனைவேணி வடுகனும் காவல்செய் வானவரே.'
– நவ. 27

'முன்தந்த காப்புச் செங்கீரை தால்சப்பாணி முத்தத்தொடு
மற்றுஅந்த வாரானை அம்புலி வாய்ந்த சிறுபறையே
சிற்றில் சிதைத்தல் சிறுதேர் உருட்டுதல் சேர்ந்தபத்தும்
சுற்றத்தளவும் கவிக்கு எல்லையாய்க்கொண்டு
சொல்லுவரே.' – நவ. 28

'மூன்றுமுதல் இருபத்தொரு திங்கள் முடிவளவாய்த்
தோன்று நிலைபத்தும் சொல்லுவர் தோகையர்
தங்களுக்கும்
ஆன்ற புகற்சிக்கண் அவ்வகையாம்என்பர் ஐந்துஏழ்என
ஏன்றநல் யாண்டின் அகவரைதானும் இயம்புவரே.'

– நவ. 29

'சொன்ன சிறுபறையே முதல்மூன்றும் சுருங்கிவரும்
வன்னவிருத்தம் வகுப்பே ஈரெண்கலை வண்ணச்செய்யுள்
அன்னவை ஈரைம்பஃதின் எலைஎன்று அறைவர்கற்றோர்.'

– நவ. 30

'சிறுபறையே முதல்மூன்றும் தெரியில்அப் பேதையர்க்குப்
பெறுவனஅல்ல; இளையனேஆயினும் வேந்தன் பெருன்
மறுவில் முடிசூட்டிப் பிள்ளைக்கவி; காப்பு மாலைமுன்னே
அறிபவர் ஒன்பதும் பன்னொன்றுமாக அறைவர்களே.'

– நவ. 31

'துறுகொலைநீக் கித்தெய்வக் காப்பாய்ச் சுற்றம்
தொகையளவு வகுப்பகவல் விருத்தம் தன்னால்
முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி
முத்தம்வா ரானையம் புலியினோடு
சிறுபறைசிற் றில்சிறுதேர் இவைபின் மூன்றும்
தெரிவையர்க்குப் பெருகழங்கம் மானை ஊசல்
பெறுமூன்று முதலிருபத் தொன்றுள் ஒற்றை
பெறுதிங்கள் தனில்பிள்ளைக் கவியைக் கொள்ளே.'

– சிதம். பாட். 28

'பிள்ளைக் கவியின் பெற்றியைக் கூறச்
சுற்ற வகுப்பொடு தெய்வம் கொலைகாப்ப
ஒற்றைப் படமூன்று ஆதி மூவேழ்
ஈரும் மதியினும் ஐந்துஏழ் ஆண்டினும்
காப்புச்செங் கீரை தால்சப் பாணி
முத்தம் வாரானை அம்புலி சிறுபறை

*சிற்றில் சிறுதேர் ஆடவர்க் கே; கடை*
*மூன்றுஒழித்து அரிவையர்க்கு ஆம்கழங்கு அம்மானை*
*ஊசல் என்றுஇவை; அவ்விரு பாற்குப்*
*பத்துஉறுப் பாய்ஒவ் வொன்று விருத்தம்*
*பப்பத் தாகப் பாடல் என்ப.'* – தொ. வி. 257

*'செறிகொலை நீக்கித் தெய்வம் காப்புஎனத்*
*தொகைஅளவு வரையும் இசைவகுப்பு அகவல்*
*விருத்தம் தன்னால் வினவுமுறை காப்புச்*
*சாற்றுசெங் கீரை தால்சப் பாணி*
*வழங்கும் முத்தம் வாரானை அம்புலி*
*சிறுபறை சிற்றில் சிறுதேர் பத்தும்,*
*ஈற்றில் மூன்றுஒழித்து, ஏந்திழை யார்தமக்கு*
*உறுகழங்கு அம்மானை ஊசல் அமைய,*
*மூன்றுமுதல் இருபத் தொன்றனுள் ஒற்றைப்*
*பெறுமதி கொளலாம் பிள்ளைக் கவியே.'* – பி. ம. 2

*'இமையவர் வேதியர் இயல்மனர் வைசியர்*
*சூத்திரர் என்னச் சொற்றஐ வருக்கும்*
*முறையே நூறு முதல்அறு பான்வரை*
*கணிக்கும் பிள்ளைக் கவியின் தொகையே.'* – பி. ம. 3

*'மாதம் இருதிங்களில் காப்பு, ஐந்துசெங்கீரை,*
*மாதம் ஏழில் தாலமாம்,*
*வரைநவம் சப்பாணி, முத்தமோ பன்னொன்று,*
*வாரானை சம்வற்சரம்,*
*ஓதுஒன்றரை வருடம்இந்து, இரண்டில் சிற்றில்,*
*ஒலிபறை முழக்கல் மூன்றில்,*
*ஊர்இரதம் நாலில் ஆண்பால்; கழங்குஅம்மானை*
*ஊசல்பெண் பாலதாகுமே.'* – பி. தீ. 5

*'தீதில் காப்பே செங்கீரை தாலே*
*சப்பாணி முத்தம் வாரானை அம்புலி*
*சிறுபறை சிற்றில் சிறுதேர் இவற்றை*

*முறையே அகவல் விருத்தத் தாலே*
*பப்பத் தாகப் பாடுவது ஆண்பால்*
*பிள்ளைக் கவி ; இவ் வுறுப்பினில் கடைமூன்று*
*ஒழித்துக் கழங்குஅம் மனையூசல் என்றிவை*
*கூட்டிமுற் கூறிய வாறுஉரைப் பதுவே*
*பெண்பால் பிள்ளைக் கவிஎனப் படுமே.'*

*– மு. வீ. யா. ஒ. 78*

*51*

## கலம்பகம்

812. ஒருபோகு வெண்பாக் கலித்துறை உறமுன்
வருபுயம் மதங்குஅம் மானை காலம்
சம்பிர தம்கார் தவம்குறம் மறம்பாண்
களிசித்து இரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேல் கொண்டுஎழும் ஊசல்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்டுறை மருவி
இடைஇடை வெண்பாக் கலித்துறை நடைபெற்று
அந்தாதி மண்டலித்து ஆம்கலம் பகமே.

இது நிறுத்தமுறையானே கலம்பகம் ஆமாறு கூறுகின்றது.

இ - ள் : ஒருபோகும் வெண்பாவும் கலித்துறையும் முதற்கவி உறுப்பாக முற்கூறப்பட்டுக் கலவையின் புய வகுப்பு முதல் ஊசல் ஈருகிய பதினெட்டுப் பொருட் கூற்று உறுப்புக்களும் இயையுமாறு பிற்கூறப்பட்டு, மடக்கும் மருட்பாவும் ஆசிரியப்பாவும் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் ஆசிரிய விருத்தமும் கலி விருத்தமும் கலித்தாழிசையும் வஞ்சி விருத்தமும் வஞ்சித்துறையும் வெண்துறையும் ஆகிய கவிக்கூறுகளும் உடைத்தாய்

இடையிடை வெண்பாக் கலித்துறை பாடப்பட்டு அந்தாதித்தொடை முற்றும்உற இறுதியும் முதலும் மண்டலித்துப் பாடுவது கலம்பகமாம் என்றவாறு.

மண்டலித்துப் பாடுவது அந்தாதித் தொடையால் கூறுவனவற்றிற்கு எல்லாம் ஒக்கும். மேற்கொண்டு 'எழும்' என்றதனுல் காலத்தான் மருவிய பிச்சியார் கொற்றியார் முதலியவும் கொள்க. (52)

விளக்கம்

**ஒருபோகு** - *வண்ணக ஒத்தாழிசைக் கலிக்கு ஓதிய உறுப்பினுள் யாதானும் ஒன்று இன்றி வருவது. (தொல். பொ. 460 பே)*

**புயம்** - *தலைவனுடைய புயங்களின் செயல்களைப் பெரும்பாலும் சந்த விருத்தத்தால் வருணித்துக் கூறுவது.*

**மதங்கு** - *இரு கைகளிலும் வாட்படைகளை ஏந்தி வீசிப் பாடி ஆடும் ஒரு மதங்கச் சாதி மங்கையை நோக்கி ஓர் இளைஞன் காமுற்றுக் கூறும் கூற்று.*

**அம்மானை** - *மகளிர் மூவர் தம்முள் வாதம்செய்து அம்மானை பாடுவதைக் கூறுவது. முதல் இரண்டு அடியும் அடுத்த இரண்டு அடியும் ஈற்றடியும் தனித்தனியே ஒவ்வொருத்தி கூற்று.*

**காலம்** - *தலைவனைப் பிரிந்த தலைவி கார்காலம் முதலியன தரும் இன்பத் துன்பங்களைத் தொகுத்துக் கூறுவது.*

**சம்பிரதம்** - *இந்திரசால வித்தையில் வல்லவர் தம் சிறப்பினைத் தாமே கூறுவது.*

**கார்** - *பொருள் முற்றி மீளும் தலைவன் மேகத்தோடு கூறுவது.*

**தவம்** - *தவத்தோர் பெருமை கூறுவது.*

**குறம்** - *குறத்தி ஒருத்தி தலைவியை நோக்கிக் குறி சொல்லுவது.*

**மறம்** – மறக்குடி மகளை மணம்பேச வேந்தன் விடுத்த தூதனிடம் மறவன் மணம் மறுத்துப் பேசுவது.

**பாண்** – பரத்தையிற் பிரிந்த தலைவனிடமிருந்து வந்த பாணனிடம் தலைவியோ தோழியோ கூறுவது.

**களி** – கட்குடியர் கள்ளையும் அது உண்டாகும் பனை முதலியவற்றையும் சிறப்பித்துக் கூறுவது.

**சித்து** – இரசவாதிகள் தம்முடைய திறமையைக் கூறுவது.

**இரங்கல்** – தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கி நிற்கும் நிலையைத் தோழி கூறுவது. தலைவிதானே கூறுவதும் ஆம்.

**கைக்கிளை** – தலைமகளைக் காமுற்ற தலைவன் ஒருதலைக்காமத்தால் கூறுவது.

**தூது** – பிரிந்த தலைவன் தலைவியர் பறவை முதலியவற்றைத் தூதாக அனுப்புவது.

**வண்டு** – வண்டின் பெருமை கூறி அதனைத் தூது விடுவது.

**தழை** – பாங்கி தலைவன் தந்த தழையைத் தலைவியை ஏற்பிப்பது.

**ஊசல்** – மகளிர் ஊசலாடும் சிறப்பினைக் கூறுவது.

**கொற்றியார்** – வைணவச் சின்னங்களுடன் பிச்சை எடுக்க வருவாளைக் கண்ட காமுகன் ஒருவன் கூறுவது.

**பிச்சியார்** – பிச்சை வாங்கச் செல்லும் சிவ வேடங்கொண்ட பெண்ணைக் கண்ணுற்ற காமுகன் ஒருவன் கூறுவது.

**இடைச்சியார்** – இடைக்குல மகளை வீதிவாய் மோர்விற்க வந்தஞான்று கண்ட காமுகன் கூறுவது.

**வலைச்சியார்** – மீன் உணக்கும் செம்படவப் பெண்ணைக் கண்ட காமுகன் கூறுவது.

கலம்பகம் பெரும்பாலும் நூறு பாடல்களை உடையதாகவே காணப்படும். பாடல்வரையறை அடுத்த நூற்பாவில் சொல்லப் பட்டுள்ளது.

## ஒத்த நூற்பாக்கள்

'சொல்லிய கலம்பகம் சொல்லில் ஒருபோகு
முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே
அம்மனை ஊசல் யமகம் களிமறம்
சித்துக் காலம் மதங்கி வண்டே
கொண்டல் மருள்சம் பிரதம் வெண்டுறை
தவசு வஞ்சித் துறையே இன்னிசை
குறமே அகவல் விருத்தம் எனவரும்
செய்யுள் கலந்துடன் எய்திய அந்தம்
ஆதி யாக வரும்என மொழிப.' – பன். பாட். 213

'சொல்லிய கலம்பகத் தொடர்பு நோக்கில்
ஒருபோகு முதற்கண் வெண்பாக் கலித்துறை
புயமே அம்மனை ஊசல் மதங்கு
களிமறம் சித்துக் காலம் மடக்கே
வண்டே கொண்டல் மருள்சம் பிரதம்
வெண்டுறை தாழிசை வஞ்சித் துறையே
இன்னிசை குறமே அகவல் விருத்தம்என்று
வந்த செய்யுள் கலந்துடன் எய்தி
அந்தம் ஆதியாய் வரும்என மொழிப.' – பன். பாட்.

'வைக்கும் புயம்தவம்வண்(டு) அம்மனைபாண் மதங்கு
கைக்கிளைசித்(து) ஊசல்களி மடக்(கு)ஊர் – மிக்கமறம்
காலம் தழைஇரங்கல் சம்பிரதம் கார்தூது
கோலும் கலம்பகத்தின் கூறு.' – வெண். பாட். செ. 10

'கூறும் ஒருபோகு வெண்பாக் கலித்துறைகள்
மாறில் முதல்உறுப்பா மன்விருத்தம் – வேறகவல்
வஞ்சித் துறைவிருத்தம் வான்துறைவெண் பாமருட்பா
எஞ்சாக் கலியினம் கொண்(டு) ஈட்டு.' – வெண். பாட். 11

'மூலம் ஒருபோகுவெண்பாக் கலித்துறை முன்உறுப்பாம்
ஏலும் புயத்தோடு அம்மானைகார் ஊசல் இரங்கல்மறம்
கோலம் தழைதவழ் சித்துப்பாண் கைக்கிளை தூதுகுறம்
காலம் மதங்கிகளி சம்பிரதம் கலம்பகமே.' – நவ. 32

'சொன்ன கலம்பகம் தொக்க அச்செய்யுள் துடியைவென்ற
மின்னிடை! வெண்டுறை வெண்பாஅகவல் விருத்தமுடன்
இன்னிசை எண்ணிய வண்ணம் கலியொடு தாழிசையும்
மன்னு மருட்பா வஞ்சித்துறை வஞ்சிவிருத்தம் என்னே.'
– நவ. 33

கொண்டபுயம் தவம்மதங்கு அம்மானை காலம்
குறம்களிசம் பிரதம்மறம் பாண்கார் தூது
வண்டுதழை கைக்கிளைசித்து இரங்கல் ஊசல்
மடக்குமருட் பாஅகவல் விருத்தம் வெண்பா
வெண்டுறைவஞ் சித்துறைஆ சிரியம் வஞ்சி
விருத்தப்பாக் கலியினம்அந் தாதி யாகக்
கண்டவைமுன் ஞதியொரு போகு வெண்பாக்
கலித்துறைநேர் கூறல்கலம் பகமாம் அன்றே.'
– சிதம். பாட். 29

'கலம்பகத் துட்புயம் கைக்கிளைத் தவமே
காலம்வண்டு அம்மானை காற்றுப் பாணன்
குறம்சித்து இரங்கல் குளிர்தழை சம்பிரதம்
மறம்தூது ஊசல் மதங்கம் மடக்குஎன
விரவிமூ வாறும் வேண்டும் உறுப்பா
ஒருபோகு வெண்பா உடன்கலித் துறைஇவை
நிரையே முதற்கண் நின்றுபிற் கலந்தஐம்
பாத்துறை விருத்தம் அந்தாதி வருமே;
வந்தால் ஈசற்கு வரும்நூறு; முனிமெய்யர்க்கு
ஐந்துஅஃகும்; அரசர்க்கு ஆம்தொண் ணூறு;
அமைச்சர்க்கு எழுபதும் ஐம்பதும் வணிகர்க்கு
அமைந்த; ஏனையோர்க்கு ஆறைந்து அளவே.'
– தொ. வி. 258

'ஆர்புயம் தவம்மதங்கு அம்மானை காலம்
குறம்மறம் களிமயக்கு ஊசல் வண்டுஊர்
சித்து இரங்குதல் சம்பிரதம் தழைபாண்
கைக்கிளை தூதுஇவை கலம்பகக் கூற்றே.' – பி. ம. 4

'வெண்பாக் கலித்துறை வேண்டுஇவற்று ஒன்றால்
வண்ணம் முன்னுற வருமுதல் உறுப்பு
வினவின் ஒருபோகு வெண்பாக் கலித்துறை
அகவல் விருத்த மாயும்வேறு அகவல்
வெண்பாக் கலித்துறை ஆசிரியம் வஞ்சித்துறை
மருட்பா வெண்டுறை வஞ்சி கலியினம்
இவற்றை அந்தாதித்து இயம்பிய கூற்றால்
கலந்து பாடுவது கலம்பகம் என்ப.' – பி. ம. 5

'நூறு தேவர் தொண்ணூற் றைந்து
பார்ப்பார் அரசர் தொண்ணூறு அமைச்சர்
எழுபஃது ஐம்பான் வைசியர் ஆறைந்து
சூத்திரர் பெறுவரெனச் சொற்றனர் புலவர்.' – பி. ம. 6

'அரிய ஒருபோகு வெண்பாக் கலித்துறையும்
அன்பாய்க்கலி உறுப்பினுலே
அம்புயவகுப்பு மதங்கம் மறமும் காலம்
அம்மானை கார்குறம்பாண்
ஆடும் ஊசல்தவம் சம்பிரதம் வண்டுகளி
அலர்தழை தூதுஇரங்கல்
ஆனகைக்கிளை சித்துஎன்று வகைஈ றொன்பது
ஆம்உறுப்புக்கள் இயைய,
வரு மருட்பா கலிப்பா கலிவிருத்தம்
மடக்குக் கலித்தாழிசை
மன்னும் ஆசிரிய விருத்தம் ஆசிரியமும்
வஞ்சித்துறை வெண்டுறை
வஞ்சிச்செயுள் வஞ்சியாம் விருத்தங்களும்இ
வற்றுலும் இடையிடையினின்

மருவு வெண்பாக் கலித்துறை விரவி, அந்தாதி
வரன்முறைத் தொடையதாக,
உரிய தேவர்க்குநூறு, அந்தணர்க்குத் தொண்ணூறு
உடன்ஐந்தும், அரசருக்கே
உற்றிடும் தொண்ணூறு, வணிகருக்கு ஐம்பதாய்,
உரைசதுர்த்தர்க்கு முப்பான்
ஓதுவர் கலம்பகத்து உரியதாம்.' – பி. தி. 7

'வெண்பாக் கலித்துறை யோடுஒரு போகு
முதற்கலி மூன்றுறுப் பாக மொழிந்து
வாகு வகுப்பு மதங்கம் அம்மனை
காலம்சம் பிரதம் கார்தவம் குறம்மறம்
பாண்களி இரங்கல் சித்துஊசல் கைக்கிளை
தூதுஅளி தழைஇவை தோன்ற, மடக்கு
மருட்பா அகவல் வஞ்சி கலிப்பா
அகவல் விருத்த மொடுகலித் தாழிசை
கலிவிருத் தம்துறை காமரு வெண்டுறை
விரவி, அந் தாதியாய் விளம்பும் காலைக்
கலம்பகம் என்மனர் கற்றுணர்ந் தோரே.'

– மு. வீ. யா. ஒ. 80
52

## கலம்பகப் பாடல் தொகை

813. அதுவே,
இமையவர்க்கு ஒருநூறு, இழிபுஐந்து ஐயர்க்கு,
அமைதரும் அரசர்க்கு ஆகும் தொண்ணூறு,
அமைச்சருக்கு எழுபான், வணிகருக்கு ஐம்பான்,
அமைத்தனர் பின்னவர் தமக்குஆ றைந்தே.

இது மேலதற்குப் பாட்டு வரையறை கூறுகின்றது.

இ - ள்: மேல்கூறப்பட்ட கலம்பகம்தான் தேவர்க்கு நூறும், அந்தணருக்குத் தொண்ணூற்றைந்தும்,

அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சருக்கு எழுபதும், வணிகருக்கு ஐம்பதும் வேளாளருக்கு முப்பதுமாகப் பாடுக என அமைத்தனர் புலவர் என்றவாறு.

'அமைதரும்' என்பதனுல் அநதணரைத் தேவர்க்கு ஒப்பவும் குறுநில மன்னரை அரசர்க்கு ஒப்பவும் பாடுதலும் கொள்க. (53)

## ஒத்த நூற்பாக்கள்

'தேவர்க்கும் முனிவர்க்கும் காவல்அர சர்க்கும்
நூறு தொண்ணூற் றைந்துதொண் ணூறே,
ஒப்பில் எழுபது அமைச்சிய லோர்க்கு,
செப்பிய வணிகர்க்கு ஐம்பது, முப்பது
வேளா ளர்க்கென விளம்பினர் செய்யுள்.'

– பன். பாட். 244

'ஈசர்க்கு நூறு, இழிபுஐந்து ஐயர்க்கு, இகல் அரசர்க்கு
ஆசற்ற தொண்ணூறு, அமைச்சருக்காம் — ஏசா
எழுபான், ஐம்பான் வணிகர்க்கு, ஏனையோர்க்கு ஆறைந்து,
இழிபில் கலம்பகப்பாட்டு ஈண்டு.' – வெண். பாட். செ. 12

'தேவர்க்குநூறு, முனிவர்க்கு இழிபுஐந்து, சேணிலத்தைக்
காவற்குஉரிய அரசர்க்குத் தொண்ணூறு, காவலரால்
ஏவல் தொழில்பெற்ற மாந்தர்க்கு எழுபது, இருநிதியம்
மேவப் படுமவர்க்கு ஐம்பது, முப்பது மிக்கவர்க்கே.'

– நவ. 34

'அன்புறுதே வர்க்குநூறு, இழிபுஐந்து ஐயர்க்கு,
அரசர்க்குத் தொண்ணூறு, வணிகர்க்கு ஐம்பான்,
இன்புறுமுப் பான்உழவர்க்கு, அமைச்சின் உள்ளோர்க்கு
எழுபதெனும் கலம்பகம்.' – சிதம். பாட். 30

'தேவர்க்கு நூறு, அந் தணர்க்குஐந்து ஒழித்தது,
அரசர்க்குத் தொன்னூறு, ஐம்பது வைசியர்க்கு,
ஆறைந்து சூத்திரர்க் காகப் பகர்தரல்
கலம்பகம் என்மனுர் கற்றுணர்ந் தோரே.'

– மு. வீ. யா. ஒ. 80

53

## பன்மணி மாலை

814. அவற்றுள்,
ஒருபோகு அம்மானை ஊசல் இன்றி
வருவது பன்மணி மாலை ஆகும்.

**இது பன்மணிமாலை இலக்கணம் கூறுகின்றது.**

**இ - ள்: அக்கலம்பகம்தானே ஒருபோகும் அம்மானையும் ஊசலும் இன்றி ஏனை உறுப்புக்கள் எல்லாம் வரப்பாடுவது பன்மணிமாலையாம் என்றவாறு.**

**பன்மணிமாலை கலம்பக மாலை எனவும் கூறப்படும்.**

**(54)**

### ஒத்த நூற்பாக்கள்

'ஒருபோ குடனே அம்மனை நீக்கி
வெள்ளை முதலா எல்லா உறுப்பும்
தள்ளா இயலது கலம்பக மாலை.' – பன். பாட். 960

'ஒருபோகு அம்மனை ஒழித்துவெண் பாமுதல்
கருதின் பேரது கலம்பக மாலை.' ,, 261

அம்மானை – கூர்ந்து ஒருபோகு
ஊசல் ஒழிந்தால் கலம்பகப்பா ஒண்மாலை
பேசிய பன்மணியாம் பின்பு.' – வெண். பாட். செ. 18

கூறும் கலம்பகத்தின்,
ஆட்டிய அம்மானை ஊசல்ஒரு போகும் அற்றது இந்தப்
பாட்டியல் பன்மணிமாலை என்றுஓதுவர் பாவலரே.'
– நவ. 38

கலம்பகத்தம் மானை ஊசல்
முன்புஒருபோகு ஒழித்ததுபன் மணிமா லைப்பேர்.'
– சிதம். பாட். 30

'பன்மணி மாலை பன்னில் கலம்பகத்து
ஒருபோகு அம்மானை ஊசல்இவை நீத்து
அகவல் வெள்ளை அருங்கலித் துறைஎன்று
அவைசெறி நூறுஅந் தாதியாய் வருமே.'
– தொ. வி. 280

'அறைந்த கலம்பகத்து அம்மானை ஊசல்
ஒருபோகு என்பன ஒழியச் சிறப்பித்து
அந்தா தித்துநூறு அறைவது பன்மணி
மாலை என்ப மாண்புஉணர்ந் தோரே.' – பி. ம. 7

'அலகுறு கலம்பகத்துள்வரும் ஒருபோகு
அம்மானை ஊசல் மூன்றும்
அன்றி மேல்சொல்லிய உறுப்புஅமைத்து அவ்வாறு
அரற்றல் பன்மணி மாலையாம்.' – பி. தீ. 12

'முற்கூ றியகலம் பகத்துள் வரும்ஒரு
போகும் அம்மனை ஊசலும் போக்கி
ஏனை உறுப்புக்கள் எல்லாம் அமையப்
பாடுவது அதுதான் பன்மணி மாலை.'
– மு. வீ. யா. ஒ. 94
54

## மும்மணிக்கோவை

815. அகவல் வெண்பா அசைஎண் கலித்துறை
தொகைமுப் பதுபெறச் சொற்றொடர் நிலையின்
கூறுதல் மும்மணிக் கோவை ஆகும்.

இது மும்மணிக்கோவை இலக்கணம் கூறுகின்றது.

இ - ள் : ஆசிரியப்பாவும் வெண்பாவும் நேரசையும் நிரையசையும் கொண்டு எழுத்து எண்ணிப்பாடும் கலித்துறையும் முறைமுறை தொகை முப்பதுபெற அடுக்கி, அந்தாதித் தொடையாற் பாடுவது மும்மணிக் கோவையாம் என்றவாறு. (55)

### விளக்கம்

ஆசிரியம் வெண்பா கலித்துறை ஒன்றன்பின் ஒன்று அமைய முப்பது பாடலாகப் பாடப்படுவது.

'வெள்ளையும் அகவலும் நேரிசை யாகக்
கலித்துறை வரஅந் தாதி யாகி
முறைமையின் இயல்வது மும்மணிக் கோவை.'
– பன். பாட். 262

'தோன்றிய அகவல் வெள்ளை கலித்துறை
மூன்றும் வருவது மும்மணிக் கோவை.' – 263

'மும்மூன்று ஒருபொருள் மிசைவரும் என்ப.' – 264

– ஆண்டு அகவல்

'முன்முறையே வெண்பா கலித்துறை அந்தாதி
மும்மணிக்கோ வைக்கு முதல்.' – வெண். பாட். செ. 13

'முன் ஆசிரியம் வெண்பாக் கலித்துறை முப்பதுஎன்று
சொன்னர்கள் மும்மணிக் கோவைக்கு.' – நவ. 35

'பேசுஅகவல் வெள்ளைகலித் துறைமுப் பானல்
சொன்னதுமும் மணிக் கோவை.' – சிதம். பாட். 31

'மும்மணிக் கோவையே முப்பதுஅந் தாதியாய்
அகவல் வெள்ளை கலித்துறை முறைவரும்.' – தொ. வி. 281

'அகவல் வெண்பா கலித்துறை என்பன
முப்பது விரவின் மும்மணிக் கோவை.' – பி. ம. 12

'நேரும் ஆசிரியமும் வெண்பாவும் நேரசை
நிரையசை எழுத்தும் எண்ணி
நீள்கலித் துறையுடன் முப்பது அந்தாதியின்
நெறிபெறத் தொடையதாக
நிலைபெற உரைப்பதே மும்மணிக் கோவையாய்
நீள்நிலத்து உரைசெய்வரே.' – பி. தீ. 7

'அகவல்வெண் பாக்கட் டளைக்கலித் துறையும்
முறையே தொகைபெற முப்பது அடுக்கி
அந்தா தித்தொடை யாகச் செய்வது
மும்மணிக் கோவையாம் மொழியுங் காலே.'

– மு. வீ. யா. ஒ. 84

55

## அகப்பொருட் கோவை

816. முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்புஎனும் வரைவுஉடைத் தாகி
நலன்உறு கலித்துறை நானூறு ஆக
ஆறிரண்டு உறுப்பும் ஊறின்றி விளங்கக்
கூறுவது அகப்பொருள் கோவை ஆகும்.

**இஃது அகப்பொருட் கோவை இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள்: இருவகைப்பட்ட முதற் பொருளும், பதினான்கு வகைப்பட்ட கருப்பொருளும் பத்து வகைப்பட்ட உரிப்பொருளும் பொருந்தி, கைக்கிளை முதலுற்ற அன்புடைக் காமப் பகுதியவாம் களவொழுக்கத்தினையும் கற்பொழுக்கத்தினையும் கூறுதலே எல்லையாகக் கொண்டு, நன்மையுற்ற**

**கட்டளைக்கலித்துறை நானூருகத் திணை முதலாகத் துறை ஈருகக் கூறப்பட்ட பன்னிரண்டு அகப்பாட்டு உறுப்பும் வழுவின்றித் தோன்றப் பாடுவது அகப்பொருட் கோவை என்றவாறு.** (56)

விளக்கம்

| | |
|---|---|
| *இருவகை முதற்பொருள்* | – *நிலன், பொழுது என்பன.* |
| *பதினான்குவகைக் கருப்பொருள்* | – *ஆரணங்கு முதலியன.* |
| *பத்துவகை உரிப்பொருள்* | – *புணர்தல் முதலியன ஐந்தும், அவற்றின் நிமித்தங்கள் ஐந்தும்.* |
| *கைக்கிளை* | – *தலைவன்பால் சிறிதுபோது ஒருதலைக்காமமாகத் தொடங்கி, பின் ஐந்திணைக் காமமாய்த் தொடரும் கைக்கிளை.* |
| *ஆறிரண்டு உறுப்பு* | – *'திணையே கைகோள்' (இ. வி. பொ. 188) என்ற நூற்பாவில் கூறப்பட்டவை.* |

ஒத்த நூற்பாக்கள்

*'கோவை என்பது கூறுங் காலை*
*மேவிய களவு கற்பெனும் கிளவி*
*ஐந்திணை திரியா அகப்பொருள் தழீஇ*
*முந்திய கலித்துறை நானூறு என்ப.'* – பன். பாட். 341

*'களவினும் கற்பினும் கிளவி வகையால்*
*திணைநிலை திரியாச் செம்மைத் தாகி*
*நாட்டிய கலித்துறை நானூறு உரைப்பது*
*கோட்டம் இல்லாக் கோவை ஆகும்.'* – பன். பாட். 342

*'ஐந்திணை தழுவிய அகநிலைக் கோவை*
*தந்தநா னூறும் தாம்கலித் துறையே.'* – பன். பாட். 343

'ஆய்ந்த கலித்துறைதான் நானூறு அகப்பொருள்மேல்
வாய்ந்தநற் கோவையாம் மற்று.' – வெண். பாட். செ. 15

'பொருளதி காரத் திறத்தைப் புகன்று கலித்துறைகள்
வருவது நானூறும் கோவை என்றுஆகும்.' – நவ. 52

'கலித்துறை நானூருய் நடப்பது அகப்பொருட்கோவை.'
– சிதம். பா. 30

'தூண்டும் அகப்பொருள் துறைவளர்ந்து அமையக்
கருதி நானூறு கலித்துறை யாகக்
காதல் அன்புறு காந்தருவ மணத்தில்
கொடிச்சியும் ஊரனும் குலவுநெறி நடப்பது
அகப்பொருட் கோவை ஆம்என மொழிப.' பி. ம, 10

'இரு வகைப்பட்ட முற்பொருளுடன் பன்னுன்கு
எனும்கருப் பொருள்களோடு
ஈரைந்து உரிப்பொருள் பொருந்து கைக்கிளேஆதி
இயைவுற்ற அன்புஉடைத்தாய்ப்
பெருகு காமப் பகுதியாம் களவொழுக்கமும்
பெண்கற்பு ஒழுக்கத்தினும்
பேதம் அன்றிக் கட்டளேக்கலித் துறையினைப்
பெறும்ஓர் நானூற்ருல்திணை
உரிய கைக்கிளே முதல்துறை இறுதியா மொழி
உற்றஈராறு அகப்பாட்டு
உறுப்பும் வழுவின்றிச் சிறப்புடன் ஓதலும்
உறும்அகப் பொருட்கோவையாம்.' – பி. தீ. 8

'முதல கருஉரிப் பொருள்ஒரு மூன்றும்
அடைந்து, கைக்கிளே அன்புடைக் காமப்
பகுதிய வாங்களவு ஒழுக்கமும் கற்பும்
இயம்புத லேஎலே யாகக் கட்டளேக்
கலித்துறை நானூற் ருல்திணை முதலாத்
துறையீ ருகச் சொல்லப் பட்டு

ஈரா று அகப்பாட்டு உறுப்பும் இயையக்
கூறுவது, அகப்பொருட் கோவையாம், மற்றிஃது
அகவல் வெண்பாக் கலியடுக் கியவண்ண
வஞ்சியி னாலும் வழுத்தப் படுமே.' - மு. வீ. யா. ஒ. 81

56

## தொகைச் செய்யுள்

817. நெடுந்தொகை குறுந்தொகை கலித்தொகை என்னப்
படுந்தொகைச் செய்யுள் பற்பல ஆகும்

இது தொகைநிலைச் செய்யுள் இலக்கணம் கூறுகின்றது.

இ - ள்: அளவான் நெடுந்தொகை எனவும் குறுந்தொகை எனவும் பாட்டால் கலித்தொகை எனவும் கூறப்படும் தொகைநிலைச்செய்யுள் மிகப் பலவாம் என்றவாறு.

'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம்என்று
இத்திறத்த எட்டுத் தொகை.'

'பற்பல' என்றதனால் வள்ளுவர்முப்பால் நாலடி நான்மணிக்கடிகை திரிகடுகம் சிறுபஞ்சமூலம் ஏலாதி முதலாயின எல்லாம் ஆம் என்று அறிக. (57)

### விளக்கம்

தொகைச்செய்யுள் பன்னிருபாட்டியலில் கணக்கு என்ற பெயரான் வழங்கப்படுகிறது.

'மேல்கீழ் கணக்கென இருவகைக் கணக்கே.'
- பன். பாட். 344

'மேற்கணக்கு எனவும் கீழ்க்கணக்கு எனவும்
பாற்படும் வகையான் பகர்ந்தனர் கொளலே.' - 345

'அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந்து ஆதி பதிற்றைம்பது ஈறு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு எனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே.'

– பன். பாட். 346

'ஐம்பது முதலா ஐந்நூறு ஈறு
ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபின்
தொகுக்கப் படுவது மேற்கணக்கு ஆகும்.' – 347

'அடிநிமிர்பு இல்லாச் செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட உரைப்பது கீழ்க்கணக்கு ஆகும்.' – 348

'நெடிலடிச் செய்யுளால்,
நிலையில் தொகுத்தும் குறுந்தொகை முன்பின்
நெடுந்தொகையாய்க்
கலியில் தொகுத்துக் கலித்தொகைபோலாம்
தொகைநிலையே.' – நவ. 12

'தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவன் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருள்இடம் காலம் தொழில்என நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய தாகும்.'

– தண்டி. தொ. வி. 253

'நெடிலடிச் செய்யுள் தொகுத்தது நெடுந்தொகையும்
நேர் குறிலடிச் செய்யுளால்
நிரவித் தொகுத்தது குறுந்தொகை; கலிப்பாவின்
நேர் தொகும் தொகையுமாய்
முடிவதே போல்வன தொகைச்செய்யுளாம்.' – பி. தீ. 18

'நெடிலடிப் பாவால் தொகுத்தது நெடுந்தொகை;
குறளடிப் பாவால் தொகுத்தது குறுந்தொகை;
கலியில் தொகுத்தது கலித்தொகை போல்வன;
தொகைநிலைச் செய்யுள் எனச்சொலப் படுமே.'

– மு. வீ. யா. ஒ. 120

## இணைமணிமாலை

818. வெண்பா அகவல் வெண்பாக் கலித்துறை
பண்பால் ஈரைம் பஃதுஅந் தாதி
இயலின் வகுப்பது இணைமணி மாலை

இஃது இணைமணிமாலை இலக்கணம் கூறுகின்றது.

இ - ள் : வெண்பாவும் அகவலும் வெண்பாவும் கலித்துறையுமாக இரண்டிரண்டாக இணைத்து வெண்பா அகவல் இணைமணிமாலை, வெண்பாக் கலித்துறை இணைமணிமாலை என நூறுநூறு அந்தாதித் தொடையாக வரப்படுவது இணைமணிமாலையாம் என்றவாறு. (58)

### ஒத்த நூற்பாக்கள்

*'இணைமணி மாலை தணிவுஇல்அந் தாதியாய்*
*மறையவர் பாவும் வணிகர்தம் பாவின்*
*துறையும் இயைந்துஈர் ஐம்பது வருமே.'* – பன். பாட். 252

*'வெண்பாக் கலித்துறை ஈரிரண்டு இயைந்த*
*ஒண்பா நூறுஅவை இணைமணி மாலை.'* – 253

*'இருபான் – ஏய்ந்தசீர்*
*வெண்பா கலித்துறையாம் மேவிய நான்கால்நூறு*
*ஒண்பா இணைமணியாம் ஓர்.'* – வெண். பாட். செ. 17

*'வருபா (வெண்பா, கலித்துறை) இரண்டிரண்டாய்த் தம்முள்*
*மாறின்றி நூறுவரின்*
*பொருமா விழியாய்! இணைமணிமாலை புகல்வர்களே.'*
– நவ. 36

*'அகவற்பாவால் பின்னர்க் கலித்துறையது இணைமணி*
*மாலைப்பேர்,'* – சிதம். பாட். 13

'இணைமணி மாலை இணை வெண்பாக் கலித்துறை
அகவல்மன் விருத்தம் தொடர்ந்துநூறு இயம்பலே.'
– தொ. வி. 282

'வெண்பாத் தொகைமுதல் பாக்கலித் துறைநன்கு
இணைய இயம்புவது இணைமணி மாலை.' – பி. ம. 12

'பாடுறும் முறைமையினால் வெண்
பாவும் அகவலும் வெள்ளையும் கலித்துறையுடன்
பகுத்தே இரண்டி ரண்டாய்
நண்பால் இணைத்து வெண்பா அகவல் மணிமாலை
நவிலும் எழில் வெண்பாவுடன்
நற்கலித்துறை இணைமணிமாலை என்னவே
நவில்நூறு நூறதாக
எண்பாவலர்க்கு இயைவுறும் சிறப்பாகவும்
எய்தும் அந்தாதியால் சொற்கு
இயைந்த தொடையோ நாலதாகவும் பண்புடன்
இயம்பல் இணைமணி மாலையே.' – பி. தீ. 10

'வெண்பா அகவல் வெண்பா கலித்துறை
இரண்டிரண் டாக இணைத்து வெண்பா
அகவல் இணைமணி மாலை வெண்பாக்
கலித்துறை இணைமணி மாலை ஆகும்.' – மு. வீ. யா. ஒ. 89

58

## இரட்டைமணி மாலை

819. இருபது வெண்பாக் கலித்துறை இயைபின்
வருவது இரட்டை மணிமாலை ஆகும்.

**இஃது இரட்டை மணிமாலை ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள்: முறையானே வெண்பாவும் கலித்துறையும் இருபது அந்தாதித்தொடையான் வருவது இரட்டை மணிமாலையாம் என்றவாறு. (59)**

## விளக்கம்

முதலில் வெண்பாவும் அடுத்துக் கலித்துறையும் அடுத்து மீண்டும் வெண்பாவும் இவ்வாறாக அந்தாதித் தொடையான் இருபது பாடப்படுவது இரட்டை மணிமாலையாம்.

## ஒத்த நூற்பாக்கள்

'வெண்பா முதலாக் கலித்துறை பின்வரும்
இந்த இருபது இரட்டைமணி மாலை.' – பன். பாட். 254

'ஆதி அந்தம் வெண்பாக் கலித்துறை
ஏதமின்றி வருவது இரட்டைமணி மாலை
அதுவே நாலைந்து இயலும் என்ப.' „ 255

'ஆய்ந்த இரட்டை மணி இருபான் – ஏய்ந்தசீர்
வெண்பா கலித்துறையாம்.' – வெண். பாட். செ. 17

'இரட்டைமணி,
தருபா இருபது வெண்பாக் கலித்துறைதாம் இவையாம்.'
– நவ. 36

'மன் இருபான் வெள்ளை கலித் துறைஇரட்டை மணிமாலை.'
– சிதம். பா. 31

'இரட்டைமணி மாலையாம் இணைந்தபப் பத்தாய்
வெண்பா கலித்துறை விரவிப் பாடலே.' – தொ. வி. 278

'கருதும் வெண்பாக் கலித்துறை விரவி
இருபது வழுத்துவது இரட்டைமணி மாலை.'
– பி. ம. 11

'வெண்பாக் கலித்துறையும் இருபதுஅந் தாதியாய்
மேவுதொடையாய் வருவதின்
மிக்க ஆசிரிய விருத்தம் ஒருபத்துநேர்
வெண்பாவும் ஒருபத்துடன்
பண்பாய் உரைப்பது இரட்டைமணி மாலையாம்.'
– பி. தீ. 10

*'இருபது அந்தா தித்துவெண் பாவும்*
*கட்டளைக் கலித்துறை யுங்கலந்து உரைத்தல்*
*இரட்டை மணிமாலை என்மனுர் புலவர்.'*

*– மு. வீ. யா. ஒ. 88*

*59*

## மும்மணி மாலை

820. வெண்பாக் கலித்துறை அகவல்அந் தாதிப்
பண்பால் முப்பது பகரின் மும்மணி
மாலை என்று வகுத்தனர் புலவர்.

**இது மும்மணிமாலை ஆமாறு கூறுகின்றது.**

**இ - ள் ; வெண்பாவும் கலித்துறையும் அகவலும் அந்தாதியாக முப்பது பாடின் அதனை மும்மணிமாலை என்று கூறுவர் புலவர் என்றவாறு. (60)**

### ஒத்த நூற்பாக்கள்

*'மிகுந்த வெள்ளை கலித்துறை அகவல்*
*விருத்தம் மும்மணி விளம்பும் அந்தாதி.' – பன். பாட். 256*

*'வெண்பாக் கலித்துறை அகவல் விருத்தம்*
*வண்பா மூன்றவை மும்மணி மாலை.'*
*வெள்ளை கலித்துறை அகவல் விருத்தம்*
*கொள்வ மும்மணி கோத்தஅந் தாதி.'*

*– பன். பாட். – பிற்சேர்க்கை*

*'மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா*
*முன்னியமுப் பால்மும் மணிமாலை.........*
*ஈட்டியஅந் தாதியாம் ஏய்ந்து.' – வெண். பாட். செ. 16*

*'மும்மணிமாலைசொல்லின், அந்நான்மறைப்பா,*
*கலித்துறை, ஆசிரியம்.' – நவ. 35*

'வெள்ளை, நற்கலியின் துறை அகவல் அந்தாதித்த
நடைமுப்பான் மும்மணி மாலைப்பேர்.'

– சிதம். பாட். 33

'மும்மணி மாலையாம் முறைமாறி வெள்ளை
கலித்துறை அகவல் கதிபெறும் செய்யுளே.'

– தொ. வி. 281

'வெண்பா கலித்துறை அகவற் பாமூன்று
அந்தா தித்து முப்பஃது இயம்பின்
மும்மணி மாலை.' – பி. ம. 20

'பகரும்வெண் பாக்கலித்துறை அகவல் முப்பதும்
பன்னுதொடை அத்தாதியாய்ப்
பாடல்மும் மணிமாலை.' – பி. தீ. 14

'ஆதிப் பாக்கலித் துறையும் அகவலும்
அந்தா தித்தா றைந்தியம் புவது
மும்மணி மாலையாம் மொழியுங் காலே.'

– மு. வீ. யா. ஒ. 106

60

## நான்மணி மாலை

821. வெண்பாக் கலித்துறை விருத்தம் அகவல்
பின்பேசும் அந்தா தியின்நாற் பதுபெறின்
நான்மணி மாலை ஆம்என நவில்வர்.

**இது நான்மணிமாலை ஆமாறு கூறுகின்றது.**

**இ - ள்: வெண்பாவும் கலித்துறையும் அகவலும் பின்னும் முன்னும் ஒன்றிய விருத்தமும் மேற்கூறிய அந்தாதியான் நாற்பது வரின் நான்மணிமாலையாம் என்று கூறுவர் புலவர் என்றவாறு.** (61)

## ஒத்த நூற்பாக்கள்

'வெண்பாக் கலித்துறை அகவல் விருத்தம்
நண்பாய் வருவது நான்மணி மாலை.' பன். பாட். 257

'அகவலும் அகவல் விருத்தமும் நாற்பது,
அகவலை முன்வைத்து அறைவது கடனே.' ,, 258

'வெள்ளை கலித்துறை அகவல் விருத்தம்
கொள்வது நான்மணி கோத்தஅந் தாதி.' ,, 259

'வெண்பா முன்வரக் கலித்துறை அகவல்
விருத்தம் நண்பாய் வருவது நான்மணி
மாலை என்று வகுத்துரைத் தனரே.'

– பன். பாட். பிற்சேர்க்கை

'மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
முன்னியமுப் பால்மும் மணிமாலை – மன்விருத்தம்
நாட்டிய நாற்பது நான்மணி மாலையாம்
ஈட்டிய அந் தாதியாம் ஏய்ந்து.' – வெண். பாட். 16

'அந்நான் மறைப்பாக் கலித்துறை ஆசிரியம் விருத்தம்
இந்நால்வகைச் செய்யுள்நாற்பது நான்மணிமாலை என்னே.'

– நவ. 35

'வெள்ளை, நற்கலியின் துறைஅகவல் அந்தாதித்த
நடைமுப்பால் மும்மணி மாலைப்பேர் மேலோர்;
ஒற்கமில்ஆ சிரியவிருத் தத்தைக் கூட்டில்
ஒருநாற்பான் நான்மணிமா லைக்கென் றோதே.'

– சித. பாட். 33

'நான்மணி மாலையே நாற்பதந் தாதியாய்த்
தான்மணிக்கு ஒத்தன தந்தன்மன விருத்தமே.'

– தொ. வி. 272

'வெண்பா கலித்துறை அகவற் பாமூன்று
அத்தா தித்து முப்பதின் மேல்வர
ஆசிரியம் பத்தும் அந்தா தித்து
நவில்வது ஆகும் நான்மணி மாலையே.' – பி. ம. 20

'நிகரில் வெண்பா கலித்துறை விருத்தம்அகவல்
நேரும் அந்தாதித்தொடை
நிலைபெறவே எண்ணைந்து செய்யுளாய்ச் சீருற
நிகழ்த்தல் நான்மணி மாலையாம்.' – பி. தீ. 11

'அந்தா தித்து வெண்பாக் கலித்துறை
விருத்தமும் அகவலும் விரவி நாற்பது
நவில்வது நான்மணி மாலை ஆகும்.' – மு. வீ. யா. ஒ. 91

61

## இருபா இருபஃது

822. ஒருபது வெண்பா ஒருபஃது அகவல்
இருபது வரின்இரு பாஇரு பஃதே.

இஃது இருபா இருபஃது ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : பத்து வெண்பாவும் பத்து அகவலும் அந்தாதித் தொடையாக இருபது இணைந்துவரின் இருபா இருபஃது என்றவாறு. (62)

### ஒத்த நூற்பாக்கள்

'வெள்ளை அகவல் பின்னர் முறைவைத்து
எள்ளாது இயல்வது இருபா இருபஃது.'
– பன். பாட். 339

'ஒருபா ஒருபதும் இருபா இருபதும்
கருதிய வெள்ளையும் அகவலும் காட்டினர்.' ,, 340

'ஏய்ந்த இருபா இருபதுவெண் பாஅகவல்.'
– வெண். பாட். செ. 17

'இருபா இருபஃது வெண்பா அகவல்.' – நவ. 36

'வெள்ளை அகவற் பாவால் பன்னும் இருபா இருபஃது.'
– சித. பாட். 31

'இருபா இருபதாம் இணைந்தநா லைந்தாய்
வெள்ளை அகவல் விரவிப் பாடலே.' – தொ. வி. 265

'வெள்ளைமுன் அகவல்பின் விரவ இருபான்
இயம்புவது இருபா இருபஃது.' – பி. ம. 15

'ஒலி அகவல் பத்து வெண்பாப்பத்தும் அந்தாதி
உற்றதொடை இருபான் நினைந்து
ஓதும் இருபா இருபஃதுஆகும்.' – பி. தீ. 21

'அகவல் வெண்பாவும் அந்தாதித் தொடையால்
இருபது இணைந்து வரஎடுத்து உரைப்பது
இருபா இருபஃது என்மனர் புலவர்.'
– மு. வீ. யா. ஒ. 128

62

## ஒருபா ஒருபஃது

823. அகவல் வெண்பாக் கலித்துறை அதுகொண்டு
ஒருபா ஒருபஃது உறின்அப் பெயராம்.

இஃது ஒருபா ஒருபஃது ஆமாறு கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. (63)

### ஒத்த நூற்பாக்கள்

'வெள்ளை ஆதல் அகவல் ஆதல்
தள்ளா ஒருபது ஒருபா ஒருபது.' – பன். பாட். 338

'ஓர்ந்தகவல் வெண்பா கலித்துறைஎன் றொன்றினல்
ஆய்ந்தஒரு பாஒருப தாம்.' – வெண். பாட். செ. 18

'அகவல் முதற்பாக் கலித்துறையான் ஒன்றுஅந்தாதிவரத்
தகும் ஒருபா ஒருபஃது ஆகும்.' – நவ. 15

'எப்பாட்டேனும் தீதில்ஒருபான் ஒருபா ஒருபஃதென்ப.'
– சித. பாட். 34

'ஒருபா ஒருபதாம் உரைப்பரும் வெண்பா
அகவல் கலித்துறை அவற்றுள் ஒன்றால்
பத்தெனப் பாடிப் பகுத்த செய்யுளே.' – தொ. வி. 264

'ஓர்பாவில் அந்தாதித்து
ஈரைந்தாச் சொல்வது ஒருபா ஒருபதாம்.' – பி. ம. 23

'கலித்துறையி னாலும் நேர்வெண் பாவினால்அ
கவலாயினும் ஒவ்வொன்றினைக்

கணித்துஒன்று பப்பத்தின் அந்தாதி யாகவே
கழறும்ஒருபா ஒருபஃது.' – பி. தீ. 21

'அகவல் வெண்பாக் கலித்துறை ஆகிய
இவற்றுள் ஒன்றினால் அந்தாதித் தொடையாய்
ஒருபஃது உரைப்பது ஒருபா ஒருபது.'
– மு. வீ. யா. ஒ. 127
63

## ஒலி அந்தாதி

824. ஈண்டிய வண்ணம்ஈ ரெண்கலை முப்பான்
ஆண்டது ஒலிஅந் தாதி ஆகும்.

இஃது ஒலிஅந்தாதி ஆமாறு கூறுகின்றது.

இ - ள் : பலசந்தம் கூடிய பதினாறு கலைவகுப்பானாய
முப்பது எண்ணான் ஆளப்பட்டது ஒலிஅந்தாதியாம்
என்றவாறு. (64)

'தத்தம் இனத்தில் ஒப்புமுறை பிறழாது
நாலடி ஈரெண் கலைஒரு முப்பது
கோலியது ஒலிஅந் தாதி ஆகும்.' – பன். பாட். 267

'ஈரொலி ஆகிய எண்ணான்கு கலையெனச்
சீர்இயற் புலவர் செப்பினர் கொளலே.' ,, 268

'வண்ணகம் என்பது ஒலிஎனப் படுமே.' ,, 269

'ஈண்டிய முப்பதாய் ஈரெண் கலைவண்ணம்
மூண்டதொலி அந்தாதி முப்பதாம்.'
– வெண். பாட். செ. 13

'ஈட்டியஈரெண் கலைவண்ணச் செய்யுள் இயைந்து முப்பான்
கூட்டிய நீடுஒலி அந்தாதி.' – நவ. 18

பதினாறுகலை ஓரடியாக வைத்து இங்ஙன் நாலடிக்கு அறுபத்துநாலு கலை வகுத்துப் பலசந்தமாக வண்ணமும் கலைவைப்புத் தவறாமல் அந்தாதித்து முப்பது செய்யுள் பாடுவது. சிறுபான்மை எட்டுக்கலையானும் வரப்பெறும். அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை ஆகிய இம்மூன்றையும் பப்பத்தாக அந்தாதித்துப் பாடுவதுமாம். – தொ. வி. 283. உரை.

'வகுப்பின் ஈரெண் வண்ணச் செய்யுளுள்
ஓங்கிய முப்பான் ஒலிஅந் தாதி.' – பி. ம. 14

'முறையில ஈரெண் கலையையும்
முடியஓர் அடியதாய் இங்ஙனம் நாலடியின்
முடிதல் எண்ணெண் கலையதாம்;
அடிகள்பல சந்தமாய் வண்ணமும் கலைவைப்பும்
அந்தாதி தவறாமலே
அலகு முப்பதுசெய்யுள் பாடுவதும் சிறுபான்மை
ஆகும்; எட்டுக்கலையெனும்
தொடர்புறும்;அன்றி வெண்பா அகவலும் கலித்
துறையான இம்மூன்றையும்
சோர்வில்பப் பத்தாக அந்தாதி யாகவும்
சொல்ஒலியல் அந்தாதியே.' – பி. தீ. 18

'பதினறு கலைஓர் அடியாக வைத்து
பலசந்த மாக வணம்கலை வைப்பும்
வழுவாது அந்தாதித்து முப்பது செய்யுள்
பாடுவது; எட்டுக் கலையானும் வரப்பெறும்;
அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை
பப்பத் தாக அந்தா தித்துப்
பாடு வதுமாம் ஒலியலந் தாதி.' – மு. வீ. யா. ஒ. 121

64

## இன்னிசை

825. இறைவன் பெயர்ஊ ரினைஇன் னிசையான்
முறையின் தொண்ணூறு எழுபான் ஐம்பான்
அறையின் அப்பெயர் ஆகும் என்ப.

**இது பெயர் இன்னிசையும் ஊர் இன்னிசையும் ஆமாறு கூறுகின்றது.**

**இ - ள் : பாட்டுடைத்தலைவன் பெயரினையும் ஊரினையும்சார இன்னிசை வெண்பாவால் தொண்ணூறு எழுபது ஐம்பது பாடின் பெயர் இன்னிசை வெண்பா என்றும் ஊர் இன்னிசை வெண்பா என்றும் வழங்கப்படும் என்றவாறு. (65)**

ஒத்த நூற்பாக்கள்

'தொண்ணூ றேனும் எழுப தேனும்
இன்னிசைத் தொகுப்பின் இன்னிசைத் தொகையே.'

– பன். பாட். 288

'எண்ணிய வகையான் இன்னிசை வெண்பாத்
தொண்ணூறு எழுபது தொடுப்பதுஅத் தொகையே.'

– பன். பாட். 289

'முதல்வன்ஊ ரின்பேரான் மொழிவன வெண்பா
அதனைத்தொண் ணூறெழுபா னைம்பான் – மதர்விழியாய்!
இன்னிசைவெண் பாவிற்கு மொக்கும் இயற்பெயர்
அன்னவற்றால் கட்டுரைத்தார் ஆய்ந்து.' – வெண். பாட். 14

'ஊர்பெயர்சார நேர்இன்னிசை வெண்பாத்
தொண்ணூறு ஏழ்ஐம்பான்.' – நவ. 10

'நிலைப்பாட்டு டைத்தலைவன் நாமமது சாரஇன்
னிசைவெள்ளை தொண்ணூ றேனும்
சேர்ந்தஎழு பதேனும் அல்லது ஐம்பதேனும்
சிறக்க உரைபெயர் இன்னிசையே;
செம்பாட்டு டைத்தலைவன் உரைமுன் செய்யுள்தொகை
செப்பல் ஊர்இன்னிசை யதே.' – பி. தீ. 22

'பாட்டுடைத் தலைமகன் பெயரைச் சார
இன்னிசை வெண்பா எழுபான் இருபஃது
ஏனும் எழுபா னேனும் ஐம்பஃ
தேனும் உரைப்பது பெயர்இன் னிசையே.'
– மு. வீ. யா. ஒ. 131; தொ. வி. 283. உரை.

'பாட்டுடைத் தலைமகன் ஊரைச் சார
இன்னிசை வெண்பா எழுபான் இருபஃ
தேனும் எழுபா னேனும் ஐம்பஃ
தேனும் இயல்புவது ஊர்இன் னிசையே.'
– மு. வீ. யா. ஒ. 132; தொ. வி. 283. உரை.

65

## வருக்கமாலை

826. வருக்கத் தினைச்சொலல் வருக்க மாலை.

இது வருக்கமாலை ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: மொழிக்கு முதலாம் வருக்க எழுத்தினுக்கு ஒவ்வொரு கவி கூறல் வருக்கமாலையாம் என்றவாறு.

கூறுதல் அவ்வெழுத்தை முதலாகக்கொண்டு கூறுதல் என்றவாறு. உயிரானும் க ச த ந ப ம வ என்னும் உயிரோடு கூடிய மெய் ஏழானுமாக எட்டு ஆசிரியப்பா வந்தால் அவை வருக்கமாலை எனவும் கூறுவாரும் உளர். (66)

## ஒத்த நூற்பாக்கள்

'மொழிக்குமுத லாகிய எழுத்துக் கெல்லாம்
வருக்கம் உரைப்பது வருக்க மாலை.' – பன். பாட். 283

'பன்அகவல் எட்டாய் வருக்கஎழுத் தான்வருமேல்
முன் வருக்க மாலை மொழி.' – வெண். பாட். செ. 36

மொழி முதலாம்
வருக்க எழுத்திற்கு ஓர்தூக்கு வருக்கமாலைப் பெயரே.'
– நவ. 5

'வர்க்கஉயிர் கசதநப மவஎட்டின் சூழ்
மருவு அகவல் வரின் வருக்கமாலை.' – சித. பாட். 33

'வருக்க மாலையாம் வருக்க எழுத்தென
உயிரொடு கசதந பமவ எனஎண்
வரிமுதல் வந்து வரும்எண் அகவலே.' தொ. வி. 267

'மொழிமுதல் உயிர்மெய் வருக்கத்தொகை போற்றி
அகவலால் புகல்வது வருக்க மாலை.' – பி. ம. 19

'செப்பும் மொழிக்கு முதலாம்
பெலம்மிகும் வருக்கத்து எழுத்திற்கு ஒவ்வோர்செய்யுள்
பேசுவது வர்க்கமாலை.' – பி. தீ. 12

'முதலாம் வருக்க எழுத்தினுக்கு ஒவ்வொரு
செய்யுள் அணிபெறச் செப்புவது அதுதான்
வருக்க மாலையாம் வழுத்துங் காலே.' – மு. வீ. யா. ஒ. 98

66

## கைக்கிளை

827. ஒருதலைக் காமம் ஒரைந்து விருத்தம்
கருத உரைத்தல் கைக்கிளை ஆகும்.

**இது கைக்கிளை ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள்: ஒருதலைக்காமத்தினை ஐந்து விருத்தத்தால் பெறக்கூறுதல் கைக்கிளைச் செய்யுளாம் என்றவாறு (67)**

### ஒத்த நூற்பாக்கள்

*'இரங்க வருவது மயங்கிய ஒருதலை*
*இயைந்த நெறியது கைக்கிளை மாலை.'* – பன். பாட். 295

*'ஒருதலைக் காமம் உரைப்பவை யைந்தாய்*
*வருவிருத்தம் கைக்கிளையாம் மன்.'* – வெண். பாட். செ. 15

*'நண்பால் ஒருதலைக்காமம் நவின்ற விருத்தம் ஐந்தால்*
*பெண்பால் வரின்அவை கைக்கிளையாம் என்றுபேசுவரே.'*
– நவ. 41

*'வருங்காமம் ஒருதலை கைக்கிளைய தாம்.'* – சிதம். பாட். 36

*'காமம் ஒருதலையது கைக்கிளை மாலை.'* – பி. ம. 30

*'ஐவிருத்தம் வெள்ளைப் பாவினில் கைக்கிளைக்கு*
*இறை ஒருதலைக் காமமே.'* – பி. தீ. 20

*'ஐந்து விருத்தத் தாலே ஒருதலைக்*
*காமத் தைக்கூ றுவது கைக்கிளை.'*

*'அன்றியும் வெண்பா ஆறைந் திரண்டு*
*பாடுவது அதன்பால் படும்என மொழிப.'*
– மு. வீ. யா. ஒ. 148, 149; தொ. வி. 283 உரை.

67

## மங்கல வள்ளை

828. ஒன்பது வெண்பா வகுப்பால் உயர்குல
மங்கையைப் பாடுதல் மங்கல வள்ளை.

**இது மங்கலவள்ளை ஆமாறு கூறுகின்றது.**

**இ – ள் : உயர்குலத்து உதித்த மடவரலை வெண்பா ஒன்பதனுன் வகுப்புறப் பாடுதல் மங்கல வள்ளையாம் என்றவாறு.** (68)

### ஒத்த நூற்பாக்கள்

*'சந்தமும் வெள்ளையும் தருவன கற்புடை*
*மங்கல வெள்ளை வருவன ஒன்பான்.'* – பன். பாட். 302

*'அதுவே,*
*வெண்கலி யானும் வருதற்கும் உரித்தே.'* ,, 303

*'சந்தமும் வெள்ளையும் தனித்தனி புணர்த்தலும்*
*அந்தமில் புலவர் ஆம்என மொழிப.'* ,, 304

*'மங்கல வள்ளை வகுப்பொடு வெண்பாவால்*
*இங்காம் ஒன்பானென் றிசை.'* – வெண். பாட். செ. 32

*'மாசில்குல மகளுக்கு வகுப்பு வெண்பா*
*வருபொருளொன் பான்ஒன்பா னுகப்பாடின்*
*தேசுயர்மங் கலவள்ளை.'* – சிதம். பாட். 36

*'மாசில் குலமகளை வகுப்புவெண் பாவினுல்*
*ஒருபொருள் உரைத்தலாய் ஒன்பது ஒன்பது*
*ஆகப் பாடின் மங்கல வள்ளை.'* – பி. ம. 27

*'உயர்குலப் பெண்ணினை*
*ஒன்பது வகுப்பின் வெண்பா ஒன்பது*
*செய்யுள் செய்வது மங்கல வள்ளை.'* – பி. தீ. 26

*'மேற்குலத் திற்பிறந்த மின்னுளை வெண்பா*
*ஒன்பதா லும்வகுப்பு ஒன்பதி ஞலும்*
*வழுத்துவது மங்கல வள்ளை ஆகும்.'– மு. வீ. யா. ஒ. 150*
*தொ. வி. 283 உரை.*
*68*

## வேறுவகை இரட்டை மணிமாலை

829. வெண்பா விருத்தம் வியப்புற இருபஃது
எண்பட உரைப்பது இரட்டைமணி மாலை.

**இது வேருெரு வகையான் இரட்டைமணி மாலை ஆமாறு கூறுகின்றது.**

இ - ள்: வெண்பாப் பத்தும் விருத்தம் பத்தும் அந்தாதித் தொடையான் பாடுதலும் இரட்டைமணி மாலையாம் என்றவாறு.

'உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. மாலை என்பதனுன் அந்தாதி என்பது பெற்ரும். (69)

### ஒத்த நூற்பா

*'பெற்றசீர் மன்விருத்தம் வெண்பாப் பெயர்ந்திருபான்*
*மற்றை இரட்டை மணிமாலையாம்.'– வெண். பாட். செ. 36*
*69*

## நேரிசை

830. இன்னிசை போல இறைவன் பெயர்ஊர்
தன்னின் இயல்வது தான்நே ரிசையே.

**இது நேரிசை ஆமாறு மாட்டேற்ருனே அறிவிக்கின்றது.**

இ - ள் : இன்னிசை வெண்பாவே போலப் பாட்டுடைத் தலைவன் பெயர் ஊரைச் சார்ந்து வரத் தொண்ணூறும் எழுபதும் ஐம்பதும் பாடின் அவற்றைப் பெயர் நேரிசை என்றும் ஊர் நேரிசை என்றும் வழங்கப் படும் என்றவாறு. (70)

ஒத்த நூற்பாக்கள்

*'முதல்வன் ஊ ரின்பேரான் மொழிவன வெண்பா*
*அதனைத்தொண் ணூறுஎழுபான் ஐம்பான்.'*

– வெண். பாட். செ. *14*

*'ஊர்பெயர்சார நேரிசைவெண்பாத் தொண்ணூறு*
*ஏழ்ஐம்பானும்'* – நவ. *10*

*'பாட்டுடைத் தலைவனொடு பெயர்சார நேரிசைவெண்*
*பாவினால் தொண்ணூறும்*
*பத்தேழேனும் ஐம்பதேனும் சிறப்புடன்*
*பாடுவது பெயர் நேரிசை,*
*மீட்டும்அத் தலைவன் ஊர்சாரமுன் தொகைதொடை*
*விளம்பல் ஊர் நேரிசையதாம்.'* – பி. தீ. *22*

*'பாட்டுடைத் தலைவன் பெயரைச் சார*
*நேரிசை வெண்பாத் தொண்ணூ றேனும்*
*எழுப தேனும் ஐம்ப தேனும்*
*அறைவது பெயர்நே ரிசையா கும்மே.'*

– மு. வீ. யா. ஒ. *133*

*'ஊரைச் சார உரைப்பதுஊர் நேரிசை.'* ,, *134*

*'வெண்பா வால்சிறப் பித்தூர் ஒருபான்*
*பாவிரித்து உரைப்பதுஊர் வெண்பா ஆகும்'* ,, *135*

*70*

## மெய்க்கீர்த்தி

831. சொற்சீர் அடியால் தொழிற்படு புகழை
வேந்தர்பால் கூறின் மெய்கீர்த்தி ஆகும்.

இது மெய்க்கீர்த்தி ஆமாறு கூறுகின்றது.

இ - ள் : சொற்சீரடியாலே காரியப் புகழை மன்னரிடத்துக் கூறுதல் மெய்க்கீர்த்தி என்னும் பெயரினைப் பெறும் என்றவாறு. 71

### ஒத்த நூற்பாக்கள்

*'சீர்நான் காகி இரண்டடி தொடையாய்*
*வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்*
*அந்தத்து அவன்வர லாறு சொல்லியும்*
*அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்*
*இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்*
*திறப்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி.'* – பன். பாட். 313

*'நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தியின் அந்தம்*
*முறையாய் முடியும் எனஉரைத் தனரே.'* ,, 314

*'தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீர் அடியால்*
*எழில்அரசர் செய்தி இசைப்பர்.'* – வெண். பாட். செ. 34

*'சிறந்த மெய்க்கீர்த்தி அரசர்செயல் சொற்றவாம்*
*அச்செய்யுள், அறைந்திடு சொற்சீரடியாம்.'* – நவ. 51

*'வேந்தர்க்கு உண்மை திகழ்சீர்த்தி உரைப்பது*
*மெய்க்கீர்த்தி.'* சிதம். பாட். 36

*'சொற்சீர் அடியெனும் கட்டுரைத் தொடர்பால்*
*குலமுறை ஆற்றிய கீர்த்தியைக் கூறல்*
*மெய்க்கீர்த்தி மாலையாம் விளம்புங் காலே.'*

– மு. வீ. யா. ஒ. 99;
தொ. வி. 283 உரை.

## காப்புமாலை

832. காப்புமூன்று ஐந்துஏழ் காப்பு மாலையாம்.

இது காப்புமாலை ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: காத்தலாக மூன்று கவியானும் ஐந்து கவியானும் ஏழு கவியானும் பாடுவது காப்புமாலையாம் என்றவாறு. (72)

ஒத்த நூற்பா

'மூன்றுஐந்து ஏழ்பாத் தெய்வம் காக்கக் காப்புமாலை.'
– நவ. 6

'அரிய தெய்வம் காத்தலாக மூன்றுஐந்து ஏழின்
அறை செய்யுள் காப்பு மாலை.' – பி. தீ. 13

'கடவுள் காத்த லாக ஒருமூன்று
ஐந்துஏ ழானும் அறைவது காப்பு
மாலை எனப்பெயர் வைக்கப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 100;
தொ. வி. 283 உரை.

72

## வேனில் மாலை

833. வேனிலைப் பாடுதல் வேனில் மாலை

இது வேனில்மாலை ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: இளவேனிலையும் முதிர்வேனிலையும் சிறப்பித்துப் பாடுதல் வேனில் மாலையாம் என்றவாறு.
(73)

ஒத்த நூற்பாக்கள்

'வேனிற் புகலல் ஆன்ற வேனில் மாலை,' – நவ. 6

'அருவேனில் முதுவேனிலைச் சிறப்பித்து ஓதல்
ஆகுமே வேனில் மாலை.' – பி. தீ. 13

'வேனி லொடுமுதிர் வேனிலும் புனைந்து
விளம்புதல் வேனில் மாலை ஆகும்.' – மு. வீ. யா. ஒ. 101;
தொ. வி. 283 உரை

73

## பல்சந்த மாலை

834. பத்து முதலாப் பப்பத்து ஈறு
வைத்த வண்ண வகைபத் தாகப்
பல்சந்த மாலை பகரப் படுமே.

இது பல்சந்தமாலை ஆமாறு கூறுகின்றது.

இ - ள் : பத்துக்கவி முதலாக நூறுகவி ஈருக வைக்கப்பட்ட சந்தம் பத்துப்பத்தாகப் பல்சந்தமாலை கூறப்படும் என்றவாறு. (74)

ஒத்த நூற்பாக்கள்

'சொன்ன கலம்பக உறுப்பவை நீக்கி
மன்னிய பத்து முதல்நூறு அளவா
வந்த மரபின் வரும்செயுள் முதலா
வந்தது பல்சந்த மாலை ஆகும்.' – பன். பாட். 251

'உறுப்பின் நீக்கிய பலவகைச் சந்தம்
இறுத்த வகையது இயற்பல சந்தம்.' ,, பிற்சேர்க்கை

'பத்தாதி நூறந்தம் பல்சந்த மாலையாம்.'
– வெண். பாட். செ.9, நவ. 37

'அகவல் விருத் தம்வகுப்பா தல்பத் தாதி
அந்தம்நூ றுகும்பல் சந்த மாலை.' – சித. பாட். 35

'பலசந்த மாலை பப்பத்து ஒருசந்தம்
சிலஅந் தாதியாய்ச் செப்புமன விருத்தமே.' – தொ. வி. 275

'அகவல் விருத்தம் வகுப்பிறைல் ஒன்றில்
பத்து முதலா நூறு வரைபல்
சந்தம் மேவர அந்தா தித்துச்
சாற்றுவது பல்சந்த மாலை என்ப.' – பி. ம. 24

மகிழ்வுறும் செய்யுள் பப்பத் தாக ஒவ்வொரு
வகைக்கும் ஓர் சந்தமாகி
வரநூறு செய்யுளாய்ச் சொல்வதே பல்சந்த
மாலையாய்ச் சொல் வார்களே.' – பி. தீ. 11

'பப்பத் தாகப் பலசந் தத்தொடு
ஈரைம் பான்பாட் டியல்வது அதுபல்
சந்த மாலையாம் சாற்றுங் காலே.' – மு. வீ. யா. ஒ. 93

74

## அங்க மாலை

835. மிக்க உறுப்பவை வெண்பா விருத்தம்
தொக்கவொடு முறையான் தொடர்வுறப் பாடுதல்
அங்க மாலை ஆமெனப் பகர்வர்.

இஃது அங்கமாலை ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: ஆண் மகனுக்கும் பெண் மகளுக்கும் எடுத்துக்கூறும் மிக்க அவயவங்களைத் தொக்க அவயவங்களோடும் வெண்பாவால் வெளி விருத்தத்தால் கூடிய முறையால் அந்தாதியுறப் பாடுதல் அங்கமாலை எனக் கூறுவர் என்றவாறு.

முறை பாதாதிகேசம் கேசாதிபாதம் பிறழாமல் கூறல்.

தொக்க உறுப்பு உள்ளங்கால் உகிர் விரல், (75)

## ஒத்த நூற்பாக்கள்

'நிறுத்த வெளிவிருத்தம் நீடுறுப்பில் வந்தால்
குறித்(து) அங்க மாலையாக் கொள்க.' - வெண்.பாட்.செ. 29

'வடுவிலா வெண்பா விருத்தம்பல அங்கமாலை என்னே.'
- நவ. 42

'பாதாதிகேசம் கேசாதிபாதம் அந்த
வகையுரைக்கின் வெளிவிருத்தத்து அங்க மாலை.'
- சித. பாட். 35

'அங்க மாலையே அங்க வகுப்பெலாம்
பாதாதி கேசமும் கேசாதி பாதமும்
கலிவெண்பா ஆதல் வெளிவிருத்த மாதல்
வலிதெனப் புகழ்ந்து வகுத்த செய்யுளே.' - தொ. வி. 262

'அங்க வகையை
விளம்பிய ஒழுங்கின் வெளிவிருத் தத்தால்
வழுத்துவது அங்க மாலை ஆமே.' - பி. ம. 26

'மேவும் ஆண்மகனுடன் பெண்மகட்கு உரியதாய்
வெண் பாவினு லாயினும்
வெளி விருத்தத்தினு லாயினும் வழுவற
விளம்பு பாதாதி கேசம்
ஆவதாய்க் கேசாதி பாதம்வரை தொடர்புற
அரற்றுவது அங்க மாலை.' - பி. தீ. 9

'ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
மிகஎடுத்து உரைக்கும் மெய்அவ யவத்தை
வெண்பா ஆயினும் வெளிவிருத் தத்தின்
ஆயி னுங்கே சாதி பாதம்
பாதாதி கேச மாகப் பாடுவது
அங்க மாலையாம் ஆயுங் காலே.' - மு. வீ. யா. ஒ. 85

## வசந்த மாலை

836. வசந்த வருணனை வசந்த மாலை.

இது வசந்தமாலை ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: தென்றலை வருணித்து அந்தாதியாகப் பாடுதல் வசந்த மாலையாம் என்றவாறு. (76)

'வசந்தனை வருணித்தல் வசந்த மாலை.' – நவ. 4

'விரவு இளந்தென்றலை வருணித்து உரைப்பதே
மேலாம் வசந்தமாலை.' – பி. தீ. 13

'தென்றலைப் புகழ்ந்து செப்புதல் வசந்த
மாலை எனப்பெயர் வைக்கப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 102

– தொ. வி. 283 உரை
76

## நவமணி மாலை

837. வெண்பா முதலா வேறோர் ஒன்பது
நண்பாக் கூறல் நவமணி மாலை.

இது நவமணி மாலை ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: வெண்பா முதலாக வேறுபட்ட பாவும் பாவினமும் ஒன்பது உற அந்தாதியாகப் பாடுதல் நவமணிமாலையாம் என்றவாறு. (77)

'பாவே இனமே என்றிவை இரண்டும்
மேவிய வகையது நவமணி மாலை.' – பன். பாட். 294

'வாய்ந்த விருத்தங்கள் ஒன்பான் மணிமாலை.'
– வெண். பாட். செ. 24

'ஒன்பதவை ......... நவமணி மாலை,' – நவ. 50

'குலஅகவல் விருத்தமுறும் ஒன்பானும்
ஒத்துநவ மணிமாலை.' – சித. பாட். 34

'மன்னர் விருத் தத்துக்
கவிதோறும் தெய்வம் காப்பஎன்று உரைப்பது
நவமணி மாலை.' – தொ. வி. 274

'விருத்தம் ஒன்று அந்தாதித்து ஒன்பது வழங்கல்
நவமணி மாலை' – பி. ம. 23

'வரும் வெண்பா முதல் வேறுபடு பாவும்அப்
பாவினமதாய் ஒன்பதாய்ப்
பண்புபொருள் உறுசெய்யுள் அந்தாதி யாகவே
பாடல் நவமணி மாலையாம்.' – பி. தீ. 11

'அந்தா தித்து வெண்பா ஆதிய
பாவும் பாவினமு மாக ஒன்பது
செய்யுள் அணிபெறச் செப்புவது அதுதான்
நவமணி மாலையாம் நாடுங் காலே.' – மு. வீ. யா. ஒ. 90

77

## பரணி

838. ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி.

இது பரணி கொள்வோன் பெருமை கூறுகின்றது.

இ-ள்: போரிடை ஆயிரம் களிற்றியானை படவென்ற வீரத்தன்மை உடையோனுக்குப் பாடப் படுவது பரணி என்றவாறு. (78)

'யானை சாய்த்த அடுகளத்து அல்லது
யாவரும் பெறாஅர் பரணிப் பாட்டே.' – பன். பாட். 244

'ஏழ்தலைப் பெய்த நூறுடை இபமே
அடுகளத்து அப்பால் பாடுதல் கடனே.' ,, 245

'மூண்ட அமர்க்களத்து மூரிக் களிறட்ட
ஆண்டகை யைப்பரணி ஆய்ந்துரைக்க – ஈண்டிய
நேரடியோ டாதியா நீண்டகலித் தாழிசை
ஈரடிகொண் டாதியுட னீறு.' – வெண். பாட். செ. 38

'புறநடைசேரக் கவைப்பொருள் மேலிங்கிருவர் மன்னர்
திறனுளும் யானைப் படைசெற்று வென்ற ஒருவன்செய்கை
நெறிபடு நேரடி யேமுதல் நீண்டன ஈரடியாய்ப்
பெறுவன தாழிசை யால்பர ணிப்பெயர் பேசுவரே.'

– நவ. 54

'படைபுக்கா யிரம்வேழம் எதிரார் போரில்
படப்போர்செய் தானுக்குப் பரணிபாடே.'

– சித. பாட். 41

'போர்முகத் தாயிரம் புகர்முகக் களிற்றைக்
கொன்றவ னுக்குப் பாடுவது பரணி.' – மு. வீ. யா. ஒ. 79

78

## பரணியின் இலக்கணம்

839. கடவுள் வாழ்த்துக் கடைதிறப்பு உரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டம்
கடிகணம் உரைத்தல் காளிக்கு அதுசொலல்
அடுபேய்க்கு அவள்சொலல் அதனுல் தலைவன்
வண்புகழ் உரைத்தல் எண்புறத் திணையுற
வீட்டல் அடுகளம் வேட்டல் இவைமேல்
அளவடி முதலா அடிஇரண் டாக
உளமகிழ் பரணி உரைக்கப் படுமே.

**இது பரணி இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள் :** கடவுள் வாழ்த்துமுதல் களம்விரும்பல் **ஈருகச் சொல்லப்பட்ட பொருள்மேல் அளவடி முதலாக**

எனைத்துச் சீரானும் இரண்டடியாகக் கேட்போர் உள்ளம் மகிழ்ச்சி கூரப் பெரும் புலவரால் உரைக்கப்படும் பரணி என்றவாறு,

'புறத்திணையுற ஈட்டல்' என்றதனால் பாட்டுடைத் தலைமகனைச் சிறப்பித்தலும் அவன் எடுத்துச் செலவு முறைமையும் மேல் புறத்திணையிற் கூறிய முறையே செருமுடித்தலும் கூழட்டலும் முதலாயின எல்லாம் சொல்லப்படும். (79)

ஒத்த நூற்பாக்கள்

'மயக்கறு கொச்சகத்து ஈரடி இயன்று
நயப்புறு தாழிசை உறுப்பில் பொதிந்து
வஞ்சி மலைந்த உழிஞை முற்றித்
தும்பையில் சென்ற தொடுகழல் மன்னனை
வெம்புசின மாற்றான் தானைவெங் களத்தில்
குருதிப் பேராறு பெருகும்செங் களத்து
ஒருதனி ஏத்தும் பரணியது பண்பே.' – பன். பாட். 243

'தேவர் வாழ்த்தே கடைநிலை பாலை
மேவி அமரும் காளி கோயில்
கன்னியை ஏத்தல் அலகை விநோதம்
கணநிலை நிமித்தம் பசியே ஓகை
பெருந்தேவி பீடம் அழகுற இருக்க
அமர்நிலை நிமித்தம் அவள்பதம் பழிச்சா
மன்னவன் வாகை மலையும் அளவும்
மரபுஇனிது உரைத்தல் மறக்களம் காண்டல்
செருமிகு களத்திடைப் படுகூழ் வார்த்தல்
பரவுதல் இன்ன வருவன பிறவும்
தொடர்நிலை யாகச் சொல்லுதல் கடனே.'

– பன். பாட். 244

'ஈறில் வணக்கம் கடைநிலம்பேய் என்பனவும்
வீறுசால் ஐயைக்கு மெய்ப்பேய்கள் – கூறித்
திறப்படச் சொல்லினவும் செப்பின் பிறவும்
புறப்பொருள்நூல் கொண்டு புகல்.'

– வெண். பாட். செ. 39

'மற்றுஅது வானவர் வாழ்த்து, கடைவாழ்த்து, பாலைநிலப்
பெற்றி, பெருங்கானகம், இறையோன் பெருந்தேவி மகிழ்ந்து
உற்றுறை கோயில், அவளை உரைத்தல், அலகைக்குழாம்
சுற்றிய வண்ணம் அவைதம் பசிப்பிணி சொல்லுதலே.'

– நவ. 55

'ஆங்குக்கஜைத் துன்னி மித்தவகை அறிவித் திடலே
பாங்கில் பணிமொழி பொன்முடி மன்னவர் தம்பகையால்
தீங்கில் செருச்செய்து ஒருவர் திறல்வாகை
சென்னிவைத்தல்
ஈங்கிற்செல வேறுஒருபேய் உவகை இசைத்திடலே.'

– நவ. 56

'உண்டாம் உவகைதனை அவள்தான் மகிழ்ந்து ஓலக்கத்தில்
கொண்டாடல் காளிஅம் பேயினைக்கூறல் கொலைக்
களம்தான்
கண்டு ஆர்ப்புஉறல் களம்வாழ்த்துதல் கைம்மலை
வெண்மருப்புத்
தண்டால் உலந்தவர் தம்பல் தரளம் தடுக்குதலே.' – நவ. 57

'முடிஅடுப்பில் தோய்வயிறு குழிசியில் மொய்குருதி
நெடிஉலைஏற்றி நிணம்பெய்து கோபநெருப்பு எரித்துத்
தொடியுடைத் தோள்துடுப்பில் துழாய்ஆக்கிப்
பேய்ஊட்டஅம்மை
வடிவுறஉண்டு ஆங்கு அடுதிறல் மன்னனை வாழ்த்துதலே.

– நவ. 58

'இன்னும்அப் பேய்கள் இயல்கூர் பசிதீர உண்டுஇனிதாய்த்
துன்னிநின்று ஆடுதல் சூழும்கவந் தங்கள் தான்ஆடுதல்
மன்னும் புறப்பொருள் நூலோர்உரை வழுவா வகையே
முன்னும்மொழிந்தபடியே புணர்த்திக்கொள் மொய்குழலே.'

– நவ. 59

'படைபுக்குஆ யிரம்வேழம் எதிரார் போரில்
படப்போர்செய் தானுக்குக் கடவுள் வாழ்த்துக்
கடைதிறப்புப் பாலைநிலம் காளி கோட்டம்
கழுதுநிலை காளிக்குப் பேய்சொல் பேய்க்குத்
தொடர்காளி சொலஅதனால் தலைவன் கீர்த்தி
சொல்லல்அவன் சேறல்புறப் பொருள்தோன் றப்போர்
அடுதல்களம் விரும்பல்இவை நாற்சீர் ஆதி
அடிஇரண்டின் ஏறாமல் பரணி பாடே.'

– சித. பாட். 41

'படைபுக்கு ஆயிரம் பகடுஅற ஒன்னார்
போரில் எதிர்ந்து பொரும்அர சனுக்குக்
கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, பாலை
நிலம், காளி கோட்டம், கழுது,
காளிக்குப் பேய்சொலல், பேய்க்குக் காளிசொலல்,
அதனால் தலைவன் கீர்த்தியை அருளுதல்,
அவன் செலல், புறப்பொருள் தோன்ற ஆர்ப் பரித்துப்
போராடல், பொருகளம் விரும்பல் இவற்றை
நாற்சீர் ஆதியின் நண்ணுஈ ரடியின்
ஏறாது பரணி இயம்புதல் நெறியே.' – பி. ம. 40

'பரணிக்கு ஆயிரம் பகடு கொன்ற
தெரிவருந் தலைவனைத் தேவவாழ்த்து ஆதி
கடைதிறப் பும்கனல் காய்நிலம் பாலையும்
புடையில் காளி பொலிந்த கோயிலும்
பேயோடு காளி பேய்கள் காளியோடு
ஓவில உரைத்தலின் ஓர்ந்துஅவன் கீர்த்தி
புகறலும் அவன்வழி புறப்பொருள் தோன்றவும்
மிகவெஞ் சமரம் விரும்பலும் என்றிவை
அளவடி முதல்பல அடியான் ஈரடி
உளபஃ றாழிசை உரைப்பது நெறியே.' – தொ. வி. 289

'வெம்போர் முகத்து ஆயிரம் யானையைக் கொன்ற
வீரனைத் தலைவனாக
வேண்டிப் புகழ்ந்துபின் கடவுளரை வாழ்த்தலும்
வேல்இளைஞர் கடைதிறப்பு
வண்பாலை யில்காளி கோயிலில் காளிதான்
வன்பேய்க ளோடுஆடியும்
மற்றும்ஒரு கூளிப்பேய் சொல்கருது தலைவனுன்
மாறுதகீர்த்தி பொங்கப்
பண்பாய வன்வழிப் பிறபொருள்கள் தோன்றஉ
பாயமாம் சமரம்விரும்
பலும்அவன் வெற்றியைக் கருதிஇரு சீரடிப்
பாவும்முச் சீரடியும்முற்
செம் பாகமாக நாற்சீர்முதல் அமைந்திடச்
சீர்உற்றஅடி இரண்டாய்ச்
செப்புபஃ றாழிசையின் ஓர்கவி தையாய்ச்
செப்பிடின் பரணிஆமே.' – பி. தீ. 6

'போர்முகத்து ஆயிரம் புகர்முகக் களிற்றைக்
கொன்றவ னைத்தலை மகனாகக் கொண்டு
கடவுள் வாழ்த்துக் கடைதிறப் புப்பாலை
காளி கோயிலும் பேயொடு காளியும்
காளியொடு பேய்களும் உரைக்கத் தானகம்
சாற்றக் கருதிய தலைவன் கீர்த்தி
புலப்பட அவன்வழி யாகப் புறப்பொருள்
தோன்றப் போர்த்தொழில் தொடங்க விரும்பல்
என்றிவை எல்லாம் இருசீர் முச்சீர்
அடிஒழித்து ஏனைய அடிகொடு ஈரடிப்
பஃறாழிசையால் பாடுவது பரணி.' – மு. வீ. யா. ஒ. 79
79

## தசாங்கப் பத்து

840. நேரிசை வெண்பா வால்நிரு பன்பெறும்
தசாங்கத் தினைச்சொலல் தசாங்கப் பத்தாம்.

இது தசாங்கப் பத்து ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: நேரிசை வெண்பாவால் சிறப்புத் தோன்ற அரசன் படைத்த முற்கூறிய தசாங்கத்தினைப் பத்துக் கவியால் கூறுதல் தசாங்கப் பத்தாம் என்றவாறு. 80

ஒத்த நூற்பாக்கள்

'தேரும் தசாங்கத்தை ஈரைந்தால் செப்பினல்
நேர்ந்த தசாங்க நிலை.' – வெண். பாட். செ. 20

'நேரிசை வெண்பா...........அவை ஒருபான்
சாரின் தசாங்கம்என உரையாகிற்பர் சான்றவரே.'
– நவ. 39

'பத்தியல்வெண் பாவின்மலை நதிநாடு ஊர்தார்
பரிகளிறு கொடிமுரசு செங்கோல் பாடின்
மெத்துதசாங் கப்பத்தாம்.' – சிதம். பாட். 32

'வெள்ளை பத்தில் தசாங்கத்தைப் புகழ்ந்து
பகர்தல் தசாங்கப் பத்தாம்.' – பி. ம. 16

நேரிசை வெண்பாவால் அரசன் படைத்த தசாங்கத்தினைப் பத்துச் செய்யுளாகப் பாடுவது. – தொ. வி. 283 உரை.

'பவனம்உறும் அரசனுக்கு ஒத்திடு தசாங்கமும்
பாடு நேரிசை வெள்ளையால்
பத்துச் செய்யுள் கூறலதுவே தசாங்கம்உறு
பத்துஎன உரைப்பார்களே.' – பி. தீ. 25

'அரசன் தசாங்கம் ஆசிரிய விருத்தம்
ஐயிரண்டு அறைவது தசாங்கத் தயலே.'
– மு. வீ. யா. ஒ. 141; தொ. வி. 283 உரை.

என்ற தசாங்கத்தயலும் நோக்குக.

முற்கூறிய தசாங்கம் – 'மலைநதி நாடுஊர்.' – பாட்டியல் 22 என்ற நூற்பாவில் சொற்றவை.

80

## பதிற்றந்தாதி

841. வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந் தாதி.

**இது பதிற்றந்தாதி ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள்: பத்து வெண்பா பத்துக் கலித்துறை பொருள் தன்மை தோன்றப் பாடுதல் பதிற்றந்தாதியாம் என்றவாறு.** 81

ஒத்த நூற்பாக்கள்

*'ஒத்தாய வெண்பா......ஒத்தசீர்*
*அந்தாதி ஆகும் கலித்துறையும் அவ்வகையே*
*வந்தால் அதன்பே ரவை.'* – வெண். பாட். செ. 9

*'பத்துவெண் பாக்கலித்துறையான் தற்செயலாம்*
*பதிற்றந்தாதி.'* – நவ.7

*'பத்துவெண்பா கலித்துறை பத்துடன் பொருள்*
*பற்றிடும் தன்மை தோன்றப்*
*பலசிறப்புற்ற அந்தாதியாய்ப் பாடுவது*
*பண்பதிற் றந்தாதியாம்.'* – பி. தீ. 19

*'ஈரைந்து வெண்பா கலித்துறை ஈரைந்து*
*தரும்பொருள் புலப்பட அந்தா தித்துப்*
*பாடுவன பதிற்றந் தாதி ஆகும்.'* – மு. வீ. யா. ஒ. 122
– தொ. வி. 282 உரை.
81

## நூற்றந்தாதி

842. நூறு வெண்பா நூறு கலித்துறை
கூறுதல் நூற்றந் தாதிக் கோளே.

**இது நூற்றந்தாதி இலக்கணம் கூறுகின்றது.**

இ-ள்: வெண்பா நூறு கலித்துறை நூறு அந்தாதித் தொடையால் கூறுதல் நூற்றந்தாதி இலக்கணக் கொள்கையாம் என்றவாறு. (82)

### ஒத்த நூற்பாக்கள்

*'வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளில்*
*பண்பா உரைப்பதந் தாதித் தொகையே.'*

*- பன். பாட். 330*

*'ஒத்தாய வெண்பா ஒருநூறு - ஒத்தசீர்*
*அந்தாதி ஆகும் கலித்துறையும் அவ்வகையே*
*வந்தால் அதன்பே ரவை.'* *- வெண். பாட். செ. 9*

*'கலித்துறை நூறு வெண்பாத் தோன்றுதலாகும்*
*நூற்றந்தாதி என்பர்.'* *- நவ. 6*

*'மன்னிய கலித்துறை வெள்ளை நூறு*
*அந்தாதித்து அப்பெயர் அந்தாதி ஆகும்.'* *- பி. ம. 8*

*'வெற்றி வெண்பா நூறினும் கலித்துறையின்*
*வீறுறும் நூறினும்*
*வினவி அந்தாதித்து உரைத்தல் நூற்றந்தாதி.'* *- பி. தீ. 19*

*'வெண்பா நூற்றினு லேனும் கலித்துறை*
*நூற்றினு லேனும் அந்தாதித் துரைப்பது*
*நூற்றந் தாதியாம் நுவலுங் காலே.'*

*- மு. வீ. யா. ஒ. 123; தொ. வி. 283. உரை 82*

## அட்டமங்கலம்

843. கடவுள் காக்க எனக்கவி இருநான்கு
அடைவுற அகவல் விருத்தம் அதனல்
வகுப்பது அட்ட மங்கலம் ஆகும்.

இஃது அட்டமங்கலம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: கடவுளைப்பாடி அக்கடவுள் காக்க எனக் கவி எட்டால் பொருளுற அகவல் விருத்தம் அதனல் பாடப்படுவது அட்டமங்கலமாம் என்றவாறு. (83)

## ஒத்த நூற்பாக்கள்

'ஒருவனைக் காக்கஎன்று இறைவனை ஏத்திய
எண்வகை அகவல் விருத்தம் புணர்த்த
எண்ணிய அட்ட மங்கலம் என்ப.' – பன். பாட். 299

'இறைவனை ஏத்திய எண்வகை மங்கலம்
மறிதரும் பாவே அகவல் விருத்தம்.' „ 300

'வேய்ந்த விருத்தங்கள் எட்டுஅட்ட மங்கலமாம்.'
– வெண். பா. செ. 24

'இறைவனை ஏத்திய எட்டுஆசிரிய விருத்தம் வண்ணம்
மறைமுதலோர் அட்டமங்கலம் என்ப.' – நவ. 50

'எட்டுக் குலவுஅகவல் விருத்தமுறு தெய்வக் காப்பாம்
மீதட்ட மங்கலம்.' – சித. பாட். 34

'அட்ட மங்கலம் எட்டு மனவிருத்தம்
கவிதோறும் தெய்வம் காப்பஎன்று உரைப்பது.'
– தொ. வி. 274

'விரும்பும் எட்டுமன விருத்தந் தோறும்
தெய்வம் காப்பாய்ச் சிறந்து சுபகரத்து
அந்தாதித்து இயம்பல் அட்டமங் கலமே.' – பி. ம. 22

'அரிய கடவுளர் மீது பாடி அக்கடவுளே
அநுதினம் காக்க எனவும்
தாவில் ஆசிரிய விருத்தம் எட்டுஅந்தாதி சாற்று
அட்ட மங்கலம் தான்.' – பி. தீ. 9

'கடவுளைப் பாடிஅக் கடவுள் தானே
காக்கஎன்று அகவல் விருத்தம் இருநான்கு
அந்தாதித்து அறைகுவது அட்டமங் கலமே.'
– மு. வீ. யா. ஒ. 86

## அலங்கார பஞ்சகம்

844. வெள்ளை கலித்துறை அகவல் விருத்தம்
எள்ளலில் வண்ணம் இவைஓர் ஐந்தும்
அலங்கார பஞ்சகம் ஆகும் என்ப.

**இஃது அலங்கார பஞ்சகத்தின் இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள்: வெண்பாவும் கலித்துறையும் அகவலும் விருத்தமும் இகழ்தல் இல்லாச் சந்த விருத்தமும் ஆகிய இவை ஓரைந்தினையும் அந்தாதியாகப் பாடுதல் அலங்காரப் பஞ்சகம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. (84)**

### ஒத்த நூற்பாக்கள்

*'வெள்ளை, செறிந்த கலித்துறைசீர் மன்பா — அறைந்த
கலங்காத மன்விருத்தம் காண்டகைய வண்ணம்
அலங்கார பஞ்சகமென் றூர்.'* – வெண். பாட். செ. 22

*'வெண்பா கலித்துறை வேறுஆசிரியம் விருத்தம் வண்ணம்
பண்பால் வருப அலங்காரப் பஞ்சகம்.'* – நவ. 41

*'ஓதுவெள்ளை கலித்துறையா சிரிய வஞ்சி
உறுவிருத்தம் வகுப்புஐந்தால் உரைக்கில் அம்ம
கோதில்அலங் காரபஞ்ச கப்பேர்.'* – சித. பாட். 34

*'ஆதிப்பா கலித்துறை ஆசிரியம் வஞ்சி
மனவிருத் தத்தோடு வண்ணம் இசைய
ஐந்தின் அலங்காரத்து அந்தா தித்துப்
பாடுவது அலங்கார பஞ்சகம் என்ப.'* – பி. ம. 21

*'வெண்பா கலித்துறை அகவல் விருத்தம்
அலங்கார பஞ்சகம் அந்நால் வகைப்பாக்
கலந்த ஐந்தாய்க் கதிபெறப் பாடலே.'* – தொ. வி. 282

'அத்தகு ஆசிரிய விருத்தம் கலித்துறை
அகவல் சந்தவிருத்தமும்
ஆம் வெள்ளையும் மாறி அந்தாதிசெயும்நூறு
அலங்கார பஞ்சகமே.' – பி. தீ. 24

'வெண்பா அகவல் கலித்துறை அகவல்
விருத்தம் சந்த விருத்தம்இவ் வகையே
மாறி மாறி அந்தாதித் தொடையாய்ப்
பாடுவது அலங்கார பஞ்சகம் ஆகும்.'
– மு. வீ. யா. ஒ. 147

84

## ஊசல்

845. அகவல் விருத்தம் கலித்தா ழிசையால்
பொலிதரு கிளையொடும் புகலுவது ஊசல்.

இஃது ஊசல் ஆமாறு கூறுகின்றது.

இ–ள் : ஆசிரிய விருத்தத்தானுதல் கலித்தாழிசை யான் ஆதல் சுற்றத்தாரோடும் பொலிவதாகக் கூறுதல் ஊசலாம் என்றவாறு. (85)

### ஒத்த நூற்பாக்கள்

'ஆங்கவிருத் தத்தால் அறைந்தகலித் தாழிசையால்
ஓங்கியசுற் றத்தளவாய் ஊசலாம்.'
– வெண். பாட். செ. 23

'தொடர் மன்விருத்தம் கலித்தாழிசை சுற்றத்தோடு பொலிந்
திடுக என்று ஆடீர் ஆடாமோ ஊசல் பொலன் ஊசலதே.'
– நவ. 13

'சொற்கலித்தா ழிசையகவல் விருத்தம் ஆதல்
சுற்றமுடன் தாழிசையாய்ச் சொல்வது ஊசல்.'
– சிதம். பாட். 33

'ஆசிரிய விருத்தம் கலித்தா ழிசையில்
ஒன்ரு ஒன்பான் தாழிசைப் போக்கின்
சுற்றத்து அளவில் சொல்லுவது ஊசல்.' – பி. ம. 18

'ஊசல் என்ப ஊசலாய்க் கிளையளவு
ஆசிரிய விருத்த மாகப் பாடலும்
தன்ஒலி வரும்கலித் தாழிசைப் பாடலும்
வண்ணகம் முதற்கண் வரினும் இயல்பே.'
– தொ. வி. 276

'அகவல் விருத்தத் தாகு குதல்கலித்
தாழி சையா ளுகுதல் சுற்றத்
தோடும் பொலிக ஆடீர் ஊசல்
ஆடாமோ ஊசல் ஊச லாகும்.' – மு. வீ. யா. ஒ. 161
85

## சின்னப்பூ

846. மிக்க நேரிசை வெண்பா அதனல்
தக்க தசாங்கந் தன்னை நூறு
தொண்ணூறு எழுபது ஐம்பது முப்பஃது
எண்ணப் பாடின் சின்னப் பூவே.

இது சின்னப்பூவினது இலக்கணம் கூறுகின்றது.

இ-ள்: சிறந்த நேரிசை வெண்பாவினல் தகுதி பெற்ற தசாங்கத்தினை நூறு தொண்ணூறு எழுபது ஐம்பது முப்பது என்னும் எண்படப் பாடின் அது சின்னப்பூவாம் என்றவாறு.

அரசனுடைய சின்னங்களை விரித்துக் கூறுதலான் சின்னப்பூ ஆயிற்று. 86

## ஒத்த நூற்பாக்கள்

'மலையும் ஆறும் நாடும் ஊரும்
பரியும் களிறும் கொடியும் முரசும்
தாரும் பெயரும் எனத்தெரி பத்தும்
சொல்லும் எல்லையின் முதற்குறட் கண்ணே
சின்னத் தொழிலை மன்ன வைத்துப்
பின்னர்க் குறளுள் பாட்டுடைத் தலைவன்
இயற்பெயர் வைத்தவர்க் குரிமைத் தோன்றும்
செயல்பெற வைப்பது சின்னம் அதுவே
ஆதிப் பாவின் அதன்இனம் வருமே.' – பன். பாட். 239

'மலையே யாறே நாடே ஊரே
பறையே பரியே களிறே தாரே
பெயரே கொடியே என்றிவை தசாங்கம்.' ,, 240

'பத்தே ஏழே மூன்றே சின்னம்.' ,, 241

நேரும் தசாங்கத்தை நேரிசை வெண்பாவால்
ஈரைம் பதுதொண் ணூ றீண்டெழுபான் — ஓரைம்பான்
தேர்ந்துரைக் கின்சின்னப் பூ. – வெண். பாட். செ. 20

'நேரும் தசாங்கத்தினை நேரிசை வெண்பாவில் ஈரைம்பது
சேர ஓர்தொண்ணூறு எழுபதோடு ஐம்பது செப்பிடுங்கால்
ஆரியர் சின்னப்பூ என்றே உரைப்பர்.' – நவ. 39

'தசாங்கம்தன்னை,
வெண்பாவால் தொண்ணூறுஏழ் பஃது ஐம்பான்
இத்தகைமை மொழிவது சின்னப்பூ ஆகும்.'
– சிதம். பாட். 32

'வெள்ளை பத்தில் தசாங்கத்தைப் புகழ்ந்து
பகர்தல் தசாங்கப் பத்தாம்; அவற்றைத்
தொண்ணூறு எழுபஃது ஐம்பான் வெள்ளையில்
அமைவுற மொழிதல் ஆகும்சின் னப்பூ.' – பி. ம. 16

'சின்னப்பூ எனத்தெளி நேரிசை வெண்பா
நூறு தொண்ணூறு எழுபதுஐம்பது ஆறைந்துமாய்ப்
பாடித் தசாங்கம் பற்றிப் புகழ்வதே.' – தொ. வி. 263

*'நேரிசை வெண்பா வாலே நிருபன்*
*சின்னமாம் தசாங்கத் தினைச்சிறப் பித்து*
*விரித்துஐம் பதுதொண் ணூறுஎழு பதுமுப்*
*பதுநூறு எனும்எண் படஎடுத் துரைப்பது*
*சின்னப் பூஎனச் செப்பினர் புலவர்.'*

– *மு. வீ. யா. ஒ. 164*

*86*

## சதகம்

**847. விழையும் ஒருபொருள் மேல்ஒரு நூறு**
**தழைய உரைத்தல் சதகம் என்ப.**

**இது சதகம் ஆமாறு கூறுகின்றது.**

**இ–ள் : கற்று வல்லோரால் விரும்பும் அகப்பொருள் ஒன்றன் மேலாதல் புறப்பொருள் ஒன்றன் மேலாதல் கற்பித்து நூறு கவி பாடுதலே சதகமாம். (87)**

### ஒத்த நூற்பாக்கள்

*'சயமாம் மிகுபொருள் ஒன்றின் பாநூறு சதகமதே.'*

– *நவ. 10*

*'கருது பொருள்இடம் காலம் தொழிலின்*
*நூறுன் வெண்பாக் கலித்துறையின் ஆதல்*
*மன்னும் அவ்வெண்ணல் சதகம் என்று*
*இயலும் செய்யுட்கு ஏற்ற பெயரே.'* – *பி. ம. 34*

*'அகப்பொருள் ஒன்றன்மேல் ஆதல் புறப்பொருள்*
*ஒன்றன்மேல் ஆதல் கற்பித்து ஒருநூறு*
*செய்யுள் உரைப்பது சதகமாம் என்ப.'*

– *மு. வீ. யா. ஒ. 156; தொ. வி. 283 உரை.*

*87*

## எண் செய்யுள்

848. ஊரையும் பெயரையும் உவந்துஎண் ணாலே
சீரிதின் பாடல்எண் செய்யுள் ஆகும்.

இஃது எண்செய்யுள் ஆமாறு கூறுகின்றது.

இ – ள் : பாட்டுடைத் தலைவனுடைய ஊரினையும் பெயரினையும் உவந்து எண்ணாலே பத்து முதல் ஆயிரம் அளவும் பொருள் சிறப்பினாலே பாடுதல் அவ்வவ் வெண்ணால் பெயர் பெற்று நடக்கும் எண் செய்யுளாம் என்றவாறு.

அவை முத்தொள்ளாயிரம் அரும்பைத்தொள்ளாயிரம் முதலாயின.

'சீரிதின்' என்றதனால் செய்யுட்கிழமைப் பொருள் பற்றிப் பாரியதுபாட்டு கபிலரதுபாட்டு எனச் செய்வித்தோன் செய்தோன் பெயர் பற்றி வரும் எனவும்கொள்க. 88

### விளக்கம்

*ஆறுவதற்குரிய தெரிந்து மொழிச் செய்தி – பாரி காரணமாகப் பாடப்பட்ட பாரி பாட்டு, கபிலரால் பாடப்பட்ட கபிலர் பாட்டு என்றாற்போல முறையே செய்வித்தோன் செய்தோன் இருவர் பற்றியும் தோன்றும் என்பது.*

*'பெயர்ஊர் பத்துமுதல் ஆயிரம் எண்பெயர் எண்
செய்யுளாம்.'* – நவ. 17

*'ஒத்திடும் பாட்டுடைத்தலைவன் ஊர்ப் பெயரினை
எடுத்தும் எண்ணால் பெயர்பெற
ஈரைந்து கவிமுதல் ஆயிரம்வரை சொல்லல்
எண்செய்யுள் ஆகுமன்றே.'* – பி. தீ. 15

'பாட்டுடைத் தலைவன் ஊரும் பெயரும்
பத்துமுதல் ஆயிரம் அளவும் பாடி
எண்ணால் பெயர்பெறல் எண்செய்யுள் ஆகும்.'
– மு. வீ. யா. ஒ. 119; தொ. வி. 283 உரை

88

## ஐந்திணைச் செய்யுள்

849. உரிப்பொருள் தோன்ற ஓரைந் திணையும்
தெரிப்பது ஐந்திணைச் செய்யுள் ஆகும்.

இஃது ஐந்திணைச் செய்யுள் இலக்கணம் கூறுகின்றது.

இ - ள் : புணர்தல் முதலிய ஐந்து திணையினையும் தெரித்துக் கூறுதல் ஐந்திணைச் செய்யுளாம் என்றவாறு. (89)

### ஒத்த நூற்பாக்கள்

'கூடல் முதல் ஐந்து உரிப்பொருளும் விளங்கக் குறிஞ்சியோடு
ஐந்திணையினைக் கூறுப ஐந்திணைச் செய்யுள் என்பர்.' – நவ. 3

'வருபுணர்தல் முதல் ஐந்துஉரிப்பொருள் பிரகாசிக்க
வரைஆதியை ஐந்திணை
வகுத்துச் சிறப்பித்தல் ஐந்திணைச் செய்யுள்வெள்ளை
வஞ்சி கலிவணம் அகவலே.' – பி. தீ. 8

'புணர்தல் முதலிய ஐந்துஉரிப் பொருளும்
அணிபெறக் குறிஞ்சி முதலிய ஐந்திணை
யினையும் இயம்புவது ஐந்திணைப் பாவே.'

– மு. வீ. யா. ஒ. 82
– தொ. வி. 283 உரை.

89

## நாழிகை வெண்பா

850. தேவர் அரசர் திறன்நே ரிசையால்
மேவும் கடிகையின் மேற்சென் றதனை
நாலெட்டு உறச்சொலல் நாழிகை வெண்பா.

இது நாழிகை வெண்பா ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: தேவர் இடத்தும் அரசர் இடத்தும் நிகழும் காரியம் கடிகை அளவில் தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு வெண்பாக் கூறல் நாழிகை வெண்பாவாம் என்றவாறு. (90)

### ஒத்த நூற்பாக்கள்

'ஈரிரண்டு யாமத்து இயன்ற நாழிகைச்
சீர்திகழ் வெண்பாப் பாடுநர் யாவரும்
இருநான்கு ஈரேழ் இருநான் காம்எனக்
கன்னல் முப்பதும் எண்ணினர் இனிதே.'

– பன். பாட். 292

'மன்னர் கடவுளர் முன்னிலை யாக
அன்ன கடிகை என்னும் இயல்பின்
தொகுநெறி அன்னவை நேரிசை வெண்பா.' ,, 293

'போம்கடிகை,
தேவர்க்கும் காவலர்க்கும் தேர்ந்துரைக்க வெண்பாவை
மேவிய நாலெட்டாக வேய்ந்து.' – வெண். பாட். செ. 23

'கடவுள் அரசர்க்கண் நிகழ்கருமம் கடிகையினின்
முடியும் முப்பான்இரு நேரிசைவெண்பாக் கடிகைவெண்பா
52ல் பிறிதும் கூறும்.' – நவ. 18

'ஏய்ந்திடு நாழிகைவெண்பா மன்னர்க்கு ஈசர்க்கு
எய்திய நாழிகைவெண்பா நாலெட்டாய்ச் சொலல்.'

– சித. பாட். 40

'ஈசற்கு மண்ஆள் மன்னற்கு எண்ணான்கு
திருந்து நாழிகையின் சிறப்பைவெண் பாவால்
நவில்வது ஆகும் நாழிகை வெண்பா.' – பி. ம. 38

'அமரர் இடத்தும் அரசர் இடத்தும்
நடக்கும் காரியம் நாழிகை அளவில்
தோன்றி ஒழுகுவ தாகமுப் பாஞேடு
இரண்டு நேரிசை வெண்பா இயம்பல்
கடிகைவெண் பாஎனக் கருதினர் புலவர்.'
– மு. வீ. யா. ஒ. 163; தொ. வி. 283 உரை.
90

## நாஞற்பது

851. காலம் இடம்பொருள் கருதி நாற்பான்
சால உரைத்தல் நாஞற் பதுவே.

இது நாஞற்பது ஆமாறு கூறுகின்றது.

இ – ள்: காலமும் இடமும் பொருளும் பற்றி நாற்பது வெண்பாப் பொருந்த உரைத்தல் நாஞற்பதாம் என்றவாறு.

காலம் பற்றி வருவது கார்நாற்பது. இடம் பற்றி வருவது களவழி நாற்பது. பொருள் பற்றி வருவன இன்ஞ நாற்பது இனியா நாற்பதாம். இன்ஞ ஆக்குதலே இன்ஞ என்றும் இனிமை ஆக்குதலே இனியா என்றும் கூறிஞர். (91)

### ஒத்த நூற்பாக்கள்

'சார்பொருள் காலத்தின் முற்பா நாற்பது' – நவ. 10

'உற்றிடும் காலமும் இடமும்
பொருளும்ஆகிய இவற்றுள்ளின் ஒவ்வொன்றினைப்
பொருந்தி நாற்பது வெள்ளையால்
புகல்வதே நாற்பதுஆம்.' – பி. தீ. 26

'இடம்பொருள் காலம் இவற்றில் ஒன்றனை
வெண்பா நாற்பதால் விளம்பல்நா நாற்பது.'
– மு. வீ. யா. ஒ. 152; தொ. வி. 283 உரை.
91

## முலைப்பத்து, நயனப்பத்து

**852.** பணைமுலை நயனத் தினைப்பப் பத்தால்
அணைவுறப் புகறல் அப்பத் தாகும்.

இது பயோதரப்பத்தும் நயனப்பத்தும் ஆமாறு கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. 92

### ஒத்த நூற்பாக்கள்

*'பணைமுலை நயனம் பாங்காம் அகவல்*
*விருத்தம் பத்தென விளம்பினர் புலவர்.'*
– பன். பாட். *333*

*'ஆகிய கண்முலை அகவல் விருத்தம்.'* ,, *334*

*'தந்துரைத்த மன்விருத்தம் சார்ந்த கலித்துறைதான்*
*அந்தமுறும் கண்முலைமேல் ஐயிரண்டாய் — வந்தால்*
*நயன பயோதரப்பத் தாமென்று நன்னூல்*
*பயனுணர்ந்தார் முன்பு பகர்.'* – வெண். பாட். செ. *25*

*'நயனம் பயோதரம் பப்பான்நவிலல் அந்நாமம்'* – நவ. *9*

*'அரசர்விருத்தம் கலித்துறை ஈரைந்து கண்முலைமேல்*
*பரசின்நயனம் பயோதரம் சேர்ந்த விருத்தம் என்ப.'*
– நவ. *49*

*'பயோதரம்கண் உரைத்திடில்அப் பேர்பத்து ஆமால்'*
– சிதம். பாட். *31*

*'மன்னு பயோதரம் ஆகும் உறுப்பை*
*ஆசிரிய விருத்தம் கலித்துறை ஒன்றின்*
*ஏற்கவரு ணித்து ஈரைந்து சொல்வது*
*அப்பெயர்ப் பத்துஎன்று அறையப் படுமே.'* – பி. ம. *15*

'மன்னும் அம்பகம் ஆகும் உறுப்பை
ஆசிரிய விருத்தம் கலித்துறை ஒன்றின்
ஏற்க வருணித்து ஈரைந்து சொல்வது
அப்பெயர்ப் பத்துஎன்று அறைந்தனர் புலவர்.'

– பி. ம. 15

'நாட்டந்தனை தசச்செய்யுளால் கூறல்
நயனப்பத்து எனப் புகலுவார்.' – பி. தீ. 23

'நனிமுலையைத் தசச் செய்யுளால் கூறுவது
நற்பயோதரப்பத்து இதே.' – பி. தீ. 23

'பார்வையைப் பத்துப் பாட்டால் உரைப்பது
நயனப் பத்தென நவிலப் படுமே.'

'பருமுலைப் பத்துப் பாவால் அறைவது
பயோதரப் பத்தெனப் பகரப் படுமே.'

– மு. வீ. யா. ஒ. 143, 144; தொ. வி. 283 உரை.

92

## ஒன்பான் வகை விருத்தம்

853. வில்வாள் வேல்செங் கோல்மத மாபரி
நாடுஊர் கொடையை நயந்த பப்பத்து
விருத்தம் ஒன்பதும் விளங்கும்அப் பெயரான்.

**இது வில் முதலிய ஒன்பதுவகை விருத்தம் ஆமாறு கூறுகின்றது.**

**இ–ள் : வில்லினையும் வாளினையும் வேலினையும் செங்கோலினையும் யானையினையும் குதிரையினையும் நாட்டினையும் ஊரினையும் கொடையினையும் பப்பத்தாகக் கூறும் ஒன்பதுவகை விருத்தங்களும் அவ்வப்பெயரான் விளங்கும் என்றவாறு.**

என்றது வில்விருத்தம் வாள்விருத்தம் வேல் விருத்தம் செங்கோல் விருத்தம் யானைவிருத்தம் குதிரை விருத்தம் நாட்டுவிருத்தம் ஊர்விருத்தம் கொடை விருத்தம் எனப் பெயர் பெற்று வழங்குவனவாம் என்றவாறு. (93)

### ஒத்த நூற்பாக்கள்

'வரிசிலை யானை வாள்குடை வேல்செங்
கோலொடு நாடு உரைப்பில் அகவல்
விருத்தம் பத்தென வேண்டினர் புலவர்.'
– பன். பாட். 290

'நிலையார் குடைசெங்கோல் ஊர்நாடு நீள்வேல்
கொலையார் களிறு குதிரை — சிலைவாள்
இவற்றின்மேல் மன்விருத்தம் ஈரைந்தாய் வந்தால்
அவற்றின்பேர் நாட்டல் அறிவு.' – வெண். பாட். செ. 21

'யானைகுதிரை எழில்வில்வேல் வாள்குடைகோல்இவற்றோடு
ஊனமில் நாடு நகர்என ஒன்பான் இவற்றின்பப்
பானகவல் விருத்தம்வர அப்பால் விருத்தமதாம்.' – நவ. 40

'எழிற்குடைசெங் கோல்நாடுஊர் வில்வாள் வேல்மா
அத்திதனித் தனிஅகவல் விருத்தம் பத்தால்
அறைவிருத்த இலக்கணமாம்.' – சிதம். பாட். 32

'எழில்குடை செங்கோல் நாடுஊர் சிலைவாள்
அணிவேல் பரிதந்தி இவற்றைத் தனியே
அகவல் விருத்தம் ஈரைந்தின் மேவ
உரைக்கின் அவ்வவ் விருத்தம் ஆகும்.' – பி. ம. 17

'விருத்த இலக்கணம் விளம்புங் காலை
குடைஊர் நாடுகோல் பரிகரி வில்வடி
வாள்வேல் ஒன்பான் வகுப்பு மனவிருத்தம்
ஈரைந்து அவ்வவற்று இயற்பெயர் கொளுமே.'
– தொ. வி. 273

'வில்வா ளொடுவேல் செங்கோல் யானை
குதிரை நாடுஊர் குடை இவ் வொன்பதும்
பப்பத்து அகவல் விருத்தத் தாலே
ஒன்பது வகையுற உரைப்பது விருத்த
இலக்கணம் என்மனார் இயல்புணர்ந் தோரே.'

– மு. வீ. யா. ஒ. 165
93

## காப்பியம்

**854. காப்பியம் இரண்டும் மேற்புகன் றனவே.**

**இது காப்பியத்தின் இலக்கணம் மாட்டேற்றான் உணர்த்துகின்றது.**

**இ – ள் : பெருங்காப்பியத்தினுக்கும் காப்பியத்தினுக்கும் மேல் அணி இயலுள் கூறிப்போந்த இலக்கணமே ஈண்டைக்கு உரிய இலக்கணமாம் என்றவாறு.** **(94)**

### விளக்கம்

'பெருங்காப்பிய நிலை' (இ. வி. 628). 'அறம் முதல் நான்கின்' (இ. வி. 630) என்ற நூற்பாக்களை நோக்குக.

### ஒத்த நூற்பாக்கள்

'தொடர்நிலைச் செய்யுள் பலபாட்டுத் தொடுத்துத்
தலைஇடை கடைஎன நுவலவும் படுமே.' – பன். பாட். 351

'அவற்றுள்,
தலைஎனப் படுபவை மலைவின் றாகி
அறம் பொருள் இன்பம் வீடென இவற்றின்
திறம்தெரி மரபின் நீங்கா தாகி
வென்றிகொள் இருக்கை என்றிவை அனைத்தும்
சந்தி யாகத் தந்துநிலை பெறுமே.' ,, 352

'தொடர்நிலை என்பது தமிழ்இயற் பேரே
கடவுள் வணக்கம் நாடுஊர் காவலர்
மாப்பு ணர்ச்சிகொள் மகளிர் முடிசூடல்
கற்றல் படைகுடி திறல்செலல் தூது
செற்ருேர் தருதிறை கற்ருேர்க்கு உதவல்
கடல்புனல் வரவு கார்ப்பொழில் உண்டாட்டு
தானம் மகப் பெறுதல் காலை மாலை என
இருகதிர்க் கோளே அறுவகைக் காலமும்
இயைந்துடன் நுகர்தல் எழில்தரு வீடுஎனப்
பகர்ந்தவும் பிறவும் தொடர்நிலைப் பண்பே.'

— பன். பாட். 351

'உரையிடை மிடைந்த பாட்டுடைச் செய்யுள்
விரவிய மரபின் விளம்பிய நெறித்தே.' ,,

'சருக்க நடையினும் இலம்பக முடிவினும்
விருத்த நடையது வெற்றிசை யான.' ,,

'வெண்பா நடையினும் பண்புற வருமே.'

'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்.' ,,

'புகரில் வணக்கம் பொருப்பறமே ஆதி
பகர்தல் கடல்கோள் பருவம் — நிகரில்
தலைவனைக் கூறல் தபனன்இந்து தோற்றம்
நிலைமணந்தோர் போரின் செயல்.' — வெ. பா. செ. 40

'செயலார் முடிசூடல் சீர்ப்புதல்வர்ப் பேருேடு
அயலார் பொழில்புனல்புக்கு ஆடல் — இயலும்ஊண்
மந்திரம்தூ தாடல் வரும்இகல் விக்கிரமம்
சந்துசெல வும்பிறவும் சார்ந்து.' ,, 41

'சார்சுவையே பாவம் விளக்கி இனத்தொடுபாக்
கூருரையே பாடையே கொண்டிலம்பம் — நேர்சருக்கம்
நீப்பில் பரிச்சேதம் நேர்ந்துவரு மேற்பெருங்
காப்பியமாம் என்று கருது.' ,, 42

'கருதுசில குன்றினும்அக் காப்பியமாம் என்பர்
பெரிதறமே ஆதி பிழைத்து – வருவதுதான்
காப்பிய மாகும் குலவரவு காரிகை
யாப்பிற் புராணமே யாம்.' – வெ. பா. செ. 43

'முன்னம் வணக்கம் அறம்முதல் நான்கின் திறமுரைத்தல்
தன்னிக ரில்லாத் தலைவனைக் கூறல் தசாங்கங்களை
வன்னித்தல் வாழ்த்தல் பருவம் இருசுடர்த் தோற்றம்வளம்
இன்னன கூறல் பெருங்காப் பியத்துக்கு இலக்கணமே.'
– நவ. 60

'பொன்முடி சூடல் பொழில்விளை யாடல் புனலாடுதல்
நன்மணம் செய்தல் நறவூண் களிப்புக் கலவிதுனி
மன்மகப் பேறொடு மந்திரம் தூதுசெல விகலாடு
இன்ன வகைச்சந்தி கூட்டுதல் கூறல்இக் காப்பியமே.'
– 61

'விருப்பம் தருஞ்சுவை பாவம்விளக்கி மிகுபாக்களால்
உரைத்த இனத்தால் உரையோடு உடன்படல் மேற்பரந்து
சருக்கம் இலம்பகம் பரிச்சேதம்என்று தனதுபெயர்
தெரித்து வருவது செப்பிய காப்பியம் தேமொழியே.'
– 62

'நெறியறிந் திவ்வாறு இயற்றியவாறு நிலைநிற்றலும்
பெறுபெய ரென்பது பேசும்அறம்முதல் நான்கினும்தாம்
குறைய வரினும்முன் கூறிய காப்பியம் கோகனகச்
செறிமலர் அல்லிப் பொகுட்டினில் வாழும் திருந்திழையே.'
– 63

'பாடுநெறி வணக்கம் வாழ்த்து ஒன்று நாலாய்ப்
பகர்பொருள்முன் வரஇறைவன் வெற்புவேலை
நாடுநகர் பொருள்பருவம் இருசுடர் பெண்வேட்டல்
நண்ணல்முடி பொழில்புனலாடல் கள்ளுண்டல்
கூடுமகிழ்வு ஊடல்துனி புதல்வர்ப்பேறு
கூறிடு மந்திரம் தூதுசெலல் போர்வென்றி

நீடுசந்தித் தொடர்ச்சிசுவை பாவம் தோன்ற
நிகழ்த்தியம்பல் முதற்பெருங்காப் பியத்துக் கம்மா.'
– சித. பாட். 42

'அறையும் இதில்சில குறைபாடெனினும் குன்றுது;
அறம்பொருள் இன்பம்வீட்டிற் குறைபாடாகப்
பெறுவது காப்பியமாகும்; புராணமாகும்.' ,, 43

'பெருங்காப் பியநிலை பேசுங் காலை
பாடுநெறி வணக்கம் பரவுவாழ்த்து இவற்றின்ஒன்று
ஏற்புடைத் தாகி முன்வர இயன்று
நாற்பொருள் நயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிகர் இல்லாத் தலைவன் மலைகடல்
நாடுநகர் பருவம் நீடும் இருசுடர்த்
தோற்றம்என்று இனைய தொகுதியில் புனைந்துபெண்
வேட்டல்முடி கவித்தல் பூம்பொழில் நுகர்தல்
புனலாடல் கள்ளுண்டல் மகிழ்வுடன் ஊடல்
புதல்வரைப் பெறுதல் கலவியில் களித்தல்
இன்ன செய்கையின் நன்னடைத் தாகி
மந்திரம் தூது செலல் போர் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சே தம்எனும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றவர் புனையும் பெற்றியது ஆமே.'
– பி. ம. 41

'கூறு மதில்சில குறைபாடு எனினும்
பெருங்காப் பியத்தின் பிறிதுஎன ஆகா;
அறம்பொருள் இன்பம்வீடு அவற்றின் மேலாம்அவ்
அறம்முதல் நான்கினும் அல்கப் பெறுவது
காப்பியம் புராணமாய்க் கருதப் பெறுமே.'
– பி. ம. 42

94

## தனிநிலைச் செய்யுள் வகைப்பெயர்

855. வளமடல்[1] உலாமடல்[2] உலா[3] அநு ராக
மாலை[4] மெய்க் கீர்த்தி[5] புகழ்ச்சி மாலை[6]
நாம மாலை[7] தாரகை மாலை[8]
உற்பவ மாலை[9] தானை மாலை[10]
வரலாற்று வஞ்சி[11] செருக்கள வஞ்சி[12]
பலபொருள் வஞ்சி[13] நிலைபெறு குழமகன்[14]
பாதாதி கேசம்[15] கேசாதி பாதம்[16]
உவாத்தொழில்[17] கூத்தர் முதலோர் தம்மை
யாற்றுப் படுத்தல்[18-21] தூது ஆகும் இருதிணை
போற்றுமஞ் சரி[22] யெனப் புலவர் நிலைபெறச்
சாற்றப் படும்அத் தனிநிலைச் செய்யுள்.

**தனிநிலைச் செய்யுள் கூறுவான் தொடங்கியவற்றுள் இஃது அது பெறும் பெயர் வேற்றுமையான் அதன் விரி இத்துணைத்து என்கின்றது.**

இ – ள்: வளமடல் முதல்மஞ்சரி ஈறுகச் சொல்லப் பட்ட இருபத்திரண்டும் அதன் விரியாம் என்றவாறு. (95)

ஒத்த நூற்பா

*தனிநிலை, தொடர்நிலை வேறுபாடின்றிப் பன்னிருபாட்டியல் பிரபந்தத் தொகுப்பைக் குறிப்பிடும் நூற்பா பின்வருமாறு:*

*'மேதகு சாதகம் பிள்ளைப் பாட்டே
கோதில் வேந்தன் குடைமங் கலமே
யோதிய வொருபோ கமைந்த கலம்பக
முலாவே சின்னப் பூவே பரணி
பழுதின் மடன்மறம் பல்சந்த மாலை
யிணைமணி மாலை யிரட்டைமணி மாலை*

*மும்மணி மாலை நான்மணி மாலை*
*கலம்பக மாலை மும்மணிக் கோவை*
*யருங்கலி யொலியே யானைத் தொழிலே*
*வருக்க மாலை நாம மாலை*
*திருக்கிள ரின்னிசை சிலைபரி கரியே*
*யெழில்புனை வாள்குடை தொழில்புனை வேல்கோ*
*லழிவி னுடு ரைம்படை விருத்தம்*
*நாழிகைக் கவியே நவமணி மாலை*
*கைக்கிளை யரிபிறப் பட்டமங் கலமே*
*யில்லற வெள்ளை யெழில்புனை தாரகை*
*சொல்லிய தாண்டகந் துகளறு பதிகஞ்*
*சீர்மெய்க் கீர்த்தி செருக்கள வழியே*
*யாற்றுப் படைவகை கண்படை துயிலெடை*
*விளக்கு நிலையே வெஞ்சினக் கடாநிலை*
*யெண்ணிய யாண்டே கண்ணிய பறைநிலை*
*யரும்பொரு ளிறுத்த வந்தா தித்தொகை*
*புறநிலை வாயுறை செவியறி வுறூஉவே*
*பாத மாதி பணைமுலை நயனங்*
*குற்றமி லுழத்தி குறத்திப் பாட்டே*
*யொருபா வொருபஃ திருபா விருபஃது*
*கோவை கணக்கே தொடர்நிலை பாட்டே*
*கடைநிலை கையறு நிலையெனக் கருதி*
*யிடனறி புலவ ரியம்பின ரினமே.'* – பன். பாட். 172

95

### வளமடல்

856. அறம்பொருள் வீடுஎனும் அம்முக் கூற்றின்
திறம்கடிந்து அரிவையர் திறத்துஉறும் இன்பம்
பயன்எனக் கலிவெண் பாவால் தலைவன்
பெயர்எது கையினில் பேசுதல் வளமடல்.

**இது வளமடல் இலக்கணம் கூறுகின்றது.**

இ-ள்: அறனும் பொருளும் வீடும் என்று கூறும் அம்மூன்று கூறுபாட்டின் பயனை எள்ளி மங்கையரைச் சேர்தலான் உள்ளதாகிய மெல்லிய காம இன்பத்தினையே பயன் எனக்கொண்டு தனிச்சொல் இன்றி இன்னிசைக் கலிவெண்பாவால் தலைவன் இயற்பெயர் எதுகையின் அப்பொருள் முற்றப்பாடுதல் இன்ப மடலாம் என்றவாறு. (96)

## ஒத்த நூற்பாக்கள்

'அறம்பொருள் வீடு திறம்பெரிது அழித்துச்
சிறந்த வேட்கை செவ்விதின் பராஅய்ப்
பாட்டுடைத் தலைமகன் இயற்பெயர்க்கு எதுகை
நாட்டிய வெண்கலிப் பாவ தாகித்
தனிச்சொல் ஒரீஇத் தனிஇடத்து ஒருத்தியைக்
கண்டபின் அந்த ஒண்டொடி எய்தலும்
மற்றவள் வடிவை உற்றகிழி எழுதிக்
காமன் கவற்றக் கரும்பனை மடல்மா
ஏறுவர் ஆடவர் என்மனார் புலவர்.' – பன். பாட். 246

'மடல்மாப் பெண்டிர் ஏறார்; ஏறுவர்
கடவுளர் தலைவ ராய்வருங் காலே.' ,, 247

'கடவுளர் மேற்றே காரிகை மடலே.' ,, 248

'எந்தை உடைப்பெயர்க்கு எதுகை சாற்றி
அந்தமில் இன்பப் பொருளால் ஏத்திப்
பொருளும் அறமும் வீடும் பழித்து
மடல்மா ஏறுதல் மாதர்க்கு உரித்தே.' ,, 249

'உற்ற அறம்பொருள்வீடு எண்ணி உயர்த்தின்பம்
பொற்றொடி காதல் பொருட்டாகப் — பெற்றி
உரைத்தகலி வெண்பா மடலிறைவன் ஒண்பேர்
நிரைத்த எதுகை நிறுத்து.' – வெ. பாட். செ. 28

'பொருள் அறம் வீடு பழித்து இன்பமே பொருளாக்கிநல்லார்
மருள்பெறு வேட்கை மடல்மிக ஊர்தலின்
பாட்டுடையோர்க்கு
உரிய இயற்பேர் எழுத்துக்கு இயைந்த எதுகையினுல்
வருகலிவெண்பா வளமட லாக வகுத்தனனே.' – நவ. 46

தலைவன் பேர்க்குத் தொடை எதுகை ஒன்றில்
இன்ப மடலாய்ச் சொல்லே.' – சித. பாட். 37

'உறழ்தொடை எதுகை ஒன்றில்இன் பத்தை
உயர்த்துஒரு தலையா ஓங்கிய காமத்து
இசைப்பது ஆகும் இன்ப மடலே.' – பி. ம. 31

'மடல்என்பது உலாப்போல் வழங்கினும் கண்ட
மடவார் மயலும் வருந்தலை மகன்பெயர்ப்
படமாரு எதுகையும் பகர்தல் உரித்தே.' – தொ. வி. 261

'அறம் பொருள் இன்பங்கள்
இம்மூன்றும் கூறுபயன்
எள்ளி மங்கையர் திறத்துஉறும் காமஇன்பமதை
யே பயன்கொண்டே தலை
வனை இயற் பேரினைத் தக்கதே எதுகையாய்
வர நாட்டியும் தனிச்சொல்
மறுத்து இன்னிசைக் கலியின் வெண்பாவினுல்தலை
மகன் இரந்தே குறை பெருது
அனைவர் அறிமடல் ஊர்வதென்ன ஈரடி எதுகை
ஆகவே அறை வளமடல்.' – பி. தீ. 20

'அறம்பொருள் இன்பம் ஆகிய பயனை
எள்ளி மகடூஉக் காமஇன் பத்தைப்
பயன்எனக் கொண்டு பாட்டுடைத் தலைவன்
இயற்பெயர்க்கு எதுகை இயல்பு நாடிப்
பகர்ந்துஅவ் வெதுகைப் படத்தனிக் கிளவி
இன்றி இன்னிசைக் கலிவெண் பாவால்

*தலைம கனிரந் துகுறை பெருது*
*மடலே றுவதா ஈரடி எதுகை*
*வரப்பா டுவது வளமட லாகும்.'* – மு. வீ. யா. ஒ. 126
தொ. வி. 283. உரை.
96

## உலாமடல்

857. கனவின் ஒருத்தியைக் கண்டு புணர்ந்தோன்
நனவின் அவள்பொருட் டாக நானே
ஊர்வேன் மடல்என்று உரைப்பது உலாமடல்.

**இது உலாமடல் இலக்கணம் கூறுகின்றது.**

**இ – ள் : சாக்கிரத்து நின்று நழுவிய சொப்பனத்தின் ஒரு பெண்ணைக்கண்டு கலவி இன்பம் நுகர்ந்தோன் விழித்தபின் அவள்பொருட்டாக மடல் ஊர்வேன் என்று கலிவெண்பாவால் சாற்றுதல் உலா மடலாம் என்றவாறு.**

**கலிவெண்பா என்பது அதிகாரத்தான் வருவித்து உரைக்கப்பட்டது.** (97)

### ஒத்த நூற்பாக்கள்

*'கனவினளுக்கு,*
*ஊர்வன் எனக் கலிவெண்பா உலாமடல்.'* – நவ. 10

*'சொன்னமா தரைக்கண்டு கனவில் சேர்ந்தோன்*
*துணிவன் மடல் என்றதுஉலா மடல்.'* – சித. பாட். 38

*'தருண நன் மாதைஓர் தலைவன் கண்டு*
*உறுப்புநலன் உவந்து உட்குறிப்பு உரைத்தும்*
*கனவினில் சேர்ந்தும் கரமுற இனையாள்*
*துணிவன் மடல்எனச் சொல்வது உலாமடல்.'*
– பி. ம. 32

'கனவில் ஒருமாதினைக் கண்டு அணைந்து இன்பம்
கலந்துபின் விழித்துமாதைக்
காணமல் அவள் பொருட்டாக மடல் ஊர்வதைக்
கலிவெள்ளையால் அரற்றல்
இனை உலாமடலாம்.' — பி. தீ. 20

'கனவில் ஒருத்தியைக் கண்டு கலவி
இன்பம் நுகர்ந்தோன் விழித்த பின்அவள்
பொருட்டுமடல் ஊர்வேன் என்பது கலிவெண்
பாவான் முடிப்பது உலாமடல் ஆகும்.
— மு. வீ. யா. ஒ. 125

97

## உலா இலக்கணம்

858. குழமக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க உரைத்துஆங்கு
இழைபுனை நல்லார் இவர்மணி மறுகின்
மற்றுஅவன் பவனி வரஏழ் பருவம்
உற்றமா ணர்தொழப் போந்தது உலாவாம்.

இஃது உலா இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்: இளமைப் பருவம் உற்ற தலைமகனைக் குலத்தானும் குடிப்பிறப்பானும் மங்கலங்களானும் பரம்பரையானும் இன்னான் என்பது தோன்றக் கூறி, அணிகலன்களான் அலங்கரித்துக்கொண்டு முதன்மை எய்தியமாணர் நெருங்கிய அழகிய வீதியிடத்து அன்னோன் பவனிவரப் பேதை முதலிய ஏழ்பருவ மாணர் கண்டு தொழ உலா வந்தது உலாவாம் என்றவாறு.

'சுடர்த்தொடியார் வீதியிலே தோன்றுதலும்'
— விக்கிரம சோழனுலா.

என்றார் பிறரும். (98)

## ஒத்த நூற்பாக்கள்

'முதனிலை பின்என் நிலைஉலா வெண்கலி.'
– பன். பாட். 215

'பாட்டுடைத் தலைவன் உலாப்புற இயற்கையும்
ஒத்த காமத்து இளையாள் வேட்கையும்
கலிஒலி தழுவிய வெள்ளடி இயலான்
திரிபின்றி நடப்பது கலிவெண் பாட்டே.'
– பன். பாட். 217

'பேதை முதலா எழுவகை மகளிர்கண்டு
ஓங்கிய வகைநிலைக்கு உரியான் ஒருவனைக்
காதல்செய் தலின்வரும் கலிவெண் பாட்டே.' ,, 218

'குடிநெறி மரபு கொளல்கொடை விடியல்
நன்னீர் ஆடல் நல்லணி அணிதல்
தொன்னகர் எதிர்கொள நன்னெடு வீதியின்
மத களிறு ஊர்தல் முதனிலை ஆகும்.' ,, 219

'ஆதி நிலையே குழாங்கொளல் என்றெடுத்து
ஓதிய புலவரும் உளர்என மொழிப.' ,, 220

'வேந்தர் கடவுளர் விதிநூல் வழிஉணர்
மாந்தர் கலிவெண் பாவிற்கு உரியர்.' ,, 221

'நாலு வருணமும் மேவுதல் உரிய
உலாப்புறச் செய்யுள்என்று உரைத்தனர்புலவர்.'
,, 222

'திறந்தெரிந்த பேதை முதல்எழுவர் செய்கை
மறந்தயர வந்தான் மறுகென்று — அறைந்தகலி
வெண்பா உலாவாம்.' – வெண். பாட். செ. 27

'தெருவினில் பேதைமுதல் எழுவோர்கள் திறத்து உவமை
ஒருவனை ஏத்தும் கலிவெண் பாத்தான் உலாவாம்.'
– நவ. 44

'குழமகனை அடையாளம் கலிவெண் பாவால்
கூறிஅவன் மறுகணையக் காதல் கூர்ஏழ்
எழிற்பேதை பதினொன்று பெதும்பை பன்மூன்று
இயல்மங்கை பத்தொன்பான் மடந்தை ஐயைந்து
அழகரிவை முப்பஃதோர் தெரிவை நாற்பான்
ஆம்வயது பேரிளம்பெண் முதலாய் உள்ளோர்
தொழஉலாப் போந்தது உலா.' – சிது. பாட். 37

'தேவர் மக்களில் சிறந்தோன் ஒருவனைப்
புரவியும் பாண்டிலும் பொலியப் பவனிவரு
குழமகன் குலம்முத லியஅடை யாளம்
குறிப்பின் கலிவெண் பாவில் கழறி
அவன்தெரு அணைய ஏழ்பரு வத்துக்
கண்டோர் உவக்கக் கவின்தரு வயதுஏழ்
பேதை; பன்னொன்று பெதும்பை; பன்மூன்று
மங்கை; பத்தொன்பான் மடந்தை; ஐயைந்து
அரிவை; முப்பஃது தெரிவை; நாற்பான்
பேரிளம் பெண்எனும் பெண்முத லானோர்,
தொழஉலாப் போந்தது உலாஎனப் படுமே.' – பி. ம. 31

'உலாவென மலைநதி ஊர்நாடு உயர்மாலை
குலாவிய பரிகரி கொடிமுரசு உயர்கோல்
இசைந்த தசாங்கமும் ஏழ்பரு வத்தார்
வியந்து தொழுதலும் வேண்டுறுப் பாய்அக்
கலிவெண் பாவால் குலமகற் புகழ்தலே.'

– தொ. வி. 260

'மிக்க இளமைப் பருவமாய்
உற்றதலைமகனைப் பிறப்பும் பரம் பரையில்
உறும் குலம் இன்னான் என்பதாய்
உயர் தலைமையாய் மாதர் புடைசூழவே பருவம்
உள பெண்கள் கண்டு தொழவே
மத்த கயம்மீதும் பரி சிவிகைமீதும் பவனி
வருதலை வனைத் துதித்து.

*மான் நேரிசைக் கலியின் வெண்பாவினுல் கூறல்*
*வரும் உலா ஆகும் அன்றே.'* – *பி. தீ. 19*

*'இளமைப் பருவத் தலைமகன் குணமும்*
*குடியும் பிறப்பும் மங்கலம் பரம்பரை*
*இவற்றான் இன்னன் என்பது தோன்ற*
*மாதர் நெருங்கிய வீதி இடத்துஅவன்*
*பவனிவரப் பேதை முதலிய ஏழு*
*பருவப் பெண்களும் பார்த்து வணங்க*
*உலாவந்த தாக உன்னி நேரிசைக்*
*கலிவெண் பாவால் கழறுவது உலாவே.'*

– *மு. வீ. யா. ஒ. 124*

*98*

## உலாமகளின் பருவ வரையறை

859. ஐந்து முதல்ஏழ் ஆண்டும் பேதை; 99

860. எட்டு முதல்நான்கு ஆண்டும் பெதும்பை; 100

861. ஆரிரண்டு ஒன்றே ஆகும் மங்கை; 101

862. பதினன்கு ஆதிபத் தொன்பான் காறும்
எதிர்தரும் மடந்தை; மேல் ஆறும் அரிவை. 102

863. ஆறுதலை யிட்ட இருபதின் மேல்ஓர்
ஆறும் தெரிவை; எண் ணைந்துபே ரிளம்பெண் என்று
ஓரும் பருவத் தோர்க்குஉரைத் தனரே. 103

இவ்வைந்து சூத்திரமும் வெளிப்படை.

### ஒத்த நூற்பாக்கள்

'ஏழு நிலையும் இயம்பும் காலைப்
பேதை பெதும்பை மங்கை மடந்தை

அரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவக் காதல்
நோக்கி உரைப்பது நுண்ணியோர் கடனே.'
– பன். பாட். 220

'பேதைக்கு யாண்டே ஐந்துமுதல் எட்டே.' ,, 221

'பெதும்பைக்கு யாண்டே ஒன்பதும் பத்தும்.' ,, 222

'மங்கைக்கு யாண்டே பதினொன்று முதலாத்
திரண்ட பதின லளவும் சாற்றும்.' ,, 223

'மடந்தைக்கு யாண்டே பதினைந்து முதலாத்
திடம்படும் ஒன்பதிற் றிரட்டி செப்பும்.' ,, 224

'அரிவைக்கு யாண்டே அறுநான்கு என்ப.' ,, 225

'தெரிவைக்கு யாண்டே இருபத் தொன்பது.' ,, 226

'ஈரைந்து இருநான்கு இரட்டி கொண்டது (36)
பேரிளம் பெண்டுக்கு இயல்புஎன மொழிப.' ,, 227

'காட்டிய முறையே நாட்டிய ஆண்பாற்கு
எல்லையும் பெயரும் இயல்புற ஆய்ந்து
சொல்லிய தொன்னெறிப் புலவரும் உளரே.' ,, 228

'பாலன் யாண்டே ஏழ்என மொழிப.' ,, 229

'மீளி யாண்டே பத்துஇயை காறும்.' ,, 230

'மறவோன் யாண்டே பதினன் காகும்.' ,, 231

'திறலோன் யாண்டே பதினைந்து ஆகும்.' ,, 232

'பதினறு எல்லை காளைக்கு யாண்டே.' ,, 233

'அத்திறம் இறந்த முப்பதின் காறும்
விடலைக்கு ஆகும்; மிகினே முதுமகன்.' ,, 234

'நீடிய நாற்பத் தெட்டின் அளவும்
ஆடவர்க்கு உலாப்புறம் உரித்துஎன மொழிப.' ,, 235

'சிற்றில் பாவை கழங்குஅம் மனையே
பொற்புறும் ஊசல் பைங்கிளி யாழே
பைம்புன லாட்டே பொழில்விளை யாட்டே
நன்மது நுகர்தல் இன்ன பிறவும்
அவரவர்க்கு உரிய ஆகும் என்ப.' – பன். பாட். 236

'பகருங்கால் ஐந்தேழ் பதினொன்று பன்மூன்று
அகலாத பத்தொன்பான் ஐயைந்து – இகலாத
முப்பத்தொன்று ஈரிருபான் பேதைமுத லோர்க்குச்
செப்புவர்ஆண்டு எல்லைத் திறம்.'

– வெண். பாட். செ. 26

'பேதைமுதல் எழுவோர்க்குப் பிராயங்கள் பேசும்அளவு
ஆதி ஐந்து, ஏழு, பன்னொன்று, பன்மூன்று, பத்தா, றென்பது,
மீதிருபத்தைந்து, முப்பத்தொன்றும், மிகுநாற்பதென்றே,
ஓதினர்; தொன்னூற் பருணிதர் எல்லாம் உணர்ந்துகொண்டே.'

– நவ. 45

99 – 103

## அநுராகமாலை

864. கனவின் ஒருத்தியைக் கண்டுகேட் டுண்டுயிர்த்து
இனிதின் உணர்ந்ததை இன்னுயிர்ப் பாங்கற்கு
நனவின் உரைத்தல் அநுராக மாலை.

இஃது அநுராகமாலை ஆமாறு கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. இவை மூன்றும் நேரிசைக் கலி வெண்பாவாம் என்று அறிக. (104)

### ஒத்த நூற்பாக்கள்

'கனவின் ஒருத்தியைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்தும்
இனிமையுறச் சேர்ந்ததைத் தன் உயிர்ப்பாங்கனுக்கு உரைத்தது
என நேரிசைக்கலி வெண்பா அநுராகமாலை.' – நவ. 4

31 – 32

*'சொன்னமா தரைக்கண்டு கனவில் சேர்ந்தோன்*
*பாங்கற்கு, இன்னலுரைத் திடுதல் அநு ராகமாலே.'*
*– சித. பாட். 38*

*'பாங்கற்குப் புணர்ந்த கனவினல் தனது*
*இன்னல் வரு ணித்தல் அநுராக மாலே*
*... ... ... ... ... கலிவெண்*
*பாவினல் விரித்துப் பகருவது மரபே.' – பி. ம. 33*

*'தலேவன் ஒரு மங்கையைக் கனவில் கண்டுமால்*
*தரும் அவட்கு இனிமை உறவே*
*காவின் புணர்ந்ததைத் தன் உயிர்ப்பாங்கனேக்*
*கருதியே நேரிசையெனும்*
*கலிவெண் பாவால் கூறல் அநுராகமாலேயாய்க்*
*கவிஞர்கள் உரைப்பார்களே. – பி. தீ. 9*

*'கனவின் ஒருத்தியைக் கண்டுகேட்டு உண்டு உயிர்த்து*
*இனிமை உறப்புணர்ந் ததைத்தன் இன்னுயிர்ப்*
*பாங்கற்குத் தலேமகன் பகர்ந்த தாக*
*நேரிசைக் கலிவெண் பாவான் நிகழ்த்துவது*
*அநுராக மாலேயாம் ஆயுங் காலே.'*
*– மு. வீ. யா. ஒ. 87; தொ. வி. 283 உரை.*
*104*

## மெய்க்கீர்த்திமாலே

865. சொற்சீர் அடியான் தொழில்படு கீர்த்தியைப்
பொற்புற மொழிதல் மெய்க்கீர்த்தி மாலே.

இது மெய்க்கீர்த்தி மாலேயின் இலக்கணம் கூறுகின்றது.

இ – ள்: சொற்சீரடி என்னும் கட்டுரைச் செய்யுளால் குலமுறையில் செய்த கீர்த்தியை அழகுற மொழிதல் மெய்க்கீர்த்திமாலேயாம் என்றவாறு. (105)

### ஒத்த நூற்பாக்கள்

'சொற்சீரடிக் கட்டுரைப்பாக் குலமுறைக் கீர்த்தி புகறல்
மெய்க்கீர்த்தி மாலை.' –நவ. 7

'மருவுசொற் சீர்அடி எனும் கட்டுரைச் செய்யுள்
மரபுவழியில் செய்திடும்
மற்புயன் கீர்த்தியை விரித்தெடுத் தோதல்
வளரும்மெய்க் கீர்த்தி மாலை.' – பி. தீ. 18

'சொற்சீர் அடியெனும் கட்டுரைத் தொடர்பால்
குலமுறை ஆற்றிய கீர்த்தியைக் கூறல்
மெய்க்கீர்த்தி மாலையாம் விளம்புங் காலே.'
மு. வீ. யா. ஒ. 99 ; தொ. வி. 283 உரை.

105

### புகழ்ச்சி மாலை, நாமமாலை

866. மயக்க அடிபெறும் வஞ்சிப் பாவால்
வியத்தகு நல்லார் விழுச்சீர் உரைத்தல்
புகழ்ச்சி மாலை; புருடர்க்கு உரைப்பின்
நாம மாலை யாம்என நவில்வர்.

**இது புகழ்ச்சிமாலையும் நாமமாலையும் ஆமாறு கூறுகின்றது.**

**இ-ள் :** அகவல்அடியும் கலிஅடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவால் வியக்கத்தகும் நல்லாரது விழுமிய சிறப்பைக் கூறுதல் புகழ்ச்சி மாலையாம்; அவ்வஞ்சிப் பாவால் ஆண் மகனைப் புகழ்ந்து பாடுதல் நாம மாலையாம் என்று கூறுவர் புலவர் என்றவாறு. (106)

### ஒத்த நூற்பாக்கள்

'வெள்ளடி இயலான் புணர்ப்போன் குறிப்பின்
தள்ளா இயலது புகழ்ச்சி மாலை.' – பன். பாட். 287

'அதுவே, செங்கலை வண்ணப் பாவும் இயங்கும்.'
– பன். பாட். 286

'ஆடவர் திறத்து வஞ்சி யின்னெறி
நாடிய பாதம் மயங்க வைப்பின்
நாம மாலை; மற்றது மடர்தையர்க்கு
ஆம்எனின் புகழ்ச்சி மாலை ஆகும்.' „ 285

'மைந்தர்க் காயின் வஞ்சிப் பல்வகை
நேர்ந்தஅடி மயக்கம் நாம மாலை.' „ 284

'புரிந்த மயக்கஅடி வஞ்சியால் பொய்தீர்
திருந்திழையார் சீர்பேர் சிறக்கத் — தெரிந்துரைத்தால்
மன்னும் புகழ்ச்சிநன் மாலையாம் மைந்தர்க்காம்
பின்நாம மாலைப்பேர் பெற்று.' – வெண். பாட். செ. 35

'பாதம் பலமயங்கும் வஞ்சி ஆடவரைப் பரவி
ஓதுமது நாமமாலை; உரைத்த அச்செய்யுளினை
மாதரை ஏத்தின் புகழ்ச்சி நன்மாலை.' – நவ. 47

'வஞ்சி, பேசுகுணப் பேர்அடுக்கி மடவார்க்கு ஓதில்
பெரும்புகழ்ச்சி மாலை; அப் படிஆண் பாற்கு
மாசகல உரைக்கில்அது நாமமாலை.' – சித. பா. 36

'குணப்பெயர் அடுக்கிக் கொம்பனை யார்க்கு
வஞ்சியின் அகமிக மகிழ உரைப்பது
பெருமகிழ்ச்சி மாலை; இப்படி ஆடவர்க்கு
நயந்து பாடுவது நாம மாலை.' – பி. ம. 29

'புகழ்ச்சி மாலையாம் பூங்குழ லாரை
இகழ்ச்சியில் குலம்இயை வஞ்சி பாடல்;
நாம மாலையாம் நம்பிகண் புகழ்தலே.' – தொ. வி. 269

'அகவலடியும் கலியின்அடி மயங்கிய வஞ்சி
ஆன அப்பாவினாலே
ஆண்மகனையே புகழ்ந்தே கருத்தளவினில்
ஆற்றுவது நாமமாலை; மகளிர் புகழ்ச்சிமாலை.'
– பி. தீ. 11

அகவ லடிகலி யடியும் மயங்கிய
வஞ்சியின் அரிவையர் மாண்பை உரைப்பது
புகழ்ச்சி மாலையின் பொருளா கும்மே.'
– மு. வீ. யா. ஒ. 96

'அகவ வடிகலி அடியும் மயங்கிய
வஞ்சியால் புருடனை வாழ்த்திப் புகழ்வது
நாம மாலையாம் நாடுங் காலே.' – மு. வீ. யா. ஒ. 92
106

## தாரகை மாலை

867. வகுப்பால் கற்புடை மகளிர்க்கு உள்ள
தகைத்திறம் கூறுதல் தாரகை மாலை.

**இது தாரகைமாலை இலக்கணம் கூறுகின்றது.**

**இ - ள் : வகுப்பினால் அருந்ததிக் கற்பின் மகளிர்க்கு உள்ள இயற்கைக் குணங்களைக் கூறுதல் தாரகை மாலையாம் என்றவாறு. (107)**

ஒத்த நூற்பாக்கள்

'இரண்டு பொருள்புணர் இருபத் தெழுவகைச்
சீரிய பாட்டே தாரகை மாலை.' – பன். பாட். 305
(இதன் கருத்து வேறுகும்)

'ஓதுசந்தத் தால்உரைத்தல் தாரகை மாலை
கோதிலாக் கற்பின் குலமகளை.' – வெண். பாட். செ. 33

'வடமீன்மகள் இயற்கைக்கு உதவுமேல், தாரகைமாலை,'
– நவ. 8

'தாரகை இருபத் தேழையும் தகைபெற
சொல்லணி வகுப்பில் தூசி அணிதக
வழுத்துதல் தாரகை மாலை என்ப.' – பி. ம. 36

முறையின்,
உரை அருந்ததிக் கற்பின் மாதர்கள் குணங்களை
ஓதல் தாரகை மாலையாம்.' – பி. தீ. 13

'அருந்ததிக் கற்பின் அரிவையர்க்கு உள்ள
இயற்கைக் குணங்களை வகுப்பால் இயம்புதல்
தாரகை மாலையாம் சாற்றுங் காலே.'
– மு. வீ. யா. ஒ. 103 ; தொ. வி. 283 உரை
107

## உற்பவமாலை

868. அரிபிறப்பு ஒருபதும் அகவல் விருத்தத்து
உரிதின் புகறல் உற்பவ மாலை.

**இஃது உற்பவமாலை ஆமாறு கூறுகின்றது.**

**இ - ள் : மாயன் பிறப்புப் பத்தனையும் அகவல் விருத்தத்தாற் கூறல் உற்பவமாலையாம் என்றவாறு.**
(108)

### ஒத்த நூற்பாக்கள்

'சேலே யாமை ஏனம் சிங்கம்
கோல வாமனன் மூவகை இராமர்
கரியவன் கற்கி எனவரு கடவுளர்
புரிதரு தோற்றம் தெரிதரப் பராஅய்ப்
பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி
இனமொழி நாட்டி அகவல் விருத்தம்
ஒருபது இயற்றுதல் ஆழியோன் பிறப்பே.'
– பன். பாட். 298

'இசைத்திடுவர் மால்பிறப்பால் ஈரைந்து வாழ்த்துத்
தசப்பிரா துற்பவமாம் தந்து.' – வெண். பாட். செ. 42

'பத்தான் வரினே,
குறைகிலமால் பவம்கூறின் தசப்பிரா துற்பவமே.'
– நவ. 50

'ஆய்ந்ததசப் பிராதுற்ப வம்பத் தான
அரிபிறப்புஆ சிரியவிருத் தத்தால் வாழ்த்தில்.'
–சித. பாட். 40

'பகர்தசப் பிராதுற் பவம்பத் தான
அரிபிறப்பு ஆசிரிய விருத்தம் பத்தால்
வாழ்கென வாழ்த்துதல் மரபா கும்மே.' – பி. ம. 37

'உயர்மால் பிறப்பு ஆசிரிய விருத்தத்தால்
உரைத்தல் உற்பவ மாலையே.' – பி. தீ. 13

'அரிபிறப்பு ஈரைந் தனையும்ஆ சிரிய
விருத்தத்தால் விளம்புவது உற்பவ மாலை.'
மு. வீ. யா. ஒ. 104; தொ. வி. 283 உரை
108

## தானைமாலை முதலியன

869. ஆசுஅற உணர்ந்த அரசர் பாவால்
தூசிப் படையைச் சொல்வது தானை
மாலை ஆகும்; வரலாற்று வஞ்சி
ஞாலம்மேல் தானை நடப்பது சொல்லின்;
செருக்களம் கூறின் செருக்கள வஞ்சி;
விரித்துஒரு பொருளை விளம்பின்அப் பெயராம்.

இது தானைமாலையும் வரலாற்று வஞ்சியும் செருக்கள வஞ்சியும் பொருள் வஞ்சியும் ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: அகவல் ஓசையில் பிறழாது உயர்ந்த அரசர்க்கு உரிய ஆசிரியப்பாவால் முன்னர் எடுத்துச் செல்லும் கொடிப்படையைச் சொல்வது தானைமாலை

யாகும்; போர்க்களத்தில் செல்லும் படைஎழுச்சியைக் கூறின் வரலாற்று வஞ்சியாம்; செருக்களத்தினைக் கூறின் செருக்களவஞ்சி என்னும் பெயர் பெறும்; ஏனைப் புறத்திணைக்கண் துறுத்திக் கூறும் துறைப் பொருளை விரித்துக்கூறின் அத்துறைப்பெயர் பெறும் என்றவாறு. (109)

## ஒத்த நூற்பாக்கள்

'படைத்திறம் சொல்லின் பகர்தானை, வஞ்சி
எடுத்துமேல் சேறல் இயம்பின், — அடுத்தமைந்த
வெற்றிஉரை வாகையாம், வேந்தன்பா ஒன்றினால்
உற்றுரைத்து மாலைப்பேர் ஓது.' – வெண். பாட். செ. 31

'தூசிப்படை ஆசிரிய
விதிதவறுத் தானைமாலை என்றாகும்.' – நவ. 8

'குலமுறை கீர்த்தி பிறப்பு மேம்பாட்டுச் சிறப்பைச்
சொலல் வரலாற்று வஞ்சி.' – நவ. 12

'நிரைகவர் மீட்டல் செலல்ஊன்றல் காவலை நேர்தல் வென்றி
மருவிய வெட்சி கரந்தையும் வஞ்சியும் காஞ்சி நொச்சி
உரைஉழிஞை தும்பை வாகையும் அஃதவை மாலை என்பர்;
செருகு பூவேய்தல் அகவல் எண்மூன்றும் முதல்
அடைவே.' – நவ. 11

'அடுமத யானையைப் படுத்திப் பகையானை எதிர்த்து
இடில் மற்றுஅவ் வஞ்சி மால்வர வாதோரண
மஞ்சரியாம்.' நவ. 13

எப்பொருளும்,
நீதியினால் சொல்லின் அப்பெயரால் வஞ்சி நேர்ந்தனவே.'
– நவ. 47

'செருக்கள வஞ்சியாம் செருமுகத் தாபவை
சுருக்கிய வஞ்சியால் தொடுத்துப் பாடலே.'
– தொ. வி. 270

'வரலாற்று வஞ்சியாம் வல்லறம் முதல்நான்கும்
வருமாறு உரைத்து வஞ்சி பாடலே.' – தொ. வி. 271

'மாலையே அகவலால் வழங்கும்; அவற்றுள்
தானைபோர் வெற்றி தனித்தனிப் புகழ்வது
தானை வஞ்சி வாகைஎன மூன்றும்.' „ 268

'செருக்கள வஞ்சி செருக்களம் கூறல்;
ஆசிரியம் வஞ்சியில் அமைவ தாமே.' – பி. ம. 39

'வரலாற்று வஞ்சிபல் வரலாறு ஓதல்;
ஆசிரியம் வஞ்சியில் அமைவ தாமே.' – பி. ம. 29

பார்த்துநற் குலமுறை பிறப்புமேம் பாட்டுடன்
பலசிறப்பும் கீர்த்தியும்
புதிய வஞ்சிப்பாவினுல் தொகுத்தே புலவர்
புகலின் வரலாற்று வஞ்சி.' – பி. தீ. 15

'எப்பாட் டானும் முப்பஃது இயம்பித்
தானையை விரித்தல் தானை மாலை.' – பி. ம. 35

அகவலின் ஓசை பிறழாத ஆசிரியமாய்
அதன்முனர் எடுத்துச் செலும்
ஆடிய கொடிப்படையினைப் புகழ்ந்து உரைசெய்வது
ஆகுமே தானைமாலை.' – பி. தீ. 14

'சமரத்தில் அறுபட்ட மனிதன்உடல் பரிஉடல்
தந்தி உடலங்கள்தனையும்
தசை இரத்தம் கூளிபேய்பிசாசும் கழுகு
சம்பு நாய்காகம்முதலா
எமதுஎமது எனத்தின்னும் ஆரவாரத்து
எக்களித் திருக்கப் பூதமும்
இசைபாடி ஆடி இங்ஙனம் அருந்தச்சிறப்பு
எய்திட உரைப்பதுவே
அமர்செருக்கள வஞ்சி ஆகும்.' – பி. தீ. 16

மகிழ்நிரைகொள் வதுவெட்சி, கரந்தை மீட்டல்,
மாற்றூர்பால் செலல்வஞ்சி, ஊன்றல் காஞ்சி,
பகர்மதிலைக் காக்குமது நொச்சி, சுற்றிப்
படைவளைத்தல் உழிஞை, பொரல் தும்பை, வென்று
புகழ்படைத்தல் வாகையது, மாலைப் பேரால்
போற்றுவது மாலையுமாப் புகல்வர்; தானை
அகலமுரைப் பதுதானை மாலை; தூசி
அணிவகுப்பில் தாரகைமா லையைச்சொல் ஆய்ந்தே.'
– சித. பாட். 39

'வாய்ந்தசெருக் களவஞ்சி களத்தைக் கூறல்,
வரலாற்று வஞ்சிபல வரலாறு ஓதல்.' ,, 40

'தலைவன் செய்த நிலைபெறு புகழ்புனை
நேரிசை வெண்பா இன்னிசை வெண்பாப்
பஃறொடை வெண்பா மறக்கள வழியே.' பன். பாட். 315

நேரிசை இன்னிசைப் பஃறொடை வெண்பா
போரின் களவழி புகலப் படுமே.' ,, 316

'குறள்சிந்து அளவடி அகவல் அடிவிராய்
வஞ்சிச் செய்யுளின் மன்னவர் மறக்களம்
எஞ்சாது உரைப்பது மறக்கள வஞ்சி.' ,, 317

இயங்குபடை மன்னர் இயற்களம் புகழ்ந்த
மயங்கியல் வஞ்சி மறக்கள வஞ்சி.' – பண். பாட். 318

'விருத்தவகை பத்தான் விளம்பும் அதனை
செருக்களம் எனவே செப்பினர் புலவர்.' ,, 319

'ஆநிரை கவர்ந்து வருபவன் வெற்றி
விளம்புதல் வீர வெட்சி மாலை.' மு. வீ. யா. ஒ. 108

'தழுவார் கொண்ட தம்நிரை மீட்போர்
கரந்தை புனைந்து கனன்றுல வையிற்செலீஇ
மீட்பதைக் கூறல் வெட்சிக் கரந்தை.' ,, 109

'போர்க்கெழு மன்னவர் வஞ்சிப் பூந்தொடை
அணிந்து புறப்படும் அடுபடை எழுச்சிச்
சிறப்பக வலினல் செப்புதல் போர்க்கெழு
வஞ்சி எனப்பெயர் வைக்கப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 110

'விழுமிய குலமுறை பிறப்புமேம் பாட்டின்
பலசிறப் பிசையையும் வஞ்சிப் பாவால்
வழுத்தல் வரலாற்று வஞ்சியாம் என்ப.' ,, 111

'போர்க்களத்து இறந்த புரவி நால்வாய்
மக்கள் உடலேயும் வாயசம் கழுகு
பேய்நாய் பசாசம் பிடுங்கிப் பருகிக்
களித்துப் பாடிய சிறப்பைக் காட்டல்
செருக்கள வஞ்சியாம் செப்புங் காலே.'

– மு. வீ. யா. ஒ. 112

'காஞ்சி புனைந்து கருதார் ஊர்ப்புறம்
ஊன்றலே உரைப்பது காஞ்சி மாலே.' ,, 113

'கோலிய மாற்ருர் கோடல் இன்றி
நொச்சிவேய்ந், தகல்எயில் நோக்கும் திறனை
வழுத்துதல் நொச்சி மாலே ஆகும்.' ,, 114

'மாற்ருர் ஊர்ப்புறம் வளைதர உழிஞை
வனைந்து காலாள் வளைப்பது கூறல்
உழிஞை மாலேயாம் உணருங் காலே.' ,, 115

'தும்பைவேய்ந்து ஒன்ருெரொடு சூழ்ந்து பொருவது
சொல்வது தும்பை மாலே ஆகும்.' ,, 116

'மாற்ருரை வென்று வாகைசூ டுவதை
அகவலினல் அறைவது வாகை மாலே ,, 117

'யானேவயப் படுத்தி அடக்கின வருக்கும்
எதிர்பொரும் யானையை ஈர வெட்டி
அடக்கின வருக்கும் அதட்டிப் பிடித்துச்

சேர்த்த வர்க்கும் வீரச் சிறப்பை
வஞ்சியிற் பாடுவது அதுவா தோரண
மஞ்சரி எனப்பெயர் வைக்கப் படுமே.'

–மு. வீ. யா. ஒ. 118; தொ. வி. 283. உரை
109

## குழமகன்

870. கலிவெண் பாவால் கையினில் கண்ட
குழமக னேச்சொலின் குழமகன் ஆகும்.

இது குழமகன் ஆமாறு கூறுகின்றது.

இ - ள்: கலிவெண்பாவினான் மங்கையர் தம்கையில் கண்ட இளமைத்தன்மை உடைய குழமகனைப் புகழ்ந்து பாடின் குழமகன் ஆகும் என்றவாறு. 110

ஒத்த நூற்பாக்கள்

'குழமகன் மேவில்அவ்
ஒண்பாக் குழமகனும் உற்று.' – வெண். பாட். செ. 27

'ஒண்டொடியார்,
மருமலர்க் கையில் குழமகன் மேல்வைத்த மன்விருத்தம்
தருகலி வெண்பாக் குழமகனும் என்று சாற்றுவரே.'
– நவ. 44

உயர்பெண்கள் தம் கையில்கண்ட இளமைத்தன்மை
உடைய குழமகனைப் புகழ்ந்து
ஓதல் குழமகன் ஆகும்.' – பி. தீ. 26

'கலிவெண் பாவால் காரிகை யார்கரம்
கண்ட இளமைத் தன்மையை உடைய
குழமகன் தன்னைப் புகழ்ந்து கூறுவது
குழமகன் ஆம்எனக் குறிக்கப் படுமே.'

– மு. வீ. யா. ஒ. 153; தொ. வி. 283. உரை
110

## பாதாதி கேசம், கேசாதி பாதம்

871. அடிமுதல் முடிஅளவு ஆக இன்சொல்
படர்வுறு கலிவெண் பாவால் கூறல்
பாதாதி கேசம் கேசாதி பாதம்
ஓதின்அப் பெயரான் உரைக்கப் படுமே.

**இது பாதாதிகேசமும் கேசாதிபாதமும் ஆமாறு கூறுகின்றது.**

**இ–ள்: கலிவெண்பாவால் பாதம் முதல் முடி அளவும் கூறல் பாதாதி கேசமாம்; முடிமுதல் அடி அளவுங்கூறல் கேசாதிபாதமாம் என்று கூறப்படும் என்றவாறு. (111)**

### விளக்கம்

*தெய்வங்களையும் தெய்வம் போல்வாரையும் பாதாதிகேச மாகவும் ஏனையாரைக் கேசாதி பாதமாகவும் பாடுதல் மரபு.*

*பாதம் – அடி; கேசம் – மயிர்முடி.*

*'அகவடி உயிரே விரல்புற வடியே*
*பரடே கழலே கணைத்தாள் முழந்தாள்*
*குறங்கே அல்குல் கொப்பூழ் வயிறுஅதன்*
*வரையே இடையே மயிரின் ஒழுங்கே*
*முலைஉகிர் விரலே முன்கை அங்கை*
*தோள்இணை கழுத்தே முகம்நகை செவ்வாய்*
*மூக்கே கண்ணே காது புருவம்*
*நுதல்எனும் ஆறைந்து உறுப்புடன் இரண்டும்*
*பாதம் ஆதியா வேண்டுதல் புணர்ப்பின்அஃது*
*ஓதிய பாதம் ஆதியாம் என்ப.'* – பன். பாட். 332

'உறுப்பமைந்த,
பாதாதி கேசமும் கேசாதி பாதமுமா
ஓதும் கலிவெண்பா ஒன்று.' – வெண். பாட். செ. 29

'கடிதலில்லாக் கலிவெண்பாப் பகரும் அவயவங்கள்
முடிவது கேசமும், கேசம்முதல் அடிஈறும் வந்தால்
படிதிகழ் பாதாதி கேசமும் கேசாதி பாதமுமாம்
வடுவில வெண்பா விருத்தம் பலஅங்கமாலை என்னே.'
– நவ. 42

'அகங்கால் உகிர்விரல் மீக்கால்பரடு அங்கணை முழந்தாள்
மிகுங்கால் துடைஇடை அல்குல் கொப்பூழ்வயின் வெம்முலையாய்
நகம்சார்விரல் அங்கைமுன்கை தோள்கண்டம் முகம்நகைவாய்
தரும்காது இதழ்மூக்கு கண்புருவம் நெற்றி தாழ்குழலே.'
– நவ. 43

'கலிவெண் பாவால்
பாதாதி கேசம்கே சாதி பாதம்
மகிழஉரைத் திடிலந்தப் பேராம்.' – சித. பாட். 35

'பாதாதி கேசம் கேசாதி பாதம்
எண்ணுன்கு உறுப்பும் ஏற்கவரு ணித்துக்
கலிவெண் பாவால் கட்டுரை செய்வது
அவ்வப் பெயரின.' – பி. ம. 26

'உற்றஅடி முடிவரை கலிவெண் பாவினுல்
ஓதல் பாதாதி கேசம்;
ஒளிரும்முடி அடிவரை கலியின் வெண்பாவால்
உரைத்தல் கேசாதி பாதம்.' – பி. தீ. 24

'கால்முதல் முடிவரை கலிவெண் பாவால்
பாடு வதுபா தாதி கேசம்
ஆகும் என்மனுர் அறிந்திசி னேரே.' – மு. வீ. யா. ஓ. 145

'கலிவெண் பாவால் முடிமுதல் கால்வரை
கிளத்தல் கேசாதி பாதம் ஆகும்.' ,, 146

## யானைத் தொழில்

872. நிலம்எழில் உயரம் நேர்ந்த வயது
குலம்அளவு இலக்கணம் மும்மதம் கோடல்
அடுத்திடின் கோறல்கண்டு அரசனை அறிதல்
தொடுத்தல் வஞ்சி யானைத் தொழிலாம்.

இஃது யானைத்தொழில் ஆமாறு கூறுகின்றது.

இ – ள்: கிரிசரம் நதிசரம் வனசரம் ஆகிய நிலம், அவயவங்களின் அளவு, ஏழு முழு உயரம், தருண வயது, பிறந்த நிலத்தான் வீரம் பெறும் குலநன்மை, ஒன்பது முழ நீளமும் முப்பத்திரண்டு முழச் சுற்றும் உடைத்தாய இலக்கணம், மும்மதம் கோடல், அடுத்த பொழுதிற் கோறல், அரசனைக் கண்டு அறிதல் இவை யிற்றை வஞ்சிப்பாவால் தொடுத்துப் பாடுதல் யானைத் தொழிலாம் என்றவாறு. (112)

### ஒத்த நூற்பாக்கள்

*'மூவகை நிலனும் மூவகை நிறைவும்
பல்வகைத் தேயமும் எழுவகை உறுப்பும்
வருணமும் யாண்டும் ஐவகைக் கொலையும்
இருவகை நடையும் ஐவகை உணர்வும்
உடையோர்ப் பேணலும் உளப்படப் பிறவும்
எண்ணிய வேளாண் பாவின் நலம்பெற
எண்ணி உரைப்பது யானைத் தொழிலே.'*

– பன். பாட். 270.

*'கிரிசரம் வனசரம் நதிசரம் என்றிவை
நிலைபெறு நிலன்என நிறுத்திசி னோரே.'* „ 271

*'உயரமும் நீளமும் சுற்றும் அளவினில்
குறையாது இயல்வது நிறைஎனப் படுமே.'* „ 272

'பல்வகைத் தேயம் கொல்களிறு பிறக்கும்
பல்வகைத் தேயமும் என்மனார் புலவர்.' – பன். பாட். 273

'பாதம் நாலும் கையும் வாலதியும்
கோசமும் நிலனுறத் தீண்டுதல் குறியே.' ,, 274

'குலம்எனப் படுவது பலவகை வருணமும்
நலன்உற உரைக்கும் நலத்தது என்ப.' ,, 275

'நலம்மிகு வாழ்நாள் பொலிவுற இயம்புதல்
யாண்டுஎன மொழிப இயல்நெறிப் புலவர்.' ,, 276

'கையும்முற் கூறும் கடியபிற் கூறும்
கூர்ங்கோடு இரண்டும் கொலைத்தொகை வகையே.' ,, 277

'முன்னர் ஊன்றிய காற்குறி தன்னில்
பின்னர்ப்பதம் இடுவது தோரணம் என்ப.' ,, 278

'பிறழ விடுவது வக்கிரம், அதுவே
சாரிகை விகற்பமும் ஆகும் என்ப.' ,, 279

'நன்மை இயற்றலும் தீமை இயற்றலும்
பற்றிய நன்மை தீமை நினைத்தலும்
கயக்கறு காலம் நினைத்தலும் புலனே.' ,, 280

'வழுவாது உடையோர் ஏவல் இயற்றல்
உடையோர்ப் பேணல் என்மனார் புலவர்.' ,, 281

'அகவலும் உரித்துஎன அறைகுநர் உளரே.' ,, 282

'இசைந்த நிலம்குலம் ஒத்த எழிலோ(டு)
அசைந்த பிராயத் தளவும் – இசைந்தமதம்
துன்னவஞ்சி வீடுயிர்கோள் மன்னன் தொடர்ந்தணைத்தல்
சொன்னவஞ்சி யானைத் தொழில்.' – வெண். பாட். செ. 33

'பிறந்த நிலம்குலம் ஒக்கம்அளவு பிராயம் எழில்
சிறந்தமாக் கோபக் கிரமத்தில் விட்டாங்கு தீர்சினத்தால்
இறந்து உயிர்கோடல் செயக்கண்டு இறைகந்தினில் பிணித்தல்
அறைந்திடும் வஞ்சி உரன் உடை யானைத்தனி தொழிலே.'

– நவ. 48

'பாய்ந்திடுமும் மதத்தானைத் தொழில்நேர் கொல்லும்
படைக்களிற்றைக் கண்டரசன் பற்றிச் சேர்தல்.'
– சிதம். பாட். 40

'பொருமதக் களிற்றைப் பொருநர் கண்டு
ஆடலில் சேர்த்தல் ஆனைத் தொழில்; இது
ஆசிரியம் வஞ்சியில் அமைவ தாமே.' – பி. ம. 39

112

## ஆற்றுப்படை

873. அரசர் பாவால் ஆற்றுப் படைமேல்
உரைசெய் தவையென்று ஓர்ந்தனர் கொளலே.

இஃது ஆற்றுப்படை இலக்கணம் மாட்டேற்றான் உணர்த்துகின்றது.

இ-ள்: ஆற்றுப்படையாவது, மேலே புறத்திணையின் கண்,

'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரத் தெரித்தஆற் றுப்படை'
– இ. வி. பு. 19

எனக்கூறிய பொருள்மேல் ஆசிரியப்பாவால் சொல்லைச் சேர்த்துப் பாடப்படுவது என்று ஆராய்ந்து கொள்க என்றவாறு. ஓர்ந்து கொள்க என முற்றெச்சமாக்கிக் கொள்க. (113)

### ஒத்த நூற்பாக்கள்

'புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
இரவலன் வெயில்தெறும் இருங்கா னத்திடை
வறுமை யுடன்வருஉம் புலவர் பாணர்

பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டுஅப்
புரவலன் நாடுஊர் பெயர்கொடை பராஅய்
ஆங்குநீர் செல்கென விடுப்பதுஆற் றுப்படை.'

– பன். பாட் 320

'ஓங்கிய அதுதான் அகவலின் வருமே.' ,, 321

'புலவராற் றுப்படை புத்தேட்கும் உரித்தே.' ,, 322

'ஒன்றும் அகவலா ஒண்புலவர் யாழ்ப்பாணர்
குன்றாத சீர்ப்பொருநர் கூத்தரே–என்றிவரை
ஆங்கொருவன் ஆற்றுப் படுத்த பரிசறைந்தால்
பாங்காய ஆற்றுப் படை.' – வெண். பாட். செ. 30

'புலவன்,
நிறைந்த பொருநரைப் பாணரைக் கூத்தரை நீள்நிதியம்
பெறும்படி ஆற்றுப் படுப்பன ஆசிரி யம்பெறுமே.' – நவ. 51

'புகழ்அகவ லாற்புலவர் பாணர் கூத்தர்
பொருநர்முத லவரையாற்று எதிர்ப்பா டாகப்
பகருமது ஆற்றுப் படையாம்.' – சித. பாட். 35

'ஆற்றுப்படை என்ப ஆற்றெதிர்ப் படுத்திய
புலவர் பாணர் பொருநர் கூத்தர்
பலபுகழ் அகவற் பாவொடு பாடலே.' – தொ. வி. 266

'விறலியர் பாணர் கூத்தர் பொருநர் என்று
ஓது நால்வருள் ஒருவரை அகவலால்
அங்கொரு தன்மை ஆற்றுப் படுத்துப்
பகர்வது ஆற்றுப் படையென மொழிப.' – பி. ம. 25

'உயர்விறலி பாணர் கூத்தர்
பலபொருநர் இந்நால் வரில்ஒருவர் பரிசுஉதவு
பரிசினுக்கு ஏகு வாரைப்
பரிசுஉற்று வருவோர்கள் ஆற்றினிடை யேகண்டு
பரிசு உதவு தலைவன் கொடைநிலை
கீர்த்தி கொற்றமும் சாற்றல் ஆற்றுப்படை.' – பி. தீ. 21

*'அகவற் பாவால் விறலி பாணர்*
*கூத்தர் பொருநர் நால்வருள் ஒருவர்*
*பரிசிற் குப்போ வாரைப் பரிசு*
*பெற்று வருவார் ஆற்றிடைக் கண்டு*
*தலைவன் கீர்த்தியும் கொடையும் கொற்றமும்*
*அறைவது ஆற்றுப் படையா கும்மே.'*

– *மு. வீ. யா. ஒ. 129*

*113*

## தூது

874. பயில்தருங் கலிவெண் பாவி னாலே
உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூதுஎனப்
பாட்டியல் புலவர் நாட்டினர் தெளிந்தே.

இது தூது இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்: அகலக்கவியில் பயின்று வரும் கலிவெண்பாவினாலே பாணன் முதலாகப் பாங்கன் ஈறாக விடுக்கும் உயர்திணை இருபாலினையும், கேளா மரபினவற்றைக் கேட்பனவாகக் கூறி விடுக்கும் அன்னமும் கிளியும் வண்டும் மயிலும் குயிலும் முதலாயின அஃறிணைப் பொருளையும், இளையகலாம் முதியகலாம் இவற்றின் துனி நீக்கற்கு வாயிலாக விடுத்தல் முன்னர் உடன்படுத்தும் தூது எனப் பாட்டிலக்கணத்தை உணர்ந்த புலவர் ஆராய்ந்து கூறினர் என்றவாறு.

இத்துணையும் அகலக்கவி இலக்கணம் கூறினர்.

(114)

ஒத்த நூற்பாக்கள்

*'இருதிணையை விடல்தூது.'* – *சித. பாட். 38*

*'இருதிணை யுடன்அமை இயலை உரைத்துத்*
*தூதுசொல விடுவது தூது; இது கலிவெண்*
*பாவினல் விரித்துப் பகருவது மரபே.'* — *பி. ம. 33*

*114*

*'ஆணும் பெண்ணும் அவரவர் காதல்*
*பாணன் முதலிய உயர்திணை யோடும்*
*கிள்ளை முதலிய அஃறிணை யோடும்*
*சொல்லிய தூது போய்வா என்னக்*
*கலிவெண் பாவால் அறைவது தூது.'*
— *மு. வீ. யா. ஒ. 151; தொ. வி. 283. உரை*

## அகலக்கவிக்குச் சிறப்புவிதி

815. அகப்பொருள் கூறும் ஆசிரி யத்துள்
புகப்பெறு வஞ்சி யடி,பொரு ளன்றி
மிகக்கலி வாரா, மேவும் வஞ்சி
தொகைப்பெறு, தனித்துச் சொல்லப் படுமே.

**இது மேல் கூறப்பட்ட அகலக்கவிகளில் சிலவற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.**

**இ-ள்: அகப்பொருளைக் கூறும் ஆசிரியப் பாவினுள் வஞ்சியடி உறல் ஆகா; அவ்வகப் பொருளினன்றி ஏனைய பொருள்மேல் பெரும்பான்மையும் கலி வாரா; வஞ்சிப்பாத் தொகை பெற்று நிற்கப்பெறு, தனித்துச் சொல்லப்படும் என்றவாறு. (115)**

### ஒத்த நூற்பாக்கள்

*'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்*
*பாடல் சான்ற புலனெறி வழக்கம்*
*கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்*
*உரிய தாகும் என்மனார் புலவர்.'* — *தொ. பொ. 53*

என்பதனால் அகப்பொருளுக்குக் கலிப்பாவே மிக ஏற்றது. ஆசிரியமும் வெண்பாவும் அகம்புறம் இரண்டிற்கும் உரிய; வஞ்சி அகத்திற்கு ஏலாது என்பது போந்த பொருளாக்க் கொள்க.

'ஆய அகப்பொருள்மேல் ஆசிரியப் பாவினுள்
மேயசீர் வஞ்சியடி மேவாது – தூய
அகப்பொருள் மேலன்றி அருங்கலிகள் வாரா
தொகப்பெறு வஞ்சி தொடர்ந்து.' – வெண். பா. செ. 43

*115*

## அகலக் கவிக்குப் பெயரிடுமாறு

876. பொருள்இடம் காலம் தொழில்உறுப்பு எல்லை
செய்தோன் செய்வித் தோன்பெய ராலே
எய்தும் அகலக் கவிக்குஇடும் பெயரே.

இஃது அகலக்கவியுள் சிலவற்றிற்குப் பெயராமாறு விதந்து கூறுகின்றது.

இ – ள் : பொருளானும் இடத்தானும் காலத்தானும் தொழிலானும் உறுப்பானும் அளவானும் செய்தோன் பெயரானும் செய்வித்தோன் பெயரானும் அகலக்கவி பெயர்பெறும் என்றவாறு.

பொருள்பற்றி வந்தன ஆசாரக்கோவை முதலியன; இடம்பற்றி வந்தன மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை என்பன; காலம் பற்றி வந்தன வேனில்விருத்தம், வசந்தமாலை என்பன; தொழில் பற்றி வந்தன யானைத் தொழில், ஊசல் முதலியன; உறுப்புப்பற்றி வந்தன பயோதரப்பத்து நயனப்பத்து முதலியன; செய்தோன் பெயர்பற்றி வந்தன அகத்தியம், தொல்காப்பியம் முதலியன; செய்வித்தோன் பெயர்பற்றி வந்தன பாண்டிக்கோவை முதலியன. பிறவும் அன்ன. (116)

## ஒத்த நூற்பாக்கள்

'தொடர்ந்த பெயர்கள் தொழில்அளவு காலம்
இடம்பொருள் பாஉறுப்போ(டு) எல்லை – நுடங்கிடையாய்
பாடினான் பாடுவித்தான் பாடப் படுபொருளான்
நீடும் பிறவும் நிறைந்து.' – வெண். பாட். 45

'பேசின்முதல் நூல்பொருளோடு அளவு தன்மை
செறிமிகுதி செய்வித்தோன் கருத்த னோடும்
திகழுமிடு குறியானும் நூற்குப் பேராம்.' – சித. பாட். 43

'ஆசில் முதல்நூல் பொருளோடு அளவு
தன்மை மிகுதியே செய்வித்தோன் கருத்தன்
இடுகுறி இவற்றான் எய்தும் பெயரே.' – பி. ம. 43

'தொகைநிலை பலரால் சொல்லப் பட்டுப்
பலபாட் டாக வருநவும் ஒருவரால்
பகரப் பட்டுப் பலபாட் டாக
வருநவும் ஆம்என வழுத்தினர் புலவர்.' – மு. வீ. அ. செ. 2

'அவைதாம்,
கருதரு பொருள் இடம் காலம் தொழில்எனும்
நான்கினும் பாட்டினும் அளவினும் நடக்கும்.' ,, 3

116

## பாவிற்கு வருண உரிமை

877. மறையோர் மன்னர் வணிகர்சூத் திரர்க்கு
முறையான் வெள்ளை முதல்நான்கு எய்தும்.

**இது செய்யுளியலுள் கூறிய வெண்பா முதலிய நான்கு பாவிற்கும் வருணஉரிமை கூறுகின்றது.**

**இ – ள் : அந்தணர் முதலிய நான்கு வருணத்தவர்க்கும், முறையானே வெண்பா அந்தணர்க்கு உரியபா என்றும், அகவல் அரசர்க்கு உரிய பா என்றும், கலிப்பா**

**வணிகர்க்கு உரிய பா என்றும் வஞ்சிப்பா சூத்திரர்க்கு உரிய பா என்றும் பெயர் பெற்று நடக்கும் என்றவாறு.**

**(117)**

ஒத்த நூற்பாக்கள்

*'அந்தணர் சாதி ஆகிய வெள்ளை.'* — *பன். பாட். 162*

*'காவலர் சாதி ஆகிய அகவல்.'* ,, *163*

*'நெடுநிலைக் கலியே வணிகர் சாதி.'* ,, *164*

*'எஞ்சிய வேளாண் சாதி வஞ்சி.'* ,, *165*

*'வேறுமறை யோர்ஆதி நாற்சாதி வெள்ளைமுதல்*
*கூறுநிலை முல்லை குறிஞ்சியே — மாறு*
*மருதநிலம் நெய்தல்நிறம் வான்மையே செம்மை*
*கருதரிய பொன்மையே கார்.'* — *வெண். பாட். பொ. 1*

*'வேதியன் வேந்தன் வணிகன் வேளாளன் எனமுறையே*
*ஓதுவார் வெண்பா அகவல் கலிவஞ்சி ஓதவற்றின்*
*பேதமும் அவ்வகை யானே வரும்என்பர்.'* — *நவ. 80*

*'வெண்பா முதல்நாற் பாவும்அவ் வவற்றோடு*
*ஒத்து நடைபெறும் ஒருமூன்று இனமும்*
*மறையவர் முதல்நால் மரபின்வந் தோர்க்கு*
*ஆம்மரபு என்ப அறிந்திசி னோரே.'* — *பி. ம. 46*

*117*

## திணை உரிமை

878. முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்
வெள்ளை முதற்பா வினுக்குரி யனவே.

**இது நான்கு பாவிற்கும் திணை உரிமை கூறுகின்றது.**

**இ - ள் : முல்லைத்திணைக்கு வெண்பாவும் குறிஞ்சித் திணைக்கு ஆசிரியப்பாவும் மருதத்திணைக்குக் கலிப்பாவும் நெய்தல் திணைக்கு வஞ்சிப்பாவும் உரியவாம் என்றவாறு.**

குறிஞ்சித்திணை முற்கூறப்பெருத முறையல கூற்ருனே, பாலைத்திணைக்கு மருட்பா உரித்தாதல் கொள்க. (118)

[குறிப்பு: *ஒத்த நூற்பாக்கள் 'பூவும் சாந்தும்' பாட். 124 என்ற நூற்பா இறுதியில் கூறப்படும். ஏனைய பாட்டியல்களில் 'முல்லை குறிஞ்சி' பாட். 118 முதல் 'பூவும் சாந்தும்' பாட். 124 என்ற நூற்பா காறும் கூறப்பட்ட செய்திகள் பாக்களை அடிஒற்றித் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.*] *118*

## நிற உரிமை

879. வெண்மை செம்மை கருமை பொன்மை
உண்மை நிறம்பா ஒருநான் கினுக்கே.

இது நான்கு பாவிற்கும் நிற உரிமை கூறுகின்றது.

இ - ள்: வெண்பா முதலிய நான்கு பாவிற்கும் முறையானே வெண்மையும் செம்மையும் கருமையும் பொன்மையும் உரியவாம் என்றவாறு. (119)

## வெண்பாவிற்கு நாள் உரிமை

880. கார்த்திகை முதலாக் கட்செவி காறும்
சீர்த்தகு வெண்பாச் சிறந்த நாளே.

இது நான்கு பாவிற்கும் நாள் உரிமை கூறுவனவற்றுள் வெண்பாவுக்கு உரியநாள் இவை என்கின்றது.

இ - ள்: காத்திகை முதலாக ஆயில்யம் ஈருக ஏழு நாளும் சிறப்புடைய வெண்பாவுக்குச் சிறந்தனவாம் என்றவாறு. (120)

விளக்கம்

**குறிப்பு:** *கார்த்திகை, உரோகணி, மிருக சீரிடம், திருவா திரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம் என்ற ஏழும் வெண்பாவிற்கு உரிய நாள்களாம்.* ***120***

## ஏனைய பாக்களுக்கு நாள் உரிமை

881. மகம்முதல் விசாகம் வரைஅக வற்கும்
பனைமுதல் புள்வரை பகர்ந்திடு கலிக்கும்
சதையம் முதற்சோறு அளவும்வஞ் சிக்கும்
உரிய என்ப உணர்ந்திசி னோரே.

இஃது ஏனைய மூன்று பாவிற்கும் நாள் உரிமை கூறுகின்றது.

இ - ள்: மகம் முதல் விசாகம் வரை ஏழு நாளும் அரசர்பாவுக்கும் அநுடம் முதல் அவிட்டம்காறும் ஏழு நாளும் கலிப்பாவுக்கும் சதயம் முதல் பரணி வரை ஆறு நாளும் வஞ்சிப்பாவுக்கும் உரிய நாளாம் என்றவாறு. (121)

விளக்கம்

*மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம் என்ற ஏழும் ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்களாம்.*

*அநுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம் என்ற ஏழும் கலிப்பாவிற்கு உரிய நாள்களாம்.*

*சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுவினி, பரணி என்ற ஆறும் வஞ்சிப்பாவிற்கு உரிய நாள்களாம்.* ***121***

## இராசி உரிமை

882. கற்கட கம்தேள் மீனம் மூன்றும்
முற்படு பாவி னிற்படும் இராசி;
மேடமும் சிங்கமும் வேணுவும் அகவற்
பாடுறும்; மிதுனமும் துலையும் கும்பமும்
கலிக்குரித் தாகும்; இடபமும் கன்னியும்
ஒலிப்படு மகரமும் வஞ்சிக்கு உரிய.

இது நான்கு பாவுக்கும் இராசி உரிமை கூறுகின்றது. பொருள் வெளிப்படை.

நாளும் இராசியும் கூறிய முறையால் பாட்டுடைத் தலைவன் பெயர்க்குப் பொருத்தம் உடையன கொண்டு பாடுக என்பது பயன். (122)

விளக்கம்

**வெண்பாவின் இராசி** — *கடகம், விருச்சிகம், மீனம்*
*நண்டு தேள் மீன்*

**ஆசிரியப்பாவின் இராசி** — *மேடம், சிங்கம், வேணு*
*ஆடு அரி வில்*

**கலிப்பாவின் இராசி** — *மிதுனம், துலாம், கும்பம்*
*இணை தராசு குடம்*

**வஞ்சிப்பாவின் இராசி** — *இடபம், கன்னி, மகரம்*
*காளை மணவாப்பெண் முதலை*

*பன்னிரண்டு இராசிகளும் முறையே மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆவன அறிக.* 122

## கோள் உரிமை

883. திங்கள் வியாழம் செங்கதிர் செவ்வாய்
புந்திகன் மந்தன் புகர்பெறும் பாந்தள்
வெள்ளை முதல்நான் கினுக்கும் இரண்டிரண்டு
எள்ளா வகையான் கொள்ளும் கோளே.

**இது நான்கு பாவிற்கும் கோள் உரிமை கூறுகின்றது.**

**இ-ள்: சந்திரனும் பிரகஸ்பதியும் வெண்பாவிற்கு உரியோர்; ஆதித்தனும் செவ்வாயும் ஆசிரியப்பாவிற்கு உரியோர்; புதனும் சனியும் கலிப்பாவிற்கு உரியோர்; சுக்கிரனும் பாம்பும் வஞ்சிப்பாவுக்கு உரியோர் என்றவாறு.**

**இதுவும் உரிமை அறிந்து கூறுக என்பது பயன்.**

**(123)**

விளக்கம்

*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி இராகு கேது என்ற ஒன்பான் கோள்களுள் நிழற்கோள்களாகிய இராகு கேது இரண்டனையும் பாந்தள் என அடக்கி எட்டாக்கி நான்கு பாக்களுக்கும் இவ்விரண்டாகப் பகுத்தவாறு.*

*வியாழம் – குரு; புந்திகன் – புதன்; மந்தன் – சனி; புகர் – வெள்ளி; பாந்தள் – இராகு, கேது.* *123*

## பூ முதலியவற்றின் நிற உரிமை

884. பூவும் சாந்தும் கலையும் அணியும்
பாஉறு நிறமெனப் பாத்தனர் கொளலே.

**இது நான்குபாவிற்கும் உரிய கோள்களின் பூவும் சாந்தும் கலையும் கலனும் இப்பண்பின என்கின்றது.**

இ – ள் : சூடுவன பூவும், பூசுவன சாந்தும், உடுப்பன கலையும், அலங்கரிப்பன அணியும், வெள்ளையும் சிவப்பும் கருமையும் பொன்மைநிறமும் ஆம் என்றவாறு. (124)

### விளக்கம்

*மருட்பாவிற்குக் கருஞ்சிவப்பை விடுத்து வெண்சிவப்பு நிறம் கொள்ளப்படும் என்பது.*

### ஒத்த நூற்பாக்கள்
### (118 – 124)

*'அந்தணர் சாதி ஆகிய வெள்ளைக்குச்*
*சந்திரன் தன்னொடு தகைமிகு வியாழம்*
*கடவுளர்; கார்த்திகை முதல்ஏழ் நாளாம்;*
*மீனம் கடகம் தேளே ஓரை;*
*சந்தனம் விரைபூ அந்தண் மல்லிகை;*
*வெண்மதி நிறனே வண்ணம்; நிலனே*
*முல்லை என்னச் சொல்லினர் புலவர்.'* – பன். பாட். 162

*'காவலர் சாதி ஆகிய அகவற்கு*
*ஆகிய கடவுளர் செங்கதிர் செவ்வாய்;*
*நாளே மகம்முதல் நாள்ஏழ் ஆகும்;*
*சிங்கம் தனுவே மேடம் ஓரை;*
*செஞ்சந் தனம்விரை கமழும் பூவே;*
*செந்நிறம் நிறனே; நன்னிலம் குறிஞ்சி.'* – பன். பாட். 163

*'நெடுநிலைக் கலியே வணிகர் சாதி*
*கடவுளர் சனிபுதன்; கருதிய நாளே*
*அனுடம்முதல் ஆறே; ஓரை துலாம்குடம்*
*மிதுனம்; சந்தனம் விரைபூச் சண்பகம்;*
*பொன்னிறம் நிறனே; நன்னிலம் நெய்தல்.'*
– பன். பாட். 164

'எஞ்சிய வேளாண் சாதி வஞ்சி;
நாளே அவிட்டம் முதல்ஏழ் நாளாம்;
இடபம் கன்னி மகரம் ஓரை;
சார்ந்த விரையே தண்ணறுங் கலவை;
ஏந்திய போதே இன்னறு நீலம்;
நீல நிறனே; நெடுநிலம் மருதம்.' – பன். பாட். 165

'நால்வகைப் பாவிற்கும் மேலோர் வகுத்த
இனங்களும் பெறும்என நினைந்தனர் கொளலே.' ,, 166

'நால்வகைப் பாவும் நால்வகைக் குலத்தின்
பால்வகைப் படுமே; முதலன இரண்டின்
புணர்ச்சி மருட்பாப் பொருந்தா வருணம்.' ,, 167

'நாளும் ஓரையும் நலத்தகு நிலனும்
விரையும் சாதியும் நிறனும் குணனும்
உரைபெறும் பாலார்க்கு உடைய என்ப.' ,, 168

'அந்தச் சாதிக்கு அந்தப் பாவே
தந்தனர் புலவர் தவிர்ந்தன வரையார்.' ,, 169

'வெள்ளையும் அகவலும் விருத்தமும் கலியும்
வஞ்சியும் எஞ்சா மங்கலம் பொருந்தும்.' ,, 170

'வெள்ளை அகவல் விருத்தம் கலியே
வஞ்சி என்றிவை மங்கலப் பாவே.' ,, 171

'வேறுமறை யோராதி நாற்சாதி வெள்ளைமுதல்
கூறுநிலை முல்லை குறிஞ்சியே – மாறு
மருதநிலம் நெய்தல்; நிறம் வான்மையே செம்மை
கருதரிய பொன்மையே கார்.' – வெண். பாட். பொ. 1

'கார்த்திகை மாசிபனை குன்றுதி காட்டுகநாள்
மூத்த இராசிநான் மூன்றினையும் – நீர்த்தசீர்
மேதினிமேல் ஆசிரியம் வஞ்சிகலி வெள்ளைஎன
ஓதிய மே டாதியில் ஓட்டு.' ,, 2

'ஓட்டுமதி பொன்வெள்ளை ஒண்கதிரோன் சேயகவல்
காட்டியமால் காரி கலிக்காகும் – ஈட்டும்
புகர்பாம்பு வஞ்சிக்காம் பூவிரையோ டாடை
பகர்நிறத்தால் கொள்கஅணி பாட்டு.' – வெ. பா. பொ. 3

'சாதி நிலம்நிறம் தகுநாள் இராசிகோள்
ஓதினர் ஆறும் ஒவ்வொரு பாவிற்கே;
வெண்பா முதற்குலம் முல்லை வெண்மை
கார்த்திகை முதல்ஏழும் கடகம் விருச்சிகம்
மயிலை(மீன்) மதிகுரு வழங்கும் இயல்பே.' – தொ. வி. 295

'அகவற்கு அரசர் அருங்குலம் குறிஞ்சி
குருதி மகம்முதல் கொண்டெழு மேடம்
அரிதனுச் செவ்வாய் ஆதவன் இயல்பே.' ,, 296

'கலிக்கே வணிகம் கழனி பொன்மை
குலாம்பனை முதல்ஆறும் குடமொடு மிதுனம்
துலாம்புதன் சனிஎனத் தொக்குஇவை ஏற்கும்.' ,, 297

'வஞ்சிக்கு ஈறது இயல்வருணம் நெய்தல்
அஞ்சனம் அவிட்டம் ஆதி ஏழும்
விடைபெண் கலைபுகர் விடத்தரவு இயலுமே.' ,, 298

'வெண்பா முதல்நாற் பாவும்அவ் வவற்றோடு
ஒத்து நடைபெறும் ஒருமூன்று இனமும்
மறையவர் முதல்நால் மரபின்வந் தோர்க்கு
ஆம்மரபு என்ப அறிந்திசி னோரே.' – பி. ம. 46

'முல்லை குறிஞ்சி மூசு மருதம்
நெய்தல் என்ன எய்தும்நா னிலமும்
திகழும் வெண்மையும் செம்மையும் பொன்மையும்
கருமையு மாகக் கருதுநா னிறமும்
அறுமீன் கொடுநுகம் அநுடம் அவிட்டம்
என்னும் நான்குமென்று இன்னவை முறையே
வெண்பா முதலா மேவுநாற் பாவும்
கொள்ளும் மரபாம் குறிக்குங் காலே.' – பி. ம. 47

'ஆசிரியம் வஞ்சி கலிவெண் பாஎன்று
இம்முறை யால்வைத்து இயம்புங் காலை
மீனம் கடகம் தேளே என்றும்
சிங்கம் தனுவே மேடம் என்றும்
இடபம் கன்னி மகரம் என்றும்
துலாத்தொடு குடமே மிதுனம் என்றும்
ஒட்டிய ராசிமரபு ஓர்தல் நெறியே.' – பி. ம. 48

'மதிகுரு வெள்ளை; செங்கதிர் செவ்வாய்
இன்னகவல்; புகர்வஞ்சி; புந்திசனி கலியே;
கோளமை நாற்பாவும் கொள்ளும் மரபே.' – பி. ம. 49

'வெண்பா முதல்வஞ் சிப்பா இறுதி
நான்குபா வினுக்கும் நாளும் கிரகமும்
நிலனும் குலனும் நிறமும் இராசியும்
ஆகிய இருமூன்று இலக்கணப் பகுதி
குறித்தார் முற்றுணர் குரவர் என்ப.' – மு. வீ. யா. ஒ. 50

'அவற்றுள்,
வெண்பா வெண்ணிறம்; விருச்சிகம் கார்த்திகை
முதலிய எழுநாள்; முற்படு விருச்சிகம்
மீனம் இராசி; விப்பிர குலம்; மதி
குருவே கிரகம்; குழுமிய முல்லை
இருநிலம்; மற்றதன் இயல்பென மொழிப.' ,, 51

'அகவல் செந்நிறம்; அரையர் குலம்; மகம்
பூரம் முதலிய எழுநாள்; மேடம்
சிங்க இராசி; செங்கதிர் செவ்வாய்
கிரகம்; குறிஞ்சி நிலனு கும்மே.' ,, 52

'கலிபொன் நிறம்; குலம் காமரு வணிகம்,
அகணி நெடுநிலம்; அனுடம் முதலிய
ஆறுநாள்; மிதுனம் கும்பம் துலாமும்
இராசி; புதன்சனி கிரகம் என்று இயம்புவ.' ,, 53

*'வஞ்சிநிறம் கறுப்பு; வாருதி நெய்தல்*
*நிலன்; கடைக் குலம்;அவிட் டம்முதல் ஏழும்*
*நாள்; இட பம்கனி மகரம் இராசி;*
*வெள்ளி இராகு கிரகம் என்ப.'* – மு. வீ. யா. ஒ. 54

**124**

## கவிக்கு ஒரு சிறப்பு

885. தலைவன் பேர்ஊர் சாதித்து எதுகையின்
நிலையுற அநுவில் நிறுத்தல் சிறப்பே.

இது மேற்கூறிப்போந்த கவிக்கு ஒரு சிறப்புக் கூறுகின்றது.

இ-ள்: பாட்டுடைத் தலைவன் இயற்பெயரையும் ஊர்ப்பெயரையும் உகந்து எதுகையின் நிலையுறல் அநு எழுத்தின் நிலையுறலாகப் பாடுதல் சிறப்பு என்றவாறு. (125)

### விளக்கம்

*தலைவன் பெயர் முதற்பாட்டிலேயே எதுகையில் நிலையுறல் வேண்டுவதின்று;* நூலுள் யாண்டேனும் இருப்பின் அமையும்

*'நச்சு நாகத்தின் ஆரழல் சீற்றத்தன்*
*அச்ச முற்றடைந் தார்க்கமிர்த தன்னவன்*
*கச்சு லாமுலை யார்க்கணங் காகிய*
*சச்சந் தன்னெனும் தாமரைச் செங்கணன்.'* – சிந்தா.

*'மசரதம் அனையவர் வரமும் வாழ்வுமோர்*
*நிசரதக் கணைகளால் நீறு செய்யயாம்*
*கசரதத் துரகமா கடலன் காவலன்*
*தசரதன் மதலையாய் வருதும் தாரணி.'* – இராமா.

*'கராமலை யத்தளர் கைக்கிரி எய்த்தே*
*அராவணை யிற்றுயில் வோயென அந்நாள்*
*விராவி அளித்தருள் மெய்பொரு ளுக்கே.*

*இராமன் எனப்பெயர் இட்டனர் அன்றே.'* – இராமா.

போல்வன காண்க.

ஒத்த நூற்பாக்கள்

'பாட்டுடையோன் ஊர்ப்பேர் இயற்பேர் படஎதுகை
நாட்டிடினும் அப்பேர் நவிலடியின் — காட்டுமுதல்
சேர்ந்த அநுவாகச் சீர்முன் இயற்றிடினும்
வாய்சிறப் பென்கை வழக்கு.' – வெண். பாட். பொ. 4

'சாற்றும் தலைவன் இயற்பெயர் ஊர்க்குத் தகஎதுகை
தோற்றினும் அப்பெயர் சொல்லும்அப் பாதங்கள் துன்றும்அச்சீர்
ஏற்ற எழுத்து வரினும் இயைந்தது இயற்பெயர்க்கே
ஆற்றும் பொருத்தம் அனைத்தும் பொருந்தினும் ஆம்சிறப்பே.'
– நவ. 81

125

## செய்யுள் வழுக்கள்

886. தெளிந்த வழக்கொடு சிறந்த பொருள்படூஉம்
இன்பம் ஒரீஇவட எழுத்தே மிக்கு
முதிர்சொல் புணர்க்காது எதிர்சொல் புணர்த்து
மால்உறச் செய்தல் வழுவாம் என்பர்.

இது மேலனவற்றிற்கெல்லாம் வழுஇவை என்கின்றது.

இ - ள்: பலரானும் உடன்பட்ட வழக்கோடு நூற்பயன் பயக்கும் இன்பத்தினைவிட்டு மறுதலையால் புணர்த்தலும், வடவெழுத்தே மிகப் புணர்த்தலும், பழையோர் கூறிய இலக்கணச் சொற்களை விட்டுக் காலத்தால் கூறும் வழூஉச்சொல் புணர்த்தலும், வினைவின்றி மயங்கக் கூறுதலும் செய்யுட்கு வழு என்று கூறுவர் புலவர் என்றவாறு.

என்னை?

'ஆதி முதல்வன் ஓதி வகுத்த
அறுவகை மரபின் ஆனந் தம்மே
எழுவகைப் பட்டசொல் வழுவும் ஓரீஇ
இயம்பா ஏழும் யாப்பினும் இழுக்காது
பாடுக என்று கூறினர் புலவர்'

என்பது வருணர் பாட்டியல் ஆகலின். (126)

ஒத்த நூற்பாக்கள்

*'வழக்குள் மரபியலுள் நேர்ந்து வழுவாது
இழுக்கி வடவெழுத்தை இன்பம் - வழுக்காது
முன்னையோர் பாட்டில் பயின்ற மொழிஅன்றே
சொன்ன உறுப்பின் துணிபு.' – வெண். பாட். பொ. 5*

*'துணிதற் கரிது பொருளென்றும் சோர்வு
பணிவுற்ற சொல்மேல் பகுத்தும் – அணிபொருட்டால்
மற்றும்உண் டென்றும் உரைப்போர் வழுச்சொல்லின்
இற்றன்றே பாவின் இழுக்கு.' – வெண். பாட். பொ. 6*

*'தெற்றி வழக்கொடு தேர்ந்துணர் வார்க்கின்பம் செய்யலின்றிப்
பற்றி வடநூல் எழுத்துக் களோடு பயின்றுரையின்
மற்றிவை இல்லென்று வாங்கவும் பட்டுப் பொருள் மருண்டு இப்
பெற்றி உடைச்சொல் பழித்த உறுப்பென்று பேசுவரே.'*

*– வீ. சோ. 145*

*'தெற்ற வழக்கொடு தொன்றுணர்வார்க்கு இன்பம் செய்தலின்றிப்
பற்றல் வடநூல் எழுத்துக்களைப் பழையோர்உரையின்
மற்றுஇவை இல்லைஎன்று ஓதல் உடன்படல் மாஇயலால்
பெற்றி உடைச்சொல் பழிச்சும் உறுப்புஎன்று பேசுவரே.'*

*– நவ. 82*

*126*

## ஆனந்தக் குற்றம்

887. உறுபுகழ் ஆக்கிய உரவோர் கூறிய
அறுவகை யான்உறும் ஆனந் தம்தாம்
இயல்நெறி திரிந்த எழுத்தா னந்தமும்

சொல்முறை வழீஇய சொல்லா னந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா னந்தமும்
தூக்குநிலை திரிந்த தூக்கா னந்தமும்
தொடையியல் திரிந்த தொடையா னந்தமும்;
நடையறி புலவர் நவைஇவை என்ப.

**இஃது இயற்பெயர்க்கண் விலக்கப்படும் ஆனந்தம் இவை என்கின்றது.**

இ - ள்: நிலஉலகில் பெரிய புகழ்உடம்பு நிலையுறல் உறத் தேவர் உலகில் தேவர் உடம்போடு கூடிய அறிவுடையோர் கூறிய அறுவகைப்பட்ட ஆனந்தம் ஆவன, எழுத்தியலில் திரிந்த எழுத்தானந்தமும், சொல்லியலில் திரிந்த சொல்லானந்தமும், புகழ் வகை யாய்த் திரிந்த பொருளானந்தமும், யாப்பு என்னும் உறுப்பில் திரிந்த யாப்பானந்தமும், தூக்கு என்னும் உறுப்பில் திரிந்த தூக்கானந்தமும், தொடை உறுப்பில் திரிந்த தொடையானந்தமும் ஆம். இலக்கிய நடையும் இலக்கண நடையும் ஆராய்ந்த புலவர் அவ்வானந்தங்கள் இயற்பெயர் சார்ந்து வாராமல் நீக்குதலை விரும்புப என்றவாறு.

அதிகாரத்தான் இயற்பெயர் என்பது வருவிக்கப் பட்டது.

என்னை ?

'இயற்பெயர் சார்த்தி எழுத்துஅளபு எழினே
இயற்பாடு இல்லா எழுத்தா னந்தம்.'

'இயற்பெயர் மருங்கின் மங்கலம் ஒழியத்
தொழிற்சொல் புணர்ப்பின்அது சொல்லா னந்தம்.'

'புகழ்ச்சிப் பொருளை ஊறுபடக் கிளப்பினும்,
இறைச்சிக் கிளவியின் பொருந்தா தாயினும்,
உவமக் காட்சியின் ஊனம் தோன்றினும்
இவையல பிறவும், இன்னவை பின்வரின்
அவமொழி ஆக்கும் பொருளா னந்தம்.'

'முதல்தொடை மயங்கின மொழிஅரில் தபத்திருப்
பெயரிடைப் படுத்த வழிஇரு பாட்டினுள்
வாய்ப்ப நோக்கி, வல்லோர் கூறியது
யாப்பா னந்தம்என்று இயம்பல் வேண்டும்.'

'பாவகை ஒருவனைப் பாடுங் காலைத்
தொடைவகை இடையின் வந்தபெயர் தோற்றி
ஏங்கினும் எழுத்துப் பிரிந்தி சைப்பினும்
தூங்கினும் சுழலினும் தூக்கா னந்தம்.'

'அளபெடை மருங்கின் பாடுவோன் பெயரொடு
பிறப்பின் வழாஅத் தொடைவரத் தொடுப்பின்
தொடையா னந்தம்எனத் துணிதல் வேண்டும்.'

என ஆசிரியர் அகத்தியனார் ஆனந்த ஓத்துள் கூறுதலான் அறிக.

எழுத்தானந்தத்திற்குச் செய்யுள் :

'ஆழி இழைப்பப் பகல்போம் ; இரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும் ; — தோழி
நறுமாலை தாராய்! திரையவோஒ என்னும் ;
செறுமாலை சென்றடையும் போழ்து.'

இதனுள் திரையவோஒ என்னும் இயற்பெயர் மருங்கின் எழுத்து அளபெழுந்து எழுத்தானந்தம் ஆயிற்று.

சொல்லானந்தத்திற்குச் செய்யுள் :

'என்னிற் பொலிந்தது இவள்முகம் என்றெண்ணித்
தன்னின் குறைபடுவான் தண்மதியம் — மின்னி
விரிந்திலங்கும் வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கும் வேல்கொண் டெழும்.'

இதனுள் ‘விசயன் எரிந்து’ என இயற்பெயர் மருங்கின் அமங்கலமான தொழிற்சொல் வந்து சொல்லானந்த மாயிற்று

பொருளானந்தத்திற்குச் செய்யுள் :

‘முரணில் பொதிய முதற்புத்தேள் வாழி;
பரண கபிலரும் வாழி;– அரணிலா
வானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோடன்
தானந்தம் சேர்கசுவா கா.’

இதனுள் புகழ்ச்சிப் பொருளை ஊறுபடக் கூறப் பொருளானந்தமாயிற்று. ஏனையவும் வந்துழிக் காண்க.’
(127)

விளக்கம்

ஆனந்தம் – குற்றம் ; இந்நூற்பாவில் அறுவகைக் குற்றங்கள் இயற்பெயர்க்கண் விலக்கப்படல் வேண்டும் என்பது குறிப்பிடப் படுகிறது ; 125ஆம் நூற்பாவில் கூறப்பட்ட இயற்பெயர் அதிகாரத்தான் வருவிக்கப்பட்டது. இந்நூற்பாவும் உரைக்கண் காணப்படும் நூற்பாவும் எடுத்துக்காட்டுக்களுள் முதலன இரண்டும் யாப்பருங்கலம் இறுதி நூற்பா உரையுள் உள்ளன. பாடபேதம் உண்டு.

மேற்கோள் நூற்பாக்களை ஆசிரியர் அகத்தியனார் ஆனந்த ஒத்துள் கூறியுள்ளார் என்பது இவர் கருத்து.

‘ஆழி இழைப்ப’ – கூடற்சுழி இழைத்தலான் பகற்பொழுதை யும், தோழி உசாத்துணையாகி அசாத்தணித்தலான் இராப் பொழுதையும் கழிக்கும் ஆற்றல் உடையதலைவி மாலைப் பொழுது ஒன்றனையும் ஆற்றுதல் இயலாதவளாகித் தன் கணவனாகிய திரையனை விளித்து நறுமாலை தருமாறு வேண்டுகின்றாள் என்பது.

திரைய என்று அழைக்கவேண்டிய இடத்துத் திரையவோஒ என்று அளபெடுக்க அழைப்பது – இயற்பெயர் அளபு எடுத்த லாகிய எழுத்துக் குற்றமாகும் என்பது,

'என்னிற் பொலிந்தது' - என்னைவிடத் தலைவியின் முகம் ஒளி மிக்கிருக்கின்றது என்பதனை உட்கொண்டு தன்னைவிட முகஒளி குறையுமாறு, ஒளி வீசி விரிந்து விளங்கும் வெண்குடைக்கீழ்ச் செங்கோல் செலுத்தும் விசையன் என்ற தலைவனது ஒளிவீசி விளங்கும் வேலின் ஒளியைக்கொண்டு குளிர்ந்த மதியம் புறப்படுகின்றது என்பது.

'விசையன்' என்ற தலைவன் பெயரை அடுத்து 'எரிந்து' (தீப்பற்றி) என்ற அமங்கலச் சொல் வந்துள்ளமை பொருத்தம் அற்ற சொல் சேர்தலாகிய சொற்குற்றம் என்பது.

'முரணில்' தெற்கண் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் சாவப்பாடிய அங்கதப் பாட்டு இது. (தொ. பொ. 490 பே) மாறுபாடு அற்ற பொதிய மலையிடத்தானாகிய நம்மால் தமிழுக்கு முதலாவானாய்க் கடவுளாகப் பாராட்டப்படும் அகத்தியன் புகழ் வாழ்க. கபிலபரணர் தம் புகழ் வாழ்க. தன் வாழ்க்கைக்குப் பாதுகாவல் தேடிக் கொள்ளாத, சாவை விரும்புவானாகிய, குயவர் மரபினனாகிய, குயக்கோடன் இறுதி அடைவானாக. சுவாகா (இது சத்த கோடி மந்திரங்களுள் ஒன்று). இதனுள் பாடப்படுவானாகிய குயக்கோடன் அரண் இல்லான் எனவும் ஆனந்தத்தை (சாக்காட்டை) விரும்புபவன் எனவும் அவன் உயிருக்கு ஏதம் வருமாறு பாடியது பொருளான் அமையும் குற்றம் ஆயிற்று. இப்பொருட் குற்றம் பாட்டுடையான் உயிர் போக்கிற்று என்பது வரலாறு. ஏனையவற்றை இவ்வாசிரியர் விளக்கவில்லை. இனி, ஆனந்தம் பற்றி யாப்பருங்கலம் கூறுவன பின்வருமாறு.

'ஆனந்தம் அறுவகைப்படும்; எழுத்தானந்தமும், சொல்லானந்தமும், பொருளானந்தமும், யாப்பானந்தமும், தூக்கானந்தமும், தொடையானந்தமும் என.

'உறுபுகழ்............ஆனந்தம்மே.'

அவைதாம்,

'இயல்நெறி............நாடினர் இவையே.'

எழுத்தானந்தமும் சொல்லானந்தமும் யாப்பருங்கல உரை கூறிய வாறே இவ்வாசிரியரும் கூறியுள்ளார்.

பொருளானந்தமாவது - பாட்டுடைத்தலைவன் நாட்டின் யாதானும் ஒன்றனைச் சிறப்பித்துச் சொல்லலுற்ற இடத்து அத்திணைக்கு உரிய இறைச்சிப் பொருளை ஊறுபடச் சாவவும் கெடவும் சொல்லுவதூஉம், புகழ்தலுற்ற இடத்து ஆகாத பெற்றியின் மங்கலம் அழியச் சொல்லுவதூஉம், மங்கலமாகிய உவமையான் மங்கலமில்லாத உபமேயத்தை உவமிப்பதூஉம், தலைமகனோடு உவமிக்கப்பட்டதற்கு இடையூறுபடச் சொல்லுவ தூஉம் முதலாக உடைய எனக் கொள்க. என்னை?

'இறைச்சிப் பொருளை...........பொருளானந்தம்'

என்றாராகலின்.

வரலாறு :

'முறிமே யாக்கைதன் கிளையொடு துவன்றிச்
சிறுமையுற்ற களையாப் பூசல்.' - மலைபடு. 313-14

என மலைபடுகடாத்துக் கூத்தரை ஆற்றுப்படுப்பான் 'நீர்போம் வழியுள் இன்னவும் இன்னவும் ஏதங்களாவன; அவற்றைச் சாராதே போமின்;' என்பான். 'குரங்கு ஒரு வரை மேலிருந்து வழுவி ஒரு விடரகம்புக்கு விழுந்தது கண்டு மற்றைக் குட்டியும் தாயும் விடரகம்புக்கு விழுந்தன; வீழக் குரங்குகள் எல்லாம் அவற்றுக்கு இரங்கி அழப் பெரியதோர் ஆரவாரம் எழுந்தது; அவ்வரையை ஒருவிப்போமின்' என்றான். அவன் மலைக்கு உரிய இறைச்சிப் பொருளாகிய (கருப்பொருள்) குரங்கிற்கு இடையூறு சொன்னமையால் இது பொருளானந்தம்.

'கணங்கொள் தோகையின் கதுப்புஇகுத்து அசைஇ
விலங்குமலைத்து அமர்ந்த சேயரி நாட்டத்து
இலங்குவளை விறலியர் நிற்புறம் சுற்ற' - மலைபடு. 44-46

என்பது, பீலி விரித்துப் பலமயில் இருந்தாற்போல வழிவந்து அசைந்த வருத்தத்தால் தம்தம் கேசங்களை எடுத்து முடிக்க

கில்லாது விரித்திருப்பர், அவன் மலைமேல் வழிபோம் கூத்தப் பெண்டிர் என்று புகழ்தலுற்றான், பெண்சாதிகள் ஊறுபட்டு அழுகை நிகழ்ந்த இடத்து மயிர் விரித்திருப்பர். அவ்வகை மங்கலமில்லாத மயிர் விரியை அவன் நாட்டோடும் புகழ்ந்தமையால் இதுவும் பொருளானந்தம்.

'பெயலொடு வைகிய வியன்கண் இரும்புனத்து
அகலிரு விசும்பின் ஆஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை.'

– மலைபடு. 99–101

என்பது, நாடு புகழ்தலுற்றான், மற்றும் மங்கலம் உளவாக வைத்து வானத்துள் துறுமித் தோன்றும் கார்த்திகை மீனோடு கடைப்பட்டார் தின்னும் அடகாகிய முசுண்டையின் பூவை ஒப்பித்தமையான் இஃது உமவக் காட்சியில் ஊனம் தோன்றிய ஆனந்த உவமை.

'திண்டேர் வயவரைச்சேவை வென்றானன்ன தேங்கவுண்மா
வண்போ தமன்ற வழைநிழல் நீக்கிய, வார்சிலம்ப
நண்போ நிலையிற்பொல் லாதது; நிற்களன் நன்னுதலாள்
கண்போற் குவளை கொணர்ந்ததற் கியாதுங்கைம் மாறிலமே.'

இதனுள் தலைமகனோடு உவமிக்கப்படும் யானையைத் துறந்தான் என ஊறுபடச் சொன்னமையின் இதுவும் உவமக் காட்சியில் ஊனம் தோன்றிய ஆனந்த உவமை.

(பாட்டுடைத் தலைவன் வயவரைச் சேவை வென்றான். அவனை ஒத்தது தேங்கவுள்மா. அந்த யானையைக் களவித் தலைவனாகிய சிலம்பன் நீக்கினன் என்று கூறியமை காண்க.)

'வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழாம்
எள்ளி இரிந்தாற்போல் எவ்வழியும் — வள்ளற்கு
மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரும் மேலார் விரைந்து.'

இதனுள் புலியினோடு உவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு நாயை உவமித்தமையால் இறப்ப இழிந்த ஆனந்த உவமை. (வள்ளலை நாயாகவும் பகைவரை மானாகவும் ஒப்பிட்டமை காண்க.)

'இந்திரனே போலும் இளஞ்சாத்தன்; சாத்தற்கு
மந்தரமே போன்றிலங்கும் மல்லாகம்; — மந்தரத்துத்
தாழருவி போன்றுளது தார்மாலை; அம்மாலை
ஏழுலகும் நாறும் இனிது.'

இதனுள் கீழ்மகனாகிய சாத்தனைக் குலமன்னரை உவமிக்கற்பாலனவற்றோடு அவனுக்குப் பரிக்கலாகாமை உவமித்தலின், இறப்ப உயர்ந்த ஆனந்த உவமை.

'சென்றுபடு பருதியின் சிவந்த தோற்றத்தை'

இதனுள் படுஞாயிற்றுக்கு உவமையாகக் காட்டலின் இறந்துபாட்டுவமை ஆனந்தம்.

'தீயின் அன்ன ஒண்செய் காந்தள்
தூவல் கலித்த புதுமுகை ஊன்செத்து
அறியாது எடுத்த புன்புறச் சேவல்
ஊஉன் அன்மையின் உண்ணாது உகுத்தென,
நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய்
வெறிக்களம் கடுக்கும் வியலறை தோறும்.'

– மலைபடு. 145–50

இதனுள் தீப்போலாம் உருவம் தோன்றும் செங்காந்தட் பூவினை ஊன் எனக்கருதி அறியாது எடுத்த பருந்து, காலான் இடுக்கி, வாயில்குத்தி, ஊன் அன்மையின் கைவிட்டது என்று காந்தட் பூவினது சிறப்பினைக் குணன் ஏறச் சொல்லுவான், அவாவிச் சென்றது கொண்டு அவாவியதன்மையான் விட்டது என்று பரிசிற்கவி அவாவிய கவியை அவாக் கெடக் கூறினமையின் இது பரிசில் பொருளானந்தம்.

யாப்பானந்தமாவது – முன்தொடுக்கப்பட்ட சிறப்புடை மொழியின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர் நிறீஇ, அதன்

பின்னே சிறப்புடை மொழி நிறீஇச் சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறு இடர்ப்படப் பாடுவது. என்னை?

'முதல் தொடை............அறியல் வேண்டும்.'

என்றாராகலின்.

வரலாறு :

'ஊகத்தி னுன்மல்கு சோலை உளியன் உயர்வரைவாய்
மேகத்தி னுலுமின் னுலும் மிகவும் மெலிந்துரைத்த
ஆகத்தி னேற்கரு ளாயென் பணியும் ஐவாயெயிற்றின்
நாகத்தி னுல்மால் கடைந்திடப் பட்ட நளிகடலே.'

எனக் கொள்க.

(முன்தொடுக்கப்பட்ட சிறப்புடைப்பொருள் – ஊகத்தினுன் மல்கு சோலை உயர்வரை வாய் மேகமும் மின்னும்.

பாட்டுடைத் தலைவன் பெயர் – உளியன்.

சிறப்புடைமொழி – ஐவாய் எயிற்றின் நாகத்தினுல் கடைந்திடப்பட்ட என்பது. அடைகளை இருபாலும் புணர்த்து இடர்ப்படுதலின் யாப்பானந்தமாயிற்று என்பது)

தூக்கானந்தமாவது – கஞ்சத்தாளம் முதலாகிய கருவிகளோடும் இசைந்த இசைக்கிழ்ப் பாடுதற்கண், அவன் பெயரைச் சார்த்தி உயரவும் இறுகவும் பெயர் பிளந்து பண்ணியும் ஒருவர்க்குப் பெயர் புலனுகாமையும் சொல்லுதல். என்னை?

'தாழா மரபினர் யாமெழாடு புணர்ந்த
பாவகை ஒருவனைப் பாடுங் காலை
தொல்வகை மரபின் அவன்பெயர் தோற்றி
ஏங்கினும் இடுங்கினும் எழுந்துபிரிந்து இசைப்பினும்
தூங்கினும் குழறினும் தூக்கா னந்தம்.'

என்றாராகலின். அவற்றிற்கு இலக்கியம் வந்தவழிக் கண்டு கொள்க.

தொடையானந்தமாவது – அளபெடைத் தொடைப் பாட்டினுள் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பது. என்னை?

'அளபெடை மருங்கின் ...... துணிக'

என்றாராகலின்.

வரலாறு :

'வாஅம் புரவி வழுதியோ டெம்மிடைத்
தோஒம் நுவலுமிவ் வூர்.'

இதனுள் புரவி வழுதி என்று அடைப் பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பினும் தொடையானந்தம்.

(தலைவன் வழுதி. அவனுக்கு அடை புரவி. புரவிக்கு அடை வாம் என்பது. அஃது அளபெடுப்பினும் ஆனந்தமாம்.)

'வாஅம் வழுதி மதுரை மறுகினில்
போஒம் பகைமுனைப் போர்'

இஃது அடைபடாமையின் மிகவழு. (வாஅம் வழுதி என வழுதிப் பெயரை ஒட்டி அளபெடுத்தமை காண்க.)

இனி, ஆனந்தப் பையுள் என்பதும் ஒன்று உண்டு. அஃதாவது, களவினுளாயினும் கற்பினுளாயினும் தலைவனும் தலைவியும் தம்மில் பிரிந்துழிப் பிரிவாற்றாது கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி மெய்மெலிவுற்று அழிவுழி இரங்கிப் பாட்டுடைத் தலைவனது நாடானும் ஊரானும் குறித்து, அவன் ஊர்மேல் அன்றில் ஏங்கினும், குயில் கூவினும், ஆயர் குழல் இசை கேட்பினும், ஏற்றின் மணிக்குரல் கேட்பினும், அவனுடு சூழ்ந்து கிடந்து அவள் ஏங்கினும் என்னுயிர் கழியும் என்று இவ்வாறு கூறினும் அவன் ஊரனையாள் நாடனையாள் உயிர் கழிகின்றது எனினும் பிறவாற்றானும் குணம் மேம்பட்டன ஊரும் நாடும் பார்த்துச் சார்த்திக் கூறினும் உவப்பினும் அவை ஆனந்தப்பையுள். என்னை ?

'களவினும் கற்பினும் கலக்க மில்லாத்
தலைவனும் தலைவியும் பிரிந்த காலைக்
கையறு துயரமொடு காட்சிக் கவாவி

எவ்வமொடு புணர்ந்து நனிமிக புலம்பப்
பாடப் படுவோன் பதியொடும் நாட்டொடும்
உள்ளுறுத் திறிமே, உயர்கழி ஆனந்தப்
பையுள் என்று பழித்தனர் புலவர்'

என்று எடுத்தோதினர் அகத்தியனார். அவற்றுக்கு இலக்கியம் வந்துழிக் கண்டு கொள்க. (இவ்வானந்தப் பையுள் புறத்திணை யியலில் கூறப்பட்டுள்ள ஆனந்தப் பையுளின் வேறாயது என்பது அறிக)

இனி, மாபுராணமுடையார் விகாரமாத்திரையாகிய உயிர் அளபெடையும், கால்மாத்திரையாகிய (மகரக் குறுக்கம்) ஒற்றும் பாட்டுடைத் தலைமகன் பெயருக்கும் அவன் பெயருக்கு அடையாகிய சொற்கண்ணும் புணர்ப்பின் குற்றம் என்றார். என்னை?

'கழிநெடில் அசையும் கால்எழுத் தசையும்
பெயர்அயல் புணர்ப்பினும் பெயரிடைப் புணர்ப்பினும்
வழுஎன மொழியும் மாபு ராணமே'

என்ப ஆகலின்.

அவர் உதாரணம்:

'மன்னும் வழுதி வருமருங்கு நின்றாளென்(று)
இன்னும் உரைக்கும்இவ் வூர்.'

என்பதனுள் விகார மாத்திரையாகிய கால் மாத்திரையாய் (வகாரம் மிசையும் மகாரம் குறுகும்) மகர ஒற்று பெயர் அருகு (மன்னும் வழுதி) வரலின் வழு.

'வாஅம் புரவி வழுதிக்கிவ் வூர்'

என்பதனுள் விகார மாத்திரையாகிய உயிரளபெடையை வழுதி என்னும் பெயர்க்கு அடையாகிய புரவிக்குப் புணர்த்தலின் வழு.

இனி, இசையானந்தம் ஒன்று. அஃதாவது அவலமுற்று இருந்தோருக்கு இசையாகிய பஞ்சமமும், குறிஞ்சியும்

பியந்தையும், பாலையாழும், காந்தார பஞ்சமமும், இவற்றெடு பியந்தை யாழும், தலைவனைப் புகழ்ந்த பாடாண்பாட்டிற்கும் இசையாகி வரப்புணர்ப்பது இசையானந்தம் எனப்படும். என்னை ?

'சிறைஅழி துயரொடு சிந்தையிற் பிரிந்த
கவலை கூர்ந்த கருணைக்குப் பெயரே
அவலம் என்ப அறிந்திசி னோரே.'

'அவலம் என்பதற்கு இசைஎனப் படுவது
குறிஞ்சி புறநிலை பியந்தை என்று
பரந்த விகற்பிற் பாலை யாழே
கருதிய விகற்பின் காந்தார பஞ்சமம்
இசையா னந்தம் என்மனர் புலவர்'

என்றுராகலின்.

பாட்டுடைத் தலைவனையே கிளவிப்படக் கிளவித் தலைவனாகக் கூறுவதூஉம் ஆனந்தம் எனக் கொள்க. என்னை ?

'உருவி ஆகிய ஒருபெருங் கிழவனை
அருவி கூறுதல் ஆனந் தம்மே.'

என்றூர் ஆகலின்.

'நூற்குற்றம் கூறுகின்ற பத்து வகைக் குற்றத்தே 'தன்னான் ஒரு பொருள் கருதிக்கூறல்' என்னும் குற்றத்தைப் பின்னுள்ளோர் ஆனந்தக் குற்றம் என்பதொரு குற்றமென்று நூல் செய்ததன்றி அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இக்குற்றம் கூறாமையின் சான்றோர் செய்யுட்கு இக்குற்றம் உண்டாயினும் கொள்ளார் என மறுக்க. மலைபடுகடாம் பாடிய கௌசிகனார் ஆனந்தக் குற்றம் என்னும் குற்றம் அறியாமல் செய்தாரேல், அவர் நல்லிசைப் புலவராகார். அவர் செய்த செய்யுளை நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீக்குவர். அங்ஙனம் நீக்காது கோத்தமைக்குக் காரணம் ஆனந்தக் குற்றம் என்பது ஒரு குற்றம் இச்செய்யுட்குக் கூறாமையான்

என்று உணர்க' என்று உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் மலைபடுகடாம் 145ஆம் அடி உரைக்கண் சொற்றமை காண்க.

'கார்முற்றி இணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி இருநிலம்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூர.' – கலி. 67

என்பதன் உரையில் 'புனலூர' என்றது பாண்டியனை ஆதலின் பாட்டுடைத் தலைவனே கிளவித் தலைவனாகக் கூறிய அகப்புறம் ஆயிற்று என்று அவரே விளக்கவுரை வரைந்ததும் நோக்குக.

ஆனந்தக் குற்றங்கள் யாவும் பிற்காலச் செய்யுட்கே கொள்ளப்படுவன என்பதும் உணர்க.

'இறப்ப உயர இறப்ப இழிய இசைக்கும் செய்யுள்
திறத்தன யாவையும் தீதென்று உரைப்பர்.' – நவ. 101

'யாப்பினுள் எழுத்துச் சொற்பொருள் யாப்பணிக்
குற்றமும் ஐவகை குறிக்கும்ஆ னந்தமும்
வாராது உரைப்பது வழுவில ஆகும்.' – மு. வி. யா. ஒ. 42

'எழுத்துக் குற்றம் எழுத்திலக் கணத்தில்
வழுத்திய முறையின் மாறு பட்டு
வருவ தாமென வழுத்தப் படுமே.' ,, 43

'ஏனைக் குற்றமும் இவற்றோ ரற்றே.' ,, 44

'ஆனந்தம் ஐவகை அறையுங் காலை,
எழுத்தின்நிலை பிறழ்ந்தன எழுத்தா னந்தம்.' ,, 45

'சொல்லா னந்தம் சொல்நிலை பிறழ்ந்தன.' ,, 46

'பொருள்நிலை பிறழ்வன பொருளா னந்தம்.' ,, 47

'யாப்பின்நிலை பிறழ்வன யாப்பா னந்தம்.' ,, 48

'அணிநிலை பிறழ்ந்து வருவன அணிஆ
னந்தம் ஆம்என நவிலப் படுமே.' ,, 49

127

## அவை அடக்கியல்

888. அவையடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லோன் கூறினும் வகுத்தனர் கொண்மின்என்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.

இது செய்யுள் செய்யும் புலவர்க்கு வேண்டுவதாயதோர் ஒழிபு அவையடக்கம் கூறுகின்றது.

இ-ள்: அவையடக்கம் கூறும் இலக்கணத்தைக் குற்றமற ஆராய்ந்து கூறின் கற்றுவல்லோன் நாற்பொருளையும் அறிந்து கூறுமாயினும் அவையினுள்ளார்க்குத் தான் குறைபாடுடையனுக நீயிர் குற்றம் களைந்து ஆக்கிக்கொள்வீர் என்று வழிபடு சொல்லால் கூறுதலாம் என்றவாறு.

வரலாறு:

'கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாதுவிட்டால்
நற்பா லழியும் நகைவெண்மதி போல்நிறைந்த
சொற்பால் உமிழ்ந்த மறுவும்மதி யாற்கழுவிப்
பொற்பா இழைத்துக் கொளற்பாலர் புலமைமிக்கார்.'
— *சிந்தா 4*

எனவும்,

'சுருக்கமில் கேள்வித் துகடீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு ளாம்பனி மாலிமையப்
பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங் காக்கையும்
பொன்னிறமாய்
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன் றேஇவ் விருநிலமே.'
— *யா. கா. 3*

எனவும் கூறியவாற்ருன் உணர்க.

இச்சூத்திரம் சீயநோக்காய் நின்றது.

இத்துணையும் அளவியற்படச் செய்யுளியலுள் கூறிப் போந்த செய்யுளின்கண் கிடக்கும் இலக்கணங்களைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்கூறி, அளவியற்படாச் செய்யுள் இலக்கணம் கூறுகின்றார். என்னை?

'எழுநிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறுஎன மொழிப.' – தொல். பொ. 476

'அவைதாம்,
நூலி னான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான.' – தொல். பொ. 477

என ஆசிரியர் தொல்காப்பியனார் எடுத்தோதலான் என்று உணர்க. (128)

விளக்கம்

*சீயநோக்கு என்றது பொருளதிகாரத்துக் கூறிய இதனை முன்னருள்ள எழுத்து, சொல் அதிகாரங்கட்கும், பின்னர்க் கூறப்படும் அளவியற்படாத செய்யுட்களுக்கும் கொள்வது.*

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – தொல். பொ. 425* *128*

## பாயிரவகை

889. பாயிரம் பொதுச்சிறப் பெனஇரு பாற்றே.

இது நூன்முகம் என்று சொல்லப்பட்ட பாயிரம் இத்துணைத்து என்கின்றது.

இ - ள் : பாயிரமாவது எல்லா நூல்முகத்தும் உரைக்கப்படும் பொதுப்பாயிரமும் தன் நூற்கு இன்றியமையாச் சிறப்புப்பாயிரமும் என இரண்டு பகுதியினை உடைத்து என்றவாறு.

இதன்விதி எழுத்தோத்தினுள் கூறியவாற்றான் உணர்க. (129)

## ஒத்த நூற்பாக்கள்

'பெயரார்நூ லீவோ னியல்பீயும் பெற்றி
அயராது கொள்வோ னளவும் – அயர்வின்றிக்
கோடல்மர பீரிரண்டும் கூறல்பொதுப் பாயிரமாம்
பாடல்சால் நூலின் பயன்.' – வெண். பாட். பொ. 22

'பயனான்காய் மூவகைத்தாய் பன்மூன் றுரைத்தாய்
இயலுடைத்தாய் மூவாம லேழு – செயல்மதத்தாய்ப்
பத்தாய்க் குணம்குற்றம் பத்தொழிந் தெண்ணான்காம்
உத்தியது நூலென் றுரை.' – வெண். பாட். பொ. 23

'உரைத்தநதி சீயமோ டொண்பருந்து தேரை
நிரைத்ததொழிற் சூத்திரத்தின் நின்று – விரைக்குழலாய்
செம்பொருள் ஞாபகமாஞ் செய்தி நியதியாம்
கம்பமிலா நூலின் கருத்து.' – வெண். பாட். பொ. 24

'கருத்தெச்சம் நுட்பம் பொழிப்பகலம் காட்டி
உரைத்த உதாரணமும் உண்டேல் – விருத்தியாம்;
பூண்ட கருத்தும் பொழிப்பு முதாரணமும்
காண்டிகையென் றேதல் கடன்.' – வெண். பாட். பொ. 25

'கண்ணுய தெய்வம் இறைஞ்சிக் கருதுநூல்
பண்ண அதிகாரம் பாரித்தல் – எண்ணும்
மதியோர் சிறப்பென்பர் வானவரை வாழ்த்தா
அதிகார முஞ்சிறப்பென் றூக்கு.' – வெண். பாட். பொ. 19

'ஆக்கியோன் பேர்வழி யேயெல்லை யாப்பந்நூற்
போக்கிடஞ்சொல் வோர்நுதலிற் றுயபயன் – தாக்கியஇவ்
எட்டினொடும் காலம் களங்கா ரணமியம்பப்
பட்டானும் அப்பெயரே பன்னு.' – வெண். பாட். பொ. 20

'பன்னிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
துன்னும் பயனளவும் சொல்லினும் – முன்னைச்
சிறப்பாம் அவற்றுள் சிலஏறி னலும்
பெறப்படுமா முன்னைப் பெயர்.' – வெண். பாட். பொ. 21

'ஈவார் இயல்பவை ஈகைமுறைமை இவை உணர்தல்
ஆவார் திறம்அவை கோள்ஆய ஆதியி னும்பகுதி
தாவா துரைத்தல் பொதுப் பாயிரம்; தனி வானவரை
ஓவா திறைஞ்சி அதிகாரம் முன்னர் உரைப்பர்களே.'
– நவ. 67

'செய்தான் செயப்பட்டது செய்பொருளது செய்திறத்தோடு
எய்தும் பயனே இதன்வழி எல்லை என ஒரெட்டும்
ஐயமில் காலம்அவை காரண மாகப் பத்தொடொன்றும்
மெய்தெரியின் சிறப்புப் பாயிரம் என்ன வேண்டுவரே.'
– நவ. 68

'நூற்பெயர் நூல்செய்த ஆசிரியன்பெயர் நூல்விளக்கித்
தோற்றிடச் செய்தற்குக் காரணம்யாப்புத் தொன்னூலின்வழி
பாற்படும் எல்லை அறிதல் பயன் இவையும் சிறப்பின்
மேற்படு பாயிரம் என்றாசிரியர்கள் வேண்டுவரே.' – நவ. 69
129

## நூல் இலக்கணம்

**890.** **நூல்எனப் படுவது நுவலுங் காலை**
**முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்**
**தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி**
**உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி**

ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
எண்ணான்கு உத்தி அண்ணுதல் உடைத்தாய்
ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுஉறுப்பு அடக்கிய பிண்டத் தானும்
தோன்றும் என்னச் சொல்லினர் புலவர்.

நிறுத்த முறையானே நூலின் இலக்கணம் கூறுவான் புகுந்தவற்றுள் இஃது அதன் பொது இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : நூல் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதனைக் கூறும் இடத்து, முதல்தொடங்கி முடிவு அளவும் மாறுகோள் உறக்கிடத்தல் இன்றித் தொகையானும் வகையானும் பொருள் தன்மையை விளக்கித் தன்கண் நின்றும் அகன்ற உரைக் கூறுபாடுகளோடு பொருந்திப் பத்து வகைக் குற்றமும் இலதாய், நேர்மையான முப்பத்திரண்டு தந்திர வுத்தியோடும் அணுகுதல் உடைத்தாய், ஒருபொருள் குறித்துவரும் சூத்திரத்தானும், இனப் பொருளை உணர்த்தும் இயலானும், பலபொருட்கும் பொதுவாகிய இலக்கணங்களைக் கூறும் படலத்தானும் படலமும் ஓத்தும் சூத்திரமும் ஆகிய மூன்று உறுப்பினையும் அடக்கிய பிண்டத்தானும் விளங்கித் தோன்றும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. (130)

### விளக்கம்

நூல் என்பது தமிழ் மக்கள் இலக்கணத்திற்கு இட்ட பெயராம். அவருக்கு நூல் அகத்தியம், அவருக்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்பது இறையனார் களவியல்

உரை. (*1* சூ). நூல் நுதலி வரும் தொகை, வகை, உரைக் கூறுபாடு, குற்றம், குற்றமின்மை, உத்திவகை, சூத்திரம், ஓத்து, படலம், பிண்டம் என்பன அடுத்து விளக்கப்பெறும். நன்னூலார் நூல் இலக்கணத்தைப் பொதுப்பாயிரத்தில் கூறியிருப்பினும் தொல்காப்பியத்தில் நூல் இலக்கணம் அந்நூல் இறுதி இயலாகிய மரபியலிலே கூறப்பட்டது போன்று, இந்நூலுள்ளும் இறுதி இயலாகிய பாட்டியலில் நூல் இலக்கணம் கூறப் பட்டுள்ளது; நூல் இலக்கணம் பிண்டத்து ஒழிபுள் ஒன்றாகலான்.

## ஒத்த நூற்பாக்கள்

'நூலெனப் படுவது ......... பொருந்தி.' – தொல். பொ. 478

'ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்கு மொழிப்புலவர்.'
– தொ. பொ. 653

'அதுவே,
ஒருபொருள் ......... புலவர்.' – தொ. பொ. 480

'நூலின் இயல்பே நுவலின் ஓரிரு
பாயிரம் தோற்றி மும்மையின் ஒன்றாய்
நாற்பொருள் பயத்தோடு எழுமதம் தழுவி
ஐயிரு குற்றமும் அகற்றிஅம் மாட்சியோடு
எண்ணான்கு உத்தியின் ஓத்துப் படலம்
என்னும் உறுப்பினில் சூத்திரம் காண்டிகை
விருத்தி ஆகும் விகற்பநடை பெறுமே.' – நன். 4

'முதல்வழி சார்பென மூவகைத் தந்திரம் சூத்திரமும்
உதவுவிருத்தி, உயர்தருமம் முதல் நான்கு, ஏழ்வரை,
மதவிகற்பம், பத்துக்குற்றத்துத் தீர்ந்து, பத்துக்குணத்தின்
நுதலும் பன்மூ(ன்)றுடன் முப்பத்திரண்டு உள; நூல் நெறியே.'
– நவ. 70

*'அவற்றுள்,*
*உத்தம நூல்மரபு உணர்த்துங் காலை*
*முத்திறத்து ஒன்றாய்ப் பாயிரம் முதலுபு*
*நாற்பொருள் நலனுற நவில்வன வாகிச்*
*சூத்திரம் ஓத்துப் படலமென்று உரைபெறும்*
*உறுப்புடைப் பிண்டத் தொடும்அமைந்து அஃகாக்*
*காண்டிகை விருத்தியில் காட்சிதந்து ஈரைங்*
*குற்றமொன் றின்றிக் குழுகொடும் எண்ணான்கு*
*உத்தியில் சிறந்ததுஎன்று உரைத்தனர் புலவர்.'* – மாறன். 6

*130*

## நூற்பா இலக்கணம்

281. அவற்றுள்,
சூத்திரம் தானே,
யாடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே.

**இது சூத்திரத்தின் இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள்: ஒரு பொருள் நுதலிய சூத்திரமாவது, கண்ணாடி சிறிதாயினும் பெரிய பொருள் முழுதினையும் தோற்றுவித்தல் போலச் சில்வகை எழுத்தாயினும் தன்கண் அகன்ற பொருள் சொல்லான் விளங்கத் தோன்றி, உய்த்துணர்ச்சி இன்றித் தொடர்மொழிப் பொருள்பட தொகைவகைவிரி என்னும் இலக்கணத்துள் ஒன்று பயப்பத் தொடர்ச்சி கொண்டு செய்யப்படுவது என்றவாறு.** (131)

விளக்கம்

*'சில்வகை எழுத்தின் பல்வகைப் பொருளைச்*
*செவ்வன் ஆடியின் செறித்துஇனிது விளக்கித்*
*திட்பம் நுட்பம் சிறந்த சூத்திரம்.'* – நன், 17

என்ற நன்னூல் நூற்பாப் பொருளை அடியொற்றி விளக்கம் தந்துள்ளார். இந்நூற்பா தொல்காப்பியப் பொருட்படல 484ஆம் நூற்பா. (பேரா) இதற்கு உரையாசிரியர் சூத்திரமாவது கண்ணாடியின் நிழல் போல விளங்கத் தோன்றி ஆராயாமல் பொருள்நனி விளங்குமாறு யாப்பின்கண்ணே தோன்ற யாப்பது என்றவாறு.

ஆடி நிழலின் அறியத்தோன்றுதலாவது சூத்திரம் படித்த அளவிலே அதனால் சொல்லப்படுகின்ற பொருள் ஒருங்கு தோற்றல். நாடுதலின்றிப் பொருள்நனி விளங்க யாத்தலாவது, அதன்கண் யாக்கப்பட்ட சொற்குப் பொருள் ஆராயாமல் புலப்படத் தோன்றுமாறு யாத்தல் என விளக்கம் தந்துள்ளார்.

இந்நூற்பாவிற்குப் பேராசிரியர் 'மேல் நுதலியவற்றுள் ஒரு பொருள் நுதலிய எனப்பட்ட சூத்திரப்பொருள் நுவலுங்கால் ஆடி சிறிதாயினும் அகன்றுபட்ட பொருளை அறிவித்தாற்போலத் தேர்தல் வேண்டாமை அவ்வகன்ற பொருள் அடங்கு மாற்றான் அச்செய்யுளுள் தோன்றச் செய்து முடிக்கப்படுவது என்றவாறு என்று உரை கூறி, 655ஆம் நூற்பா உரையில் 'ஆடி நிழல் போல் பொருளானும் தேர்தல் வேண்டாமல் பொருட்பெற்றி உணர்கின்றாங்குச் சூத்திரத் தொடருள் இலக்கியம் இன்று ஆயினும், அதனை இது கேட்டான் காணுமாற்றான் செய்த லாயிற்று' என்ற விளக்கமும் தந்துள்ளார்.

கண்ணாடியில் காணப்படுவது பொருளின் மாயா பிம்பமே. அம் மாயாபிம்பத்தைக் கண்ட அளவிலேயே நேராகப் பொருளைக் கண்ட நிறைவு ஏற்படுவதுபோலச் சூத்திரத் தொடரில் உதாரணம் இல்லையாயினும் அந்நூற்பாவினைக் கண்ட அளவிலேயே அதன் எடுத்துக்காட்டுக்கள் கண்டார் மனத்தில் பதிந்துவிடுதல் என்று பேராசிரியர் குறிப்பிட்டுள்ள விளக்கம் மிகச் சிறந்தது. சிறு கண்ணாடியில் பெரிய பொருள்களின் நிழல் தெளிவாகப் புலனாவது போல் சில சொற்களுள் பல கருத்துக்கள் புலப்பட அமைப்பது நூற்பா என்ற விளக்கமும் ஏற்றதே.

ஒத்த நூற்பாக்கள்

'சூத்திரம் தானே...........யாப்பமைப் பதுவே.'
– தொ. பொ. 484

'சில்வகை...........சூத்திரம்.' – நன். 17

'நூலின் ஒருபொருள் நுதலியது ஒன்றுய்ச்
சில்வகை எழுத்தினில் செறித்திடும் யாப்பாய்ப்
பலதிறப் பயன்தெரிவு உடையதோர் பண்பாய்ப்
படிமக் கலத்துள் படுநிழல் பொருவ
ஒண்மையும் நுண்மையும் உறுவது சூத்திரம்.'
– மாறன் 15
131

## நூற்பாவின் கிடக்கை முறை

812. யாற்றது ஒழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்தின் வீழ்வுஎன்று
ஆவகை நான்கே கிடக்கை முறையே.

இது மேற்கூறிய சூத்திரத்தின் கிடக்கைமுறை கூறுகின்றது.

இ–ள்: நிறுத்த முறையே கூறுதலும், இடைவிட்டுக் கூறுதலும், முன்னும் பின்னும் பொருள் எய்தக் கூறுதலும், நடுக்கொண்டு கூறுதலும், என நான்கு கூற்றே சூத்திரத்தின் கிடக்கை முறைமை என்றவாறு.
(132)

### விளக்கம்

ஆற்று நீர்ப்போக்கு ஒருவழியே தொடர்ந்து செல்வதுபோலப் பல நூற்பாக்கள் பொருள் தொடர்புறத் தொடர்ந்து அமைவது ஆற்றெழுக்கு நிலை; தவளை ஊர்ந்து செல்லாது சிறிது இடைவெளி நடுப்படத் தத்திச் செல்வதுபோல, ஒரு நூற்பா

தன்னை அடுத்த ஒன்றிரண்டு நூற்பாக்களை விடுத்து அடுத்த நூற்பாவொடு பொருள் தொடர்பு கொள்வது தேரைப்பாய்வு. சிங்கம் தான் நடந்து செல்லும்போது இரு மருங்கும் பார்த்துக் கொண்டே செல்வதுபோலத் தனக்கு முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்கள் தன் பொருளைத் தொடர்பு கொண்டு இயங்குமாறு செய்யும்நிலை சீயநோக்கு. வானத்தில் பறக்கும் பருந்து வானில் இருந்தபடியே தரையில் ஓர் இரையைக் கண்டவழித் தான் திடீரென்று கீழே இறங்கி அவ்விரையைக் கவர்ந்து செல்லுவது போல ஒரு நூற்பா தனக்குப் பிறபட்டுப் பல நூற்பாக்களுக்குப் பின்உள்ள நூற்பாவோடு பொருள் தொடர்பு கொள்ளுதல் பருந்தின் வீழ்வு.

நூற்பா நிலைகள் நான்கனுள் ஆற்றொழுக்கே பெரும்பான்மை; ஏனைய மிக அருகியே காணப்படும் என்பது.

'அவையடக்கியலே' (இ. வி. பொ. 516) என்ற நூற்பா முன்கூறப்பட்ட எழுத்துப்படலத்துக்கும் சொற்படலத்துக்கும், இப்பொழுது கூறப்படும் பொருட்படலத்துக்கும் பொருந்தி வருவதால் சீயநோக்கு. 'இத்திறம் தசாங்கத் தயற்கும் ஒக்கும்' இ. வி. 781 என்ற நூற்பா, தசாங்கம் பற்றிய 840ஆம் நூற்பாவோடு தொடர்பு கோடல் பருந்தின் வீழ்வு.

'மூன்றுயிரளபு' நன். எழு. 44 என்ற நூற்பா அடுத்த நூற்பாவை விடுத்து 'ஆவியும் ஒற்றும்' நன். எழு. 46 என்ற நூற்பாவோடு தொடர்புகோடல் தவளைப்பாய்த்தாம்.

## ஒத்த நூற்பாக்கள்

'ஆற்றொழுக்கு
அரிமா நோக்கம் தவளைப் பாய்த்துப்
பருந்தின் விழுக்காடு அன்னசூத் திரநிலை.' – நன். 18

'உரைத்த நதி சீயமோ(டு) ஒண்பருந்து தேரை
நிரைத்ததொழில் சூத்திரத்தின் நின்று – விரைக்குழலாய்
செம்பொருள் ஞாபகமாம் செய்தி நியதியாம்
தம்பமிலா நூலின் கருத்து.' – வெண். யாட். ஒ. 24

*'மாட்டுறுப்பு அரிமா நோக்கம் தவளைப்*
*பாய்த்தாற் றொழுக்கொடு பருந்தின் வீழ்வொடு*
*நிரனிறை விளக்கெனும் பொருள்கோள் நிலைத்தே.'*

*– மாறன். 16*

*132*

## நூற்பாவின் அழகு

893. உரைஎடுத்து அதன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விளப்பலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் பட்டுச்
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரைஅகத்து அடக்கி
நுண்மையொடு புணர்ந்த வண்மைத் தாகித்
துளக்கல் ஆகாத் துணைமை எய்தி
அளக்கல் ஆகா அரும்பொருட்டு ஆதல்
சூத்திரத்து அழகென யாத்தனர் புலவர்.

இது மேற்கூறிய சூத்திரத்திற்கு ஒரு சிறப்புக் கூறுகின்றது.

இ–ள்: சூத்திரத்திற்கு முன் உளவாகிச் சுவைபட நின்ற கட்டுரையைச் சூத்திரமாகக் கொண்டு செய்தலும், காண்டிகையுரையைக் குற்றமற்ற சூத்திரமாகச் செய்தலும், கருத்துப் பொருளாய்க் கிடந்ததனை எடுத்துக்கூறலும், எய்தியதனை விலக்கிக் கூறுதலும், நால்வகை உரையான் ஒருந்திறத்துடனே குற்றமற நாடிப் புணர்க்கப்படுதலும், சில்வகைப்பட்ட எழுத்துக்களால் சுருங்கச் செய்தல் உடைத்தாகி, ஆசிரியன் முதலியோர் கூற்றுவகையான் உரைக்கு மிடத்து, முறை பிறழாமல் அடக்கிச் சொல்லுதல் உற்று,

நுண்ணிய பொருளோடு புணர்ந்ததனுன் உபகாரம் உடைத்தாகிப் பிறரால் பெயர்க்கப்படாத நிலைமைத்தாய், அளவுபடாத அரும் பொருளினை உடைத்தாதல், சூத்திரத்திற்கு வனப்பாம் என்று வகுத்துக் கூறுவர் புலவர் என்றவாறு,

சூத்திரத்திற்கு முன் உரை எடுத்து யாப்பினும்என மாறிக் கூட்டுக. யாப்பினும் புணர்ப்பினும் என்பன அழகு என்பதனோடு புணர்க்கப்பட்டுச் செய்யுட்டாகி அடக்கி ஆகி எய்தி என்பன ஆதல் என்பதனோடு முடிந்தன. உடம்பட என்பது எல்லாரும் உடன்படச் செய்தல் என்க. ஈண்டுக் கூறிய செய்யுள் என்பது செய்தல் தொழில்மேல் நின்றது, தொழிற்பெயராய் என்க. (133)

## விளக்கம்

சூத்திரத்திற்குப் பாயிரமாகக் கூற வேண்டிய செய்திகளைச் சூத்திரமாகச் செய்தல், சூத்திரத்தின் காண்டிகை உரையைச் சூத்திரமாகச் செய்தல், சூத்திரத்தின் கருத்துப்பொருளை எடுத்துக் கூறுதல், போலியான் எய்திய உரையை நீக்கி உண்மை உரையைக் கூறல் என உரை நிலை நான்கு வகையாகக் கூறப்படுகிறது.

சொற்குற்றம் பொருட்குற்றம் இன்றி அமைதல், சுருங்கச் சொல்லல் என்ற அழகோடு அமைதல், முறை பிறழாமல் செய்திகள் அமைதல், நுட்பமான கருத்துக்களைக் கொண்டு அமைந்து பல நூற்பாக்களுக்கும் உதவுதல், தன் இன்றியமையாமையால் தான் நீக்கப்படாத சிறப்புடன் இலங்குதல், சுருங்கச் சொல்லினும் பரந்த பொருளை அடக்கியிருத்தல் ஆகியவை நூற்பாவின் சிறப்பாம் என்பது.

செய்யுட்டு என்பது செய்யப்படுதலை உடைத்து என்று பொருள்படுகிறது.

தொல்காப்பியப் பொருட்படலத்து 654, 655 ஆம் நூற்பாக்களை இணைத்து இந்நூற்பா அமைக்கப்பட்டுள்ளது.

'சூத்திரத்தின் முன்னர் உரையை விரித்து உரைக்கும் இடத்தும், சூத்திரப் பொருள் விளங்கக் காண்டிகை புணர்க்குமிடத்தும், ஆசிரியன் இப்பொருள் இவ்வாறு கூறல் வேண்டும் என விதித்தலும், இப்பொருள் இவ்வாறு கூறப்பெறான் என விலக்கலுமாகிய இருவகையோடு கூடப் பொருந்தின அவை ஆராய்ந்து புணர்க்கவும் ஆம்.' என உரைப்பகுதிக்கு உரை ஆசிரியர் உரை வரைந்துள்ளார்.

காண்டிகையினை விளக்கும் கருத்தினும் அக்கருத்து இன்றியும் அச்சூத்திரத்திற்கு உரை தொடர்ந்து எழுதினும், அச்சூத்திரத்திற்கு இடை இன்றிக் காண்டிகை பொருந்தச் செய்யினும் காண்டிகை இல்லாத முகவுரைக்கண்ணே முன்னும் பின்னும் காண்டிகை பெய்து உரைத்தலும், கடாவிற்கு விடை கூறுவாரும் போலி மறுப்பாரும் சொல்லும் சொற்பகுதியோடு, ஐயுற்று வினவியதனை விடுத்தலும் உண்மை அல்லாப் போலியினை விலக்குதலும் செய்து, காண்டிகை இரண்டும் உரையிரண்டும் என்று வருகின்ற நான்கன்கண்ணும் இடை அந்தரமின்றிப் புணர்க்கப்படும் அவ்விரு பகுதியும் என்பது பேராசிரியர் உரை பற்றிய இந்நூற்பாவின் முதல் நான்கு அடிகளுக்கும் தரும் விளக்கமாகும். நூற்பா உரையினைப் பேராசிரியர் காண்டிகை, விரிவான காண்டிகை, உரை, விரிவான உரை என நான்காகக் கொண்டு அவற்றிற்கு முறையே,

'பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின்
கரப்பின்றி முடிவது காண்டிகை ஆகும்.' – தொ. பொ. 656

'விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச்
சுட்டிய சூத்திரம் முடித்தல் பொருட்டா

ஏது நடையினும் எடுத்துக் காட்டினும்
மேவாங் கமைந்த மெய்ந்நெறித்து அதுவே.'
— தொ. பொ. 657

'சூத்திரத்து உட்பொருள் அன்றியும் யாப்புற
இன்றி யமையாது இயைபவை எல்லாம்
ஒன்ற உரைப்பது உரைஎனப் படுமே.' „ 658

'மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்
தன்னூ லானும் முடிந்தநூ லானும்
ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்
தெற்றென ஒருபொருள் ஒப்புமை கொளீஇத்
துணிவொடு நிற்றல் என்மனார் புலவர்.' „ 659

என்ற நூற்பாக்களைக் கொண்டுள்ளார்.

நன்னூலார் காண்டிகை, விருத்தி என்ற இரண்டு வகையே கொண்டு,

'கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை ஆக்க லானும்
சூத்திரத்து உட்பொருள் தோற்றுவ காண்டிகை.'
— நன். 21

'சூத்திரத்து உட்பொருள் அன்றியும் ஆண்டைக்கு
இன்றி அமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐயம் அகலஐங் காண்டிகை உறுப்பொடு
மெய்யினை எஞ்சாது இசைப்பது விருத்தி.' „ 22

என்று நூற்பாக்கள் யாத்துள்ளார்.

மாறன் அலங்கார ஆசிரியர்,

'உற்றது பதப்பொருள் உதாரணம் மூன்றுடன்
கற்றவர் வினாவிடை காட்டுதல் காண்டிகை.'
— மாறன் 21

*'ஒன்றிய சூத்திரத் துட்பொருள் அன்றியும்*
*இன்றி யமையா தனபுணர்ந் திசைத்தஐந்து*
*உறுப்புடன் இருதிறத்து உரையிட னுகமெய்ந்*
*நிறுத்தியது ஒன்றெனை நிகழ்த்துதல் விருத்தி.'* ,, 22

எனக் காண்டிகை விருத்தி இவற்றின் இலக்கணம் கூறியுள்ளார்.

சூத்திரத்தழகாகத் தொல்காப்பியனுர் ஒருவரே கூறியுள்ளார். அதனையே இவ்வாசிரியர் தாமும் எடுத்து மொழிந்துள்ளார்.

ஒத்த நூற்பாக்கள்

*முற்றும் – தொ. பொ. 654, 655.*

*133*

## ஓத்து இலக்கணம்

894. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓர்இனப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்துஎன மொழிப, உயர்மொழிப் புலவர்.

இஃது இயலின் இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்: இனமொழி கிளந்த ஓத்தாவது சிதர்ந்து கிடப்பனவற்றைப் பல ஓத்தாகச் செய்யாது ஒத்த மணிகளை ஒரு கோவையுறச் செய்தாற்போல ஓரினப் பொருளை எல்லாம் ஓரிடத்தே தொகுத்துக் கூறுவது ஓத்தாம் என்றவாறு.

நேரினமணி எனவே ஒரு சாதி ஆயினும் தம்மில் ஒத்தன என்பதாம். (134)

ஒத்த நூற்பாக்கள்

*தொ. பொ. 482 பே.*
*முழுதும் – நன். 15*
(ஓத்து எனினும் இயல் எனினும் ஒக்கும்.)

'ஒத்து எனப்படுவது ஓர்இனப் பொருளைக்
கோத்துஒரு நெறிபடக் கூறுவ தாகும்.' – *மாறன் 17*

*134*

## படல இலக்கணம்

895. ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அதுபடல மாகும்.

**இது படலத்தின் இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள்: ஒரு நெறியன அன்றிப் பல்வேறு வகையவாம் எழுத்திலக்கணத்தினையும் சொல்லிலக்கணத்தினையும் பொருள் இலக்கணத்தினையும் பொருள் என்பதொரு முறைமைபற்றி இயைபு நோக்கிப் பொதுவகையான் தொகுத்துக் கூறுவது படலமாம் என்றவாறு.**

**படலம் எனினும் அதிகாரம் எனினும் ஒக்கும். (135)**

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – தொல். பொ. 483. பே.*

'ஒருநெறி...........தொடர்வது படலமாகும்.' – **நன். 16**

'படலம் என்பது பன்னெறிப் பொருளால்
புடைபட விரவிய பொதுமொழித் தொடர்பே.'

– *மாறன். 18*

[*வீரசோழியம், பிரயோக விவேகம் முதலியவற்றில் படலம் என்பது இயல் என்னும் பொருளில் வந்துள்ளமையும் குறித்து உணரத்தக்கது.*]

*135*

## பிண்ட இலக்கணம்

896. மூன்றுஉறுப்பு அடக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப.

**இது பிண்டத்தின் இலக்கணம் கூறுகின்றது.**

இ-ள்: சூத்திரமும் ஓத்தும் படலமும் என்னும் மூன்று உறுப்பினையும் அகப்படுத்தி நிற்கும் தன்மை உடைத்தாயின் அதனை உலகில் நின்று விளங்கும் மொழியைக் கூறும்புலவர் பிண்டம் என்று கூறுவர் என்றவாறு.

உறுப்படக்கிய பிண்டம் எனவே, பிண்டம் என்பது ஒரு முதல் என்பதாம். அப்பிண்டமும் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் முத்தமிழையும் கூறும் அகத்தியத்திற்கு உறுப்பு ஆதலான் பிண்டம் என்பது முதலாயவாறு என்னை எனின்,

'முதல்இவை சினைஇவை எனவேறு உளஇல
உரைப்போர் குறிப்பின ; அற்றே பிண்டமும்.' – இ. வி. 222

என்றதனால் சொல்லுவான் கருத்தொடுபட்டு முதல் என்றார்.

எனவே, படலம் என்பது இரண்டு உறுப்பு அடக்கியது எனவும், இயல் என்பது ஓர் உறுப்பு அடக்கியது எனவும் ஆயின. (136)

## விளக்கம்

ஓத்து என்பது நூற்பா என்பதோர் உறுப்பை உடையது. படலம் என்பது ஓத்து நூற்பா என்ற ஈருறுப்புடையது.

இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழையும் கூறுவது அகத்தியம் என்ப. அதனைப் பிண்டங்களை அடக்கிய மகாபிண்டம் என்ப ;

'அவை ஒரு மூன்றும் அடக்குவது பிண்டம்.' – மாறன். 19

'மிகத் தெளி வுடைய அகத்தியம் அதுபோல்
முத்தமிழ் உட்கொளும் மூன்றுபிண் டமும்உறுப்பு
ஒத்து ஒருங்கு உட்கொளல் உறின்மகா பிண்டம்.' – மாறன். 20

என்ப ஆகலின்.

ஒத்த நூற்பா

முழுதும் - தொல். பொ. 484. பே. 136

## பத்துவகைக் குற்றங்கள்

897. ஈரைங் குற்றமும் நேரிதின் நாடின்
கூறியது கூறல்[1] மாறுகொளக் கூறல்[2]
குன்றக் கூறல்[3] மிகைபடக் கூறல்[4]
பொருளில மொழிதல்[5] மயங்கக் கூறல்[6]
கேட்போர்க்கு இன்னா யாப்பிற்று ஆதல்[7]
பழித்த மொழியான் இழுக்கம் கூறல்[8]
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்[9]
என்ன வகையினும் மனங்கோள் இன்மை[10]
அன்ன பிறவும் அவற்றுவிரி ஆகும்.

இஃது ஈரைங்குற்றமாவன இவை என்கின்றது.

இ - ள் : பத்துவகைக்குற்றத்தினையும் நேர்மையான் ஆராயுமிடத்து முன்னர்க் கூறிய பொருளைப் பின்னர்க் கூறுதலும், முன்னர்க் கூறியதற்குப் பின்னர் மாறுபடக் கூறுதலும், குறைபாடுறக் கூறுதலும், ஒரு பொருட்கு இலக்கணம் கூறுமிடத்துப் பொருட்குச் சிறப்பிலக்கணம் தோன்றக் கூறாது ஏனைப் பொருட்கண்ணும் செல்லும் பொது இலக்கணத்தால் கூறுதலும், கூறும் பொருள் பெறாமல் கூறுதலும், தெளிவுறாமல் கவர்படுமொழியால் மயங்கக் கூறுதலும், கேட்டோர்க்கு இன்னாப் பொருளாய்த் தொடர்ச்சி இன்றிக் கூறுதலும், பழிப்புடைய சொல்லான் இழிபு தோன்றக் கூறுதலும், வரலாற்று முறைமையோடு படாது செய்வோன் தான் ஒரு பொருளைக் கற்பித்துக் கூறுதலும், எவ்வகையானும் கேட்போர் மனங்கொள்ளாதிருக்கக் கூறுதலும் இவை போல்வன பிறவுமாம் என்றவாறு.

வடநூலார் கூறிய அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவம் என்னும் தூடணங்களும் இவற்றுள்ளே அடங்குமாறு அறிந்து அடக்கிக்கொள்க. (137)

### விளக்கம்

*அவ் வியாத்தி — குன்றக்கூறல்.*
*அதி வியாத்தி — மிகைபடக்கூறல்.*
*அசம்பவம் — மாறுகொளக்கூறல்.*

*இக்குற்றங்கள் பத்தனையும் சிதைவு என்று தொல்காப்பியனார் குறிப்பிடுவார். இவற்றுள், கூறியது கூறல், மாறுகொளக்கூறல், மிகைபடக்கூறல், பொருளில்மொழிதல், மயங்கக்கூறல் என்ற ஐந்தும் பயன்படும் குற்றம்; இவை நூற்பாக்களில் அருகிக் காணப்படலாம்; ஆனால் ஏனைய ஐந்து குற்றங்களும் அறவே வருதல் கூடாது என்பதாம்.*

### ஒத்த நூற்பாக்கள்

*'சிதைவுஎனப் படுபவை வசையற நாடின்......*
*அன்னபிறவும் அவற்றுவிரி யாகும்.' — தொல். பொ. 663*

*'குன்றக் கூறல் மிகைபடக் கூறல்*
*கூறியது கூறல் மாறுகொளக் கூறல்*
*வழூஉச்சொல் புணர்த்தல் மயங்க வைத்தல்*
*வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்*
*சென்றுதேய்ந்து இறுதல் நின்றுபயன் இன்மை*
*என்றுஇவை ஈரைங் குற்றம் நூற்கே.' — நன். 11*

*'பொருள்நிலை கூறல் மருள்நிலைத்து ஆதல்*
*இன்னாச் சொற்பெறல் வெளிறுபட்டு அழிதல்*
*மொழிந்ததை மொழிதல் முரண்சொல் மொழிதல்*
*குறைபடக் கூறல் மிகைபட விளம்பல்*
*சந்த இன்பம் தழுவுதல் இன்மை*
*எதிர்மறுத்து உணர்த்தல் என்றிவை உளப்பட*
*கூறினர் ஈரைங் குற்றம் நூற்கே.' — மாறன் 23*

***137***

## முப்பத்திரண்டு உத்தி வகைகள்

898. ஒத்த காட்சியின் உத்திவகை விரிப்பின்
நுதலியது அறிதல்[1] அதிகார முறையே[2]
தொகுத்துக் கூறல்[3] வகுத்துமெய் நிறுத்தல்[4]
மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்[5]
வாரா ததனல் வந்தது முடித்தல்[6]
வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்[7]
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே[8]
ஒப்பக் கூறல்[9] ஒருதலை மொழியே[10]
தன்கோள் கூறல்[11] முறைபிற ழாமை[12]
பிறன்உடம் பட்டது தான்உடம் படுதல்[13]
இறந்தது காத்தல்[14] எதிரது போற்றல்[15]
மொழிவாம் என்றல்[16] கூறிற்று என்றல்[17]
தான்குறி யிடுதல்[18] ஒருதலை அன்மை[19]
முடிந்தது காட்டல்[20] ஆணை கூறல்[21]
பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்[22]
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்[23]
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்[24]
பிறன்கோள் கூறல்[25] அறியாது உடம்படல்[26]
பொருளிடை யிடுதல்[27] எதிர்பொருள் உணர்த்தல்[28]
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்[29]
தந்துபுணர்ந்து உரைத்தல்[30] ஞாபகங் கூறல்[31]
உய்த்துக்கொண்டு உணர்த்தலொடு[32]
மெய்ப்பட நாடிச்
சொல்லிய அல்ல பிறஅவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்;
நுனித்தகு புலவர் கூறிய நூலே.

இஃது எண்ணான்கு உத்தியின் பெயரும் இயலும் கூறுகின்றது.

இ-ள்: சாத்துவிக குணமுற்ற அறிவினாலே தெளிந்தோர் கண்ட உத்தி வசனத்தின் வேறுபாடுகளை விரித்துக் கூறப்புகின், கருதியது அறிதல் முதலாக உய்த்துக் கொண்டு உணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டனோடும் அவை போல்வன பிறவும், நூலின் கண்ணவைகளைக் கூறிய திறத்தான் இலக்கணங்கள் எல்லாம் அகப்பட ஆராய்ந்து, மனத்தினாலே எண்ணும் குற்றம் நீங்க ஆராய்ந்து அப்பொருளை எடுத்துக்கொண்டு கூறியவற்றிற்கு இனமாகவும் சேர்வித்து அறிவித்தலை விரும்புக, நூல் முடிபு அறிந்து அதனான் மேதக்க அறிவுடையோர் செய்த நூற்கண் என்றவாறு.

உத்தியினையும் உத்திக்கு இனமாதலையும் கண்டு எடுத்துக் காட்டப்புகின் அவை விரிந்து கிடத்தலான் அவை நுண்ணுணர்வான் ஆராய்ந்து இந்நூற்கண்ணும் தொல்காப்பியம் முதலிய பெரு நூற்கண்ணும் ஆங்காங்கு உணர்க. (138)

விளக்கம்

*உள்ளதை உள்ளவாறு தெள்ளிதின் கூறல் உத்தி எனவும் நுதலியதறிதல் முதலிய முப்பத்திரண்டும் உத்திவகை எனவும் கொள்ளுவது தொல்காப்பியனார் கருத்தாதல் பேராசிரியர் உரையான் (தொ. பொ. 665) உணரப்படும்.*

*ஒவ்வோருத்தி வகைக்கும் உத்தி இனமும் கொள்ளப்படும். இவற்றை விளக்கிப் பேராசிரியர் எடுத்துக்காட்டுக்களும் தந்துள்ளார்.*

**1. நுதலியது அறிதல் :**

*சூத்திரத் தொடரை வெளிப்படையாக நோக்கின் பயன் இல்லதுபோலத் தோன்றினும், அதற்கு ஏற்ற வகையால் கருதி உணரப்படும் பொருள் இன்னது என்று கொள்ளவைத்தல்.*

**2. அதிகாரமுறைமை :**

*முன்நின்ற நூற்பாவின் பொருள் பின்வரும் நூற்பாக்களுள் ஒன்றனுக்கோ, பலவற்றிற்கோ தேவைப்பட்ட அளவு தொடர்பு கொள்ளவைத்தல்.*

**3. தொகுத்துச் சுட்டல் :**

*பின்னர் விரிக்கப்பட வேண்டியனவற்றை முதற்கண் தொகுத்துக் கூறல்.*

**4. வகுத்துமெய் நிறுத்தல் :**

*தொகுத்துக்கூறிய செய்தியைப் பின்னர் விளக்கம் வேண்டிப் பகுத்துக்கூறல்.*

**5. மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் :**

*சொல்லப்பட்ட செய்திகளை மனங்கொண்டு சொல்லப்படாத அவற்றின் இனமாகியவற்றின் செய்திகளையும் கொள்ளவைத்தல்.*

**6. வாராததனான் வந்தது முடித்தல் :**

*ஒரு நூற்பாவில் ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் முழுதும் கூறப்படவில்லையாயினும் கூறப்படாததனையும் அந் நூற்பாவில் அடக்கிக்கொள்ளுதல்.*

**7. வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் :**

*பின் ஒரு நூற்பாவில் கூறப்பட்ட செய்தியைக்கொண்டு, முன் கூறப்படாத செய்தி ஒன்றினை உட்கொள்ளுவித்தல்.*

### 8. முந்து மொழிந்ததன் தலைதடுமாற்று :

முன் ஒருகால் பின்பற்றிய முறையைவிடுத்து, வேறு ஒரு கால் தலைதடுமாற்றமாக முறை மாற்றிக்கூறி அதனால் சில கருத்துக்கள் பெறப்படவைத்தல்.

### 9. ஒப்பக் கூறல் :

ஒரு சொல்லுக்குக் கூறும்விதி இரட்டுற மொழிதலான் இருசொல்லுக்கும் அமையுமாறு கூறுதலும், ஒன்றன் இலக்கணத்தைப் பிறிதொன்றனோடு மாட்டெறிதலும் போல்வன.

### 10. ஒருதலை அன்மை :

ஓர் அதிகாரத்தில் கூறவேண்டிய இலக்கணத்தை வேறோர் அதிகாரத்தில் கூறி, அக்கூறப்பட்டதனையே கூறப்பெறாத அதிகாரத்திற்கும் கொள்ள வைத்தல்.

### 11. தன்கோட் கூறல் :

சொல்லப்படாத செய்திகள் பல உளவாயினும் ஒருநூற்கண் ஆசிரியன் தான் கூறக் கருதியவற்றையே கூறல்.

### 12. முறை பிறழாமை :

காரணம் பற்றியோ பற்றாமலோ முதற்கண் சில பொருள்களை ஒருமுறையாகக் கூறியபின், எக்காரணம் கொண்டும் அம் முறையை மாற்றாமலேயே பின்னர் எடுத்து விதத்தல்.

### 13. பிறன் உடம்பட்டது தான்உடம்படுதல் :

இயற்கையாக மனங்கொள்ளத்தக்க வாய்ப்பு இன்று ஆயினும், தொன்றுதொட்டு வந்த வழக்கு நெறியான் இது கொள்ளத்தக்க பொருள் என்று கூறி விடுத்தல்.

### 14. இறந்தது காத்தல் :

முன் நூற்பாவில் கூறிய பொருள்களுள் ஒன்றனைப் பின் வேறொரு நூற்பாவான் நீக்குதல்.

**15. எதிரது போற்றல் :**

*பின்னர் ஒரு நூற்பாவில் தான் கூறக்கருதியுள்ள செய்தியை மனங்கொண்டு, முன்னர் வேறொரு பொருளைக் குறிப்பிடுதல்.*

**16. மொழிவாம் என்றல் :**

*ஓரிடத்தில் கூறப்பட வேண்டிய பொருண்மை ஒன்றனை ஒரு காரணம்பற்றிப் பின் ஓர் இடத்தில் குறிப்பிடுவாம் என்றல்.*

**17. கூறிற்றென்றல் :**

*முன் கூறப்பட்டதோர் இலக்கணத்தினைப் பின் மற்றொரு பொருளுக்கும் விதிக்க வேண்டிய நிலை ஏற்படும்போது, அதனையே மீண்டும் எடுத்துக் கூறாது முன்னரே கூறப்பட்டுள்ளது என்று குறிப்பிடல்.*

**18. தான் குறியிடுதல் :**

*உலக வழக்கில் காணப்படாத பெயர்களை இலக்கண ஆசிரியன் தானே மனங்கொண்டு தன் நூலில் பெயரிட்டு அழைத்தல்.*

**19. ஒருதலை அன்மை :**

*ஓர் இலக்கணத்தைக் கூறி இது யாண்டும் வாராது; வரும் இடம் நோக்கி அறிக; என்று கூறி, விதந்து கூறாது வாளா விட்டு விடுதல்.*

**20. முடிந்தது காட்டல் :**

*ஒரு பொருளை விளக்க வேண்டிய இடத்து ஆசிரியன் தானே விளக்கம் கூறிப்புலப்பட வையாது, இது சான்றோர் அறுதியிட்டு உறுதிசெய்த கருத்து என்றே கூறிவிடுத்தல்.*

**21. ஆணை கூறல் :**

*ஆசிரியன் தன் நூலில் தான் குறிப்பிடும் சில செய்திகளை வேறு காரணம் எதுவும் கூறாது 'இக்கருத்தை எல்லீரும் கொண்மின் என்பது என் ஆணை' என்றே கூறி விடுத்தல்.*

**22. பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்:**

ஒரு நூற்பாவின் அமைப்பு பல பொருள்களும் கொள்ளுதற்கு ஏற்ற சொற்றொடரைப் பெற்றிருப்பினும், தெளிவு கருதி அதனை ஒரே பொருள் தருவதாக மாற்றி அமைக்காது, பயில்வோர் அந்நூற்பாவின் பல பொருள்களில் நல்ல பொருளையே கொண்டு பயனுறுவர் என்று விடுத்தல்.

**23. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்:**

தான் ஒரு வாய்பாடே நூற்பா வாயிலாக எடுத்தோதி அவ்வாய்பாடே பற்றுகப் பல வாய்பாடுகளும் அதற்கு வந்து பொருந்துதற்கு வாய்ப்புக் கொள்ள வைத்தல்.

**24. மறுதலை சிதைத்துத் தன் துணிபு உரைத்தல்:**

ஒரு செய்தியை ஆசிரியன் கருத்துக்கு மாறுகக் கூறுவான் பிறன் உளனயின், அக்கருத்திற்கே இடன் ஏற்படாதவகையில், அதனை மறுத்து நீக்கி, ஆசிரியன் தான்கொண்ட கருத்தினை வலியுறுத்தி வெளியிடுதல்.

**25. பிறன்கோட் கூறல்:**

தான் இயற்றியுள்ள நூலினும் ஒத்த இடங்களில் பிறன் கருத்தையும் வெளியிட்டு, அப்பிறன்நூல் இலக்கணத்தையும் கற்போன் உணருமாறு செய்தல்.

**26. அறியாது உடன்படல்:**

ஆசிரியன் முற்ற உணர்ந்த அறிவன் அன்மையில் தான் வரையும் இலக்கணத்திலும் வேறுபட வருவனவும் உளவாகும் என்பதனைத் தெளிவாக மனங்கொண்டு, அவற்றையும் நூல் பயில்வோர் நுனித்துக்கொண்டு உணருமாறு புறனடை முதலிய நூற்பாக்களை இயற்றுதல்.

**27. பொருள் இடையிடுதல்:**

தான் கூறிவருகின்ற பொருளுக்கு இடையே வேற்றுப்பொருள் ஒன்றனை இயைபுபற்றி இணைத்துக் கூறுதலும், சொல்லும்

பொருளுக்குத் தொடர்புடையது ஒன்றனை ஆண்டே கூறுது, அவ்விடம் விடுத்துப் பிறிதோரிடத்தில் கூறுதலும் போல்வன.

28. **எதிர்பொருள் உணர்த்தல் :**

முதல்நூல் ஆசிரியன் சொற்றவற்றில் சில தன்காலத்துத் திரிந்து வருதலைத் தானே கண்டு உணரும் ஆசிரியன், தான் கூறுவனவற்றுள்ளும் சில பிற்காலத்தில் திரிபுபடுதலும் கூடும் என்பதனை உட்கொண்டு, அத்திரிபுகளையும் காலம் நோக்கி ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் என்று தெரிவித்தல்.

29. **சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் :**

நேரே வெளிப்படக்கூறுது, சொல்லாற்றலால் குறிப்பாகப் பெறப்பட வேண்டிய பொருளினையும், வெளிப்படையாக எடுத்தோதின் எத்தகைய தெளிவு புலப்படுமோ அத்தகைய தெளிவு புலப்படும் வகையில் கொள்ளவைத்தல்.

30. **தந்து புணர்ந்து உரைத்தல் :**

உண்மையாக ஒரு பொருண்மை உடையது அன்றுகிய ஒன்றனை ஒருபயன் நோக்கி அப் பொருண்மை உடையதுபோலச் சுட்டிக்கூறுதல்.

31. **ஞாபகங்கூறல் :**

நூற்பா இயற்றுங்கால் அதன் அழகுகளாகக் கூறப்பட்டவற்றை உட்கொண்டு சில்வகை எழுத்தின் செய்யுட்டாகவும் நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்கவும் இயற்றுது, அரிதும் பெரிதுமாக நலிந்து செய்து, அதனனே வேறு பல பொருளும் அறிதற்கு வாய்ப்பு அளித்துக் கூறல்.

32. **உய்த்துக்கொண்டு உணர்தல் :**

ஓரிடத்தில் ஒரு பொருள்பற்றி நூற்பா ஒன்று யாத்தவழி அந்நூற்பாவின்கண் மற்றொரு பொருளையும் அமைத்துக் கொள்ளுதற்கு வாய்ப்பு அளித்து நூற்பா யாத்தல்.

சொல்லாதன - உரையிற்கோடல், ஒன்றினமுடித்தல், தன்னினம் முடித்தல், தான் எடுத்து மொழிதல், இன்னது அல்ல இது எனமொழிதல், ஏதுவின் முடித்தல் முதலாயின.

இவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் இலக்கண நூல்களில் வந்துழிக்காண்க. தொல்காப்பிய உரையாளர்களும் மாறனலங்கார உரையாசிரியரும் எடுத்துக்காட்டுக்களும் தந்துள்ளனர். ஆண்டும் காண்க.

### ஒத்த நூற்பாக்கள்

'ஒத்த காட்சியின்.........கூறிய நூலே - முழுதும்.'
- தொ. பொ. 665

'நுதலிப் புகுதல் ஓத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவிடம் கூறல்
தான்எடுத்து மொழிதல் பிறன்கோள் கூறல்
சொற்பொருள் விரித்தல் தொடர்சொல் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தல் மாட்டெறிந்து ஒழுகல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தவை முடித்தல்
உரைத்தும் என்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிவே எடுத்துக் காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்னது அல்லது இதுஎன மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறநூல் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்கம் மிகஎடுத்து உரைத்தல்
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்
ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்
உய்த்துணர வைப்புஎன உத்தி எண் ணான்கே.' -நன். 13

'உள்ளுறுத் தமைத்த உத்திவகை உரைப்பின்
நுதலிய துணர்த்தல் உரைமுறை வைப்பே
தொகைபெற நாட்டல் வகைபெறக் காட்டல்
விரிந்தவை இவைஎன விழுமிதின் காட்டல்
தொகுத்த மொழியுள் வகுத்தனர் கோடல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
பல்பொருட்கு ஏற்பின் நல்லவை கோடல்
மொழிந்தனம் என்றல் மொழிவாம் என்றல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
வாராதது கொண்டு வந்தது முடித்தல்
பிறன்கோள் கூறல் தன்கோள் கூறல்
பிறன்உடம் பட்டது தான்உடம் படுதல்
அறியாது உடம்படல் ஆணை கூறல்
தான்குறி யிடுதல் தந்துகொணர்ந்து உரைத்தல்
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்
மாட்டெறிந்து ஒழுகல் இரட்டுற மொழிதல்
ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்
மாட்டுறுப் பினவா மனங்கொளக் கூறல்
உய்த்துக்கொண்டு உணர்தலின் உரனுடை யனவாய்த்
தீபக வகையால் சிறப்புறக் கூறல்
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்என்று
அமைத்ததின் அகப்பட அமையா தனவும்
சுருங்கக் கூறிய தொடர்பினை நாடி
ஒருங்கமைத்து உணர்த்துதல் உரவோர்கடனே.'

– மாறன். 25

*138*

## நூலின் வகை

899. முதல் வழி சார்புஎன நூல் மூன்று ஆகும்.

இது, நூலின் வகை கூறுகின்றது.

இ-ள் : கூறிய இலக்கணங்களை எய்திய அந்நூல் முதல் நூல் என்றும், வழி நூல் என்றும், சார்பு நூல் என்றும் மூன்ருய் வழங்கப்படும் என்றவாறு.

முதல் வழி சார்பு என்பன ஆகுபெயர். கூறிய இலக்கணங்களாவன சூத்திரமும் ஒத்தும் படலமும் பிண்டமுமாம். அவையிற்றினை அடக்கிய வேறு பிண்டம் இவைகளின் இலக்கணம் என்றே கோடும். (139)

### விளக்கம்

*இவைகளின் இலக்கணம் – முதல்வழி சார்பு நூல்களின் இலக்கணம். தொல்காப்பியனுர் முதல் நூல், வழி நூல் என்ற இரண்டே கொண்டார். சார்பு நூல் என்ற ஒன்றனை அமைத்து அதற்கு அப்பெயர் இடுதல் கூடாது என்று பேராசிரியர் விளக்கமும் தந்துள்ளார். (தொல். பொ. 648 பே) பின்னுள்ளோர் சார்பு நூலும் கொண்டுள்ளனர்.*

### ஒத்த நூற்பாக்கள்

*'மரபு நிலை திரியா மாட்சிய ஆகி*
*உரைபடு நூல்தாம் இருவகை இயல*
*முதலும் வழியுமென நுதலிய நெறியின.'*

*– தொல். பொ. 648*

*முழுதும் – நன். 5*

*'முத்திறத்தொன் றென்பன முதல்வழி சார்பே.' – மாறன் 7*

*139*

## முதனூல் இலக்கணம்

**900.** அவற்றுள்,
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.

இது முதல் நூலின் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ-ள்: முதல் வழி சார்பு என்ற மூன்றனுள், அநாதியே அவிச்சை காரணமாக வரும் இருவினைப் பந்திப்பினின்றும் நீங்கி, இறைவனது அருளான் தன்னை அறிவதாக அறியும் பரஞானத்தான் உளதாய சீவன் முத்தி பெற்றோரால் செய்யப்படுவது முதனூலாம் என்றவாறு.

என்றது யோக முயற்சியின் தலை நிற்க, மெய்யுணர்வு பிறந்து, யான் எனது என்னும் செருக்குக்கள் அற்று, இருவினைப் பயனினும் சமம் செய் கோல் போலப் புடைபெயர்ச்சி இன்றி ஒரு நிலையின் மேல் நோக்கிய வழி, இறைவன் அருள்வதிய, அதனான் விரிந்த மெய்ஞ் ஞானம் விளங்குதலாம். முனைவன் போன்று நிற்றலின் முனைவன் என்றார்; அஃது உபசார வழக்கு. அவர்கள் மக்கள் உயிர்க்கு உறுதி பயப்ப அருளால் கூறியவாரும் என்க, இறைவன் அருளால் அறிவு விளங்கும் என்பது என்னை?

'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி.'

– *திருவாசகம். திருஅம்மானை 6*

எனத் தென்னவன் பிரமராயரும்,

'மயர்வற மதிநலன் அருளினன் எவனவன்' – *திருவாய்மொழி* 1

எனக் குருகூரரும் பொருள்மொழிக்காஞ்சி கூறிய வாற்றான் அறிக. (140)

## விளக்கம்

*உயிர்களுக்கு அநாதி காலம் தொட்டே அவிச்சை என்ற அறியாமை உண்டு. அவ்வறியாமை காரணமாக நல்வினை தீவினை என்ற இருவினைப் பிணிப்பும் ஏற்படும். அத்தகைய*

பிணிப்பிலிருந்து நீங்கவும் இறைவன் அருள் வேண்டும். அத்தகைய அருள் கிடைக்கப்பட்டுப் பிணிப்பிலிருந்து நீங்கியவன் சீவன் முத்தனாவான். அவன் உலகியற் பொருளை விடுத்துத் தன்னை அறியும் மேம்பட்ட ஞானத்தன் ஆவான். அவன் தன்னலம் கருதாது உலக நலன் கருதிச் செய்வதே முதல் நூலாம்.

இறைவன் அருளால் யோக நிலை உண்டாகும். யோகநிலை என்பது இறைவனை உள்ளத்திருத்தி அவனோடு இரண்டறக் கலந்து துய்த்து இருப்பது. அந்நிலை கைகூடப் பெற்றவர்களுக்கு 'நில்லாதனவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவாண்மை' – (குறள்) நீங்கும். அந்நிலை ஏற்பட்டபின் தான் அல்லாத உடலைத் தான் என்றும் தனது அல்லாத உலகியல் பொருளைத் தன்னுடையது என்றும் கருதும் 'யான் எனது என்னும் செருக்கு' – (குறள் 346) அவனால் அறுக்கப்படும். அச்செருக்கு நீங்கியபின் நல்வினை தீவினை என்பனவற்றை ஒன்றுபோலக் கருதும் உளநிலை ஏற்படும். அந்நிலையை எய்தியவன் மேம்பட்ட பொருளிடத்து நாட்டத்தைச் செலுத்துவான். அப்பொழுது இறைவன் அருள் கைகூடும். அவ்வருளினால் மெய்ஞ்ஞானம் ஏற்படும். அஃது உலக நலனுக்கும் பயன்படும். 'நிலமமர் வையத்து ஒருதாம் ஆகி, உயர்நிலை உலகம் இவண் நின்று எய்தும் பெரியோர்' – (மதுரை. 470-471) முன்னோதிய இறைவனைப் போலவே நமக்குக் காட்சி வழங்குதலின் அவர்களை முனைவன் என்றே கூறுவது உபசார வழக்கு. அவர்கள் உலக மக்கள் வாழ்வதற்காக அருள் காரணத்தான் நூல் இயற்றுவார்கள் என்பது.

இறைவன் அருளால் அறிவு விளங்கும் என்பதனை மணிவாசகப் பெருமானும் நம்மாழ்வாரும் குறிப்பிட்டருளியுள்ளனர். இந்நூற்பா உரை மிகச் சிறப்பாக உள்ளமை பாராட்டத்தக்கது. இந்நூற்பாவுக்குத் தொல்காப்பிய உரையாளர்களும் நன்னூல் உரையாளர்களும் உரைத்துள்ள உரைகளுடன் இதனை ஒப்பிட்டுக் காண்க.

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – தொல். பொ. 649. – நன். 6*

*'முதல்வனின் சிறந்தது முதல் நூலாகும்.' – மாறன் 8*
*140*

## வழிநூல் இலக்கணம்

901. வழிஎனப் படுவது அதன்வழித் தாகித்
தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே.

இது வழிநூலின் இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : வழிநூல் என்று சிறப்பித்துச் சொல்லப் படுவன, முதல் நூலில் கூறிய பொருளோடு வேறு படாமல் பின்தோன்றுவனவாகி, முதனூலில் எழுத்திலக் கணமும் சொல்லிலக்கணமும் மயங்கக் கூறினாற்போலக் கூறாது, 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி' – (தொல். சிறப்புப்பாயிரம்). எனவேறோர் அதிகாரமாகத் தொகுத்துக் கூறுதலும், விரித்த சூத்திரப் பொருளைத் தொகை மரபால் தொகுத்துக் கூறுதலும்,

'வினைநிலை உரைத்தலும் வினாவிற்கு ஏற்றலும்
பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே'

என ஆசிரியர் அகத்தியனார் தொகுத்துக் கூறிய பொருளை,

'பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதல்என்று
அன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே' – தொல். சொ. 67

என விரித்துக் கூறுதலும்,

'எழுத்தெனப் படுப,
அகரம் முதல்
னகர இறுவாய் முப்பஃது என்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.' – தொல். 1

எனத் தொகையும் விரியுமாகக் கூறுதலும், வட சொல்லால் கூறிய அறநூற்பொருளைத் தமிழ் மொழியால் கூறுதலும்,

மொழி பெயர்த்தல் ஒழித்து ஏனை இலக்கணம் பெற முதல் நூல் சூத்திர யாப்போடு சேர்த்துக் கூறுதலும் ஆகிய அவ்விலக்கணங்களை உடையனவாம் என்றவாறு.

மொழி பெயர்த்தல் ஆசாரக்கோவையும், அதர்ப்பட யாத்தல் திருவள்ளுவப்பயனும் முதலியன. (141)

விளக்கம்

*மொழி பெயர்க்கப்படுவன, தமிழில் இல்லாதனவாய்த் தமிழகத்திற்குத் தேவைப்படும் செய்திகள். அவற்றை உள்ள வாறே மொழிபெயர்த்தல் வேண்டுமே ஒழியத் தொகுத்தோ விரித்தோ தொகை விரியாகவோ மொழி பெயர்த்தல் கூடாது என்பது.*

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – தொ. பொ. 650, 651.*

*'முன்னோர் நூலின் முடிபுஒருங்கு ஒத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.' – நன். 7*

*'தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு
எனத்தகு நூல்யாப்பு ஈரிரண்டு என்ப.' – நன். 49*

*'விழுமிய முதல்நூல் விதித்தவற் றினொடும்
பழுதறச் சான்றோர் படைத்தவும் தழீஇ
வழுவின் றுய்வரல் வழிநூ லாகும்.' – மாறன் 9*

'தொகுத்தலும் விரித்தலும் தொகைவகை விரியின்
பகுத்தலும் மொழிபெயர்த் தலும்எனும் பான்மைய.'

– மாறன் 12

141

## சார்புநூல் இலக்கணம்

902. இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவேறு உடையது புடைநூல் ஆகும்.

இது புடைநூலின் இலக்கணம் கூறுகின்றது.

இ-ள்: முதல் நூற்கும் வழி நூற்கும் ஒரு மருங்கு ஒப்ப எடுத்துக்கொண்டு, முடிபு ஒன்ருகக் கூறுமாறு வேறுபாடு உடையது சார்பு நூலாம் என்றவாறு.

புடைநூல் எனினும் சார்புநூல் எனினும் ஒக்கும்.

திரிபாவது [1]படலத்தின் இலக்கணம் ஓத்தில் கிடக்கவும், [2]படலத்தின் இலக்கணங்களைத் தொகுத்து ஒரு சூத்திரத்தில் கிடக்கவும், [3]ஓத்தின் இலக்கணம் ஒரு சூத்திரத்தில் கிடக்கவும், [4]ஒரு படலத்தில் கூறும் இலக்கணம் மற்ருெரு படலத்தின் இயைபு நோக்கிக் கிடக்கவும், [5]படலத்து ஒழிபோடு பிண்டத்து ஒழிபு சேர்ந்து கிடக்கவும், [6]கால வேறுபாட்டால் பெறுவனவும் சின்னுள் பல்பிணி சிற்றறிவிஞேர்க்கு அறிவுறுத்தற் பொருட்டுத் தொகைவகை விரிபடச் செய்தலாம் என்று உணர்க.

அவற்றுள்,

1-படலத்தின் இலக்கணம் ஓத்தில் கிடத்தலாவது, ஆசிரியர் தொல்காப்பியனுர் எழுத்ததிகாரத்தில் கூறிய பொதுவகையான் புணரும் இயல்பும், விரிந்த

சூத்திரப் பொருள அன்றித் தொக்குப் புணரும் இயல்பும், குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் நின்று புணரும் இயல்பும் இந்நூலுள் உயிரீற்றுப் புணரியலில் கூறப்படுதலும்; அவர் சொல்லதிகாரத்தில் கூறிய கிளவி யாக்கமும் வேற்றுமையியலும் வேற்றுமை மயங்கியலும் விளிமரபும் இதன்கண் பெயரியலுள் கூறப்படுதலும்; பொருளதிகாரத்தில் களவியலும் கற்பியலும் பொரு ளியலும் மெய்ப்பாட்டியலும் அகத்திணையியலுள் கூறப் படுதலுமாம் என்று உணர்க.

2. படலத்தின் இலக்கணங்களை ஒரு சூத்திரத்தில் தொகுத்தலாவது – எழுத்ததிகாரத்தின்,

'எண்பெயர் முறை பிறப்பு' – இ. வி. 8

எனவும்,

சொல்லதிகாரத்தின்,

'தனிமொழி தொடர்மொழி' – இ. வி. 160

எனவும்,

பொருளதிகாரத்தின்,

'போக்கறு மரபின் பொருளெனப் படுவது' – இ. வி. பொ. 2

எனவும் கூறலாம் என்று உணர்க.

3. ஒத்தின் இலக்கணம் ஒரு சூத்திரத்தில் கிடத்தலாவது,

'மொழிக் காரணமாம்' – இ. வி. 8

எனவும்,

'எழுத்தே தனித்தும் இணைந்தும் தொடர்ந்தும்' – இ. வி. 38

எனவும்,

'மெய்உயிர் முதல்ஈறு ஆம்இரு பதங்கள்' - இ. வி. 53

எனவும்,

'பெயர்எனப் படுபவை தெரியுங் காலே' – இ. வி. 176

எனவும்,

'வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது' – இ. வி. 227

எனவும்,

'வேற்றுமை வினைசாரியை ஒப்பு உருபுகள்' – இ. வி. 251

எனவும்,

'குறிப்பும் பண்பும் இசையும் தோற்றி' – இ. வி. 280

எனவும்,

'அதுவே, கைக்கிளை ஐந்திணை' – இ. வி. 376

எனவும்,

'வெட்சி வஞ்சி உழிஞை தும்பை' – இ. வி. 600

எனவும்,

'அணி எனப் படுவது' – இ. வி. 620

எனவும்,

'செய்யுள் என்பது' – இ. வி. 710

எனவும்,

'எஞ்சிய இலக்கணம்' – இ. வி. 761

எனவும் கூறப்படுதலாம் என்று உணர்க.

4. ஒரு படலத்தில் கூறும் இலக்கணம் மற்றொரு படலத்தில் கூறலாவது – செய்யுளியலுள் கூறவேண்டும் ஒற்றளபெடையை எழுத்தியலுள் கூறலாம் என்று உணர்க.

5. படலத்து ஒழிபோடு பிண்டத்துஒழிபு சேர்தலாவது இவ்வோத்துள் கூறப்படும் பாட்டின் இயல் முதலிய ஏழும் படலத்துஒழிபு எனவும், மரபு முதலிய ஏழும் பிண்டத்துஒழிபு எனவும் சேர்ந்து நிற்றலாம் என்று உணர்க.

6. கால வேறுபாட்டால் பெறுதலாவது, அகரத்தோடு கூடிச் சகரம்மொழிக்கு முதலாம் எனக் கூறுதலும், ( இ. வி. 27 )

'சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்'

- *தொ. சொ.* 468

என ஆசிரியர் தொல்காப்பியனூர் பாதீடு இட்ட சொல்லே விகுதிப்புணர்ச்சி என விரித்துக் கூறுதலும், அவர் உவமம் ஒன்றனையே கூறி ஒழிய இவர் குணவணி என்றும் பொருளணி என்றும் சொல்லணி என்றும் மொழிபெயர்த்துக் கூறுதலும் ஆம் என்று உணர்க.

முதல்நூல் வழிநூல் சார்புநூல் இலக்கணம் கூறுதலான், முதல் நூலில் வழிநூல் சார்புநூற்கு இலக்கணம் பெருமையும் அறிக. (142)

விளக்கம்

*பாதீடுஇடுதல் – பகுத்துக் கூறுதல்.*

*முதல் நூலில் வழிநூல் இலக்கணம் கூறப்படமாட்டாது.*

*வழிநூலில் முதல்நூல், வழிநூல் இலக்கணம் கூறப்படுமே ஒழியச் சார்புநூல் இலக்கணம் கூறப்படமாட்டாது.*

*சார்புநூலில் முதல், வழி, சார்பு என்ற மூவகை நூலிலக்கணமும் கூறப்பெறும்.*

*தமிழில் முதல்நூல் இப்பொழுது இல்லை. ஆதலின் அதன் கண் வழிநூல் இலக்கணம் கூறப்பெறவில்லை என்பதை எடுத்துக் காட்டுதல் இயலாது. வழிநூலாகிய தொல்காப்பியத்தில் முதல் நூல் இலக்கணமும் வழிநூல் இலக்கணமும் கூறப்பட்டுள்ளன.*

*சார்பு நூலாகிய நன்னூல் முதலியவற்றில் மூவகை நூல் இலக்கணமும் காணப்பெறும்.*

### ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – நன். 8*

*'இவ்வகைப் பனுவலோடு ஒத்துஇழுக்கு இன்றுய்ச்*
*செவ்விதின் சிறிது திரிவது சார்பே.' – மாறன். 10*

***142***

## உரைவகை நான்கு

903. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின்று எழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும்என்று
உரைவகை நடையே நான்குஎன மொழிப.

இது மேல் நிறுத்தமுறையானே உரைச் செய்யுள் ஆமாறும் அதன் பகுதியும் கூறுகின்றது.

இ–ள்: ஒரு பாட்டின் இடையிடைக் கொண்டு நிற்கும் கருத்தான் வருவன உரை எனப்படும். என்னை? பாட்டுறுவது சிறுபான்மை ஆகலின்; அவை தகடூர் யாத்திரை போல்வன. மற்றுப் பிரபாடை விரவி வருவனவோ எனின், அவற்றுள்ளும் தமிழ் உரை ஆயின ஈண்டு அடங்கும். பிறபாடைக்கு ஈண்டு ஆராய்ச்சி இன்று.

பாஇன்று எழுந்த கிளவி – பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருள் எழுதுவன போல்வன; சூத்திரம் பாட்டு எனப்படர்வோ எனின், படா; ‘பாட்டும் உரையும் நூலும்’ (தொல். பொ. 391) எனவேறு ஓதினமையின். இதனுல் போந்தது, சொற்சீரடியான் இற்ற சூத்திரம் உரைச்செய்யுள் என்பதாம்.

பொருளொடு புணராப் பொய்மொழி - பொருள் இன்றிப் பொய்படத் தொடர்ந்து சொல்லுவன.

பொருளொடு புணர்ந்த நகைமொழி – பொய்எனப் படாது பொருளொடு பட்டு நகுதற்கு ஏதுவாகும் தொடர்நிலை.

இந்நான்கும் உரைச்செய்யுள் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

‘வகை’ என்றதனுல் இவ்வுரைப்பகுதி பிறவும்உள. அவை மேல் பாயிரத்துள்,

‘பொழிப்பே அகலம் நுட்பம் எச்சம்எனப்
பழிப்பில் சூத்திரம் பன்னல் நான்கே.’

என்றதனுல் பெறப்பட்டன. (143)

விளக்கம்

*நிறுத்தமுறை – இவ்வியல் முதல் நூற்பாவில் நிறுத்தியமுறை. தொடர்நிலைச் செய்யுளில் இடை இடையே செய்யுளைவிட உரைநடை மிகுதியாக வரையப்பட்டுப் பொருள் புலப்படுத்தும் நூல்கள் தகடூர் யாத்திரைபோல அருகியிருந்தன. இப்பொழுதும் சிலப்பதிகாரத்தில் சிறுபான்மை உரைநடை விரவி வந்துள்ளதைக் காண்கிறோம். தமிழ் உரைநடை விரவுதலே ஏற்றது. இது முதல்வகை உரைப்பகுதி.*

பாட்டு அடிவரையறை உடையது. நூல் உரை முதலியன அன்னஅல்ல. எனவே, வேற்றுவன் சூத்திரத்தை எடுத்து உரையாக எழுதுதலும் பாவின்றெழுந்த கிளவியாய் உரைச் செய்யுள் என அடங்கும்.

பொருளொடு புணராப் பொய்மொழியாவது – ஓர் யானையும் ஒரு குதிரையும் தம்முள் நட்பாடி இன்னுழிச்சென்று இன்னவாறு செய்தன என்று அவற்றுக்கு இயையாப் பொருள்படத் தொடர் நிலையான் ஒருவனுழை ஒருவன்கற்று வரலாற்று முறையான் வருவது போல்வது.

பொருளொடு புணர்ந்த நகைமொழி – அவையாவன சிறுகுரீஇ உரையும் தந்திரவாக்கியமும் போல்வன. இவற்றுள் சொல்லப்படும் பொருள் பொய் எனப்படாது, உலகியலாகி, நகைதோற்றும் என்பது.

வகை என்றதனல், பொழிப்புரை, அகலவுரை, நுட்பஉரை, எச்சவுரை போல்வனவும் கொள்ளப்படும்.

இந்நூற்பா தொல்காப்பியப் பொருளதிகாரத்து 485-ஆம் நூற்பா. உரை பெரும்பாலும் பேராசிரியர் உரையே. இனி உரையாசிரியர் 'பல சொல் தொடர்ந்து பொருள் காட்டுவன வற்றுள் ஓசை தழீஇயவற்றைப் பாட்டு என்ருர். ஓசை இன்றிச் செய்யுள் தன்மைத்தாய் வருவது நூல் எனப்பட்டது.

அவ்வகையும் அன்றி வரும் உரைத்திறன் ஈண்டு உரை யெனப்பட்டது.

'இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து.' – கலி. 56

'கடியர்தமக்கு யார்சொலத் தக்கார் மற்று' – கலி. 88

என்பன உரைக்குறிப்பு.

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையுள்,

*'கயலெழுதிய இமய நெற்றியின்*
*அயலெழுதிய புலியும் வில்லும் .........*
*மடைமுதுமகள் வந்து தோன்றும்மன்.'*

என்பதும் அது.

*பாவின்று எழுந்த கிளவி வழக்கின்கண் ஒரு பொருளைக் குறித்து வினவுவாரும் செப்புவாரும் கூறும் கூற்று. அதுவும் இலக்கணம் பிழையாமல் கூற வேண்டுதலானும், ஒரு பொருளைக் குறித்துச் செய்யப் படுதலானும் செய்யுளாம்.*

*நகை மொழியாவது மேல் சொல்லப்பட்ட உரை பொருந்தாது என இகழ்ந்து கூறுதல். அவ்விகழ்ச்சியின் பின்னர்ப் பொருள் உணர்த்தும் உரை பிறக்கும் ஆதலின் பொருளொடு புணர்ந்த நகை மொழியானும் உரை வரும் என்றார்' என்று குறிப்பிட்டுள்ளார்.*

*பின் இரண்டு உரைவகையும் செவிலிக்கே உரிய. முன்னிரண்டும் எல்லோர்க்கும் உரிய என்றார் தொல்காப்பியனார்.*

இந் நூலார் இவற்றைக் குறிப்பிடுவது தேவையற்றது என்பது குறித்து உணரப்படும்.

ஒத்த நூற்பா

*முழுதும் – தொல். 485 பேரா.*

*143*

## பிசியின் வகை

**904.** ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றுஇரு வகைத்தே பிசிவரு நிலையே.

இது பிசி ஆமாறு கூறுகின்றது.

**இ-ள் :** ஒப்புமையொடு பொருந்திய வரும் உவமைப் பொருளானும் ஒன்று சொல ஒன்று தோன்றுதல் துணி

வுடையவாகச் சொல்லும் சொல்லானும் என இரு கூறுபாடு உடைத்து பிசி தோன்றும் நிலை என்றவாறு.

ஒப்பொடு புணர்ந்த உவமம் – 'பிறை கவ்வி மலை நடக்கும்' என்பது யானை எனவும்,

'முத்துப்போல் பூத்து முதிரின் களாவண்ணம்
நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்ந்து'

என்பது கமுகு எனவும் வரும்.

தோன்றுவது கிளந்த துணிவு என்பது,

'நீராடான் பார்ப்பான் நிறம்செய்யான் நீராடின்
ஊராடு நாட்டிற் காக் கை.'

இது நெருப்பு என்ருவது.

பிசி நிகிர்தம் என்பன ஒரு பொருட் கிளவி.

(144)

விளக்கம்

*பிசி என்பது விடுகதை.*

*உவமம் பற்றிய பிசி – 'பிறை கவ்வி' 'முத்துப்போல் பூத்து' என்பன.*

*ஒன்று சொல்லி வேறு ஒன்றனை அறிவதற்குக் கருவியை உள்ளடக்கிச் சொல்லும் பிசி 'நீராடான் பார்ப்பான்' என்பது.*

*இந் நூற்பா தொல்காப்பியப் பொருட்படல 488ஆம் நூற்பா. உரை பேராசிரியர் உரை. இதுவும் செவிலிக்கு உரித்து என்பது பேராசிரியர் கருத்து.*

ஒத்த நூற்பா

*முழுதும் – தொல். பொ. 488 பே.*

144

## முதுமொழி இலக்கணம்

905. நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
மென்மையும் என்றுஇவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப.

இது முதுமொழி ஆமாறு கூறுகின்றது.

இ–து : நுண்ணிய பொருளுடைமையும், எழுத்தானும் சொல்லானும் சுருக்கம் உடைமையும், எல்லாச் சமயத்தாரானும் கூறும் பொருள்களில் தான் சென்று விளங்குதல் உடைமையும், அறிவோர்க்குப் பிரவேசிக்க எளிதாதல் உடைமையும், என்று கூறப்படும் இந் நான்கும் தோன்ற எப்பொருளும் தன்னகத்து அடங்கத் தான் மேற்பட்டுப் பிரதிக்கினை மாத்திரத்தான் கருதிய பொருளை முற்றுவிக்க அவாய்நிலை தோன்றியவழித் தோன்றும் காரகமாக வரும் திட்டாந்தம் உபநயம் நிகமனம் என்னும் வாக்கியங்களை உட்கொண்டு வாரா நிற்கும் ஏதுப்பொருளைக் கருதியனவே முதுமொழிச் செய்யுள் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இவற்றின் விகற்பம் எல்லாம் அளவை நூல் முகத்தான் ஆராய்ந்து அறிக.

அளவையும் பொருட்கூருகலான் ஆசிரியர் தொல்காப்பியனுர் பொருளதிகாரத்தில் படலத்து ஒழிபாக அடக்கிக் கூறினுர். மூன்ரும் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் ஆசிரியர் அகத்தியனுர் ஏதுப்பொருள் கூறினமையான் ‘அதர்ப்படயாத்தல்’ என்பதனுன் இந்நூல் உடையாரும் ஆசிரியர் தொல்காப்பியனுர்

ஓதியபாடமே இந்நூற்குப் பாடமாகக் கொண்டு கூறினர். இவ்வாறு வருவனவற்றிற்கு எல்லாம் இஃது ஒக்கும்.

மொழியான் அன்றி மனத்தான் உணரும் நுண்ணிய பொருளாகலின் நுண்மை என்றார். தான்சிறிதாய்ப் பாலில் பிரை ஒத்துக் கலந்து நிற்கும் தன்மையின் சுருக்கம் என்றார். சொல்லால் பொருள் விளங்குமாறு இன்றிப் பொருள் ஆற்றலால் பலரும் உடன்படத் தோன்றுதலின் ஒளியுடைமை என்றார். இயல்பால் பொருள்தன்மை உணராநிற்போருக்கு மெலிதாதல் தன்மையின் மென்மை என்றார். இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கூறாக்கால் குன்றக் கூறல் என்னும் குற்றம் தங்கி முதல்நூலின் வழித்து அன்று என்பதாம்; அதனுன் இவ்வாறு பொருள் கூறல் வேண்டும் என்க.

(145)

விளக்கம்

'ஏது நுதலிய முதுமொழி' என்பது காரணங்களால் அறுதியிடப்படும் அளவை நூற்கருத்துக்களைக் கொண்ட முதுமொழிச் செய்யுள் எனப் பொருள் கொள்ளப்பட்டது.

*பிரதிக்கினை – கருதுதல்* — *இம்மலையில் நெருப்பு உண்டு என்பது.*

*திட்டாந்தம் – உவமம்* — *அடுக்களை போல என்பது.*

*உபநயம் – காரணம் காட்டி*

*விளக்கல்* — *எங்குப் புகை உண்டோ அங்கு நெருப்பு உண்டு என்பது.*

*நிகமனம் – முடிவு* — *இம்மலையில் புகை இருப்பதால், இங்கு நெருப்பு உண்மை ஒருதலை என்று முடிவு செய்வது.*

தொல்காப்பியனாரும் அகத்தியனாரும் ஏதுப்பொருண்மை கூறி, அதர்ப்படயாத்தல் என்பதனால் நியாயநூற் செய்திகளைத் தமிழ் மரபிற்குத் தேவையான இடத்தில் அமைத்துக் கூறியுள்ளனர் ஆதலின், ஏதுபற்றி உரைப்படும் அளவைநூற் செய்தியும் வழக்கும் செய்யுளும் அடிப்படையாக எழுந்த எந்நூற்கும் தேவை ஆதலின் இவ்வாசிரியரும் அதனைக் குறிப்பிட்டு ஏதுவின் விளக்கத்துக்குத் தேவைப்படும் அளவைநூற் செய்தியும் சுட்டப் பட்டமை தெரித்து, நூலுக்குக் குறை அறுத்தார்.

இதனைவிடுத்து வேறுபொருள் கூறின், நூலுள் ஏதுவின் விளக்கத்திற்கு உணரப்பட வேண்டும் அளவைநூற் செய்தி சுட்டப்படாத குன்றக்கூறல் என்ற குற்றம் நூற்குத் தங்கும் என்பது.

இனி இந்நூற்பாவிற்குப் பேராசிரியர்,

'கூரிதாய் சுருங்கி விழுமிதாய் எளிதாகி இயற்றப்பட்டுக் குறித்த பொருளை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனைப் பொருள் முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவது முதுமொழி என்ப புலவர் என்றவாறு.

'உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால் - வழுதியைக்
கண்டன கண்கள் இருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு.' (பழமொழி)

என்றவழி மற்று வழுதியைக் கண்ட கண் இருப்பத் தோள் பசந்தன என்றக்கால் ஒன்றன் வினைப்பயன் ஒன்று நுகர்ந்தது என்புழிக் குறித்த பொருள் இயைபின்மை கூறுதலாயிற்று. அதனைச் சொற்றொடர் இனிது விளக்கிற்றன்றாயினும் முற்கூறிய முதுமொழி முடித்தது என்பது. என்னை? அதன்கண்ணே அது முடித்தற்கு ஏதுவாகிய இயைபின்மை கிடந்தமையின் என்பது. இது பருப்பொருட்டன்றி நுண்ணிதாகிச் சொற் சுருக்கம் உடைத்தாய் விழுமிதாகி எளிதில் பொருள் தோன்றியவாறு

கண்டுகொள்க. இதுவும் இந்நாற் பகுதித்து என்றவாறு' என்று உரை வரைந்துள்ளார்.

இவ்வுரை பொருளொடு புணர்ந்த நகைமொழிக்கண் அடங்குதல் கூடும். மேலும் ஏதுவிற்கும் விளக்கம் தரும் அளவை நூற்கருத்தும் சுட்டப்படல் வேண்டும். ஆதலின் பேராசிரியர் உரையை விடுத்து இந்நூலார் தாமே தம் புலமைதோன்ற மேம்பட்ட உரை வரைந்துள்ள திறம் நோக்குக.

ஒத்த நூற்பா

முழுதும் – தொல். பொருள். 489. பே. 145

## மந்திரத்தின் இலக்கணம்

906. நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப.

இது மந்திரச் செய்யுள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்: அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும், அவ்வப் பயன்களைப் பயக்கும் நிறைந்த மொழியை உடைய குரவர்தாம் அனுபவத்தால் அறிந்த பொருளைப் பிறருக்கு உணர்த்தல் ஆகாமையான், அவர்க்குப் பயப்பாடு நோக்கி, ஆக்கினையான் மறைந்த பொருளைக் கூறப்பட்ட செய்யுளே மந்திரச்செய்யுள் என்றவாறு.

செய்தலினால் சொல்லும் செய்யுளாதல் பெற்றாம். சொல் எனவே, ஓர் எழுத்தொருமொழியும் ஈரெழுத் தொருமொழியும் தொடர்மொழியும் கொள்க. அவை மந்திர மொழி வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

இச் சூத்திரமும் மேலைச் சூத்திரமும் ஆசிரியன் கூற்று. (146)

விளக்கம்

சான்றோர் பல்லாண்டு தாம் அநுபவத்தால் அறிந்தவற்றை உலகம் கொண்டு பயன்படல்கருதிக் கூறிய செய்யுளே மந்திரமாகும். பேராசிரியர் உரையில் கூறும் வசைப்பாடல் களை விடுத்து உலக வாழ்விற்குக் கூறிய செய்திகளையே இவர் மந்திரம் என்றார். மந்திரங்கள் உபதேச வாயிலாக அறியப்படுவனவாதலின் அவற்றிற்கு உதாரணம் காட்டாது, மந்திரம் வல்லார்வாய்க் கேட்டு உணருமாறு கூறினர்.

'என்ப' என்ற தொடர்கொண்டு இந் நூற்பாவும் சென்ற நூற்பாவும் அகத்தியனுர் கூற்ருக இவ்வாசிரியர் கொண்டுள்ளார் போலும்.

ஒத்த நூற்பா

*முழுதும் – தொல். பொ. 490 பே.* *146*

## குறிப்பு மொழி இலக்கணம்

907. எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப.

**இது குறிப்பு மொழி ஆமாறு கூறும் முகத்தான் எய்தாதது எய்துவிக்கின்றது; சொல்லால்பொருள் உணர்த்தலே அன்றிப் பொருளானும் சொல் பெறப்படுதலின்.**

**இ-ள்: எழுத்திஞெடும் சொல்லிஞெடும் புணராதாகிப் பொருட்கண் அபிநயத்தில் கிடப்பனவே குறிப்புச்சொல்லாம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.**

**வரலாறு:**

**'வரு கோவைச் சூடி வளைகோவை சாத்தி
ஒரு கோவை ஏறிஉயர் கோவை – தருகோவைக்
கைக்கோவை ஆய்ந்துரைத்தார் காண்பார்க்குக் காணுதார்க்கு
இக் கோவை ஆய்ந்துரைத்தார் ஈங்கு.'**

கோ என்பது பலபொருள் ஒரு சொல்லாய் நீரையும் திசையையும் இடபத்தையும் சுவர்க்கத்தையும் கூற்று மொழியையும் குறிப்புமொழியையும் உணர்த்தும் ஆகலான்;

'உயர்கோவை.........காண்பார்க்கு' என்பதற்குப் பொருள் மேலான சீபாதத்தை வேண்டினவர்களுக்குக் கொடுக்கின்ற உபதேசமாகிய சம்பிரதாய வாக்கின் பொருளை அறியவேண்டும் என்று கருதும் முனிவர்க்குப் பாகம் பிறந்தது கண்டு போதமுத்திரையான் உணர்த்தல் கருதி, அபிநயம் என்னும் கை வேறுபாட்டால் காட்டவும் காணவும் படும் குறிப்புமொழிகளை, ஆராய்ந்து சேர்த்துக் காட்டிய இறைவன் என்பது காண்க.

பாடமும் கூற்றும் ஆசிரியர் கண்ண ஆகலான் பரந்து பட்ட நூலில் சிதர்ந்து கிடக்கின்ற பொருளை, ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு ஒப்பத்தொகுத்து அடைவாக, முன்னுரையில் பெருமல் அரிதாக நின்ற பொருளை, எளிதாக அறியுமாறு, தேடிவைத்த தொகுதி, தானம் வெளித்தோன்றிப் பயன்படுமாறுபோல, இந் நூலுடையார் கண்டு கூறினர். இவ்வாறு பொருள் கூறுதல் ஆசிரியர் கருத்துக்கு ஒப்பு என்பது செய்யுட் கோவை உரையான் உணர்க. இக்கருத்தே பற்றி அன்றே தென்னவன் பிரமராயரும்,

'வாக்கு மனம் கழிய நின்ற மறை'

என்றார்.

நக்கீரனாரும்,

'எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசை விளக் கும்மே' – *திருமுருகு.* 97–98

எனக்கூறிய திருமுகத்திற்கு ஏற்ப,

'ஒருகை மார்பொடு விளங்க' – திருமுருகு. 112

எனக் குறிப்புமொழி உட்கொண்டு கூறியவாற்றானும்,

'கடுத்துவர்த்த தேனும் கடும்பிணிதீர்த் தின்பம்
கொடுத்ததுபோல் யானுரைத்த கோவை - எடுத்துணர்ந்தோர்
பொய்ப்பொருள்யா வுந்தெளிந்து போக்கியபின் றாக்காணும்
மெய்ப்பொருளான் எய்துவார் வீடு'

என்பதனானும் பிறவாற்றானும் அறிக.

'குடத்தலையர் செவ்வாயில் கொம்பெழுந்தார் கையின்
அடக்கிய மூக்கி னவர்' – தொல். பொ. 491 பே.

என்பதனுள் குஞ்சரம் என்பது குறிப்புமொழி எனக் காட்டின், ஆகாது; அது பாட்டிடை வைத்த குறிப்பாய் அடங்குதலின். இத்துணையும் படலத்து ஒழிபு கூறி இனிப் பிண்டத்து ஒழிபு கூறுகின்றார். (147)

விளக்கம்

உபதேச வாயிலாக உணரப்படும் மந்திரம் சொல்லைக் கருவியாக உடையது. குறிப்புமொழி சொல்லையும் கடந்து மனத்தான் உணரப்படுவது. ஞானாசாரியனுடைய சின்முத்திரையாகிய பொருளை உள்ளவாறு உணரும் மாணாக்கர் அதன் வாயிலாக அவன் கூறும் செய்திகளை உணர்வர் என்பது.

'வருகோவைச் சூடி' என்பதன் பொருள்: கங்கையைச் சூடித் திகம்பரனாய் இடபம் ஏறிச் சுவர்க்க இன்பத்தைத் தரும் தலைவனுடைய சின்முத்திரையாகிய அபிநயத்தை ஆய்ந்து ஆசிரியர்கள் உத்தம சீடருக்கு அதனைத்தாம் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிச் சொல்லாமல் சொல்லினர். அதனை அறியும் ஆற்றல் இலாதாருக்கு இந்நூலை ஆய்ந்து இயற்றி உள்ளனர் என்பது.

ஆசிரியர் தந்துள்ள விளக்கமும் நோக்கி இன்புறுக.

பிணை என்பது புல்வாய் உழை கவரி இவையிற்றின் பெண்ணினையும்,

பிணவு என்பதும் பிணவல் என்பதும் பன்றி புல்வாய் நாய் இவையிற்றின் பெண்ணினையும்,

பிடி என்பது யானைப்பெண்ணினையும்,

நாகு என்பது எருமை மரைபெற்றம் இவையிற்றின் பெண்ணினையும், நீர் வாழ் சாதியுள் நந்தின் பெண்ணினையும்,

மூடு கடமை என்பன யாட்டின் பெண்ணினையும்,

பாட்டி என்பது பன்றி, நாய், நரி இவையிற்றின் பெண்ணினையும்,

மந்தி என்பது குரங்கு முசு ஊகம் இவையிற்றின் பெண்ணினையும் உணர்த்தலாம்.

'அந்தஞ் சான்ற' என்பதனல் கோட்டான் என்பதும், தத்தை என்பதும், ஏனம் என்பதும் முறையே பொதுவாய்க் கூகையினையும், கிளியினையும், பன்றியினையும் உணர்த்துதல் கொள்க. (157)

விளக்கம்

**பெட்டை – பெடை, பேடை :**

'ஒட்டகம் குதிரை கழுதை மரைஇவை
பெட்டை என்னும் பெயர்க்கொடைக்கு உரிய.'
– தொ. பொ. 607

'புள்ளும் உரிய அப்பெயர்க்கு என்ப.' – 608

'பேடையும் பெடையும் நாடின் ஒன்றும்.' – 609

**அளகு :**

'கோழி கூகை ஆயிரண்டு அல்லவை
சூழுங் காலை அளகெனல் அமையா.' – 610

'அப்பெயர்க் கிழமை மயிற்கும் உரித்தே.' – தொ. பொ. 611

**பிணை :**

'புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடின் பிணைஎனப் படுமே.' – 612

**பிணவு, பிணவல் :**

'பன்றி புல்வாய் நாய்என மூன்றும்
ஒன்றிய என்ப பிணவுஎன் பெயர்க்கொடை.' – 613

'பிணவல் எனினும் அவற்றின் மேற்றே.' – 614

**பெண், பிணா :**

'பெண்ணும் பிணாவும் மக்கட்கு உரிய.' – 616

**பிடி :**

'பிடிஎன் பெண்பெயர் யானை மேற்றே.' – 606

**நாகு :**

'எருமையும் மரையும் பெற்றமும் நாகே.' – 617

'நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே.' – 618

**மூடு, கடமை :**

'மூடும் கடமையும் யாடுஅல பெறா.' – 619

**பாட்டி :**

'பாட்டி என்ப பன்றியும் நாயும்.' – 620

'நரியும் அற்றே நாடினர் கொளினே.' – 621

**மந்தி :**

'குரங்கும் ஊகமும் முசுவும் மந்தி.' – 622

'மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிளியினைத் தத்தை என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்' – 623

ஒத்த நூற்பா

முழுதும் – தொல். பொ. 558 பே.

157

## புல், மரன் இவற்றின் உறுப்புக்கள்

918. புறக்கா ழனவே புல்என மொழிப. (158)

919. அகக்கா ழனவே மரமென மொழிப. (159)

920. தோடே மடலே ஓலை என்று
ஏடே இதழே பாளை என்று
ஈர்க்கே குலைஎன நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர். (160)

921. இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனைஉள் ளுறுத்த அனையவை எல்லாம்
புல்லொடு வருஉங் கிளவி என்ப. (161)

922. காயே பழமே தோலே செதிளே
வீழொடு என்றுங்கு அவையும் அன்ன. (162)

**இவ்வைந்து சூத்திரத்திற்கும் பொருள் வெளிப்படை.**

### விளக்கம்

*புறக்கா ழன எனவே உட்புறம் வெளிறு என்பது பெறப்படும். அவை பனையும் தெங்கும் கமுகும் 'முதலியன. இருப்பையும் புளியும் ஆச்சாவும் போல்வன மரம் எனப்படும். புறத்தும் அகத்தும் காழ்ப்பு இல்லாத கொடி முதலாயின புல்லிலும், இடையிடையே காழ்ப்பின்றிக் காணப்படும் அகில் முதலாயின மரத்துள்ளும் அடங்கும். 'தோடே மடலே' என்ற நூற்பாவில் பிறவும் என்பதனல் குரும்பை, நுங்கு, நுகும்பு ( சுருண்ட குருத்து, இளமடல் ) போல்வனவும் கொள்ளப்படும்.*

'இலையே தளிரே' என்ற நூற்பாவில் அனையவை எல்லாம் என்பதனன், புல்லும் தழையும் பொங்கரும் முதலாயினவும் கொள்ளப்படும். ஊகம்புல்லும் சீழகம்புல்லும் பஞ்சாய் முதலியனவும் புழற்கால்ஆம்பல் முதலியனவும் புல் எனப் பட்டடங்கி ஊகந்தோடு, சீழகந்தோடு எனப் புல்லுறுப்பின் பெயர் பெறும் எனவும், பிடா காயா முதலிய புதலும், பிரம்பு முதலாகிய கொடியும் மரம் எனப்பட்டு, பிடவிலை, காயாம்பூ, முல்லைப்பூ என மரத்துறுப்பின் பெயர் பெறும் எனவும் கொள்ளப் படும். பிறப்பு முறையான் தளிரை முற்கூறாது இலையை முற்கூறியதனல் புல்லினுள் ஒருசாரன இலை எனவும் பூ எனவும் படும்.

'காயே பழமே'

தெங்கங்காய், வேப்பங்காய், தெங்கம்பழம், பலாப்பழம், பனந்தோல், வேப்பந்தோல், பனஞ்செதிள், வேப்பஞ்செதிள், தாழைவீழ், இத்திவீழ், எனக் காய் முதலியன முறையே புல்லிற்கும் மரத்திற்கும் உரியவாய் வருகின்றமை காண்க.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் – தொல். பொ. *640 - 643* பே. *162*

## தலைமைச்சொல் பற்றிய மரபு

923. தலைமைக் குணச்சொலுந் தத்தமக்கு உரியதோர்
நிலைமைக்கு ஏற்ப நிகழ்த்துக என்ப.

**இது நூன்மரபு நூல் இலக்கணத்தில் பெறப்பட்டமை யின், எஞ்சி நின்ற செய்யுள் மரபு கூறுகின்றது.**

**இ–ள்: அரசர் உரிமைப்பண்பு உணர்த்தும் சொற்களை அவரவர்க்கு ஏற்பச் செய்யுளகத்துக் கூறுக என்று சொல்வர் ஆசிரியர் என்றவாறு.**

தானைத் தலைவரையும், அரசனால் ஏவல் பெற்றோரையும், வரிசை பெற்றோரையும், குறுநில மன்னரையும், 'மணிமுடி கவித்த மதிவெண்குடை மன்னர்' எனப் புகழ்தலும் செய்யுள் மரபு என்பதாம்.

'உண்டற்கு உரிய அல்லாப் பொருளை
உண்டன போல உரைத்தலும் மரபே.' – தொல். பொ. 218

என்பது உரையில் கொள்க. (163)

விளக்கம்

*இந்நூற்பா தொல்காப்பியப் பொருளதிகாரத்து 630ஆம் நூற்பா.*

*இதற்கு உரையாசிரியர் 'தலைமைக்குண முடையராகக் கூறுதலும் தத்தமக்கு ஏற்ற நிலைமைக்குப் பொருந்துமாறு நிகழ்த்துப என்றவாறு. எனவே இறப்ப உயர்த்தல் இறப்ப இழித்தல் ஆகாது என்றவாறும்' – என்றனர்.*

*– தொ. பொ. 620. உரை.*

*பேராசிரியர் 'அந்நான்கு சாதியார் தலைமைக் குணம்படச் சொல்லும் சொல்லும் அவரவர்க்கு உரிய நிலைமைக்கு ஏற்ப நிகழ்த்தவும் படும் என்றவாறு. – அந்தணர் தலைமைக்குணம் கூறுங்கால் பிரமனொடு கூறியும், அரசரை மாயோனொடு கூறியும், வணிகரை நிதியின் கிழவனொடு கூறியும், வேளாண் மாந்தரை வருணனொடு கூறியும் தலைமைக் குணச்சொல் நிகழ்த்தப்படும். அவை எல்லாம் அவரவர் செய்யுளுள் கண்டு கொள்க' என்றார். (தொல். பொ. 430. பே.)*

*இவ்வாசிரியர் அரசருக்குக் கீழ்பட்ட நிலையிலுள்ளாரையும் அரசர்போல உயர்த்திக்கூறும் இலக்கியம் பலவாக உளவாதலின் அவற்றிற்கும் விதி கூறி வாய்ப்பு அளிக்கும் முகத்தான் பயன் படுத்தக் கருதி அரசனுக்குக் கீழ்ப்பட்ட நிலையினரையும் முகமன் பற்றி அரசனாக வருணிப்பதற்கு இந்நூற்பா இடன் தருவதாகக் கூறியுள்ளார்.*

'பசலையான் உணப்பட்டு' என்றாற்போல உண்டற்கு உரிய அல்லாப் பொருளை உண்டனபோல உரைக்கும் மரபுவழு வமைதியை இந்நூற்பாவில் அடக்கியுள்ளார்.

ஒத்த நூற்பா

முழுதும் – தொல். பொருள். 630. பே.

'தானைத் தலைவரை ஏவல் பெற்றோரைத் தனிவெண்குடைக்
கோனை அடுத்த பகைவரைக் கோறல் அக்கூற்றனவும்
ஏனைக் குறுநில மன்னவர் தங்களை மன்னர்என்ன
மானப் புகழ்தலும் செய்யுள் மொழியின் மரபு என்பரே.'
– நவ. 79
163

## அந்தணர் இயல்

924. நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க்கு உரிய.

**இது நிறுத்த முறையானே வருணத்தின் மரபியல் கூறுகின்றது.**

**பொருள் வெளிப்படை.** (164)

விளக்கம்

நிறுத்த முறை – பாட்டியல் முதல் நூற்பாவில் நிறுத்த முறை.

முந்நூலும் குண்டிகையும் முக்கோலும் யாமைமணையும் போல்வன அந்தணர்க்கு உரிய என்றவாறு.

'ஆயுங்காலை' என்றதனால் குடையும் செருப்பும் முதலாயினவும் ஒப்பன அறிந்து கொள்க.

இன்னும் 'ஆயுங்காலை' என்றதனால் ஒரு கோலுடையார் ஆகிய ஹம்ஸன், பரஹம்ஸன் என்ற இருவரும் உலகியல் நீங்கிய துறவறத்து நின்றார் ஆகலின் அவர் உலகியலின் ஆராயப் படார் என்பதும், பகூதகன் குடீசகன் ஆகிய முக்கோல்

உடையார் இருவரும் பிச்சை கொள்வாரும் பிருண்டு இருந்து தமது உண்பாரும் ஆகலின் உலகியலின் நீங்காமையின் அவரையே வரைந்து ஓதினர் என்பதும் கொள்ளப்படும்.

நூல் பிறப்பு முறையானும் சிறப்பு முறையானும் முற்கூறப்பட்டது.

அந்தணர் – அழகிய தண்ணளியை உடையார் – பரிமே.

அந்தணர் – அந்தத்தை அணவுவார் ;

அந்தம் – வேதாந்தம் – நச்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் – தொல். பொ. 625. பே.

'குன்றுநூல் அங்கைமறை கோவணங்கோல் முத்தீயும்
நன்றுய வேள்வி நளினமும் – அன்றிக்
குடைசமிதை குண்டிகைபுல் கோத்திரம்என் றின்ன
உடையாரை அந்தணரென் றுன்னு.'

– வெண். பாட். பொ. 12

'உன்னல் அரன்கழலே ஓங்கியசீர் அங்கிஅயன்
என்னஉவ மித்தல் இவர்என்றே – நன்மறைகள்
ஓதலே ஓதுவித்தல் வேட்டலே வேட்பித்தல்
ஈதல் இரத்தலென் றேத்து.' – வெண். பாட். பொ. 13

'கோல்குடை கோவணம் நான்மறை முத்தீக் குசைதருப்பை
மால்கழல் வாழ்த்தல் இரண்டு பிறப்பு மணைசமிதை
தோல்ஐந்து வேள்வி கரகம் அரவிந்தம் தொல்கோத்திரம்
நூல்இரு மூன்றங்கம் அந்தணர்க்கு ஓதுவர் நூலவரே.'

– நவ. 71

'ஈதலும் வேட்டலும் ஓதலும் ஆங்கது இயற்றுவிப்பார்
ஆதலும் அங்கி யமனேடு உவமையும் வல்லவர்எண்
மாதவர் பூசுரர் என்றலும் நான்மறை யோர்க்குஉரிய.'

– நவ. 72

164

## அரசர் இயல்

925. படையுங் குடையுங் கொடியும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேருந்
தாரும் முடியும் நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய.

இதுவும் அது. (165)

### விளக்கம்

*'கொடிப் படையும் குடையும் கொடியும் முரசும் குதிரையும் யானையும் தேரும்தாரும் முடியும் பொருந்துவன பிறவும் அரசர்க்கு உரிய என்றவாறு.*

*பிறவும் என்றதனால் கவரியும் அரியணையும் அரண் முதலாயினவும் கொள்க. 'தெரிவுகொள் செங்கோல் அரசர்' என்றதனானே செங்கோல் கொள்ளப்பட்டது.*

*தார் எனவே போர்ப்பூவும் தார்ப்பூவும் அடங்கின.*

*'புரவி களிறு எனத் தனித்தனியே கூறியதனால் அரசனுக்கு உரிய மேம்பட்ட இலக்கணங்கள் சான்ற புரவியும் களிறும் கொள்ளப்படும். அவற்றிற்கும் பட்டம் சார்த்தப்பட்டிருக்கும். தேரும் அரசனுக்குரிய தேர் என்று தனிப்பட்ட வகையில் சிறப்பினதாக இருக்கும். எல்லாவற்றினும் சிறந்ததாதலின் முடி பிற்கூறப்பட்டது. அரசன் இவையாவும் பெற்றிருத்தல் செங்கோல் செலுத்துதற்கே என்பது இறுதி அடியின் கருத்தாகும்.' என்பது பேராசிரியர் குறிப்பிடும் செய்தி.*

*பிறவும் என்றதனால் ஆரமும் கழலும் கொள்வது உரையாசிரியர் கருத்தாகும்.*

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் – தொல். பொ. 626. பே.

'ஏத்திய பூவைநிலை எல்லோன் கழல்வாழ்த்தல்
காத்தல்முடி சூட்டல் களம்வேட்டல் – தீத்தொழில்கள்
வெண்குடைசெங் கோல்கவரி வெற்றியரி யாசனமும்
மண்குலவு மன்னர் வளம்.' – வெண். பாட். பொ. 14

'பூவைநிலை பகலோன் கழல் போற்றல் புனைதல்முடி
தேவர் உவமை சிங்காசனம் செங்கோல் குடைகவரி
காவல் நிகழ்த்தல் எரிவேட்டல் ஓதல் கலமுதல
மேவல் அடுகளம் வேட்டல் பண்பாயின வேந்தர்கட்கே.'
– நவ. 73

'விளங்கிய நூல்கற்றல் வேத நெறிநின்று அறுசமயம்
உளம்கொண்டு போற்றல் அமைச்சர் உரைகொளல் ஓர்ந்துகுடி
தளர்ந்தன தாங்கல் முறைமை கோடாது தனம்பெருக்கல்
அளந்து பெரும்படை சேர்த்தல் அரசர்க்கு அடுத்தனவே.'
– நவ. 74

165

## வணிகர் இயல்

926. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை

இதுவும் அது. (166)

### விளக்கம்

'வைசிகன் வாணிகத்தால் வாழும் வாழ்க்கையைப் பெறும்'– உரை.

'வணிகர்க்குத் தொழிலாகிய வணிக வாழ்க்கை உள்ளுறையாகச் செய்யுள் செய்தல் பெரும்பான்மையும் ஆம் என்றவாறு. – பேரா. தொல்காப்பியனர் 'பயறு உழுந்து கடுகு கடலை எள் கொள் அவரை துவரை என்ற எண்வகை உணவுப் பண்டமும் செய்து விளைத்தலும் அவர் கடன்' என்ற கருத்துப்பட,

'மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான' – தொ. பொ. 633 பே.

என்ற நூற்பாவும் யாத்துள்ளார்,

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் – தொல். பொ. 632 பே.

'இறையஞ்சா தேருழல் வித்தீதல் புரிந்து
மறைகொண் டுழல்வளர்த்து வாய்மை — பொறையுடைமை
என்றிவையும் காத்து நிரைஓம்பல் என்பவே
குன்றா வணிகர் குணம்.' – வெண். பாட். ஒ. 16

'குணங்கோடாக் காத்தல் கொழுநிதிக்கோன் தன்னை
வணங்கல் அவன்புகழே வாழ்த்தல் — அணங்கார்
இடத்தேகி வாணிகத்தால் ஈட்டல்எரி வேட்டல்
படைத்தோர் வணிகரென் பார்.' – வெண். பாட். ஒ. 17

'இருபிறப்பு ஓதல் எரிவேட்டல் ஈதல் இருநிதியம்
வருதிறத்தான் நல்ல வாணிபம் செய்தல் நிரைவளர்த்தல்
பெருநிதிக் கேள்வனைப் பேணல் அவன்என்று பேசநிற்றல்
உரிமைதப்பா வணிகர்க்கு இயல்பாம் என்பர் ஒண்ணுதலே.'
– நவ. 75

'உறுவது கோடல் வருபயன்தூக்கல் உழவின்தொழில்
இறுவது அஞ்சாமை இடரில் தெருளுதல் ஈட்டுதற்கு
நெறிபலபோதல் முனிவிலன் ஆதல் நிறைவளையாய்!
குறிஎனல் ஆகும் குலவணி கருக்குக் குவலயத்தே.' ,, 76

'தன்மை ஆதல் முனிவிலன் ஆதல்
இடன்அறிந்து ஒழுகல் பொழுதொடு புணர்தல்
உறுவது தெரிதல் இறுவது அஞ்சாமை
ஈட்டல் பகுத்தல் என்றுஇவை எட்டும்
வாட்டம் இல்லா வணிகரது இயற்குணம்.'
– திவா. 12-126

166

## வேளாளர் இயல்

927. வேளாண் மாந்தர்க்கு உழுதுஊண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.

இதுவும் அது. (167)

## விளக்கம்

'வேளாண் மாந்தருக்குத் தொழில் உழவே.' — உரை.

'வேளாண் மாந்தர்' பலவகைப்பட்ட தொழிலரேனும், உழுந் தொழிலே பெரும்பான்மைத்து ஆகலான் அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு என்றவாறு.

நிரை காத்தலும் உழவுத் தொழிலும் வணிகர்க்குச் சிறுபான்மையன ஆயினவாறுபோல வாணிகமும் வேளாளருக்குச் சிறுபான்மைத்தேனும், வாணிகமே வைசிகனுக்கும், உழுதொழிலே வேளாளனுக்கும் பெருவரவின என்பது கொள்ளப்படும்' என்பது பேராசிரியர் கருத்து.

## ஒத்த நூற்பா

முழுதும் – தொல். பொ. 635 பே.

'பார்திகழும் மூவர் பணித்த பணிஒழுகல்
ஏருழுதல் ஈதல் பிழையாமை — பார்புகழக்
கோட்ட மிலாமை ஒருமைக் குணம்பிறவும்
காட்டினர் சூத்திரர்தம் கண்.' – வெண். பாட். ஒ. 18

'திருந்திய நல்லறம் தீராத செம்மை ஒழுக்கம்மென்மை
வருந்திய சுற்றத்தை ஆற்றுதல் மன்னர்க்கு இறைஇறுத்தல்
பொருந்திய ஒற்றுமை கோடல் புகழும் வினைதொடங்கல்
விருந்து புறந்தரல் வேளாண் குடிக்கு விளம்புவரே.'
– நவ. 77

'வாணிபம் செய்தல் உபகாரம் ஆசாரம் வாய்ந்தசெயல்
பேணி உழுதல் இருபிறப் பாளர் நெறிவழுவா
ஆணைவழி நிற்றல் ஆனிரை போற்றல் அகன்றஅல்குல்
பூண்முலையாய் இவை வேளாண் குடிக்குப் புகன்றனரே.'
„ 78

## அந்தணருக்குச் சிறப்புவிதி

**928. அந்த ணாளர்க்கு அரசுவரைவு இன்றே.**

**இஃது அந்தணர்க்கு உரியதொரு சிறப்பு உரிமை கூறுகின்றது.**

**இ–ள் : அழகிய தட்பத்தினை உடைய வேதியர்க்கு அரசுரிமை எய்தி நிற்றல் கடிதலின்று என்றவாறு. அந்தணர் வேதாந்தத்தை அண்ணினோர் என்றுமாம்.**

**(168)**

### விளக்கம்

*அந்தணர் – அழகிய தட்பத்தினை உடையார் என்றார் பரிமேலழகர். வேதாந்தத்தை அண்ணினோர் என்றார் நச்சினார்க்கினியர்.*

*அரசர் இல்வழி அந்தணரே அவ்வரசியல் பூண்டு ஒழுகலும் வரையப்படாது என்றவாறு.*

*மக்களைத் தின்ற மன்னவர்க்குப் பின்னை மறையோரான் அரசு தோற்றப்பட்டாற்போலக் கொள்க. மக்களுக்கு இடையூறு பலவாக விளைத்த வேனன் என்ற அரசனை அழித்துத் தக்கவனை உண்டாக்கி அரசனாக்கினர் அந்தணர் என்பது பாகவதச் செய்தி.*

### ஒத்த நூற்பா

*முழுதும் – தொ. பொ. 637. 168*

## புலவர்தம் வகைகள்

**929. கவியே கமகன் வாதி வாக்கிஎனப்**
**புவிமேல் சொல்லும் புலவர் நால்வர்.**

## கவியாவான் இலக்கணம்

**930.** ஆசு மதுரஞ் சித்திரம் அகலம்
பாவகை பாடுவோன் கவிஎனப் படுமே.

**இவை பொருள் வெளிப்படை** **(169–170)**

### விளக்கம்

*புலவர்கள் கவி, கமகன், வாதி, வாக்கி என்ற நான்கு திறத்தார் ஆவர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு திறத்தில் வல்லவர் ஆதலின் புலவர் எனப்பட்டனர்.*

ஆசு முதலிய நால்வகைப் பாடல்களில் ஒரு வகையோ பல வகையோ யாவுமோ பாடும் ஆற்றலுடையவன் **கவி**. அவன் எவ்வகையில் மேம்பட்டவனோ அவ்வகையான் அடையடுத்து *ஆசு கவி, மதுர கவி, சித்திர கவி, வித்தார கவி* எனச் சிறப்பிக்கப் படுவான் என்றவாறு.

### ஒத்த நூற்பா

'ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
ஆகும் நாற்கவி அறையுங் காலே.' – நவ. 55

'வாய்ந்த கவிகமகன் வாதிவாக்கி வகைவனப்பும்
ஆய்ந்தவல் ஆசு மதுரமும் சித்ரவித் தாரமுமே
ஏய்ந்தகவி நான்கும் கள்ளக் கவிமுதல் ஈரிரண்டும்
... ... ... ... இவைதேர்ந்து கொள்ளே.' – நவ. 85

'ஆசு முதற்பா அவனியில் மெச்சப்
பாவினம் கொண்டும், பாடுவோன் கவியே.' – பி. ம. 51

'கவியே கமகன் வாதி வாக்கிஎன்று
இவைஒரு நான்கும் புலமைக்கு இயல்பே.'
– மு. வீ. யா. ஒ. 60

*169–170*

## கமகன் இலக்கணம்

931. நிறைந்த கல்வியான் நிறைந்த அறிவான்
அறைந்த ஒருபொருள் அதனை விரிக்க
வல்லவன் கமகன் சொல்லுங் காலே.

இது கமகன் இயல்பு கூறுகின்றது.

இ-ள் : நிறைந்த கல்விப் பயிற்சியானும் அக்கல்விப் பயிற்சியால் தெளிந்த அறிவானும் முன்னர்க் கற்று வல்லோர் கூறிய பொருளை ஞாபகத்தானும் செம்பொருள் நடையானும் நேரிட்டு எந்நூற் பொருளையும் விரித்துச் சொல்லவல்லோன் கமகன் என்றவாறு. (171)

### விளக்கம்

*ஞாபகம் – அறிவான் கூறப்படாத செய்தியையும் நுனித்து அறிதல்.*

*செம்பொருள் நடையான் அறிதல் – நூலுள் கூறப்பட்ட செய்தியைக் கூறப்பட்டவாறு திரிபின்றி அறிவது.*

*முன்னதற்கு நிறைந்த கல்விப் பயிற்சியும் பின்னதற்குத் தெளிந்த அறிவும் பயன்படும்.*

*எனவே கமகன் சிறந்த போதகாசிரியன் ஆவான் என்பது.*

### ஒத்த நூற்பாக்கள்

*'நிறைமதியான் கல்வியான் நீள்கலைகள் கல்லா*
*தறையு மவன்கமக னாகும்.' – வெண். பாட். செய். 46*

*'நாட்டிய அரும்பொருள் செம்பொருள் நடையாக்*
*காட்டியே வியவ கரிப்போன் கமகன்.' – பி. ம. 52*

*'ஞாபகம் செம்பொருள் நடையின்எப் பொருளும்*
*அறைகுவோன் கமகனும் வழுத்துங் காலே.'*
*– மு. வீ. யா. ஒ. 62*

*171*

## வாதி இலக்கணம்

932. ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுக்கும்
வன்புடை யோனே வாதி ஆவான்.

**இது வாதி இலக்கணம் கூறுகின்றது.**

**இ-ள்: ஏதுவும் ஏதுவினால் சாதிக்கும் பொருளும் ஆகிய அவ்விரண்டற்கும் திட்டாந்தமாகிய எடுத்துக் காட்டு முதலியன கொண்டு தன் கோட்பாட்டினை நிறுவிப் பிறர் கோட்பாட்டினை மறுக்கும் உரனுடையோனே வாதி ஆவான் என்றவாறு. (172)**

### விளக்கம்

கோட்பாடு – மலையில் நெருப்புள்ளது என்பது.

ஏது – புகை உண்மையால் என்பது.

மேற்கோள் – புகை உள்ள இடத்தில் நெருப்பு உண்டு என்பது.

எடுத்துக்காட்டு – அடுக்களை போல என்பது.

புகை உள்ள இடத்தில் நெருப்பு உண்டு என்பது அடுக்களையினால் உணரப்படுதலில் புகை உள்ள இம்மலையில் நெருப்பு உண்டு; இன்று என்பது பொருந்தாது என்று அறுதியிட்டுரைப்பது போல்வது.

வாதம் செய்து பிறர் கருத்தை மறுத்துத் தன் கருத்தை உறுதி செய்யும் அறிவாற்றல் உடையோனே வாதியாவான்.

### ஒத்த நூற்பாக்கள்

'முறை மேற்கோள்,
புல்லும் எடுத்துக்காட் டேது புகலுமவன்
நல்வாதி என்றே நவில்.' – வென். பாட். செ. 45

'கதம்படலின்றிக் கருதிய மேற்கோளும் ஏதுவும் தம்
மதம்படக்கூறி எடுத்துக்காட்டு ஏற்றி அளவில்நெறி
விதண்டை வாதம் சற்பம் என்னும் இவற்றின் மேலோர்உரைத்த
மதங்கள் நெறிசெல்ல வல்லவர் வாதினில் வல்லவரே.'

– நவ. 90

'ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டிய
தன்மையின் நன்கே தன்கோள் நிறீஇ
வாதில் பிறர்கோள் மறுப்பவன் வாதி.' – பி. ம. 53

'ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்போன்
வாதி யாம்என வைக்கப் படுமே.' – மு. வீ. யா. ஒ. 63

172

## வாக்கி இலக்கணம்

933. அறம் பொருள் இன்பம் வீடுஎன நான்கும்
திறம்பாது இவரச் செஞ்சொல் கொண்டுஅருள்
நோக்கி உரைப்போன் வாக்கி ஆவான்.

இது வாக்கி இலக்கணம் கூறுகின்றது.

இ-ள் : அறமும் பொருளும் இன்பமும் இவற்றின் நிலையின்மையான் எய்தும் வீடும் என்று சொல்லப்பட்ட நாற்பொருளினையும் மிகுதி குறைவு உறாமல் கேட்போர் விரும்பச் செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல் என்னும் மூன்றனுள் செஞ்சொல் மிகுதி தோன்ற, உலகம் தவம் செய்து வீடு பெற, உயிர்கள் மாட்டுக் கருணை கொண்டு கூறுவோன் வாக்கி ஆவான் என்றவாறு.

சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய வீடு கூறுமாறு என்னை எனின், கேள்வி விமரிசம் பாவனை

என்னும் வீட்டிற்கு ஏதுவாகிய உபாயங்களைக் கூறவே வீடும் கூறினாரும் என்பது. (173)

### விளக்கம்

செஞ்சொல் – வெளிப்படையாக விளக்கிக் காணும் சொல். வீடுபேறு துறவமாகிய காரண வகையால் கூறப்படுவது அல்லது, உலகிலுள்ள தேயங்களைப்போல் இலக்கண வகையால் பரப்பு, இயற்கை அமைப்பு முதலிய கூறப்படாதது ஆதலின் வீடுபேறு எய்துதற்கு உரிய ஏதுக்களே கூறப்படும்.

கேள்வி – அனுபவப்பொருளை ஞானதேசிகர் பால் உபதேசம் கேட்டல்.

விமர்சம் – அச்செய்தியை ஆராய்ந்து தெளிதல்.
பாவனை – அத்தெளிந்த பொருளைத் தியானம் செய்தல்.

'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.' – குறள். 356

என்பது கேள்வியையும்.

'ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.' – குறள். 357

என்பது விமரிசத்தையும்.

'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு.' – குறள். 358

என்பது பாவனையையும் விளக்கும். இக் குறட்பாக்களுக்கும் பரிமேலழகர் வரைந்துள்ள உரையையும் நோக்குக.

எனவே, ஞானசாரியனே வாக்கி எனப்படுவான்.

### ஒத்த நூற்பாக்கள்

'நவிலும் அறம்முதல் நான்கு மயங்காமல்
புவியதனில் நேட்டோர் புகழக் – கவிப்பனுவல்
குன்றாத சொல்லால் தெளிவுபெறக் கூறுவோன்
நன்றாய வாக்கியென் றார்.' – வெண். பாட். செ. 47

*'அறம்முதல் நாற்பொருள் பயனும் அத்திறத்தில்*
*கேட்கவே திறம்படப் பாடுவோன் வாக்கி.' – பி. ம. 54*

*'அறம்பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கும்*
*கேட்போர் வேட்ப இனியன கிளத்தும்*
*ஆற்றல் உடையோன் வாக்கியாம் எனலே.'*
*– மு. வீ. யா. ஒ. 64*
*173*

## சோரகவி, சாத்துக்கவி, பிள்ளைக்கவி, வெள்ளைக்கவி இன்னர் என்பது

934. ஒருவன் பாவேறு ஒருவற்கு உரைத்து
வருமவன் சோர கவி; மற்று ஒருவன்
பாஇசைக்கு ஒப்ப மேவி உரைப்போன்
சாத்துக் கவிஎனப் பாத்தனர் புலவர். 174

935. முன்னோர் பாடிய யாப்பினுள் கிடந்த
சின்மொழி கொண்டு செய்யுள் செய்யுந்
தன்மையன் பிள்ளைக் கவி; புன் மொழியால்
கரைவோன் வெள்ளைக் கவியா மென்க. 175

**இவை இரண்டு சூத்திரமும் பொருள் விளங்கக் கிடந்தன. புலவர் இயல் முற்றும்.**

### விளக்கம்

*ஒருவன் பாடிய பாடலைத் தான் பாடியதாகக் கொண்டு மற்றவனிடம் கூறிவருபவன் சோரகவி ஆவான்; ஒருவன் பாடிய பா இசைக்கு ஒப்பப் பொருந்திப்பாடுபவன் சாத்துக்கவி ஆவான்.*

*சான்றோர் செய்யுள் அடிகள் பலவற்றை எடுத்துக்கொண்டு தான் சிறிதளவு இயற்றிப் பாடல் அமைப்பவன் பிள்ளைக்கவி ஆவான். கொச்சையான சொற்களைக் கொண்டு பாடுவோன் வெள்ளைக்கவி ஆவான்.*

### ஒத்த நூற்பா

*‘ஆர் ஒருவன் பாக்களை ஆங்கொருவ னுக்களிப்போன்
சோர கவி, சார்த்(து) ஒலியின் சொல்லுபவன், – சீரிலாப்
பிள்ளைக் கவி சிறந்த பின்மொழிக்காம்; புன்மொழிக்காம்
வெள்ளைக் கவி யவனின் வேறு.’ – வெண். பாட். செ. 48*

*[ஒருவன் பாட்டை மற்றொருவனுக்கு கொடுப்போன் கள்ளக் கவியாம். ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுள் புணர்ப்போன் சார்த்துக் கவியாம். தனக்கென ஒன்றின்றி முன்னோர் மொழிந்த சொல் நடை பொருள் நடை கண்டு கவிபாடுவோன் பிள்ளைக் கவியாம். புன்மொழிகளால் ஒன்றும் கவிபாடுவோன் வெள்ளைக் கவியாம்.]*

*174–175*

## நல்லவை நிறையவை இலக்கணம்

936. **ஆறுஉட் பகைசெற்று அருங்கலை ஓர்ந்து
பாரில் கீர்த்தி படைத்தோர் வைகுதல்
நல்லவை; அடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லும் நன்மை உடையோர் தொகைஇ
வல்லார் மொழியினும் வல்லுநர் ஆக்கிக்
கேட்போர் உறைஅவை நிறைஅவை ஆகும்.**

**இது நல்லவை நிறையவை இரண்டன் இயல்பும் கூறுகின்றது.**

**இ–ள்: காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும் உட்பகை ஆறனையும் அடக்கி, அரியவாகிய அறுபத்துநாலு கலைகளையும் ஐயம் திரிபு அற ஆராய்ந்து, அதனால் புவியின்கண் பிறத்தற் பயனாகிய புகழ்பெற்றோர் இருக்கலுறும் அவை நன்மையுடைய அவையாம்.**

கல்வி நிறை அடக்கமும், வாய்மையும், நடுநின்று சொல்லும் நன்மையும், உடையோர் குழீஇ, மாட்டாதார் கவி அரங்கேற்று, அவர்கள் குற்றத்தை நினையாது, குணம்மேற்கொண்டு, அவர்களை வல்லமை உடையராக்கி வினவிக் கேட்போர் உறையும் அவை நிறையவையாம் என்றவாறு.

எனவே, இதன் எதிர்மறை முகத்தான் குறைந்த கல்வியும் நிறைந்த அழுக்காறும் உடையோர் அவை குறையவையும் தீயவையும் என்பது பெற்றும். (176)

ஒத்த நூற்பாக்கள்

**நல்லவை :**

*'புகழும் தருமநெறி நின்றோர் பொய்காமம்*
*இகழும் சினம்செற்றம் இல்லோர் – நிகழ்கலைகள்*
*எல்லாம் உணர்ந்தோர் இருந்த இடமன்றோ*
*நல்லாய் அவைக்கு நலம்.'* – வெண். பாட். பொ. 9

**நிறையவை :**

*'நலன்அடக்கம் செம்மை நடுநிலை ஞானம்*
*குலனென் றிவையுடையோர் கோதில் – புலனில்லோர்*
*சென்று மொழிந்தனவும் கேட்போர் செறிந்தவிடம்*
*அன்றோ நிறைந்த அவை.'* – வெண். பாட். பொ. 10

(*நிறையவையோர் குற்றத்தைவிடுத்துக் குணமே கொள்வர் என்பதாம்.*)

**தீய அவை :**

*'அவையின் திறம்அறியார் ஆய்ந்தமைந்து சொல்லார்*
*நவையின்றித் தாம்உரையார் நாணர் – சுவை உணரார்*
*ஆய கலைதெரியார் அஞ்சார் அவர்அன்றோ*
*தீய அவையோர் செருக்கு.'* – வெண். பாட். பொ. 11

தேடிவைத்த செல்வம் தக்கார்கையிலே தானமாகப் பொருந்திஞல் அதன் பெருமை வான் சிறிதாப் போர்த்துவிடும் என்பதுபோல ஆசிரியர் தொல்காப்பியஞர் அரும்பொருளை அடக்கிக் கூறிய இந்நூற்பா இவ்வாசிரியரிடம் கிடைத்த அளவில் இதன் அருங்கருத்தாகிய பொருளால் சொல் புலப்படும் ஞான பாகமான செய்தியை இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளமை பாராட்டத்தக்கது. செய்யுட்கோவை உரை யாது என்பது புலஞகவில்லை. சொல்லையும் மனத்தையும் கடந்தவன் இறைவன் என்றும், அவன் தத்துவப் பொருளை முகபாவத்தால் விளக்கும் போது அதற்கேற்ப அவன் கரங்களில் ஒன்று மார்போடு சின்முத்திரை கொண்டு விளங்கும் என்றும் முறையே மணிவாசகரும் நக்கீரரும் அருளி உள்ளனர். தெளிவு பிறந்த பின்னரே மெய்ப் பொருள் புலப்படும் என்பது.

இந்நூற்பாவிற்குப் (தொல். பொ. 491) பேராசிரியர் எழுத்து முடிந்தவாற்ருனும் சொல் தொடர்ந்தவாற்ருனும் சொற்படு பொருளானும் செவ்வன் பொருள் அறியல் ஆகாமையின் எழுத்தொடும் சொல்லொடும் புணராது பொருட்குப் புறத்தே பொருளுடைத்தாய் நிற்பது குறிப்பாவது என்றவாறு.........

'குடத்தலையர்.............மூக்கினராம்.'

எனவரும். இதனுள் குடமே தலையாகப் பிறந்தார் எனவும், கொம்பெழுந்த வாயினர் எனவும், கையுள் கொண்ட மூக்கினர் எனவும் கூறியக்கால் எழுத்தும் சொல்லும் பொருளும் இயல்பில ஆதலும் குறிப்பிஞன் அதனைக் குஞ்சரம் என்று கொண்டவாறும் கண்டு கொள்க. இது பாட்டு வடிவிற்ருகலின் பிசியன்று.

'குறித்த பொருள் முடியக் காட்டாமையின் பாட்டு அன்று' என்று கூறியுள்ளார். பேராசிரியர் காட்டிய உதாரணம் பாட்டிடை வைத்த குறிப்பின் பகுதியாய் அடங்கும் என்று மறுத்து இவ்வாசிரியர் அரியதோர் உரை கூறியுள்ளமை, பல்புகழ் நிறுத்த படிவத்தாராகிய தொல்காப்பியஞர் உள்ளக்கிடக்கைக்கும், முன் நூற்பாவில் கூறிய மந்திரத்துக்கும் ஏற்றதாதல் உணர்க.

ஒத்த நூற்பா

*முழுதும் - தொல். பொ. 491. பே.*

*147*

## மரபு வகை

908. வழக்கு மரபும் செய்யுள் மரபும்என்று
இழுக்கில் மரபுஓர் இருவகைத்து ஆகும்.

**இது மரபு இத்துணைத்து என்பதூஉம், அவை இவை என்பதூஉம் கூறுகின்றது.**

**இ-ள்: வழக்கிடத்து உளவாகிய மரபும், செய்யுளிடத்து உளவாகிய மரபும் என மரபு இலக்கணம் இருவகையினை உடைத்து என்றவாறு. (148)**

விளக்கம்

*வழக்குமரபு செய்யுள்மரபு - இவற்றிடை ஒற்றுமையும் வேற்றுமையும் உண்மை நூல்முழுதும் நோக்கிக் காண்க.*

*வழக்கிற்கே உரியவாகிச் செய்யுளுக்கு ஏலாதனவும் உள. செய்யுட்கே உளவாகி வழக்கிற்கு ஏலாதனவும் உள. இவ்விரண்டற்கும் பொது ஆவனவும் உள என்பனவற்றைக் குறித்துக் காண்க.* *148*

## வழக்கு இலக்கணம்

909. அவற்றுள்,
வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்டு ஆக லான.

**இது வழக்காமாறு கூறுகின்றது.**

**இ-ள்: முற்கூறிய இரண்டனுள் வழக்கு என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது உயர்ந்தோர் இடத்தாம்; தோன்றுதல் அவரிடத்து ஆகலான் என்றவாறு.**

**நல்லவை :**

*'அறம் திறம்பாமல் அறிவோர் அறுபத்து நான்கு கலையும்*
*திறம் தெரிந்தோர் சினம் செற்றம்பொய்காமம் சிதைந்துசித்தம்*
*மறந்து ஒருகாலும் ஒருபால் படாதவர் மற்றும் குற்றம்*
*துறந்து நின்றோர் குழு நல்லவையாம் என்று சொல்லுவரே.'*

– நவ. *86*

**நிறையவை :**

*'பாங்காய் ஒருதிறம் பற்றுதவர் பல கலைப்பொருளும்*
*ஆங்கே உணர்ந்தோர் அடக்கம் உடையார் அவரவர்கள்*
*தாம் காதலித்து மொழிவன் கேட்போர் தருமநெறி*
*நீங்கா நாவர் உறைந்த அக்கூட்டம் நிறையவையே.'*

– நவ. *87*

**தீய அவை :**

*'சொற்ற அடிசொல்தாம் பொய்ப்பவர் சொல்லும் நற்சொல்லினை*
*குற்றம் இது என்று குலாவி உரைப்பவர் கூறும் பரிசு [யும்*
*உற்றது உணர்ந்தோர் ஒருபாற் படுபவர் பொய்யுரையோர்*
*செற்றம் சினத்தொடு சேர்ந்தார் இருப்பது தீயவையே.'*

– நவ. *88*

**குறையவை :**

*'பாடவம் பேசிப் பலகால் நகைசெய்து பாங்குரைத்து*
*நாடகம் காட்டி ஓர்நாயகம் இன்றி நவிலுநன்னூல்*
*ஏடகம் நோக்காது இகலே பெருக்கி அறத்தை விட்டுக்*
*கூடகம் செய்து பொய்கூறு விருக்கும் குறையவையே.'*

– நவ. *89*

*176*

## ஓரைப் பொருத்தம்

**937.** **அகரமும் இகரமும் உகரமும் எகரமும்**
**ஒகரமும் இனத்தோடு உதிக்கும் ஐ ஔவும்**
**உதயம் தொடங்கிஓர் ஆறுஆ றுக**
**விதமுறும் கடிகை எண்ணுநன் பகலின்**

முதல் ஒரு மூன்றும்நன் முகூர்த்த மாக
அகலக் கவிபுனைந்து இன்புறல் கடனே.

இது நிறுத்தமுறையானே பிற எனப்பட்ட ஓரை ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : அகரமும் இகரமும் உகரமும் எகரமும் ஒகரமும் தத்தம் இன எழுத்துக்களோடு சார்த்தி, ஐகாரம் இகரத்தோடும் ஔகாரம் உகரத்தோடும் சார்த்தி ஐவகை ஆக்கி, ஆதித்தன் உதயந்தொடங்கி நன்பகலின் இன்பமுறும் நாழிகை ஓர் ஆறு ஆறாக வகுத்தவற்றுள் முன்நின்ற ஓரை மூன்றில் அகலக் கவியைப் புனைந்து இன்பமுறல் முறைமை என்றவாறு.

ஏனை இரண்டு ஓரையும் ஆகா என்பதாம். (177)

### விளக்கம்

**நேரம் :**

*அ, ஆ - உதயம் தொடங்கி முதல் 6 நாழிகை– 1–3 நாழிகை ஏற்றன*
*இ. ஈ. ஐ — 7 முதல் 12 நாழிகை முடிய 7–9 ,,*
*உ, ஊ, ஔ — 13 முதல் 18 நாழிகை முடிய 13–15 ,,*
*எ, ஏ — 19 முதல் 24 நாழிகை முடிய 19-21 ,,*
*ஒ, ஓ — 25 முதல் 30 நாழிகை முடிய 25–27 ,,*

*ஒவ்வொரு பகுப்பிற்கும் உரிய அவ்வாறு நாழிகைகளில் முதல் மும்மூன்று நாழிகைகளே ஏற்றனவாம்.*

### ஒத்த நூற்பா

*'கடனும் அகர ஆகாரம் கதிரோன்*
*உடனுய் எழுங்கடிகை ஓராறு – இடனுகி*
*ஏனை உயிர்க்கூறும் இவ்வகையால் வந்துதித்தால்*
*ஆனமுதல் மூன்றும் அழகு.' – வெண். பாட். பொ. 26*
*177*

## கவிப் புலவன் இலக்கணம்

938. கற்கப் படுவோர் கடப்பாடு எய்தி
நற்கவி நான்கொடு முத்தமிழ் நடைதெரிந்து
இருபான் வயது தொடங்கி எழுபான்
வயதின் ஏரு மாட்சிமை உள்ளோன்
அகலக் கவிசொலும் ஆற்ற லோனே.

இது கவிப்புலவற்கு ஆவது ஒரு சிறப்புக் கூறுகின்றது.

இ-ள் : கற்கப்படும் ஆசிரியருக்கு ஓதிய குலம் முதல் எண்வகை முறையும் எய்தி, ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்று சொல்லும் நல்ல கவி நான்கும் பாடும் தன்மையுடனே இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் முத்தமிழ் வழக்கினையும் முற்ற உணர்ந்து இருபது முதல் எழுபது வயதின் மிகாதிருக்கும் பெருந் தன்மை உடையோனே அகலக் கவியைப் பாடும் உரவோன் என்றவாறு.

'கற்கப் படுவோர் கடப்பாடு எய்தி' என்றதனால் கூறுது ஒழிந்த நற்குணங்கள் எல்லாம் உடையர் என்பதாம். (178)

[ஆசிரியர் இயல்பைப் பொதுப்பாயிரத்தில் காண்க.]

### ஒத்த நூற்பாக்கள்

'இழுக்கிலா நாற்குலத்தோர் எப்பொருளும் தேர்ந்தோர்
ஒழுக்கறம் தெய்வம் உடையோர் – விழுக்கவிகள்
ஈரிரண்டு முத்தமிழும் வல்லோரே எஞ்ஞான்றும்
சீரார் கவியுரைப்போர் சென்று.' – வெண். பாட். பொ. 7

'சென்ற இரு பான்தொடங்கிச் சேருமெழு பானளவும்
நின்றபரு வத்துறுப்பு நீங்காதோர் – ஒன்றில்
அகலாப் பிணியில்லோர் அன்றே பாக்கொண்டு
புகலப் பெறுவார் புகழ்ந்து.' – வெண். பாட். பொ. 8

'இயல் இசை நாடகம் மெய்யே உணர்ந்தோர்கள் எப்பொருளும்
மயலற ஆய்ந்தோர் வருணங்கள் நான்கினும் வந்து உதித்தோர்
உயர்நெறி நின்றோர் அவையை உற்றோர் ஒரு தெய்வத்தையே
முயல்தரு சித்தத்தர் செய்யுள்முன் பாட மொழிந்தனரே.' – நவ.93

'இருபதிற் றுண்டினில் ஏறி எழுபதில் ஏறலின்றி
வருபரு வத்தவர் வன்பிணி இல்லவர் மற்றுறுப்பில்
ஒருகுறை வற்றவர் நாற்கவி வல்லவர் ஓங்குஅறத்தின்
பரிவுடை யாளர்கள் செய்யுளின் பாடல்பகர்ந்தவரே.'

– நவ. 94

'பாடுமுறை தொடர் செய்யுள் தெரிக்க வல்ல
பாவலன்நற் குணம்குலம்சீர் ஒழுக்கம் மேன்மை
நீடமுகு சமயநூல் பிறநூல் மற்று
நிகழ்த்து நூல் இலக்கணநாற் கவியுள் ளானாய்,
நாடுறுப்பில் குறைவிலனாய், நோயி லானாய்,
நாற்பொருளும் உணர்ந்துகலை தெளிந்து முப்பான்
கூடும்வயது இகந்துஎழுபான் வயதில் ஏறாக்
குறியுடைய னாகிலவன் கவிதை கொள்ளே.'

– சிதம். பாட். 44

'பாடுமுறை செய்யுட் பாவின் விகற்பினைத்
தெளிந்துநூற் புலமையுட் செறிந்த அறிவின்
பாட வல்லபா வலன்தகு நலம்குணம்
தெய்வம் கொள்கை மேம்பாட்டு ஒழுக்கம்
செல்வம் மேன்மை உளனாய், உட்புறம்
அழகும் சமயநூல் பிறநூல் அறிந்து
உவக்கும்பிற பாடைநூல் இலக்கண நூலிவை
தேர்ந்து விரைவில் பாடும்நா வினனாய்,
உறுகண் உறுப்பில் குறைவுநோய் இலனாய்,
நாற்பொருள் உணர்ந்து கலைக்கு ஞானியாய்ச்
செப்பும் நான்கும் புலமைத் திறனே.' – பி. ம. 50

178

## அகலக் கவி கொள்ளும் முறை

939. செயிர்தீர் புலவன் செய்த செய்யுளை
உயர்தரு மன்றின், ஒளிமணி விளக்கொடு
மங்கலம் பொலிய மறையோர் வாழ்த்தத்
தொங்கல் கமழத் தூரியம் இயம்ப
அஞ்சொல் மாதர் செஞ்சொல்வாழ்த் தெடுக்க,
வெண்துகில் புனைந்து, வேறு தவிசிட்டு,
எண்திசை பரவத் தண்தமிழ் கொண்டு,
தண்ணடை மதாணி தமனியங் களிறு
பண்அமை இரதம் பாய்பரி உதவி,
ஏழடி பின்போய் மீள்வது, மூவர்
வாழ்தமிழ் நாடர்க்கு வகுத்தனர் புலவர்.

**இஃது அகலக் கவியைக் கொள்வோர் இலக்கணம் கூறுகின்றது.**

இ-ள் : கற்கப்படா ஆசிரியனுக்கு ஓதிய குற்றத்தின் நீங்கிக் கற்கப்படும் ஆசிரியனுக்கு ஓதிய நற்குணங் களுடனே இவ்வோத்தில் கூறிய நற்குணங்களை எய்திய புலவனால் செய்யப்பட்ட செய்யுளை நல்லவை நிறையவை யின்கண் ஒளி கிளரும் அழகிய விளக்கத்தினோடும் ஏனை எழுவகை மங்கலங்களும் பொலிய, நான்மறையோர் ஆசி கூற, நாலவிட்ட பூமாலைகள் நறுநாற்றத்தைச் செய்ய, பலவகை வாத்தியத் தொகுதிகள் ஒலிக்க, இனிய சொல்லை உடைய மடவார்கள் செவ்விய சொற்களான் வாழ்த்த, பாமகளை மணம் புணரும் திறத்தான் வெண்துகிலும் வெண் மலர்மாலையும் வெண்முத்து மாலையும் அலங்கரித்துக் கொண்டு, விசித்திரத் தவிசின் இருந்து, பாமகளைப் புணர்த்தும் புலவனுக்கும் அவ்வாறு வேறு ஒரு தவிசு இட்டு, எட்டுத்

திசையின் உள்ளாரும் துதிக்கக் குளிர்ந்த பாமாலை சூடி மருத நிலத்து உளவாகிய வளம் மாறாத ஊரும் பெரிய ஆபரணமும் பொன்னும் மத வேழமும் உறுப்பான் அமைவு பெற்ற தேரும் செறுநர் மேல்தாவும் குதிரையும் பாடிய புலவற்குப் பரிசிலாகக் கொடுத்து, ஏழடி புலவன் பின் போய் மீளுதல் நாவலந்தண் பொழில் வரைப்பின் மூவேந்தரும் வாழ்வு பெற்ற வடவேங்கடம் தென்குமரி எல்லைக்கண் உளதாகிய தமிழ் நாட்டகத்தின் அகலக் கவியைக் கொள்வோர்க்கு வகுத்த உரிமைத் திறமாம் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

'படைநவின்ற பாய்மாவும் பண்அமைந்த தேரும்
நடைநவின்ற வெல்பரியும் நல்கி – கடைஇறந்து
முன்வந்த மன்னர் முடிபரிக்கும் சேவடியால்
பின்வந்தான் பேரருளி னன்.' – பு. வெ. பா. 26

எனப் பிறரும் கூறினர்.

மூவரும் என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. (179)

விளக்கம்

*அட்டமங்கலங்கள் – கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை இணைக்கயல் என்பன. சிங்கம் எருது யானை குடம் ஆலவட்டம் கொடி பேரி தீபிகை எனினும் ஆம். முன்னர்க் கூறியனவே எல்லோருக்கும் ஏற்றவை.*

*மூவரும் – சேர பாண்டிய சோழர் என்ற தமிழக முடிமன்னர்.*

ஒத்த நூற்பாக்கள்

*'சாந்தின் மெழுகித் தரளத் திரள்பரப்பிக்
காந்தி மணிகனகம் கண்ணுறீஇ – வாய்ந்தலர்ந்த
தாமமும் நாற்றி விளக்கிட்டுச் சால்தவிசில்
நாமகளை ஏற்றுவித்தல் நன்கு.' – வெ. பா. பொ. 29*

'புகழ்ந்த நன்னாளில் புகன்ற முகுர்த்தத்தில் புள்பொருந்தில்
திகழ்ந்தநன் மங்கலம் சொல்லுதல் யாவும் தெரிந்துகொண்டு
பகர்ந்தவர் செய்யுளைப் பலகலைவாணர் தமக்குஉணர்த்தி
இகழ்ந்தன நீக்கி முறையே உரைத்தல் இயல்புஎன்பரே.'

– நவ. 97

'நல்ல மெழுகி இடம் விளக்கேற்றி நறுமலர்தூய்
நெல்லும் பரப்பி அதன்மேல் விதானம் நிறைகுடமும்
பல்வகை யான பிரப்பும் கொணர்ந்து பயனறிய
வல்லவர் கூடிக் கலைமங்கை பாதம் வணங்குவரே.'

– நவ. 98

'ஆங்குத் தலைவன் பலபடி யானும் அலங்கரித்துப்
பாங்கில் பொருந்தஅப் பாட்டியல் பாட்டினை நன்குஉணர்ந்து
பூங்கற் கம்போல் நவமணி ஆடைகள் பொன்பொழிந்து
வாங்கிக் கவிமுறை வந்தனை செய்தல் மரபுஎன்பரே.'

– நவ. 100

'கொள்ளுமிடம் விதானித்துத் தொடையல் நாற்றிக்
கொடிகதலி தோரணம்பா லிகைநீர்க் கும்பம்
துள்ளுபொரி விளக்கொளிர முரசி யம்பத்
தோகையர்பல் லாண்டிசைப்ப மறையோர் வாழ்த்த
வெள்ளைமலர்த் துகில்புனைந்து தவிசின் மேவி
வேறும்ஒரு தவிசிருத்திச் செய்யுள் கேட்டே
உள்ளமகிழ் பொன்புவிபூண் ஆடைமற்றும்
உதவிஏழ் அடிபுலவன் உடன்போய் மீள்க'.

– சித. பாட். 45

'செய்யுள் கொளும்இடம் சித்திரத் துகிலின்
ஆத்து விதானித்து அலங்கல் நாற்றித்
தோரணம் கதலி துவசம் உயர்த்திப்
பூரண கும்பம் பொன்முளைப் பாலிகை
வெண்பொரி தீபம் மிளிர்தரச் சமைத்து

*பல்இயம் இயம்பப் பாவையர் ஆடப்*
*பாணரும் மகளிரும் பல்லாண்டு இசைதா*
*அந்தணர் நசைதர வாழ்த்த ஒண்பூ*
*மலராடை புனைந்துஒரு தவிசின் மேவி*
*எதிராய் வேறும்ஓர் தவிசில் இருத்தி*
*மங்கலப் பாடல் ஏற்றுஉளம் மகிழப்*
*பொன்புவி வத்திரம் பூண்பன பிறவும்*
*உதவி ஏழடி புலவ னுடன்போய்*
*மீள்வது கடனென விளம்பினர் மேலோர்.'* – *பி. ம. 55*

*179*

## அகலக்கவி கொள்வோர் பெறும் பயன்

940. முன்மொழிக்கு என்று மொழிந்தவும் பெயர்ப்பால்
நன்மை தரூஉம் நயனும்ஆ ராய்ந்து
ஒண்மையின் புலவன் உரைத்த கவியை
வண்மையின் புனைந்தோர் வான்புகழ் உருவான்
மாமதி பரிதி யாம்எனச் சிறந்து
மன்னிவீற் றிருப்பர் இந்நிலத்து உயர்ந்தே.

**இது மேற்கூறிய இலக்கணங்களான் அமைந்த அகலக் கவியைக் கொண்டோர் பெறும் பயன் கூறுகின்றது.**

**இ-ள் : முன்மொழிக்கு இன்றியமையாப் பொருத்தம் பத்தும், இயற்பெயரிடத்து நன்மையைப் பயக்கும் எழுத்தும் சொல்லும் பொருளும் உணர்ந்து நுட்பத்தால் புலவன் உரைத்த அகலக் கவியைக் கொடை முதலிய வரிசை செய்து புனைந்தோர் பெரிய புகழானும் உருவத் தானும் முறையே நிறைமதியும் இளஞாயிறும் இவராம் எனச் சிறப்புற்று இவ்வுலகில் புகழ் உடம்பான் நிலை பெற்றுத் தலைமை எய்தி இருப்பர் என்றவாறு.**

**'உருவும் புகழும் ஆகுவிர் நீர்.'** – *புறநா. 6*

**என்றார் பிறரும்.**

'நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.' – குறள் 234

என வள்ளுவனார் கூறியவாற்றானும்,

'புலவர் பாடும் புகழ்உடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தே.' – புறநா. 27

என இருமைப் பயனும் கூறியவாற்றானும் ஓர்ந்து உணர்க. (180)

## ஒத்த நூற்பாக்கள்

*'அழகாக முன்மொழிக்கண் ஆராய்ந் தனவும்*
*அழகாகச் சொல்லினவும் அன்றி — அழகாகச்*
*செய்யுட்கு உரைத்தனவும் எல்லாம் செயிர்தீரச்*
*செய்யின் நன்(று) அன்றாயின் தீது.'*

*– வெண். பாட். பொ. 27*

*'தீதிலா நூல்உரைத்த தீதிலாச் செய்யுளைத்*
*தீதிலோர் நல்லவையில் சேர்த்ததன்பின் — ஆதிசொல்*
*பாவிற்கு இயைய உரைக்கின் பலபொருளும்*
*தாவில் பொருளோடும் சார்ந்து.'* ,, *28*

*'நன்குணர்ந்தோர் ஆய்ந்த தமிழ்நூலின் நன்னெறியை*
*முன்புணர்ந்து பாட்டியல்நூல் முற்றுணர்ந்து – பின்புணரும்*
*நல்லார்முன் நல்லாய் நலமார் கவிஉரைக்க*
*வல்லாதல் அன்றோ மதி.'* ,, *30*

*'உடம்படச்செய் யான்செய்யுள் பிறன்பால் கூறின்*
*உற்றதிரு அவனிடைப்போய் ஒதுங்கும்; அன்றித்*
*திடம்பெறச்செய் யுள்வரைந்து செம்பூச் சூட்டித்*
*தெருவுமயா னம்புற்றுக் காளி கோட்டத்*
*திடந்தலிலங் கவன்தன்னை நினைந்து சுட்டால்*
*ஈராறு திங்கள்தனின் இறுதி ஆவான்;*

தொடர்ந்துசெயாது உளம்நொந்தால் சுற்றத் தோடும்
தொலைவன்; இஃது உண்மை; அகத் தியன்தன்
சொல்லே.' – சித. பாட். 46

'அகத்தியன்சொல் எழுத்துமுதல் குற்றம் செய்யுட்கு
அடையாமல் தொடைகொண்டால் அடையும் செல்வம்;
மகத்துயர்நோய் அகலும்; அக லாது சுற்றம்;
வாணாளும் அதிகம்; வழிமரபும் நீடும்;
தொகைக்குற்றம் பாட்டுறில் செல்வம்போம்; நோயாம்;
சுற்றம்அறும்; மரணம்உறும்; சோரும் காலும்;
சகத்தவர்க்குஈது அன்றியே, தேவர்க்கு ஆகின்
தப்பாதுஇப் பலன்கவிதை சாற்றி னார்க்கே.'
– சித. பாட். 47

**பரிசில் வழங்காதவன் அழிவு:**

'கொள்ளான் பனுவலைக் கொள்வேன் தனக்குப்
பெயர்முத லவற்றைப் பெயர்த்தும் அழித்தும்
மீட்டுஒரு பேரின் விரைந்து அதில்சேர்த்தி
மொழிந்த வழுக்களான் முன்மொழி எடுத்து
வைத்துஅவன் இயற்பெயர் தோறும் மாளச்
செய்யுள் பெயர்த்துச் செந்நூல் சுற்றி
அதன்மிசைச் செம்மலர் அணிவுறச் சாற்றிக்
கவர்தெருப் புறத்தும் காளிகோட் டத்தினும்
பாழ்மனை அகத்தும் பழுத்த இரும்பினால்
ஆங்கவன் தனைநினைந்து அகம்நொந்து சுடினே
ஈராறு திங்களின் இறுதி யாவன்;
இங்ஙனம் இயற்றாது இதயம் நொந்துகொண்டு
இருக்கினும் கிளையொடும்இறுதி யாவன் என்று
ஓதியது அகத்தியர் உண்மைநூல் நெறியே.' – பி, ம. 58

**குற்றமற்ற பாடல் கோடலின் பயன் :**

*'எழுத்து முதலிய இலக்கணம் ஐந்தினும்
மங்கலம் முதலாய் வகுத்தமுன் மொழியினும்
சான்றோர் விதித்த தன்மையின் வழுவாது
தொடையின் முறையில் நிற்கக் கேட்கச்
செல்வமும் கீர்த்தியும் சிறக்கும்; வாழ்நாள்
திருமகப் பேற்றொடு தருமம் உடைத்தாய்
மனத்துயர் நோயின்றி மரபும் நீடும்.'* – *பி. ம. 59*

**குற்றமுடைய பாடல் கோடலின் பயன் :**

*'வழுவுறத் தொடுக்கும் அக்கவி கேட்கின்
செல்வம் அகலும்; தீரா நோய்உறும்;
சுற்றமும் புகழும் சூனிய மாகும்;
கால மிருத்தும் கடுகி வந்திடும்;
பாதிப் பயன்கவி சாற்றின வருக்கே.'* – *பி. ம. 60*
*180*

## அதிகாரப் புறனடை

**941.** **பன்முகம் கொண்டு பரந்த பொருளைச்
சொல்முகத் தான்அவை துணைமை எய்தக்
கூறற்கு அரிய ஆயினும், கூறிய
பொருளொடும் இனத்தொடுந் தெருள்உற அமைத்துச்
சொல்ல வல்லுநர் எல்லையின் விளங்கிக்
கலைமக ளொடுந்திரு நிலைபெற வாழ்வர்
மலைமகள் ஒருபால் மணந்தான் எனவே.**

**இஃது இவ்வதிகாரத்திற்கு ஒரு புறனடை கூறுகின்றது.**

இ-ள்: பலவாகிய முகத்தான் விரிந்த பொருள் இலக்கணங்களை எல்லாம் சொல் கருவியான் அவை முற்றச் சொல்லத் தொடங்கின் முடிவுகூடா; ஆயினும் கூறப்பட்ட பொருள் இலக்கணத்தோடும் அவற்றிற்கு இயைபுபடநின்ற ஏனை இலக்கணத்தோடும் அமைத்துக் கேட்போர் உள்ளத்து உண்மை உறக் கூற வல்லோர், புடவியிடைப் பகலோன் போல விளங்கி, தம்மைப் பிரியா உரிமை உற்ற கலைமடந்தையோடும் திருமடந்தை அவ்வாறு வதிய, மலையரசன் மகளாகிய உமாதேவியைத் தனது ஒரு கூற்றின்கண்ணே கலந்து உலகுக்கு இன்பம் பயக்கும் இறைவனைப் போல நெடுங்காலம் இனிது வாழ்வர். என்றவாறு. (181)

ஐந்தாவது - பாட்டியல் முற்றும்.

மூன்றாவது - பொருளதிகாரம் முற்றும்.

**இலக்கண விளக்கம் முற்றும்.**



## பாட்டியல் பதிகம்

'பொன்மலை நின்று தென்மலை யுற்ற
வகத்திய முனிவன் சகத்தவர்க் காகச்
செந்தமி ழிலக்கண முந்துநூல் கிளப்பப்
பல்கா லுன்னித் தொல்காப் பியமுனி
இயற்றமிழ் முதலினின் றெடுத்துரைத் திடவதன்
ஓட்பங் கண்டு தட்பங் கூராது
ஐந்திய லுந்தம் புந்தியின் வேறுகொண்டு
உரைத்த புலவர் வரைத்த வுரையான்
முதலு முடிவுஞ் சிதர்தரப் பலவாய்க்
கிடந்த வியலைத் தொடர்ந்தொரு வழிப்பட
ஈட்டலா னிலக்கண விளக்க மென்ன
நாட்டினன் வைத்திய நாத தேசிகன் ;
அன்னவன் றவத்தி னுலவ தரித்த
முன்னவன் பாயிர மொழிந்துசொல் லணியுந்
தற்பவ முதன்மூன் றிற்பட நாடிப்
பகர்ந்தன னிளவல்பன் னூலு மாராய்ந்து
உகந்துதொல் காப்பியத் துண்மை தோன்ற
ஐந்திய லுந்தன் புந்திசான் றுகத்
தந்தைமுன் னுரைத்தநூ ருன்முடி பெய்த
வந்த ணாரூர்ச் சந்திர மௌலி
யருளுட் கொண்டு மருண்மன நீங்கிப்
புலங்கொளப் பாட்டிய லிலங்க வுரைத்தனன்
வாய்மைதரு தியாக ராய தேசிகனே.'

இப்பதிகத்தை நோக்க இலக்கணவிளக்கப் பாட்டியல் வைத்தியநாத தேசிகருடைய இளைய மகனுரான தியாகராச தேசிகரால் உரையுடன் இயற்றப்பெற்றது என்பது புலனாகிறது. இப்பதிகத்தை இயற்றியவர் தியாகராச தேசிகரின் மகனுரான வைத்தியநாத தேசிகர் என்பதை நோக்க மூன்று தலைமுறையினர் தமிழ்ப் புலவர்களாகத் தொடர்ந்து விளங்கித் தமிழ் இலக்கணத் தொண்டு செய்தமை தெளிவாகிறது.

---

# இலக்கண விளக்கம் - பொருளதிகாரம்

## பாட்டியல் நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

**உயர்ந்தோராவார் அகத்தியனாரும் மார்க்கண்டேய னாரும் தலைச்சங்கத்தாரும் முதலியோர். (149)**

### விளக்கம்

'அவரையே நோக்குதல் என்பது, அவர் ஆணையான் உலக நிகழ்ச்சி செல்கின்றது என்றவாறு; எனவே உயர்ந்தோர் எனப்படுவார் அந்தணரும் அவர்போலும் அறிவுடையோரும் ஆயினர்' என்பது பேராசிரியர் உரை.

'உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு படுதலின்
வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.'
– தொ. பொ. 217 நச்.

'உயர்ந்த மக்கள் கூறும் கூற்றும் வேதநெறியோடு கூடுதலின் அவ்வழக்கினது நெறியாலே நடத்தல் செய்யுட்கு முறைமை என்றவாறு.'

'வழக்கெனப்படுவது (647) என்ற மரபியல் சூத்திரத்தான் வழக்கு உயர்ந்தோர் கண்ணதாயிற்று. அவர் அகத்தியன் முதலியோர் என்பது பாயிரத்துள் கூறினும்' என்பது நச்சினார்க்கினியர் உரை.

ஒத்த நூற்பா
முழுதும் – தொல். பொ. 647. பே.

149

## இளமை மரபு பெயர்கள்

**910.** **பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும்
குழவியும் என்றிவை இளமைப் பெயரே.**

**இது வழக்குமரபு உணர்த்துவனவற்றுள் இளமைக்கு உரியன இவை என்கின்றது.**

இ–ள்: பார்ப்பு முதல் குழவி ஈறாக ஒன்பதும் இருதிணையும் இளமைத்தன்மை உணர்த்தும் பெயர்களாம் என்றவாறு.

அவை உணர்த்துமாறு:

பார்ப்பும் பிள்ளையும் பறப்பனவற்றுள்ளும் தவழ் சாதியுள்ளும்,

பறழ் குட்டி என்பன மூங்கா வெருகு எலி அணில் என்பனவற்றுள்ளும்,

குருளை குட்டி பறழ் என்பன முயல் பன்றி நாய் நரியுள்ளும்,

பிள்ளை என்பது நாய் அல்லாத ஏனையவற்றுள்ளும்,

மறி குட்டி என்பன யாடு குதிரை நவ்வி புல்வாய் கோடு வாழ் விலங்கினுள்ளும்,

மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும் அக்கோடு வாழ் விலங்கினுள்ளும்,

கன்று என்பது யானை, குதிரை, கழுதை, கடமை, மான், எருமை, மரை, கவரி, ஒட்டகம், கராம் இவற்றுள்ளும்,

குழவி என்பது குஞ்சரம் எருமை கடமை மரை குரங்கு முசு சிதல் எறும்பி இவற்றுள்ளும், பின் நின்ற சிதல் எறும்பி இவற்றின் கிளைப்பிறப்பினுள்ளும்,

குழவி மக பிள்ளை என்பன மக்களுள்ளும்,

பிள்ளை, குழவி, கன்று, போத்து என்பன ஓரறிவுயிருள்ளும் இளமைப்பெயர்க்கு உரியவாதல் ஓர்ந்து உணர்க.

## உரை மேற்கோள் நூற்பாக்கள் பாடல்கள் ஆகியவற்றின் அகரவரிசை

---

# இலக்கணச் செய்திகள்

# ஒத்த நூற்பாக்கள் அகரவரிசை

பன்னிரு பாட்டியல் :

ஓரறிவுயிரில் பைங்கூழும் பசும்புல்லும் இவ் விளமைப்பெயர் எய்தா என்பதாம். இவை எல்லாம் சொல்பற்றி வந்த மரபு ஆகலின் சொல்லோத்தில் கூறிய மரபுள் அடங்கா என்க. (150)

## விளக்கம்

**பார்ப்பு, பிள்ளை :**

'பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்று இளமை.'
— தொல். பொ. 559

'தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன.' ,, 560

**பறழ், குட்டி :**

'மூங்கா வெருகுஎலி மூவரி அணிலொடு
ஆங்கவை நான்கும் குட்டிக்கு உரிய.' ,, 561

'பறழ் எனப் படினும் உறழ் ஆண்டு இல்லை.' ,, 562

**குருளை, குட்டி, பறழ் :**

'நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலை குருளைக்கு உரிய.' ,, 563

'நரியும் அற்றே நாடினர் கொளினே.' ,, 564

'குட்டியும் பறழும் கூற்றவண் வரையார்.' ,, 565

**பிள்ளை :**

'பிள்ளைப் பெயரும் பிழைப்பு ஆண்டு இல்லை
கொள்ளுங் காலை நாய்அலங் கடையே.' ,, 566

**மறி, குட்டி :**

'யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே.' ,, 567

'கோடு வாழ் குரங்கும் குட்டி கூறுப.' ,, 568

**மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு :**

*'மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்*
*அவையும் அன்ன அப்பா லான.'* – தொ. பொ. 569

**கன்று :**

*'யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்*
*ஆவோடு ஐந்தும் கன்று எனற்கு உரிய.'* ,, 570

*'எருமையும் மரையும் வரையார் ஆண்டே.'* ,, 571

*'கவரியும் கராமும் நிகர்அவற் றுள்ளே.'* ,, 572

*'ஒட்டகம் அவற்றோடு ஒருவழி நிலையும்'* ,, 573

**குழவி :**

*'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை.'* ,, 574

*'ஆவும் எருமையும் அவைசொலப் படுமே.'* ,, 575

*'கடமையும் மரையும் முதல்நிலை ஒன்றும்.'* ,, 576

*'குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்*
*நிரம்ப நாடின் அப்பெயர்க்கு உரிய.'* ,, 577

**குழவி, மக, பிள்ளை :**

*'குழவியும் மகவும் ஆயிரண்டு அல்லவை*
*கிழவ அல்ல மக்கட் கண்ணே.'* ,, 578

*'கிழவ அல்ல' என்ற மிகையான் பிள்ளையும் கொண்டார் பேராசிரியர்.*

**பிள்ளை, குழவி, கன்று, போத்து :**

*'பிள்ளை குழவி கன்றே போத்தென*
*கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே.'* ,, 579

*'நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே.'* ,, 580

**சொற்கள் இப்படி வரையறையோடு வழங்கப்படல் வேண்டும் என்பதனை மரபையே அடிப்படையாகக் கொண்டு கூறலின் இந் நூற்பா முதலியன சொல்லோத்தினுள் இடம்பெறவில்லை.**

வரையறுத்த பாட்டியல்

**தொன்னூல் விளக்கம் :**

ஒத்த நூற்பாக்கள்

*'மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்*
*......ஒன்பதும் குழவியோடு இளமைப் பெயரே.'*

*– தொல். பொ. 556*

*150*

## இளமை மரபுபெயருக்குப் புறனடை

911. சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல இலவே.

**இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது.**

**இ – ள்: கூறப்பட்ட மரபு இலக்கணம் எய்தி நின்ற இளமைப் பெயரைச் சொல்லுமிடத்து அப்பெயர்களே அன்றி வேறுசில பெயர்கள் இல்லை என்றவாறு. (151)**

விளக்கம்

*இப்புறனடைச் சூத்திரத்தால் முன்பு விதந்து சொல்லப் படாது இன்னும் வழக்கினுள் காணப்படும் நாகு என்ற இளமைப் பெயர்,*

*'நன்னாள் பூத்த நாகிள வேங்கை' – அகநா. 85*

எனவும்,

*'நாகிள வளை' – புறநா. 266*

எனவும்,

*'கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு' – குறுந். 164*

எனவும்,

*'எருமை நல்லான் மடநாகு பெறூஉம்' – பெரும்பாண். 165*

எனவும்,

*ஓரறிவுயிர் முதலாக ஐயறிவுயிர்காறும் இளமைப்பெயராய் வழங்குதல் முதலியன கொள்ளப்படும் என்பார் பேராசிரியர். (தொல். பொ. 581 பே.)*

ஒத்த நூற்பா

*முழுதும் – தொல். பொ. 581 பே.* *151*

## அறுவகை அறிவுகள்

912. ஒன்றறி வதுவே உற்றறி வதுவே;
இரண்டறி வதுவே அதனொடு நாவே;
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே;
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே;
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே;
ஆறறி வதுவே அவற்றொடு மனன்என
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தனரே.

**இஃது உயர்ந்த ஒழுக்கமும் அல்லவாகிய ஒழுக்கமும் நிகழ்தற்கு ஏதுவாகிய அறிவின் திறம் கூறுகின்றது.**

**இ–ள்: ஓரறிவாவது தன்னின் வேருய பிறிதொன்று மெய்யுறலான் வன்மை மென்மை முதலியன அறிதலாம்; இரண்டறிவாவது அதனொடு வாயால் சுவையை அறிதலாம்; மூவறிவாவது அவ்விரண்டு அறிவுடனே மூக்கால் கந்தத்தினை அறிதலாம்; நான்கறிவாவது அம்மூவகை அறிவுடனே கண்ணால் உருவத்தினை அறிதலாம்; ஐந்தறிவாவது அந்நால்வகை அறிவுடனே செவியால் சத்தத்தினை அறிதலாம்; ஆறறிவாவது ஐவகை இந்திரியங்கள் அறியும் அறிவான் அன்றி ஞாபக ஏதுக்களான் நுண்ணிய பொருள்களை மனத்தான் உணர்தலாம்; என்று நேர்மையான் எல்லாப் பொருள் மரபினையும் உணர்ந்தோர் இவ்வாறு பிறழாமல் கூறுக என்று காட்டினர் என்றவாறு.** (152)

# சிதம்பரப் பாட்டியல்

## * 4. பொருத்தவியல்

### பொருத்தங்கள் பத்து

'பகர்செய்யுள் மங்கலச்சொல் எழுத்து, தானம்,
பால்,உண்டி, வருணம்,நாள், கதியே என்று
புகரில்கணம் எனப்பத்தும் பிறங்கு கேள்விப்
புலவர்புகழ் முன்மொழிக்குப் புகல்வர்; செம்பொன்
சிகரகிரி எனப்பணைத்துப் புடைத்து விம்மித்
திரண்டுஎழுந்து வளர்ந்துஇளகிச் செறிந்த கொங்கைத்
தகரமலர்க் குழல்கருங்கண் குமுதச் செவ்வாய்ச்
சரிவளைக்கைக் கொடிஎன்னத் தயங்கும் மாதே!' 1

### மங்கலம், சொல்

'மாமணிதேர் புகழ்அமுதம் எழுத்து கங்கை
மதிபரிதி களிறுபரி உலகம் சீர்நாள்
பூமலைகார் திருகடல்நீர் பழனம் பார்சொல்
பொன்திகரி பிறவும்முதல் மொழிச்சீர்க்கு ஆகும்;
நாமவகை யுளிசேர்தல் பொருளது இன்மை
நலம்இலதாய் வைத்தல்பல பொருளாய்த் தோன்றல்
ஆம்இனிய சொல்ஈறு திரிதல் போலும்
ஆதிமொழிக்கு ஆகாத ஆனந் தம்மே.' 2

---

* இந்நூலின் முதல் மூன்று இயல்களும் செய்யுளியல் செய்திகளைக் கூறலின் அவை இலக்கணவிளக்கச் செய்யுளியலின் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டன. பின் இரண்டு இயல்களும் பாட்டியல் செய்திகளைக் கூறலின், இவ்வியலின் பிற்சேர்க்கைக்கண் இடம்பெறுகின்றன.

## எழுத்துப் பொருத்தமும் தானப் பொருத்தமும்

'ஆனஎழுத்து ஒன்பதுஏழ் ஐந்து மூன்றும்;
ஆகாதுஎட்டு ஆறுநான்கு ஆதிச் சீர்க்கே;

ஊனம்இலா அஆவும் இஈ ஐயும்
உஊவும் எஏயும் ஒஓ ஔவும்

தானம்; இதை வகையாம்அந் தாதி தன்னில்,
தலைவன்பேர் முதல் எழுத்தில், பாலன் ஆதி

மேல்நிரைஎண் ணில்பால குமார ராசர்
வேண்டிடும்;வேண் டாவிருத்தம் மரணம் தானே.' 3

## பாலும் உண்டியும்

'மருவுகுறில் ஆண்; நெடில்பெண்; அவர்இ வர்க்கா
மயங்கினும்ஆம்; வரலாகா பேடுஒற்று ஆய்தம்;

உரியகச தநபமவ ஏழோடு ஆதி
உயிர்க்குறில்நான்கு இவைஅமுதம் ஆதிச் சீர்க்கும்

அரியதசாங் கத்தயற்கும் நலமது ஆகும்;
அமுதமொழிக்கு அல்லாத எழுத்தும் கால்மாத்

திரைஅளவுஅஃ கேனமுடன் மூன்றும் நஞ்சாய்ச்
செப்புஎழுத்து இவைஎல்லாம் தீதாம் அன்றே.' 4

## வருணம்

'தீதுஇல்உயிர் ஈராறும் முதல்ஒற்று ஆறும்
திருமறையோர்க்கு அடைவே;ஓர் ஆறு வேந்தர்க்கு;

ஏதுஇல்லவ றன–கள்வணி கர்க்குஆம்; மற்றை
எழுத்துளவை சூத்திரர்க்குஆம் இயன்ற சாதி;

ஓதிமன்தன் படைப்புஉயிரே; அரன்மால் செவ்வேள்
உம்பர்கோன் பரிதிமதி மறலி நீர்க்கோன்

கார்தல்அள கேசன்முதல் இவ்வி ரண்டாய்க்
கைம்முதல்மூ வாறுஒற்றும் கருதிச் செய்தார்.' 5

## நாட் பொருத்தம்

'கருதும்உயிர் அடைவேநான்கு ஐந்து மூன்று
கார்த்திகையே பூராடம் உத்தி ராடம்;
உரைதரு க – வரியின்நான்கு இரண்டு மூன்று
மூன்றுஓணம் ஆதிரையே புனர்தம் பூசம்;
இருமைகொள் ச – வரியின்நான்கு ஐந்து மூன்று
இரேவதிஅச் வனிபரணி; ஞகரம் மூன்றும்
வரும்அவிட்டம்; தகரம்இரண்டு ஏழு மூன்று
வளர்சோதி விசாகமே சதயம் மன்னும்.' 6

'சதிதிகழ் ந – வினில்ஆறு மூன்று மூன்றும்
தருமனுடன் கேட்டையே பூரட் டாதி;
திதம்மிகும்ப – வரின்நான்கு இரண்டோடு ஆறுஉத்
திரம்முதல்மூன் றும்; ம – வில் ஆறும் மூன்றும்
இதமுடன்மூன் றும்மகம்ஆ யிலியம் பூரம்;
யா – உத்தி ரட்டாதி; யூயோ மூலம்;
உதவிய வ – முதல்நான்கும் ஒழிந்த நான்கும்
உரோகணியாம் மிருகசீ ரிடம்ஆம் பேர்நாள்.' 7

## நாள், கதி

'பேர்நாள்உற் பவநாளா தல்மூ வொன்பான்
பிரித்துஒன்று மூன்றுஐந்துஏழ் ஆகாது; எட்டாம்
கூர்இராசி யும்வயிறு சிகமும் ஆகா;
குறில்வன்மை ஈறுஒழிக்கில் வானோர்க்கு ஆகும்;
நேர்நெடிலின் முதல்நான்குஈறு இல்லா மென்மை
நிலமக்கள் கதிமுதற்சீர்க்கு ஆகும்; ஒஔ
ஏர்மருவு யரலழற விலங்காம்; மற்றை
எழுத்துநர கக்கதி; முன் இவைவா ரால்.' 8

## கணநாட் பொருத்தம்

'வான்இலகு நேர்,குருவே நிரையாம், வெண்சீர்
வரில்நப தவகணம்நாள் பரணி மும்மீன்
ஊனம்மிகு புனர்பூசம் பூசம் வாழ்நாள்
உற்றபுகழ் சூனியநோய் பலன்கள் ஆகும்,
தேன்அனையாய்! வஞ்சிச்சீர் அடைவே நான்கும்
திகழ்சர மயகணம்,நாள் சோதி ஆரல்
தானம்உறு கேட்டைசத யந்தான் கேடு
சாவுதிரு மகிழ்ச்சிபலன் தரத் தொடங்கும்.' 9

'துறக்கம்மதி வான்பரிதி காய்ச்சீர் முன்னும்
சூழ்காற்றுத் தீநிலம்நீர் கனிச்சீர் பின்னும்
நிறுத்துகணம் இவ்விரண்டாம் அசைவற் சீரின்
நேர்ஈறு வெள்ளைச்சீர் நிறைவஞ்சிச்சீர்
சிறப்புடைஇவ் விரண்டும்ஆம் கணப்பேர் மற்றும்
திகழ்இயற்சீர் அயன்திருக்கோக் கருடன் முன்னும்
வெறுத்தபின்னு மாம்என்ப இறைவன் நாட்கு
மேவுகண நாட்பொருத்தம் வேண்டு மாதோ.' 10

## புறனடை

'ஆவதுமங் கலத்தேற்ற பரியாயச் சொல்
அடைகொடுத்து முதற்சீருக்கு அடுத்த செய்யுள்
மேவுதலை இடைகடைமங் கலச்சொல் வைத்து
விதிஎடுத்துப் பால்வருணம் மயங்கும் என்ப;
வாவும்ஒரு நற்கதியால் முன்னோர் நூலின்
மங்கலத்தால் நஞ்சுசில அமுதம் ஆகும்;
தூஅமுதம் எனின்கதியில் பழுது போமேல்
தொடர்கலப்பாம் மரபினது தொடக்கம் சொல்வாம்.' 11

## 5. மரபியல்

'துறுகொலைநீக் கித்தெய்வக் காப்பாய்ச் சுற்றத்
தொகைஅளவு வகுப்புஅகவல் விருத்தம் தன்னால்

முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி
முத்தம்வா ராணைஅம் புலியி னோடு

சிறுபறைசிற் றில்சிறுதேர் இவை; பின் மூன்றும்
தெரிவையர்க்குப் பெருகழங்குஅம் மானை ஊசல்

பெறுமூன்று முதல்இருபத் தொன்றுள் ஒற்றை
பெறுதிங்கள் தனில்**பிள்ளைக் கவி**யைக் கொள்ளே.' 1

### கலம்பகம்

'கொண்டபுயம் தவம்மதங்குஅம் மானை காலம்
குறம்களிசம் பிரதம்மறம் பாண்சார் தூது

வண்டுதழை கைக்கிளைசித்து இரங்கல் ஊசல்
மடக்குமருட் பாஅகவல் விருத்தம் வெண்பா

வெண்டுறைவஞ் சித்துறைஆ சிரியம் வஞ்சி
விருத்தப்பா கலியினம்அந் தாதி யாகக்

கண்டவைமுன் ஆதிஒரு போகு வெண்பாக்
கலித்துறைநேர் கூறல்**கலம் பகமது** ஆமே.' 2

### கலம்பகச் செய்யுள், பன்மணி மாலை, அகப்பொருட் கோவை என்பன.

அன்புறுதே வர்க்குநூறு; இழிபுஐந்து ஐயர்க்கு;
அரசர்க்குத் தொண்ணூறு வணிகர்க்கு ஐம்பான்;

இன்புறுமுப் பான்உழவர்க்கு; அமைச்சி னுள்ளோர்க்கு
எழுபதுஎனும்; கலம்பகத்துஅம் மானை ஊசல்

முன்புஒருபோகு ஒழிந்ததுபன் மணிமா லைப்பேர்;
மொழிவெள்ளை நூறுகலித் துறைநா னூறதல்

நன்குஉறில்அந் தாதி; கலித் துறைநா னூறாய்
நடப்பதுஅகப் பொருட்கோவை நாமம் மன்னே.' 3

**இரட்டைமணிமாலை, இணைமணிமாலை, மும்மணிக் கோவை, ஒலிஅந்தாதி, இருபா இருபஃது, பயோதரப்பத்து, நயனப்பத்து என்பன.**

*'மன் இருபான் வெள்ளைகலித் துறைஇ ரட்டை*
*மணிமாலை; நூறுவெள்ளை அகவற் பாவால்*
*பின்னர்க்கலித் துறையதுஇணை மணிமா லைப்பேர்;*
*பேசுஅகவல் வெள்ளைகலித் துறைமுப் பானல்*
*சொன்னதுமும் மணிக்கோவை; வகுப்பு முப்பான்*
*சூழ்ஒலிஅந் தாதி; வெள்ளை அகவற் பாவால்*
*பன்னும்இரு பாஇருபது; இவைஅந் தாதி;*
*பயோதரம்,கண் உரைத்திடில்அப் பேர்ப்பத்து ஆமால்.'* 4

**தசாங்கப்பத்து, சின்னப்பூ, விருத்தலக்கணம் என்பன.**

*'பத்துஇயல்வெண் பாவின்மலை நதிநாடு ஊர்தார்*
*பரிகளிறு கொடிமுரசு செங்கோல் பாடின்*
*மெத்துதசாங் கப்பத்தாம்; தசாங்கம் தன்னை*
*வெண்பாவால் தொண்ணூறுஏழ் பஃது முப்பான்*
*இத்தகைமை மொழிவதுசின் னப்பூ ஆகும்;*
*எழில்குடைசெங் கோல்நாடுஊர் வில்வாள் வேல்மா*
*அத்திதனித் தனிஅகவல் விருத்தம் பத்தால்*
*அறைவிருத்த இலக்கணமாம்; அமுதச் சொல்லாய்!'* 5

**ஊசல், வருக்கமாலை, மும்மணிமாலை, நான்மணிமாலை என்பன.**

*'சொற்கலித்தா ழிசைஅகவல் விருத்தம் ஆதல்*
*சுற்றமுடன் தாழிசையாய்ச் சொல்வது ஊசல்;*
*வற்கஉயிர் கசதநப மவ-எட் டின்சூழ்*
*மருவுஅகவல் வரின்வருக்க மாலை; வெள்ளை*
*நற்கலியின் துறைஅகவல் அந்தா தித்த*
*நடைமுப்பான் மும்மணிமா லைப்பேர்; மேலோர்*
*ஒற்கம்இல்ஆ சிரியவிருத் தத்தைக் கூட்டில்*
*ஒருநாற்பான் நான்மணிமா லைக்குஎன்று ஓதே.'*

**அலங்கார பஞ்சகம், அட்டமங்கலம், நவமணிமாலை ஒருபாஒருபஃது என்பன.**

'ஓதும்வெள்ளை கலித்துறைஆ சிரியம் வஞ்சி
உறுவிருத்தம் வகுப்புஐந்தால் உரைக்கில் அம்ம
கோதில்அலங் காரபஞ்ச கப்பேர்; எட்டுக்
குலவுஅகவல் விருத்தம்உறு தெய்வம் காப்பாம்
ஈதுஅட்ட மங்கலம்; இப் படிஒன் பானல்
ஏத்துநவ மணிமாலை; எப்பாட் டேனும்
தீதில்ஒரு பான்ஒருபா ஒருபஃது என்ப;
செப்புகஇவை நான்கையும்அந் தாதி தன்னால்.' 7

**பல்சந்தமாலை, ஆற்றுப்படை, பாதாதிகேசம், கேசாதிபாதம் அங்கமாலை என்பன**

'அகவல்விருத் தம்வகுப்புஆ தல்பத்து ஆதி
அந்தம்நூறு ஆகும்பல் சந்த மாலை;
புகழ்அகவ லால்புலவர் பாணர் கூத்தர்
பொருநர்முத லவர்உரைஆற்று எதிர்ப்பா டாகப்
பகருமதுஆற் றுப்படையாம்; கலிவெண் பாவால்
பாதாதி கேசம்கே சாதி பாதம்
மகிழஉரைத் திடில்அந்தப் பேராம்; அந்த
வகைஉரைக்கின் வெளிவிருத்தத்து அங்க மாலை.' 8

**மங்கலவள்ளை, மெய்க்கீர்த்தி, புகழ்ச்சிமாலை, நாமமாலை, கைக்கிளை என்பன**

'மாசில்குல மகளுக்கு வகுப்பு வெண்பா
வருபொருள்ஒன் பான்ஒன்பா னகப் பாடில்
தேசுஉயர்மங் கலவள்ளை; வேந்தர்க்கு உண்மை
திகழ்கீர்த்தி உரைப்பதுமெய்க் கீர்த்தி; வஞ்சி
பேசகுணப் பேர்அடுக்கி மடவார்க்கு ஓதில்
பெருப்புகழ்ச்சி மாலை; அப் படிஆண் பாற்கு
மாசுஅகல உரைக்கில்அது நாம மாலை;
வரும்காமம் ஒருதலைகைக் கிளைய தாகும்.' 9

## உலா, இன்பமடல் என்பன

'குழமகனை அடையாளம் கலிவெண் பாவால்
கூறி,அவன் மறுகுஅணையக் காதல் கூர்ஏழ்

எழில்பேதை, பதினொன்று பெதும்பை, பன்மூன்று
இயல்மங்கை, பத்தொன்பான் மடந்தை, ஐயைந்து

அழகுஅரிவை, முப்பஃதுஓர் தெரிவை, நாற்பான்
ஆம்வயது பேரிளம்பெண் முதலாய் உள்ளோர்

தொழஉலாப் போந்ததுஉலா; தலைவன் பேர்க்குத்
தொடைஎதுகை ஒன்றில்இன்ப மடலாய்ச் சொல்லே.' 10

## உலாமடல், அநுராகமாலை, தூது, எண்செய்யுள் என்பன

'சொன்னமா தரைக்கண்டு கனவில் சேர்ந்தோன்
துணிவன்மடல் என்றதுஉலா மடல்; பாங் கற்கே

இன்னல்உரைத் திடுதல்அநு ராக மாலை;
இருதிணையை விடல்தூது; இவ் வைந்தும் முற்பால்

பன்னுபொருள் இடம்காலம் தொழில்முப் பான்நாற்
பான்எழுபான் தொண்ணூறு நூறால் வெண்பா

மன்னுகலித் துறையாதல் புகலப் பேரான்
மாலையும்ஆம்; எண்ணாலும் மருவும் பேராம்.' 11

## வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி நொச்சி உழிஞை தும்பை வாகை மாலைகள், தானைமாலை, தாரகைமாலை என்பன.

'மகிழ்நிரைகொள் வதுவெட்சி, கரந்தை மீட்டல்,
மாற்றூர்பால் செலல்வஞ்சி, ஊன்றல் காஞ்சி,

பகர்மதிலைக் காக்குமது நொச்சி, சுற்றிப்
படைவளைத்தது உழிஞை,பொரல் தும்பை, வென்று

புகழ்படைத்தல் வாகையது மாலை, பேரால்
போற்றுவது மாலையுமாப் புகல்வர்; தானை

அகலம்உரைப் பதுதானை மாலை, தூசி
அணிவகுப்பில் தாரகைமா லையைச்சொல் ஆய்ந்தே.' 12

**தசபிராதுற்பவம், நாழிகை வெண்பா, செருக்களவஞ்சி, வரலாற்று வஞ்சி, ஆனைத்தொழில் என்பன.**

'ஆய்ந்ததசப் பிராதுற் பவம்பத் தான
அரிபிறப்புஆ சிரியவிருத் தத்தால் வாழ்த்தில்,
ஏய்ந்திடுநா ழிகைவெண்பா மன்னர்க்கு ஈசர்க்கு
எய்தியநா ழிகைவெண்பா நாலெட்டாய்ச் சொலல்,
வாய்ந்தசெருக் களவஞ்சி களத்தைக் கூறல்,
வரலாற்று வஞ்சிபல வரலாறு ஓதல்,
பாய்ந்திடும் மதத்துஆனைத் தொழில்நேர் சொல்லும்
படைக்களிற்றைக் கண்டுஅரசன் பற்றிச் சேர்தல்.' 13

**பரணி**

படைபுக்குஆ யிரம்வேழம் எதிரார் போரில்
படப்போர்செய் தானுக்குக் கடவுள் வாழ்த்துக்
கடைதிறப்புப் பாலைநிலம் காளி கோட்டம்
கழுதுநிலை காளிக்குப் பேய்ச்சொல் பேய்க்குத்
தொடர்காளி சொலல்அதனால் தலைவன் சீர்த்தி
சொல்லல்அவன் சேறல்புறப் பொருள்தோன் றப்போர்
அடுதல்களம் விரும்பல்இவை நாற்சீர் ஆதி
அடிஇரண்டில் ஏறுமல் பரணி பாடே.' 14

**காப்பியம்**

பாடுநெறி வணக்கம்வாழ்த்து ஒன்று நாலாய்ப்
பகர்பொருள்முன் வரஇறைவன் வெற்பு வேலை
நாடுநகர் பொருள்பருவம் இருசுடர்பெண் வேட்டல்
நண்ணல்முடி பொழில்புனல் ஆடல்கள் ளுண்டல்
கூடுமகிழ்வு ஊடல்துனி புதல்வர்ப் பேறு
கூறிடுமந் திரம்தூது செலல்போர் வென்றி
நீடுசந்தித் தொடர்ச்சிசுவை பாவம் தோன்ற
நிகழ்த்துஇயம்பல் முதல்பெருங்காப் பியத்துக் கம்மா.'
15

**சிறுகாப்பியம், காப்பியத்துக்குப் பெயரிடல் முதலியன.**

'அறையும்இதில் சிலகுறைபாடு எனினும் குன்றாது
அறம்பொருள்இன் பம்வீட்டில் குறைபா டாகப்

பெறுவதுகாப் பியமாகும்; புராணம் ஆகும்;
பேசின்முதல் நூல்பொருளொடு அளவு தன்மை

செறிமிகுதி செய்வித்தோன் கருத்த னாலும்
திகழும்இடு குறியானும் நூற்குப் பேராம்;

உறுகலிவஞ் சிப்பாக்கை யறத்துக்கு ஆகா;
உரைப்பதுஇனி வாழ்த்தினுக்குளப் பாவும் ஆமே.' 16

## கவிப்புலவன் இயல்

'பாடுமுறை தொடர்செய்யுள் தெரிக்க வல்ல
பாவலன்நற் குணம்குலம்சீர் ஒழுக்கம் மேன்மை

நீடுஅழகு சமயநூல் பிறநூல் மற்று
நிகழ்த்துநூல் இலக்கணநாற் கவிஉள் ளானாய்

நாடுஉறுப்பில் குறைவிலனாய் நோயி லானாய்
நாற்பொருளும் உணர்ந்துகலை தெளிந்து முப்பான்

கூடும்வயது இகந்துஎழுபான் வயதின் ஏறாக்
குறியுடைய னாகில்அவன் கவிதை கொள்ளே.' 17

## புரவலன் கவியைக் கோடல்

'கொள்ளும்இடம் விதானித்துத் தொடையல் நாற்றிக்
கொடிகதலி தோரணம்பா லிகைநீர்க் கும்பம்

துள்ளுபொரி விளக்குஒளிர முரசுஇ யம்பத்
தோகையர்பல் லாண்டுஇசைப்ப மறையோர் வாழ்த்த

வெள்ளைமலர்த் துகில்புனைந்து தவிசின் மேவி
வேறும்ஒரு தவிசுஇருத்திச் செய்யுள் கேட்டே

உள்ளம்மகிழ் பொன்புவிபூண் ஆடை மற்றும்
உதவிஏழ் அடிபுலவ னுடன்போய் மீளே.' 18

## புரவலனுக்குக் கேடு

'உடம்படச்செய் யான்செய்யுள் பிறர்பால் கூறில்
உற்றதிரு அவனிடைப்போய் ஒதுங்கும்; அன்றித்

திடம்பெறச்செய் யுள்வரைந்து செம்பூச் சூட்டித்
தெருவுமயா னம்புற்றுக் காளி கோட்டத்து

இடம்தனில்அங்கு அவன்தன்னை நினைந்து சுட்டால்
ஈராறு திங்கள்தனில் இறுதி யாவன்;

தொடர்ந்துசெயாது உளம்நொந்தால் சுற்றத்தோடும்
தொலைவன்இஃது உண்மை, அகத் தியன்தன்
சொல்லே.' 19

## நற்கவியும் தீக்கவியும்

'அகத்தியன்சொல் எழுத்துமுதல் குற்றம் செய்யுட்கு
அடையாமல் தொடைகொண்டால் அடையும் செல்வம்

மகத்துஉயர்நோய் அகலும்; அக லாது சுற்றம்;
வாழ்நாளும் அதிகம்; வழி மரபு நீடும்;

தொகைக்குற்றம் பாட்டுஉறின்செல் வம்போம்; நோயாம்;
சுற்றம்அறும்; மரணம்உறும்; சோரும் காலும்;

சகத்தவர்க்குஈது அன்றியே தேவர்க்கு ஆகில்
தப்பாதுஇப் பலன்கவிதை சாற்றி னார்க்கே.' 20

---

பிற்சேர்க்கை – 2.

# பிரபந்த மரபியல்

## நூற் பெயர்

'வானவர் ஏத்தும் மறையோர் முதலிய
மக்களின் னோர்க்குத் தக்க தன்மையின்
பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறாத்
தொண்ணூற் றாறுஎனும் தொகைய தாம்முற்
பகர்இயல் முன்னுறப் பாடும் பிரபந்த
மரபிய லதுபிர பந்தமர பியலே.' 1

## பிள்ளைக்கவி

'செறிகொலை நீக்கித் தெய்வம் காப்புஎனத்
தொகைஅளவு வரையும் இசைவகுப்பு அகவல்
விருத்தம் தன்னல் வினவுமுறை காப்புச்
சாற்றுசெங் கீரை தால்சப் பாணி
வழங்கும் முத்தம் வாரானை அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் பத்தும்
ஈற்றில்மூன்று ஒழித்து ஏந்திழை யார்தமக்கு
உறுகழங்கு அம்மானை ஊசல் அமைய
மூன்றுமுதல் இருபத் தொன்றனுள் ஒற்றைப்
பெறுமதி கொளலாம் பிள்ளைக் கவியே. 2

## பிள்ளைக்கவியின் செய்யுட்டொகை

இமையவர் வேதியர் இயல்மனர் வைசியர்
சூத்திரர் என்னச் சொற்றஐ வருக்கும்'
முறையே நூறு முதல்அறு பான்வரை
கணிக்கும் பிள்ளைக் கவியின் தொகையே. 3

### கலம்பக உறுப்புக்கள்

ஆர்புயம் தவம்மதங்கு அம்மானை காலம்
குறம்மறம் களிமயக்கு ஊசல் வண்டுஊர்
சித்துஇரங் குதல்சம் பிரதம் தழைபாண்
கைக்கிளை தூதுஇவை கலம்பகக் கூற்றே. 4

### கலம்பக இலக்கணம்

வெண்பாக் கலித்துறை வேண்டுஇவற்று ஒன்றால்
வண்ணம் முன்னுற வருமுதல் உறுப்பு
வினவின் ஒருபோகு வெண்பாக் கலித்துறை
அகவல் விருத்த மாயும்வேறு அகவல்
வெண்பாக் கலித்துறை ஆசிரியம் வஞ்சித்துறை
மருட்பா வெண்டுறை வஞ்சி கலியினம்
இவற்றை அந்தாதித்து இயம்பிய கூற்றால்
கலந்து பாடுவது கலம்பகம் என்ப. 5

### கலம்பகச் செய்யுட்டொகை

நூறு தேவர் தொண்ணூற் றைந்து
பார்ப்பார் அரசர் தொண்ணூறு அமைச்சர்
எழுபஃது ஐம்பான் வைசியர் ஆறைந்து
சூத்திரர் பெறுவரெனச் சொற்றனர் புலவர். 6

### பன்மணி மாலை

அறைந்த கலம்பகத்து அம்மானை ஊசல்
ஒருபோகு என்பன ஒழியச் சிறப்பித்து
அந்தா தித்துநூறு அறைவது பன்மணி
மாலை என்ப மாண்புஉணர்ந் தோரே. 7

### வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி

மன்னிய கலித்துறை வெள்ளை நூறு
அந்தாதித்து அப்பெயர் அந்தாதி ஆகும். 8

### வருக்கக் கோவை

உயிரும் மொழிமுதல் உயிர்மெயும் வருக்கத்து
அடைவில் வருபொருள் துறையில் கலித்துறை
வழுத்தும் இயல்பது வருக்கக் கோவை. 9

### அகப்பொருட் கோவை

தூண்டும் அகப்பொருள் துறைவளர்ந்து அமையக்
கருதிநா னூறு கலித்துறை யாகக்
காதல் அன்புறு காந்தருவ மணத்தில்
கொடிச்சியும் ஊரனும் குலவுநெறி நடப்பது
அகப்பொருட் கோவை ஆம்என மொழிப. 10

### இரட்டைமணி மாலை

கருதும் வெண்பாக் கலித்துறை விரவி
இருபது வழுத்துவது இரட்டைமணி மாலை. 11

### இணைமணி மாலை

வெண்பாத் தொகைமுதல் பாக்கலித் துறைநன்கு
இணைய இயம்புவது இணைமணி மாலை. 12

### மும்மணிக்கோவை

அகவல் வெண்பாக் கலித்துறை என்பன
முப்பது விரவின் மும்மணிக் கோவை. 13

### ஒலி அந்தாதி

வகுப்பின் ஈரெண் வண்ணச் செய்யுளுள்
ஓங்கிய முப்பான் ஒலியந் தாதி. 14

### இருபாஇருபஃது, முலைப்பத்து, நயனப்பத்து

'வெள்ளைமுன் அகவல்பின் விரவ இருபான்
இயம்புவது இருபா இருபஃது ; இணைந்து
மன்னு பயோதரம் அம்பகம் இவற்றை
ஆசிரிய விருத்தம் கலித்துறை ஒன்றின்
ஏற்கவரு ணித்து ஈரைந்து சொல்வது
அப்பெயர்ப் பத்துஎன அறைந்தனர் புலவர்.' 15

### தசாங்கப்பத்து, சின்னப்பூ

'வெள்ளை பத்தில் தசாங்கத்தைப் புகழ்ந்து
பகர்தல் தசாங்கப் பத்தாம் ; அவற்றைத்
தொண்ணூறு எழுபஃது ஐம்பான் வெள்ளையில்
அமைவுற மொழிதல் ஆகும்சின் னப்பூ.' 16

### குடை கோல் நாடு ஊர் சிலை வாள் வேல் பரி யானை விருத்தங்கள்

'எழிற்குடை செங்கோல் நாடுஊர் சிலைவாள்
அணிவேல் பரிதந்தி இவற்றைத் தனியே
அகவல் விருத்தம்ஈ ரைந்தின் மேவ
உரைக்கின் அவ்வவ் விருத்தம் ஆகும்.' 17

### ஊசல்

'ஆசிரிய விருத்தம் கலித்தா ழிசையில்
ஒன்று ஒன்பான் தாழிசை போக்கின்
சுற்றத் தளவில் சொல்லுவது ஊசல்.' 18

### வருக்கமாலை

'மொழிமுதல் உயிர்மெய் வருக்கத்தொகை போற்றி
அகவலால் புகல்வது வருக்க மாலை.' 19

### மும்மணிமாலை, நான்மணிமாலை

'வெண்பாக் கலித்துறை அகவற்பா மூன்று
அந்தா தித்து முப்பஃது இயம்பின்
மும்மணி மாலை ; இம் முப்பதின் மேல்வர
ஆசிரியம் பத்தும் அந்தா தித்து
நவில்வது ஆகும்நான் மணிமா லையே.' 20

### அலங்கார பஞ்சகம்

'ஆதிப்பா கலித்துறை ஆசிரியம் வஞ்சி
மனவிருத் தத்தொடு வண்ணம் இசைய
ஐந்தின் அலங்காரத்து அந்தா தித்துப்
பாடுவது அலங்கார பஞ்சகம் என்ப.' 21

### அட்டமங்கலம்

'விரும்பும் எட்டுமன விருத்தந் தோறும்
தெய்வம் காப்பாய்ச் சிறந்து சுபகரத்து
அந்தாதித்து இயம்பல் அட்டமங் கலமே.' 22

### நவமணிமாலை, ஒருபா ஒருபஃது

'விருத்தம்ஒன்று அந்தாதித்து ஒன்பது வழங்கல்
நவமணி மாலை;ஓர் பாவில்அந் தாதித்து
ஈரைந்தாச் சொல்வது ஒருபா ஒருபதாம்.' 23

### பல்சந்தமாலை

'அகவல் விருத்தம் வகுப்பினால் ஒன்றில்
பத்து முதலா நூறு வரைபல்
சந்தம் மேவர அந்தா தித்துச்
சாற்றுவது பல்சந்த மாலை என்ப.' 24

## ஆற்றுப்படை

'விறலியர் பாணர் கூத்தர் பொருநர்என்று
ஓது நால்வருள் ஒருவரை அகவலால்
அங்கொடு தன்மை ஆற்றுப் படுத்துப்
பகர்வது ஆற்றுப் படையென மொழிப.' 25

## பாதாதிகேசம், கேசாதிபாதம், அங்கமாலை

'பாதாதி கேசம் கேசாதி பாதம்
எண்ணுன்கு உறுப்பும் ஏற்கவரு ணித்துக்
கலிவெண் பாவால் கட்டுரை செய்வது
அவ்வப் பெயரின; அங்க வகையை
விளம்பிய ஒழுங்கின் வெளிவிருத் தத்தால்
வழுத்துவது அங்க மாலை ஆமே.' 26

## மங்கல வள்ளை

'மாசில்குல மகளை வகுப்புவெண் பாவினால்
ஒருபொருள் உரைத்தலாய் ஒன்பது ஒன்பது
ஆகப் பாடின் மங்கல வள்ளை.' 27

## மெய்க்கீர்த்தி வஞ்சி

'வஞ்சிப் பாவில் கிரீட வேந்தர்
மெய்க்கீர்த்தியை வகுத்து மெய்ம்மையின் உள்ள
கீர்த்தியை உரைப்பது மெய்க்கீர்த்தி வஞ்சி.' 28

## புகழ்ச்சி மாலை, நாம மாலை

'குணப்பெயர் அடுக்கிக் கொம்புஅனை யார்க்கு
வஞ்சியின் அகம்மிக மகிழ உரைப்பது
பெருமகிழ்ச்சி மாலை; இப்படி ஆடவர்க்கு
நயந்து பாடுவது நாம மாலை.' 29

### விளக்கம்

நிலம் நீர் தீ வளி விசும்பு என்ற ஐந்தும் கலந்த மயக்கம் உலகம் ஆதலின் உலகப்பொருள்களை உள்ளவாறு அறிதற்கு ஐந்து பூதங்களையும் உணரும் ஆற்றல் வேண்டும்.

நிலத்தின் தன்மை மணம்; அதனை நுகர்வது மூக்கு; நீரின் தன்மை சுவை; அதனை நுகர்வது நா; தீயின் தன்மை ஒளி; அதனை உணர்வன கண்; வளியின் தன்மை ஊறு; அதனை உணர்வது தோல்; வானத்தின் தன்மை ஒலி; அதனை உணர்வன செவி; எனவே மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐம்பொறிகளும் முறையே ஊறு, சுவை, ஒளி, மணம், ஓசை என்பனவற்றை உணர்வனவாம். பொதிகமான உலகைக் கடந்த பொருள்களையும் அறியும் ஆற்றல் உடையது மனம். மனத்தை உடையவனே மனிதன் என்ப.

ஞாபகம் – அறிவான் அறிதல்; ஏது – காரணத்தான் உணர்தல்.

### ஒத்த நூற்பா

முழுதும் – தொல். பொ. 582. பே.

(இந்நூற்பா உரையில் மனஉணர்வு பொறிஉணர்வு இவற்றைப்பற்றிப் பேராசிரியர் விரிவாகக் கூறியுள்ளார்.) 152

## அறுவகை அறிவுபெறும் உயிர்கள்

913. புல்லும் மரனும், முரளும் நந்தும்,
சிதலும் எறும்பும், ஞெண்டும் தும்பியும்
மாவும் மக்களும், மேவும்அவ் வறிவே.

**இது மேற்கூறிய ஓரறிவு முதல் ஆறறிவளவும் உறும் உயிர்கள் இவைஎனத் தொகுத்து உணர்த்துகின்றது.**

இ–ள்: புல்லும் மரனும் ஓரறிவுயிர் எனவும், முரளும் நந்தும் ஈரறிவுயிர் எனவும், சிதலும் எறும்பும் மூவறிவுயிர் எனவும், ஞெண்டும் தும்பியும் நான்கறிவுயிர் எனவும், மாவும் மக்களும் ஐயறிவுயிர் எனவும், அவ்வகை இரண்டில் மக்கள் ஆறறிவுயிர் எனவும் வகுக்கப்படும் என்றவாறு. (153)

## விளக்கம்

புல்லும் மரனும் ஊற்றுணர்ச்சி ஒன்றே உடையன.

நந்தும் முரளும் உணவு உட்கொள்ளும் நாவுணர்வோடு, ஒன்று தாக்கியவழி அறியும் ஊற்றுணர்வும் உடையன.

சிதலும் எறும்பும் உற்றுணர்தல், நாச்சுவை கோடல் இவற்றுடன் நெய் உள்வழி மோந்து அறிதலாகிய மூக்கு உணர்வும் உடையன. இவை ஒன்று தாக்கியவழி அல்லது அறியாமையின் கண்ணுணர்வும், உரப்பியவழி ஓடாமையின் செவி உணர்வும் உடையன அல்ல.

நண்டும் தும்பியும் மெய் உடைமையின் ஊற்றுணர்வும், இரைகோடலின் நா உணர்வும், நாற்றம் கோடலின் மூக்கு உணர்வும், கண்ணுடைமையின் கண்ணுணர்வும் உடையன.

மக்களுள் ஐயறிவுடையார் மாக்கள் எனவும், ஆறறிவுடையோரே மக்கள் எனவும் கூறப்படுப.

முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்கள் எனப்படுப. ஆறு உணர்வினுள் குறைவுபட்டாரைக் குறைந்தவகை அறிந்து அவ்வப்பிறப்பினுள் சேர்த்திக் கொள்ளப்படும். அவை ஊமும் குருடும் செவிடும் போல்வன.

## ஒத்த நூற்பாக்கள்

'புல்லும் மரனும் ஓரறி வினவே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' – தொல். பொ. 583

### கைக்கிளை

'காமம்ஒரு தலையது கைக்கிளை மாலை.' 30

### உலா, இன்ப மடல்

'தேவர் மக்களில் சிறந்தோன் ஒருவனைப்
புரவியும் பாண்டிலும் பொலியப் பவனிவரு
குழமகன் குலம்முத லியஅடை யாளம்
குறிப்பின் கலிவெண் பாவிற் கழறி
அவன்தெரு அணைய ஏழ்பரு வத்துக்
கண்டோர் உவக்கக் கவின்தரு வயதுஏழ்
பேதை; பன்னொன்று பெதும்பை; பன்மூன்று
மங்கை; பத்தொன்பான் மடந்தை; ஐயைந்து
அரிவை; முப்பஃது தெரிவை; நாற்பான்
பேரிளம் பெண்எனும் பெண்முத லானோர்
தொழஉலாப் போந்தது உலா; தலை வன்பேர்க்கு
உற்றதொடை எதுகை ஒன்றில்இன் பத்தை
உயர்த்துஒரு தலையா ஓங்கிய காமத்து
இசைப்பது ஆகும் இன்ப மடலே.' 31

### உலா மடல்

'தருணநன் மானைஓர் தலைவன் கண்டு
உறுப்புநலன் உவந்து உட்குறிப்பு உரைத்தும்
கனவினில் சேர்ந்தும் கரமுற இளையாள்
துணிவன் மடல்எனச் சொல்வது உலாமடல்.' 32

### அநுராகமாலை, தூது

'பாங்கற்குப் புணர்ந்த கனவினைல் தனது
இன்னல்வரு ணித்தல் அநுராக மாலை;
இருதிணை யுடன்அமை இயலை உரைத்துத்
தூதுசொல விடுவது தூது; இவை கலிவெண்
பாவினைல் விரித்துப் பகருவது மரபே.' 33

### மாலை, மஞ்சரி, சதகம் முதலியன

'கருது பொருள்இடம் காலம் தொழிலின்
முப்பான் நாற்பான் எழுபான் தொண்ணூறு
நூறுன் வெண்பாக் கலித்துறையின் ஆதல்
மன்னும்அவ் வெண்ணுன் மாலை மஞ்சரி
காஞ்சி மாலை முல்லைக்கவி சதகமென்று
இயலும் செய்யுட்கு ஏற்ற பெயரே.' 34

### வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, தானை மாலைகள்

'வெட்சி நிரைகொள்ளல்; தவிர்த்தல் கரந்தை;
மாற்றூர் பாற்செலல் வஞ்சி; ஊன்றல்
காஞ்சி; மதிலைக் காத்தல் நொச்சி;
சுற்றல் உழிஞை; தும்பை பொருதல்;
வென்று மிகுபுகழ் விளைத்தல் வாகை;
தானையை விரித்தல் தானை மாலை;
இவைஒன் பதும்,
எப்பாட் டானும் முப்பஃது இயம்பின்
அப்பெயர் வருக்கத்து அவ்வம் மாலை.' 35

### தாரகை மாலை

'தாரகை இருபத் தேழையும் தகைபெற
சொல்லணி வகுப்பில் தூசி அணிதக
வழுத்துதல் தாரகை மாலை என்ப.' 36

### தசபிராதுற்பவம்

'பகர்தசப் பிராதுற் பவம்பத் தான
அரிபிறப்பு ஆசிரிய விருத்தம் பத்தால்
வாழ்கென வாழ்த்துதல் மரபா கும்மே.' 37

### நாழிகை வெண்பா

'ஈசற்கு பண்ணுள் மன்னற்குஎண் ணன்கு
திருந்துநா ழிகையின் சிறப்பைவெண் பாவால்
நவில்வது ஆகும் நாழிகை வெண்பா.' 38

### செருக்கள வஞ்சி, வரலாற்று வஞ்சி, ஆனைத்தொழில்

'செருக்கள வஞ்சி செருக்களம் கூறல்;
வரலாற்று வஞ்சிபல் வரலாறு ஓதல்;
பொருமதக் களிற்றைப் பொருநர் எதிர்கண்டு
ஆடலிற் சேர்த்தல் ஆனைத் தொழில்;இவை
ஆசிரியம் வஞ்சியில் அமைவ வாமே.' 39

### பரணி

'படைபுக்கு ஆயிரம் பகடுஅற ஒன்னர்
போரில் எதிர்ந்து பொரும்அர சனுக்குக்
கடவுள் வாழ்த்து, கடைதிறப்பு, பாலை
நிலம், காளி கோட்டம், நிலையிய கழுது,
காளிக்குப் பேய்சொலல், பேய்க்குக் காளிசொலல்,
அதனல் தலைவன் கீர்த்தியை அருளுதல்,
அவன்செலல், புறப்பொருள் தோன்றஆர்ப் பரித்துப்
போராடல், பொருகளம் விரும்பல் இவற்றை
நாற்சீர் ஆதியின் நண்ணும்ஈ ரடியின்
ஏருது பரணி இயம்புதல் நெறியே.' 40

### பெருங்காப்பியம்

'பெருங்காப் பியநிலை பேசுங் காலைப்
பாடுநெறி வணக்கம் பரவுவாழ்த்து இவற்றினென்று
ஏற்புடைத் தாக முன்வர இயன்று
நாற்பொருள் நயக்கும் நடைநெறித் தாகித்
தன்நிகர் இல்லாத் தலைவன் மலைகடல்

நாடுநகர் பருவம் நீடும் இருசுடர்த்
தோற்றம்என்று இனைய தொகுதியில் புனைந்துபெண்
வேட்டல்முடி கவித்தல் பூம்பொழில் நுகர்தல்
புனலாடல் கள்ளுண்டல் மகிழ்தல் ஊடல்
புதல்வரைப் பெறுதல் கலவியில் களித்தல்
இன்ன செய்கையின் நன்னடைத்து ஆகி
மந்திரம் தூது செலல்போர் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சே தம்எனும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றவர் புனையும் பெற்றியது ஆமே.' 41

## புராணம்

'கூறும் அதில்சில குறைபாடு எனினும்
பெருங்காப் பியத்தின் பிறிதுஎனல் ஆகா
அறம்பொருள் இன்பம்வீடு அவற்றின்மே லாம்அவ்
அறம்முதல் நான்கினும் அல்கப் பெறுவது
காப்பிய புராணமாய்க் கருதப் பெறுமே.' 42

## நூல்பெயர் எய்தும் முறை

'ஆசுஇல் முதல்நூல் பொருளோடு அளவு
தன்மை மிகுதியே செய்வித்தோன் கருத்தன்
இடுகுறி இவற்றால் எய்தும் பெயரே.' 43

## கையறத்துக்கு ஆகாத பா

'கலியும் வஞ்சியும் கையறம் உரைத்தற்கு
ஆகா என்ப அறிந்திசி னோரே.' 44

## வாழ்த்துக்கு உரிய பா

'எவையும்வாழ்த் தினுக்கா மேவும் பாவே' 45

### நான்கு பாவிற்கும் சாதி வரையறை

'வெண்பா முதல்நாற் பாவும்அவ் வவற்றோடு
ஒத்து நடைபெறும் ஒருமூன்று இனமும்
மறையவர் முதல்நால் மரபின்வந் தோர்க்கு
ஆம்மரபு என்ப அறிந்திசி னோரே.' 46

### நான்கு பாவிற்கும் நிலம், நிறம், நாள் – என்பன

'முல்லை குறிஞ்சி மூசு மருதம்
நெய்தல் என்ன எய்தும்நா னிலமும்
திகழும் வெண்மையும் செம்மையும் பொன்மையும்
கருமையும் ஆகக் கருதும்நால் நிறமும்
அறுமீன் கொடுநுகம் அநுடம் அவிட்டம்
என்னும் நான்கும்என்று இன்னவை முறையே
வெண்பா முதலா மேவுநாற் பாவும்
கொள்ளும் மரபாம் குறிக்குங் காலே.' 47

### நான்கு பாவிற்கும் உரிய இராசி

'ஆசிரியம் வஞ்சி கலிவெண் பாஎன்று
இம்முறை யால்வைத்து இயம்புங் காலை
மீனம் கடகம் தேளே என்றும்
சிங்கம் தனுவே மேடம் என்றும்
இடபம் கன்னி மகரம் என்றும்
துலாத்தொடு குடமே மிதுனம் என்றும்
ஒட்டிய ராசிமரபு ஓர்தல் நெறியே.' 48

### நான்கு பாவிற்கும் உரிய கோள்கள்

'மதிகுரு வெள்ளை; செங்கதிர் செவ்வாய்
இன்அகவல்; புகர்வஞ்சி; புந்திசனி கலியே
கோளமை நாற்பாவும் கொள்ளும் மரபே.' 49

## கவிஞன் இலக்கணம்

'பாடுமுறை செய்யுட் பாவின் விகற்பினைத்
தெளிந்துநூற் புலமையுட் செறிந்த அறிவின்
பாட வல்லபா வலன்தரு நலம்குணம்
தெய்வம் கொள்கை மேம்பாட்டு ஒழுக்கம்
செல்வம் மேன்மை உளனாய், உட்புறம்
அழகும் சமயநூல் பிறநூல் அறிந்து
உவக்கும்பிற பாடைநூல் இலக்கண நூலிவை
தேர்ந்து விரைவில் பாடும்நா வினனாய்,
உறுகண் உறுப்பில் குறைவுநோய் இலனாய்,
நாற்பொருள் உணர்ந்து கலைக்கு ஞானியாய்ச்
செப்பும் நான்கும் புலமைத் திறனே.' 50

## கவி

'அவருள்,
ஆசு முதற்பா அவனியில் மெச்சப்
பாஇனம் கொண்டும் பாடுவோன் கவியே.' 51

## கமகன்

'நாட்டிய அரும்பொருள் செம்பொருள் நடையாக்
காட்டி யேவிவ கரிப்போன் கமகன்.' 52

## வாதி

'ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டிய
தன்மையின் நன்கே தன்கோள் நிறீஇ
வாதில் பிறர்கோள் மறுப்பவன் வாதி.' 53

## வாக்கி

'அறம்முதல் நாற்பொருள் பயனும்அத் திறத்தில்
கேட்கவே திறம்படப் பாடுவோன் வாக்கிஎன்று
இசைக்கும் மன்னால் புலமையோன் இயல்பே.' 54

### அரங்கேற்றுவிக்கும் முறை

'செய்யுள் கொளும்இடம் சித்திரத் துகிலின்
ஆத்து விதானித்து அலங்கல் நாற்றித்
தோரணம் கதலி துவசம் உயர்த்திப்
பூரண கும்பம் பொன்முளைப் பாலிகை
வெண்பொரி தீபம் மிளிர்தரச் சமைத்துப்
பல்இயம் இயம்பப் பாவையர் ஆடப்
பாணரும் மகளிரும் பல்லாண்டு இசைதர
அந்தணர் நசைதர வாழ்த்த ஒண்பூ
மலராடை புனைந்துஒரு தவிசின் மேவி
எதிராய் வேறும்ஓர் தவிசில் இருத்தி
மங்கலப் பாடல் ஏற்றுஉளம் மகிழப்
பொன்புவி வத்திரம் பூண்பன பிறவும்
உதவி ஏழடி புலவ னுடன்போய்
மீள்வது கடன்என விளம்பினர் மேலோர்.' 55

### தமிழ் – குலமகள்

'மொழியின் மதுரம் கனிந்த பொருட்கவி
சொல்வாய் யோனி சூதகம் இலக்கியம்
வாய்ந்தநா இலிங்கம் மனம்வாக்கு இழைகள்
கலவி ... ... ... ... வேட்கை
விந்து இலக்கணம் மேவல் நிறுவுதல்
கருப்பம்அக் கவியில் காட்டும்முச் சீரில்
சேர்ந்த எழுத்தே சேயாய் முற்றி
ஓங்கிடு சீ ...... ...... ந்து
சிறந்தமுச் சீரில் பிறந்து வளர்தலால்
தமிழ்குலப் பெண்ணெனச் சாற்றல் தகுமே.' 56

### பெண்ணின் சுற்றத்தார்

'தந்தை புலவன்; தாயவள் தரித்திரம்;
அக்கவிப் பொருளை அணியாய் விரித்து

வசனிக்கக் கேட்போர் மாதவர் ஆவர்;
சந்தப் பொருளைச் சபையினர் உளங்கொளச்
சதிரில் படிப்போன் தமையன் ஆகும்;
பொலிந்த குழுவில் புகழ்ந்து கொள்வோர்
உறவின் முறையர்என்று ஓத லாகும்;
இன்பமுற்று அதனை இனிது கேட்டும்
பரிசு கொடுப்போன் பர்த்தா ஆமே.' 57

## பரிசில் வழங்காதவன் அழிவு

'கொள்ளான் பனுவலைக் கொள்வோன் தனக்குப்
பெயர்முத லவற்றைப் பெயர்த்தும் அழித்தும்
மீட்டுஒரு பேரின் விரைந்துஅதில் சேர்த்தி
மொழிந்த வழுக்களான் முன்மொழி எடுத்து
வைத்துஅவன் இயற்பெயர் தோறும் மாளச்
செய்யுள் பெயர்த்துச் செந்நூல் சுற்றி
அதன்மிசைச் செம்மலர் அணிவுறச் சாற்றிக்
கவர்தெருப் புறத்தும் காளிகோட் டத்தினும்
பாழ்மனை அகத்தும் பழுத்த இரும்பினுல்
ஆங்கவன் தனைநினைந்து அகம்நொந்து சுடினே
ஈராறு திங்களின் இறுதி யாவன்;
இங்ஙனம் இயற்றுது இதயம் நொந்துகொண்டு
இருக்கினும் கிளையொடும் இறுதி யாவன்என்று
ஓதியது அகத்தியர் உண்மைநூல் நெறியே.' 58

## குற்றமற்ற பாடல் கோடலின் பயன்

'எழுத்து முதலிய இலக்கணம் ஐந்தினும்
மங்கலம் முதலாய் வகுத்தமுன் மொழியினும்
சான்றோர் விதித்த தன்மையின் வழுவாது
தொடையின் முறையில் நிற்கக் கேட்கச்

செல்வமும் சீர்த்தியும் சிறக்கும்; வாழ்நாள்
திருமகப் பேற்ளுெடு தருமம் உடைத்தாய்
மனத்துயர் நோயின்றி மரபும் நீடும்.' 59

## குற்றமுடைய பாடல் கோடலின் பயன்

'வழுவுறத் தொடுக்கும் அக்கவி கேட்கின்
செல்வம் அகலும்; தீரா நோய்உறும்;
சுற்றமும் புகழும் சூனிய மாகும்;
கால மிருத்தும் கடுகி வந்திடும்
பாதிப் பயன்கவி சாற்றின வருக்கே.' 60

பிரபந்த மரபியல் முற்றும்.

---

பிற்சேர்க்கை : 3

# பிரபந்த தீபிகை

[சென்ற நூற்றாண்டில் முத்து வேங்கடசுப்பையர் என்பவரால் இயற்றப்பட்ட இந்நூல் வேப்பத்தூர் பி. பாஸ்கர ஐயர் அவர்களால் செந்தமிழில் (1918-19) வெளியிடப்பெற்றது.

பொருள் புலப்படவேண்டிச் சொற்பிரித்து எழுதப்பட்டுள்ளது.]

### தற்சிறப்புப்பாயிரம்

'மதிநாக நதிவேணி யன்சுதனை அஞ்ஞான
மத அந்தகாரதீப
மயமான போதம்அருள் தேசிகக் கடவுள்இரு
மலரடி வழுத்தல் செய்வாம்
பதினாறை ஆறில்பெருக்கு பிரபந்தாதி
பலவகை எடுத்துரைக்கின்
பாரில் வருணம்நாவின் அந்தகன் செவிடு ஊமை
பாஷண்டி அலி உலோபன்
அதிபாலன் அங்கஈனன் முதியரைத் தள்ளி
அருள் உதாரன் குலீனன்
அர்த்தமுளன் விற்பன சலட்சணன் புலவர்தமிழ்
அருமைகண்டு ஈகுவோர்பால்
இதமான பத்துப் பொருத்தமும் இலக்கண
இலக்கியப் பொருள் சிறக்க
இசைபெற உரைப்பென் என் சிற்றறிவினால் சொல்லும்
இன்சொல் தழைக்க என்றே.'

## புலவர் கூறுவன

'ஆசுமதுரம் சித்ரம் வித்தார நாற்கவியின்
ஆனவெண்பா முதலின் இனம்

ஆகிய வினைப்பதம் ஒலிப்பதம் பெயர்வினை
ஆரும் உயர்திணை அஃறிணை

மாசிலா ஒருமைபன்மை தன்மை முன்னிலை
மாட்சி அளபெடை காலமும்

வளம்உறும் உயிர்ச்சந்தி மெய்ச்சந்தி பகுபதம்
வரும் ஆரியம் தேசிகம்

தேசமிகும் வல்இடை மெல்லினம் குறில்நெடில்
சீரான உயிர்மெய்களும்

செப்பு குற்றியலுகரம் ஆதிய குறுக்கம்
சிறந்திடும் தலைவி தலைவன்

பேசரிய நவரதம் விருத்தி பாகம் நீதி
பின்பு பொருளணி அக்கரம்

பிறப்பு வினைமுற்றுப்பெயர் முற்றொடும் அறிந்துவகை
பேசுவர்கள் புலவோர்களே.' 2

## மங்கலப் பொருத்த விளக்கம்

அரியதமிழ் பத்துப் பொருத்தங்களைத் தெரிந்து
அபிதானமாம் பொருத்தம்

அகரம்முதல் நான்கிற்கும் முந்நீரது ஆகுமே;
அஆ இரண்டினுக்கும்

அருமணிகடல் காருடன் பூஎய்துமே
ஆம்; உஊமுதல் ஐந்தினுக்கு

ஆனபொன் நேமியும், ஒகரம்முதல் மூன்றுக்கும்
ஆழி நீர் கார் பொருந்தும்;

தரு க-காவின்சீர், கி-கீக்குஉறும் சீர்வேலை
தானே, கு-கூ-சொல் ஆகும்,

சாரும்மணி கெ-கே-கை, கொ-கோ இரண்டினுக்கும்
சானவியுடன் காரும் ஆம்;

சகரமொடு சகர ஆகாரம் மணிபால்சுதை,
தருவேழமே சி-சீ-க்கு,

சாற்றிய சு-சூமுதல் ஐந்துக்கும் உறும்பூவை,
சாதருபம் சீர் செ-சே;

தெரி ஞ-ஞாவுக்கு அமுதம்ஆழி; த-தாவைத்திருத்
திகிரியே பொருந்தும்,

தி-தீஎனும் சொல்லுக்கு நீரே, து-தூ-ஐந்து
செல்வமும், வேலைத் தொ-தோ;

சீர்மதி ந-நாமுதல் ஆறும்உலகம் எய்துமே,
சீர் நி-நீ ஆதி ஆகும்,

சேருமே நு-நூச்சொல், நெ-நே-நை அமுதம்மணி
சிந்து, நொ-நோ அமுதமாம்;

பரவு ப-முதல்நான்கும் பூதரணிதேர், பு-பூ பார்
பொன்சொல், பெ-பே உறும்

பார்தருவும்; மகரம் முதல் நான்கு பூ, மு-மூ பூ
பாரும்; மெ-மே-மை பிறைஆம்,

பகர் மொ-மோபிறை; ய-யா சீர், யு-யோ புவி;வ-வா
பங்கசைதேர், வி-வீக்குப்

பதுமை, பின்நான்கிற்கும் மதிஅணி, எனத்தேர்ந்து
பாவலர்கள் உரைசெய்வரே.' 3

## பிரபந்த வகைகள்

'சாதகம் பிள்ளைக்கவி பரணி கோவை அர
சன் விருத்தம் தொகைநிலை

சாரும் ஐந்திணை எண்தரும் செய்யுள் அங்கமொடு
தாணை அநுராகம் நாமம்

தாரகை இரட்டைமணி பன்மணி புகழ்ச்சி பல
சந்தம் மெய்க்கீர்த்தி காப்பு

தண்டகம் தும்பை இணைமணி வேனில் மும்மணி வ
சந்தம் உற்பவம் நான்மணி

நவமணி வீர வெட்சி யுடனே வாகை
ஊழிஞை மணி நொச்சி காஞ்சி

உயர்வருக்கம் பெருமகிழ்ச்சி நூறொடு பதிற்று
ஒலியல் அந்தாதி தூதோடு

உலவு அலங்கார பஞ்சகமும் வாயுறைவாழ்த்து
உலா வளமடல் கைக்கிளை

ஊர் பெயர் கொள் நேரிசையோடு இன்னிசை குறத்தியொடு
உழத்திப் பாட்டுக் குழமகன்

பாதாதிகேச வரலாற்றுச் செருக்களம்
படு வஞ்சி பெருமங்கலம்

பதிகமும் செவியறிவுறூஉவொடு ஊர் கடிகை எண்
பா அட்டமங்கலமும் நாற்

பது சதகம் எழுகூற்றிருக்கை சின்னப்பூ ஒரு
பாஒருபது இருபாஇரு

பது தசாங்கப்பத்து நயனம் பயோதரப்
பத்து தசாங்கத் தயல்

காதும் ஆற்றுப்படை விருத்தலக்கணம் ஊசல்
காப்பியம்இரண்டு பவனி

காதல் வாதோரணம் வெற்றிக்கரந்தை மஞ்சரி
கலம்பகம் விளக்கு

கண்படை புறம்கையறு துயிலெடை கடையெனும்
கருதுநிலை ஆறொடும் முது

காஞ்சி மங்கலவெள்ளை தாண்டகம் இரண்டொடு
கண்ட புறனிலை வாழ்த்துக்களே.' 4

**சாதகம், பிள்ளைக்கவி**

'ஆதியின் இலக்கணக் கடல்எனும் பலநூல்கள்
ஆராய்ந்து உணர்ந்த அதனை
ஆசிரி யம்எனும் விருத்தத்தி னற்கூறுதும்:
அலகுறு சகாப்தம் ஆண்டு

தேதிஉடு ஓரை திங்களும் சாதகன்
திசை சித்ரம் அலங்காரமும்
திரமான கிரகநிலை அறிந்துசொல் **சாதகம்;**[1]
செப்பு **பிள்ளைக்கவிக்கு**[2]

மாதம்இரு திங்களில் காப்பு, ஐந்து செங்கீரை,
மாதம் ஏழில் தாலமாம்,
வரைநவம் சப்பாணி, முத்தமோ பன்னொன்று,
வாரானை சம்வற்சரம்,

ஓது ஒன்றரை வருடம் இந்துஇரண்டினில் சிற்றில்,
ஒலிபறை முழக்கல் மூன்றில்,
ஊர்இரதம் நாலில் ஆண்பால்; கழங்கு அம்மானை
ஊசல் பெண்பாலதாமே.'

**பரணி**

'வெம்போர் முகத்துஆயிரம் யானையைக் கொன்ற
வீரனைத் தலைவ னாக
வேண்டிப் புகழ்ந்துபின் கடவுளரை வாழ்த்தலும்
மேல் இளைஞர் கடைதிறப்பு

வண்பாலையில் காளிகோயிலில் காளிதான்
வன்பேய்களோடு ஆடியும்
மற்றும்ஒரு கூளிப்பேய் சொல்கருது தலைவனுன்
மாறாத கீர்த்தி பொங்கப்

பண்பாய வன்வழிப் பிறர்பொருள்கள் தோன்ற உ
பாயமாம் சமரம் விரும்

பலும் அவன் வெற்றியைக் கருதி இருசீரடிப்
பாவும் முச்சீரடியும் இற்

செம்பாகமாக நாற்சீர் முதல் அமைந்திடச்
சீர்உற்ற அடி இரண்டாய்ச்

செப்பு பஃறொழிசையி னோர்கவிதையாய்ச்
செப்பிடின் **பரணி** யாமே.'[3] 6

## கலம்பகம், வருக்கக்கோவை, மும்மணிக்கோவை

'அரிய ஒருபோகு வெண்பாக் கலித்துறையும்
அன்பாய்க் கலி உறுப்பினாலே

அம்புய வகுப்பு மதங்கம் மறமும் காலம்
அம்மானை கார்குறம் பாண்

ஆடும் ஊசல் தவம் சம்பிரதம் வண்டு களி
அலர்தழை தூது இரங்கல்

ஆன கைக்கிளை சித்து என்று வகை ஈரொன்பது
ஆம் உறுப்புக்கள் இயைய

வருமருட்பா கலிப்பா கலிவிருத்தம்
மடக்குக் கலித்தாழிசை

மன்னும் ஆசிரிய விருத்தம் ஆசிரியமும்
வஞ்சித்துறை வெண்டுறை

வஞ்சிச்செயுள் வஞ்சியாம் வஞ்சியாம் விருத்தங்களும் இ
வற்றுளும் இடையிடையினின்

மருவுவெண்பாக் கலித்துறை விரவி அந்தாதி
வரன்முறை தொடையதாக

உரியதேவர்க்கு நூறு அந்தணர்க்குத் தொண்ணூறு
உடன்ஐந்தும் அரசருக்கே

உற்றிடும் தொண்ணூறு வணிகருக்கு ஐம்பான்
உரைசதுர்த்தருக்கு முப்பான்

ஓதுவர் **கலம்பகத்துக்கு**[4] உரியதாம்; அகரம்முதல்
உறும் எழுத்துக்கள் தம்மில்

உயிர்முதல் மொழிக்கு உரிய அக்கரத்து ஆதியாய்
உயர்காரிகைத் துறையினல்

நெறிசுரிக்குழல் மாதர் காட்சிமுதலாய்க் கூறின்
நிலை **வருக்கக் கோவை**[5] யாம்;

நேரும் ஆசிரியமும் வெண்பாவும் நேரசை
நிரையசை எழுத்தும் எண்ணி

நீள்கலித்துறையுடன் முப்பது அந்தாதியின்
நெறிபெறத் தொடையதாக

நிலைபெற உரைப்பதே **மும்மணிக் கோவை**[6]யாய்
நீள்நிலத்து உரைசெய்வரே.' 7

## அகப்பொருட் கோவை, ஐந்திணைச் செய்யுள்

இருவகைப் பட்டமுற்பொருளுடன் பன்னன்கு
எனும்கருப் பொருள்களோடு

ஈரைந்து உரிப்பொருள் பொருந்து கைக்கிளை ஆதி
இயைவுற்ற அன்புடைத்தாய்ப்

பெருகுகாமப் பகுதியாம்கள வொழுக்கமும்
பெண்கற்பு ஒழுக்கத்தினும்

பேதம்அன்றிக் கட்டளைக் கலித்துறையினைப்
பெறும்ஓர் நானூற்றால்திணை

உரியகைக்கிளை முதல்துறை இறுதியாமொழி
யுற்றஈராறு அகப்பாட்டு

உறுப்பும் வழுவின்றிச் சிறப்புடன் ஓதலும்
உறும் **அகப்பொருட்கோவை**[7] யாம்;

வருபுணர்தல்முதல் ஐந்து உரிப்பொருள்பிரகாசிக்க
வரைஆதியை ஐந்திணை

வகுத்துச் சிறப்பித்தல் **ஐந்திணைச்செய்யுள்**[8] வெள்ளை
வஞ்சிகலிவணம் அகவலே.' 8

**அங்கமாலை, அட்டமங்கலம், அநுராகமாலை**

'மேவும் ஆண்மகனுடன் பெண்மகளுக்கு உரியதாய்
வெண்பாவினு லாயினும்

வெளிவிருத்தத்தி னலாயினும் வழுவற
விளம்புபாதாதி கேசம்

ஆவதாய்க் கேசாதிபாதம்வரை தொடர்புற
அரற்றுவது **அங்கமாலை**;[9]

அரிய கடவுளர்மீது பாடிஅக் கடவுளே
அனுதினம் காக்கஎனவும்

தாவில் ஆசிரியவிருத்தம் எட்டுஅந்தாதி சாற்று
**அட்டமங்கலம்**[10] தான்;

தலைவன் ஒருமங்கையைக் கனவில்கண்டு மால்
தரும்அவட்கு இனிமைஉறவே

காவில் புணர்ந்ததைத் தன்உயிர்ப் பாங்கனைக்
கருதியே நேரிசைஎனும்

கலிவெண்பாவால் கூறல் **அநுராகமாலை**[11] யாய்க்
கவிஞர்கள் உரைப்பார்களே.' 9

### இணைமணிமாலை, இரட்டைமணிமாலை

'வெண்பாக் கலித்துறையும் இருபது அந்தாதியாய்
மேவுதொடையாய் வருவதின்
மிக்க ஆசிரிய விருத்தம் ஒருபத்துநேர்
வெண்பாவும் ஒருபத்துடன்
பண்பாய் உரைப்பது **இரட்டைமணிமாலை**[12] யாம்;
பாடுறும் முறைமையினால்வெண்
பாவும் அகவலும் வெள்ளையும் கலித்துறையுடன்
பகுத்தே இரண்டிரண்டாய்
நண்பாய் இணைத்து வெண்பா அகவல் மணிமாலை
நவிலும் எழில்வெண்பாவுடன்
நற்கலித்துறை இணைமணிமாலை என்னவே
நவில்நூறு நூறதாக
எண்பா வலர்க்கு இயைவுறும் சிறப்பாகவும்
எய்தும் அந்தாதியால் சொற்கு
இயைந்த தொடையோ நாலதாகவும் பண்புடன்
இயம்பல் **இணைமணிமாலையே**.'[13]

### நவமணிமாலை, நான்மணிமாலை
### நாமமாலை, பல்சந்தமாலை

'பகரும் வெண்பாமுதல் வேறுபடு பாவும் அப்
பா இனமதாய் ஒன்பதாய்ப்
பண்புபொருள் உறுசெய்யுள் அந்தாதி யாகவே
பாடல் **நவமணி மாலை**[14] யாம்;
நிகரில் வெண்பா கலித்துறை விருத்தம் அகவல்
நேரும் அந்தாதித்தொடை
நிலைபெறவே எண்ணைந்து செய்யுளாய்ச் சீருற
நிகழ்த்தல் **நான்மணிமாலை**[15] யாம்;

அகவல்அடியும் கலியின்அடி மயங்கிய வஞ்சி
ஆனஅப் பாவினாலே

ஆண்மகனையே புகழ்ந்தே கருத்தளவினில்
அரற்றுவது **நாமமாலை;**[16]

மகிழ்வுறும் செய்யுள் பப்பத்தாக ஒவ்வொரு
வகைக்கும் ஓர் சந்தமாகி

வரநூறு செய்யுளாய்ச் சொல்வதே **பல்சந்த
மாலை**[17] யாய்ச் சொல்வார்களே.' 11

**பன்மணிமாலை-கலம்பகமாலை, மணிமாலை,
புகழ்ச்சிமாலை, வருக்கமாலை, பெருமகிழ்ச்சிமாலை**

'அலகுறு கலம்பகத்துள் வரும் ஒருபோகு
அம்மானை ஊசல் மூன்றும்

அன்றிமேற் சொல்லிய உறுப்புஅமைத்து அவ்வாறு
அரற்றல் **பன்மணிமாலை**[18] யாம்;

சொல அரியதுவே **கலம்பகமாலை**[19] ஆகுமே;
சொல்லும்எப் பொருளின்மேலும்

தூய வெண்பா இருபஃது நாற்பது கலித்
துறைவிரவின் **மணிமாலை**[20] யாம்;

சிலஅகவல் அடியுடன் கலிஅடிமயங்கி வஞ்
சிப்பாவினால் மாதர்கள்

சீர்மையைக் கூறல் **புகழ்ச்சியின்மாலை**[21] யாம்;
செப்பும் மொழிக்கு முதலாம்

பெலம்மிகும் வருக்கத்து எழுத்திற்கு ஒவ்வோர்செயுள்
பேசுவது **வர்க்கமாலை;**[22]

பெறுதலைவி அழகுகுணம் ஆக்கம்சிறப்பு ஓதல்
**பெருமகிழ்ச்சியின் மாலையே.'**[23] 12

**மெய்க்கீர்த்திமாலை, காப்புமாலை, வேனில்மாலை, வசந்தமாலை, வெகுவகுப்பு, தாரகைமாலை, உற்பவமாலை**

'மருவு சொற்சீரடி என்னும் கட்டுரைச் செய்யுள்
மரபுவழியிற் செய்திடும்

மற்புயன் கீர்த்தியை விரித்து எடுத்து ஓதலே
வளரும் **மெய்க்கீர்த்திமாலை;**[24]

அரிய தெய்வம் காத்தலாக மூன்றுஐந்து ஏழின்
அறைசெய்யுள் **காப்புமாலை;**[25]

அருவேனில் முதுவேனிலைச் சிறப்பித்து ஓதல்
ஆகுமே **வேனில்மாலை;**[26]

விரவு இளங்தென்றலை வருணித்து உரைப்பதே
மேலாம் **வசந்தமாலை;**[27]

வெகுதூசியின் படையின் அணியைப் புகழ்ந்திடும்
**வெகுவகுப்பாம்;**[28] முறையின்

உரைஅருந்ததிக் கற்பின் மாதர்கள் குணங்களை
ஓதல் **தாரகைமாலை**[29] யாம்;

உயர்மால் பிறப்பு ஆசிரிய விருத்தத்தால்
உரைத்தல் **உற்பவமாலை**[30] யே.' 13

**தானைமாலை, மும்மணிமாலை, தண்டகமாலை, வீரவெட்சிமாலை**

அகவலின் ஓசை பிறழாத ஆசிரியமாய்
அதன்முனர் எடுத்துச்செலும்

ஆடிய கொடிப்படையினைப் புகழ்ந்து உரைசெய்வது
ஆகுமே **தானைமாலை;**[31]

'நந்தும் முரளும் ஈரறி வினவே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' – தொல். பொ. 584

'சிதலும் எறும்பும் மூவறி வினவே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' „ 585

'நண்டும் தும்பியும் நான்கறி வினவே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' „ 586

'மாவும் மாக்களும் ஐயறி வினவே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' „ 587

'மக்கள் தாமே ஆறறி வுயிரே;
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.' „ 588

153

## புறனடை

**914. அக்கிளைப் பிறப்பும்அவ் வறிவுறும் என்ப.**

**இது மேலனவற்றிற்கு ஒருபுறனடை கூறுகின்றது.**

**இ–ள்: மேற்கூறிய அறுவகை அறிவுறும் உயிர்கட்கு உரிய கிளையும் பிறப்பும் அவ்வவ்வறிவுபெறும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. (154)**

### விளக்கம்

**ஓரறிவு :**

*கிளை – புதலும் கொடியும் போல்வன.*

*பிறப்பு – மக்கட்குழவியும் விலங்கின் குழவியும் ஓரறிவின வாகிய பருவமும், என்பில் புழுவும் முதலியன.*

**ஈரறிவு :**

*கிளை – கிளிஞ்சிலும் முற்றிலும் முதலாகிய கடல்வாழ் சாதியும் பிறவும்.*

*பிறப்பு – மக்கட் குழவியும் விலங்கின் குழவியும் ஈரறிவாகிய பருவம்.*

**மூவறிவு :**

*கிளை* – ஈயல் மூதாய் போல்வன.

*பிறப்பு* – மக்கட் குழவியும் விலங்கின் குழவியும் மூவறிவின வாகிய பருவம்.

**நாலறிவு :**

*கிளை* – வண்டு தேனீ குளவி முதலாயின.

*பிறப்பு* – மக்கட்குழவியும் விலங்கின் குழவியும் நான்கறிவின வாகிய பருவம்.

**ஐயறிவு :**

*கிளை* – எண்கால் வருடையும் குரங்கும் போல்வன.

*பிறப்பு* – கிளியும் பாம்பும் முதலாயின.

**ஆறறிவு :**

*கிளை* – தேவர் தானவர் முதலாயினர்.

*பிறப்பு* – குரங்கு முதலியவற்றில் சென்ற பிறப்பின் நல்வினை-யான் மன உணர்வுடையன.

'விரிகாஞ்சித் தாதாடி இனக்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பன்மன் மறைக்கினும்
கரி பொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
எரிபொத்தி என் நெஞ்சம் சுடுமாயின் எவன்செய்கோ.'

– *கலி. 34*

என்பதனால் மரம் ஓரறிவுயிரேனும் பாவத்துக்கு அஞ்சும் என்பதும் கொள்க.

'தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்.' – *அகநா. 4*

என்பதனால் வண்டின் ஒரு சாரனவற்றிற்குச் செவியறிவும் உண்டு என்பது கொள்க. 154

பகரும் வெண்பா கலித்துறை அகவல் முப்பதும்
பன்னுதொடை அந்தாதியாய்ப்

பாடல் **மும்மணிமாலை;**[32] வெண்பா முந்நூறுகவி
பாடல் **தண்டகமாலையாம்;**[33]

மிகுசுத்த வீரன் மாற்றூர் புரம்சென்று பசு
வேட்டுநிரை கவருதற்கு

வெட்சியின் மாலைசூடிய வண்ணம் ஏகியே
மீட்டு ஆவின்நிரை கவர்ந்தே

இகல்துறந்து ஊர்வரும் தலைவன்மேல் பாவினுக்கு
இயைதசாங்கம் பொருந்த

இசைவெற்றியைக் கருதியே பாட அது வீரம்
எனும் **வெட்சிமாலை**[34] யாமே.' 14

**வெட்சிக்கரந்தை மஞ்சரி, வஞ்சிமாலை,**
**போர்க்கெழுவஞ்சி, வரலாற்றுவஞ்சி,**
**எண்செய்யுள்**

'மாற்றலர்கள் கொண்டநிரை மீட்போர் கரந்தைப்பூ
மாலைசூடிப் போகி மீள்

வகையினை விரித்தோதல் **வெற்றிக் கரந்தையின்**
**மஞ்சரி**[35] எனக்கூறுவர்;

வேற்றுமைப் பகைவர்மேல் போர்குறித்து ஏகுவது
வேந்தர்பூ **வஞ்சிமாலை;**[36]

வேய்ந்துஎழு படைச்சிறப்பு ஆசிரிய வகையினால்
விள்ளல் **போர்க்கெழுவஞ்சி**[37] யாம்;

பார்த்துநற் குலமுறை பிறப்புமேம் பாட்டுடன்
பலசிறப்பாம் கீர்த்தியும்

பதிய வஞ்சிப்பாவினால் தொகுத்தே புலவர்
புகரின் **வரலாற்றுவஞ்சி;**[38]

ஏத்திடும் பாட்டுடைத் தலைவன் ஊர்ப்பெயரினை
எடுத்தும் எண்ணால் பெயர்பெற
ஈரைந்து கவிமுதல் ஆயிரம்வரை சொல்லல்
**எண்செய்யுள்**[39] ஆகும்அன்றே.' 15

### செருக்களவஞ்சி, காஞ்சிமாலை, நொச்சிமாலை

'சமரத்தில் அறுபட்ட மனிதன்உடல் பரிஉடல்
தந்தி உடலங்கள்தனையும்
தசைஇரத்தம் கூளிபேய் பிசாசம் கழுகு
சம்புநாய் காகம்முதலா
எமதுஎமது எனத்தின்னும் ஆரவாரத்து
எக்களித்திருக்கப் பூதமும்
இடைபாடி ஆடி இங்ஙனம் அருந்தச் சிறப்பு
எய்திட உரைப்பதுவே
அமர் **செருக்களவஞ்சி**[40] ஆகும்; பறந்தலை
அணிசிறப்புச் செய்யுளாம்
அலர்காஞ்சி மாலைசூடிப் பகைவர் ஊர்ப்புறத்து
அதின்ஊன்றல் **காஞ்சிமாலை**[41];
கமையாய்ப் புறத்தகத்து ஊன்றிவலி பேசிடும்
கள்ளர்கள் கோடல்இன்றிக்
கந்தநொச்சியின் மாலைசூடித் தன்மதில் காத்தல்
கழறல் **நொச்சியின் மாலையே.'**[42] 16

### உழிஞைமாலை, தும்பைமாலை, வாகைமாலை, வாதோரண மஞ்சரி

'மருவலர்கள் ஊர்ப்புறம் சூழவே உழிஞைப்பூ
மாலைசூடித் தானையான்
மதியினை ஊர்வளைந்தாலென வளைப்பதை
வழுத்தலே **உழிஞைமாலை**[43];

பொருது மாற்றலரோடு தும்பைமாலிகை வேய்ந்து
பொருதுவது **தும்பைமாலை**[44];

பொருபகையை வென்ற வாகைமாலை அணிவதைப்
புகல்வது ஆசிரிய கவியா

வரும் **வாகைமாலை**யாம்[45]; கொலைபுரி களிற்றினை
மடக்கினவருக்கும் எதிரா

அடர்புரி களிற்றைச் சிதைத்தடக்கினவர்க்கும்
அமைதல்விட்டு ஓடுகளிற்றை

உரமுடன் பற்றிப்பிடித்து அடக்கினவருக்கும்
உறும் வீரமும் சிறப்பும்

ஓது வஞ்சிப்பாவினுல் சொல் **வாதோரணத்து**
**உலவுமஞ்சரி**[46] ஆகுமே. 17

## தொகைச் செய்யுள், ஒலி அந்தாதி

'நெடிலடிச் செய்யுள் தொகுத்தது நெடுந்தொகையும்
நேர்குறில் அடிச்செய்யுளால்

நிரவித் தொகுத்தது குறுந்தொகை கலிப்பாவின்
நேர்தொகுந் தொகையுமாய்

முடிவதே போல்வன **தொகைச்செய்யுளாம்**[47];
முறையின் ஈரெண் கலையையும்

முடியஓர் அடியதாய் இங்ஙனம் நாலடியின்
முடிதல் எண்ணெண் கலையதாம்

அடிகள்பல சந்தமாய் வண்ணமும் கலைவைப்பும்
அந்தாதி தவறாமலே

அலகு முப்பதுசெய்யுள் பாடுவதும் சிறுபான்மை
ஆகும் எட்டுக் கலையெனும்

தொடர்வுறும் அன்றி வெண்பா அகவலும் கலித்
துறையான இம்மூன்றையும்

சோர்வில் பப்பத்தாக அந்தாதி யாகவும்
சொல் **ஒலியல்அந்தாதி**[48]யே. 18

## பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, உலா

'பத்துவெண்பா கலித்துறை பத்துடன் பொருள்
பற்றிடும் தன்மை தோன்றப்
பலசிறப்புற்ற அந்தாதியாய்ப் பாடுவது
பண் **பதிற்றந்தாதி**[49] யாம்;

வெற்றிவெண்பா நூறினுலும் கலித்துறையின்
வீறுறும் நூறினுலும்
வினவி அந்தாதித்துரைத்தல் **நூற்றந்தாதி**[50];
மிக்க இளமைப் பருவமாய்

உற்ற தலைமகனைப் பிறப்பும் பரம்பரையில்
உறும்குலம் இன்னுன் என்பதாய்
உயர்தலைமையாய் மாதர் புடைசூழவே பருவம்
உளபெண்கள் கண்டு தொழவே

மத்தகயம் மீதும் பரிசிவிகைமீதும் பவனி
வருதலைவனைத் துதித்து
மாண் நேரிசைக்கலியின் வெண்பாவினுற் கூறல்
வரும்**உலா**[51] ஆகும்அன்றே. 19

## உலாமடல், வளமடல், கைக்கிளை

'கனவின்ஒரு மாதினைக் கண்டணைந்து இன்பம்
கலந்து பின்விழித்து மாதைக்
காணுமல் அவள்பொருட்டாக மடல் ஊர்வதைக்
கலிவெள்ளையால் அரற்றல்

இனை **உலாமட**[52]லாம்; அறம்பொருள் இன்பங்கள்
இம்மூன்றும் கூறுபயன்
எள்ளி மங்கையர் திறத்துஉறும் காமஇன்பமதை
யே பயன்கொண்டே தலை 20

வனை இயற்பேரினைத் தக்கதே எதுகையாய்
வரநாட்டியும் தனிச்சொல்

மறுத்து இன்னிசைக் கலியின்வெண்பாவினுல் தலை
மகன் இரந்தே குறைபெருது

அனைவர் அறிமடல் ஊர்வதென்ன ஈரடிஎதுகை
ஆகவே அறை **வளமடல்**[53];

ஐவிருத்தம் வெள்ளைப்பாவினில் **கைக்கிளை**[54]க்கு
அறை ஒருதலைக் காமமே.

## ஒருபா ஒருபஃது, இருபா இருபஃது, ஆற்றுப்படை, புறனிலை

'கலித்துறையினுலும் நேர்வெண்பாவினுல் அ
கவலாயினும் ஒவ்வொன்றினைக்

கணித்துஒன்று பப்பத்தின் அந்தாதியாகவே
கழறும் **ஒருபா ஒருபஃது**[55];

ஒலி அகவல்பத்து வெண்பாப்பத்தும் அந்தாதி
உற்றதொடை இருபான் நினைந்து

ஓதும் **இருபாஇருபஃது**[56] ஆகும்; அகவலால்
உயர்விறலி பாணர்கூத்தர்

பலபொருநர் இந்நால்வரில் ஒருவர் பரிசுஉதவு
பரிசினுக்கு ஏகுவாரைப்

பரிசுஉற்று வருவோர்கள் ஆற்றினிடையே கண்டு
பரிசுஉதவு தலைவன் கொடை

நிலைகீர்த்தி கொற்றமும் சாற்றல் **ஆற்றுப்படை**[57];
நீவணங்கு தெய்வமே

நினைப்பாதுகாப்ப நின்வழிவழியும் மிகுவதாய்
நிகழ்த்தல் **புறனிலை**[58] ஆகுமே.

## கண்படைநிலை, துயில்எடைநிலை, பெயர்இன்னிசை, ஊர்இன்னிசை

'வேந்தரும் வேந்தரைப் போல்வாரும் அவையின்கண்
மிகநெடிது வைகியவழி
விறல் மருத்துவர் அமைச்சரும் முதலியோர்க்கு
விழி துயில்கொளும் இடமதைச்

சார்ந்து கருதிக்கூறல் **கண்படைநிலை**[59] யதாம்;
தன்வலியினால் பாசறை
தனில்ஒரு மனக்கவலை யின்றித் துயின்ற அர
சர்க்கு நற்புகழ்கொடுத்தல்

நேர்ந்து கருதிய தூதர் துயிலெடுப்புதலாய்
நிகழ்த்தல் **துயிலெடைநிலை**[60] யதாம்;
நிலைப்பாட்டுடைத்தலைவன் நாமமது சார இன்
னிசைவெள்ளை தொண்ணூறேனும்

சேர்ந்த எழுபதேனும் அல்லது ஐம்பதேனும்
சிறக்கஉரை **பெயர்இன்னிசை**[61];
செம்பாட்டுடைத்தலைவன் உரைமுன் செய்யுள்தொகை
செப்பல் **ஊர்இன்னிசை**[62] யதே. 22

## பெயர்நேரிசை, ஊர்நேரிசை, ஊர்வெண்பா, விளக்குநிலை, நயனப்பத்து, பரோதரப்பத்து

'பாட்டுடைத் தலைவனொடு பெயர்சார நேரிசைவெண்
பாவினால் தொண்ணூறும்
பத்தேழேனும் ஐம்பதேனும் சிறப்புடன்
பாடுவது **பெயர்நேரிசை**[63];

மீட்டும் அத்தலைவன்ஊர் சாரமுன் தொகைதொடை
விளம்பல் **ஊர்நேரிசை**[64] யதாம்;
வெண்பாவினால் ஊர்சிறக்க ஈரைந்துசெய்யுள்
விள்ளும் **ஊர்வெண்பா**[65] வதாம்;

ஊட்டுதசை புட்குதவு வேலும் அவ்வேல்தலையும்
ஒன்றாக ஓங்குவதுபோல்

ஊன்று கோலொடு விளக்கு ஒன்றுபட்டு ஓங்குமாறு
ஓங்குதல் **விளக்குநிலை**[66] யாம்;

நாட்டந்தனைத் தசச்செய்யுளால் கூறல்**நய**
**னப்பத்து**[67] எனப்புகலுவார்;

நனிமுலையைத் தசச்செய்யுளால் கூறுவது
நற் **பயோதரப்பத்து**[68] இதே. 23

**அரசன் விருத்தம், தசாங்கத்தயல், பாதாதி கேசம், கேசாதி பாதம், அலங்கார பஞ்சகம்**

'பத்துக் கலித்துறையும் முப்பது விருத்தமும்
பகர்கலித் தாழிசையுமாய்ப்

பகர்நாடு மலைகடல் நிலவருணனை நீடு
பரவுதோள் வாள்மங்கலம்

பெற்றிடப் பாடி முடிவேந்தர்க்கு உரைப்பதாய்ப்
பேசல் **அரசன் விருத்தம்**[69];

பெறும்மன் பல்அங்கத்தை ஆசிரியம் ஈரேழு
பேசல் **தசாங்கத்தயல்**[70];

உற்றஅடி முடிவரை கலியின் வெண்பாவினால்
ஓதல் **பாதாதிகேசம்**[71];

ஒளிரும்முடி அடிவரை கலியின் வெண்பாவால்
உரைத்தல் **கேசாதிபாதம்**[72];

அத்தகு ஆசிரிய விருத்தம் கலித்துறை
அகவல் சந்தவிருத்தமும்

ஆம்வெள்ளையும் மாறி அந்தாதி செயும்நூறு
**அலங்கார பஞ்சகம்**[73]மே. 24

## கடைநிலை, கையறுநிலை, தசாங்கப்பத்து

'தவமுனிவர் சேணிடை வருதலால் பிறர்வருத்
தம் தீர வாயில்காப்போய்
தலைவற்கு என்வரவு இசைஎனக் கடைக்கண் நின்று
சாற்று எனச்சொல் **கடைநிலை**[74];

அவனியில் கணவனோடு இல்லாள் கழிந்துழி
அவர் சுடப்பட்ட அழிவின்
அப்பொருள்எலாம் பிறர்க்கு அறிவுறுத்தித் தானும்
அப்போது இறந்தேபடா

தெவர்தாம் ஒழிந்த ஆயத்தார்களும் பரி
சில் பெறும் விறலியோரும்
செயல்தணிப்படர் உழந்திடு செயலின் அறுநிலை
செப்பிடும் **கையறுநிலை**[75];

பவனம்உறும் அரசனுக்கு ஒத்திடு தசாங்கமும்
பாடு நேரிசைவெள்ளையால்
பத்துச்செய்யுள் கூறலதுவே **தசாங்கம் உறு
பத்து**[76] என உரைப்பார்களே.

## பதிகம், குழமகன், மங்கலவள்ளை, நாற்பது

ஒருபொருள் தனைக்குறித்துப் பகர்செய்யுள் **பதிகம்**[77];
ஓதல் கலிவெண்பாவினால்
உயர்பெண்கள் தம்கையில் கண்ட இளமைத்தன்மை
உடைய குழமகனைப் புகழ்ந்து

ஓதல் **குழமகன்** [78] ஆகும்; உயர்குலப்பெண்ணினை
ஒன்பது வகுப்பின் வெண்பா
ஒன்பது செய்யுள் செய்வதாகும் **மங்கலவள்ளை**;[79]
உற்றிடும் காலம் இடமும்
பொருளும் ஆகிய இவற்றுள்ளின் ஒவ்வொன்றினைப்
பொருந்தி நாற்பது வெள்ளையால்
புகல்வதே **நாற்பது** [80] ஆகும்; ஆண்பாலுள் மாதர்பால்
போதும் அவரவர் காதலை......... 26

[ இப்பாடலின் ஈற்றடியும் எஞ்சிய பாடல்களும் அகப்பட்டில. இப்பாடல்களில் 80 பிரபந்தங்களின் இலக்கணங்களே சுட்டப்பட்டுள்ளன. எஞ்சிய பாடல்கள் இன்னும் 4 இருந்திருக்கலாம். இவையும் இருந் திருப்பின் 80 பாடல்களைக்கொண்ட இந்நூல் 96 வகைப் பிரபந்த இலக்கணமும் எஞ்சாது கூறியிருக்கும். ]

பிற்சேர்க்கை 4

# சதுரகராதி

[ 18ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் இயற்றியது
இந்நூல் குறிப்பிடும் 96 வகைப் பிரபந்தங்கள் ]

**1. அகப்பொருட்கோவை :**

இருவகைப்பட்ட முதற்பொருளும் பதினான்கு வகைப்பட்ட கருப்பொருளும் பத்து வகைப்பட்ட உரிப்பொருளும் பொருந்தி, கைக்கிளை முதலுற்ற அன்புடைக்காமப் பகுதியவாம் களவொழுக்கத்திணையும் கற்பொழுக்கத்திணையும் கூறுதலை எல்லையாக, கட்டளைக்கலித்துறை நானூற்றால், திணை முதலாகத் துறை ஈறாகக் கூறப்பட்ட பன்னிரண்டு அகப்பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப் பாடுவது. இது வெண்பா, அகவல், கலி, வஞ்சி, வண்ணம் இவற்றானும் வழங்கப்படும்.

**2. அங்கமாலை :**

ஆண் மகனுக்கும் பெண் மகளுக்கும் மிக்கனவாக எடுத்துக் கூறும் அவயவங்களை வெண்பாவாலாயினும் வெளிவிருத்தத்தாலாயினும் பாதாதிகேசம் கேசாதிபாதம் முறை பிறழாது தொடர்வுறப் பாடுவது.

**3. அட்டமங்கலம் :**

கடவுளைப்பாடி அக்கடவுள் காக்க என ஆசிரிய விருத்தம் எட்டில் அந்தாதித்துக் கூறுவது.

**4. அநுராகமாலை :**

தலைவன் கனவின்கண் ஒருத்தியைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து இனிமையுறப் புணர்ந்ததைத் தன் உயிர்ப்பாங்கற்கு உரைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவால் கூறுவது.

61 – 62

**5. அரசன் விருத்தம் :**

பத்துக் கலித்துறையும் முப்பது விருத்தமும் கலித்தாழிசையுமாக மலை கடல் நாட்டு வருணனையும், நில வருணனையும், வாள்மங்கலமும், தோள்மங்கலமும் பாடி முடிப்பது. இது முடிபுனைந்த வேந்தற்கு ஆம்.

**6. அலங்கார பஞ்சகம் :**

வெண்பா, கலித்துறை, அகவல், ஆசிரிய விருத்தம், சந்த விருத்தம் இவ்வகையே மாறி மாறி நூறு செய்யுள் அந்தாதித்துப் பாடுவது.

**7. ஆற்றுப்படை :**

அகவற்பாவால் விறலி, பாணர், கூத்தர், பொருநர் இந்நால்வருள் ஒருவர் பரிசிற்குப் போவாரைப் பரிசுபெற்று வருவார் ஆற்றிடைக்கண்டு தலைவன் கீர்த்தியும் கொடையும் கொற்றமும் சொல்வது.

**8. இணைமணிமாலை :**

வெண்பாவும் அகவலும் வெண்பாவும் கலித்துறையுமாக இரண்டிரண்டாக இணைத்து, வெண்பா அகவல் இணைமணி மாலை, வெண்பாக் கலித்துறை இணைமணிமாலை என நூறு நூறு அந்தாதித்தொடை நான்காலும் பாடுவது.

**9. இயன்மொழி வாழ்த்து :**

இக்குடிப் பிறந்தோர்க்கு எல்லாம் இக்குணம் இயல்பு என்றும், அவற்றை நீயும் இயல்பாக உடையை என்றும் இன்னோர்போல நீயும் இயல்பாக ஈ என்றும் உயர்ந்தோர் ஒருவனை வாழ்த்துவதாகக் கூறுவது.

### 10. இரட்டைமணிமாலை :

முறையானே வெண்பாவும் கலித்துறையும் இருபஃது அந்தாதித் தொடையான் வருவது. நேரிசை வெண்பாப் பத்தும் ஆசிரிய விருத்தம் பத்தும் அந்தாதித் தொடையால் பாடுவதும் ஆம்.

### 11. இருபா இருபஃது :

பத்து வெண்பாவும் பத்து அகவலும் அந்தாதித் தொடையான் இருபது இணைந்து வருவது.

### 12. உலா :

இளமைப் பருவம் உற்ற தலைமகனைக் குலம், குடிப்பிறப்பு, மங்கலம், பரம்பரை இவற்றால் இன்னான் என்பது தோன்றத் தலைமையாய மாதர் நெருங்கிய வீதியிடத்து அவன் பவனிவரப் பேதை முதலிய ஏழு பருவப் பெண்களும் தொழ உலா வந்ததாக நேரிசைக் கலிவெண்பாவால் கூறுவது.

### 13. உலாமடல் :

கனவில் ஒரு பெண்ணைக்கண்டு கலவி இன்பம் நுகர்ந்தோன் விழித்தபின் அவள்பொருட்டு மடல் ஊர்வேன் என்பதைக் கலிவெண்பாவால் முற்றுவிப்பது.

### 14. உழத்திப் பாட்டு :

கடவுள் வணக்கம், முறையே மூத்த பள்ளி இளைய பள்ளி குடும்பன் வரவோடு அவன் பெருமை கூறல், முறையே அவர் வரலாறு, நாட்டு வளன், குயில்கூக் கேட்டல், மழைவேண்டிக் கடவுள் பரவல், மழைக்குறி ஓர்தல், ஆற்றின் வரவு, அதன் சிறப்புக் காண்டல், இவற்றிற்கு இடையிடை அகப்பொருள் துறையும் கூறிப் பண்ணைத் தலைவன் வரவு, பள்ளிகள் இருவர் முறையீடு, இளையாளை அவன் உரப்பல், பள்ளன் வெளிப்படல்,

பண்ணைச் செயல் வினவல், அவன் அது கூறல், ஆயரை வருவித்தல், அவர் வரல், அவர் பெருமை கூறல், மூத்த பள்ளி முறையீடு, குடும்பன் கிடையிருந்தான் போல வரல், அவனைத் தொழுவில் மாட்டல், அவன் புலம்பல், மூத்த பள்ளி அடிசில் கொடுவரல், அவன் அவளோடு கூறல், அவன் அவளை மன்னித்தல் கேட்க வேண்டல், அவள் மறுத்தல், அவன் சூளுறல், அவள் அவனை மீட்கவேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல், விதை முதலிய வளம் கூறல், உழவர் உழல், காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவன் எழுந்து வித்தல், அதைப் பண்ணைத் தலைவற்கு அறிவித்தல், நாறுநடல், விளைந்த பின் செப்பம் செயல், நெல் அளத்தல், மூத்த பள்ளி முறையீடு, பள்ளிகளுள் ஒருவர்க்கு ஒருவர் ஏசல் என இவ்வுறுப்புக்கள் உறப் பாட்டுடைத்தலைவன் பெருமை ஆங்காங்குத் தோன்றச் சிந்தும் விருத்தமும் விரவி வர இவற்றால் பாடுவது.

**15. உழிஞை மா**

மாற்றரது ஊர்ப்புறம் சூழ உழிஞைப் பூமாலை சூடிப் படை வளைப்பதைக் கூறுவது.

**16. உற்பவ மாலை :**

திருமால் பிறப்புப் பத்தினையும் ஆசிரிய விருத்தத்தால் கூறுவது.

**17. ஊசல் :**

ஆசிரிய விருத்தத்தான் ஆதல் கலித்தாழிசையான் ஆதல் சுற்றத்தோடும் பொலிவதாக ஆடீர் ஊசல், ஆடாமோ ஊசல் எனச் செய்யுள் தோறும் முடிக்கும் சொல்வரப் பாடுவது.

**18. ஊர் நேரிசை :**

பாட்டுடைத்தலைவன் ஊரினைச் சார நேரிசை வெண்பாவால் தொண்ணூறேனும் எழுபதேனும் ஐம்பதேனும் பாடுவது.

**19. ஊர் வெண்பா :**

வெண்பாவால் ஊரைச் சிறப்பித்துப் பத்துச் செய்யுள் கூறுவது.

**20. ஊரின்னிசை :**

பாட்டுடைத்தலைவன் ஊரினைச்சார இன்னிசை வெண்பாவால் தொண்ணூறேனும் எழுபதேனும் ஐம்பதேனும் பாடுவது.

**21. எண் செய்யுள் :**

பாட்டுடைத்தலைவனுடைய ஊரினையும் பெயரினையும் பத்து முதல் ஆயிரம் அளவும் பாடி எண்ணால் பெயர் பெறுவது.

**22. எழு கூற்றிருக்கை :**

ஏழு அறை ஆக்கிக் குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமையால் ஒன்று முதலாக ஏழ் இறுதியாக முறையானே பாடுவது.

**23. ஐந்திணைச் செய்யுள் :**

புணர்தல் முதலிய ஐந்து உரிப்பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலிய ஐந்திணையினையும் கூறுவது.

**24. ஒருபா ஒருபஃது :**

அகவலும் வெண்பாவும் கலித்துறையும் ஆய இவற்றில் ஒன்றால் அந்தாதித் தொடையால் பத்துப் பாடுவது.

**25. ஒலியலந்தாதி :**

பதினாறுகலை ஓரடியாக வைத்து, இங்ஙனம் நாலடிக்கு அறுபத்துநான்கு கலை வகுத்துப் பல சந்தமாக வண்ணமும் கலை வைப்பும் தவறாமல் அந்தாதித்து முப்பது செய்யுள் பாடுவது ; சிறுபான்மை எட்டுக் கலையானும் வரப்பெறும். அன்றியும் அகவல் வெண்பா கலித்துறை ஆகிய இம்மூன்றையும் பப்பத்தாக அந்தாதித்துப் பாடுவதும் ஆம்.

**26. கடிகை வெண்பா :**

தேவரிடத்தும் அரசரிடத்தும் நிகழும் காரியம் கடிகை அளவில் தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவால் கூறுவது.

**27. கடைநிலை :**

சான்றோர் சேணிடை வருதலால் பிறந்த வருத்தம்தீர, வாயில் காக்கின்றவனுக்கு 'என்வரவினைத் தலைவற்கு இசை' எனக் கடைக்கண் நின்று கூறுவது.

**28. கண்படை நிலை :**

அரசரும் அரசரைப்போல்வாரும் அவைக்கண் நெடிது வைகியவழி மருத்துவரும் அமைச்சரும் முதலியோர் அவர்க்குக் கண் துயில்கோடலைக் கருதிக் கூறுவது

**29. கலம்பகம் :**

ஒருபோகும் வெண்பாவும், கலித்துறையும், முதற்கவி உறுப்பாக முற்கூறி, புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் இப்பதினெட்டு உறுப்புக்களும் இயைய, மடக்கு மருட்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா ஆசிரிய விருத்தம் கலிவிருத்தம் கலித்தாழிசை வஞ்சி விருத்தம் வஞ்சித்துறை வெண்டுறை என்னும் இவற்றால் இடையே வெண்பா கலித்துறை விரவி, அந்தாதித் தொடையால் முற்றுறக் கூறுங்கால் தேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், வைசியர்க்கு ஐம்பதும், வேளாளருக்கு முப்பதுமாகப் பாடுவது.

**30. காஞ்சிமாலை :**

மாற்றார் ஊர்ப்புறத்துக் காஞ்சிமாலை சூடி ஊன்றலைக் கூறுவது.

**31. காப்பியம் :**

அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கனுள் ஒன்றும் பலவும் குறைந்து ஏனைய உறுப்புக்கள் மேல் (பெருங்காப்பியம்) கூறியவாறு இயல்வது.

**32. காப்புமாலை :**

தெய்வம் காத்தலாக மூன்று செய்யுளானும், ஐந்து செய்யுளானும், ஏழு செய்யுளானும் பாடுவது.

**33. குழமகன் :**

கலிவெண்பாவால் மாதர்கள் தம் கையில் கண்ட இளமைத் தன்மை உடைய குழமகனைப் புகழ்ந்து கூறுவது.

**34. குறத்திப்பாட்டு :**

தலைவன் பவனி வரவு, மகளிர் காமுறுதல், மோகினி வரவு, உலாப் போந்த தலைவனைக் கண்டு மயங்கல், திங்கள் தென்றல் முதலிய உவாலம்பனம், பாங்கி உற்றது என்னென வினவல், தலைவி பாங்கியோடு உற்றது கூறல், பாங்கி தலைவனைப் பழித்துக்கூறல், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறல், தலைவி பாங்கியைத் தூது வேண்டல், தலைவி பாங்கியோடு தலைவன் அடையாளம் கூறல், குறத்தி வரவு, தலைவி குறத்தியை மலைவளம் முதலிய வினவல், குறத்தி மலைவளம் நாட்டுவளம் முதலிய கூறல், தலைவன் தல வளம் கிளைவளம் முதலிய கூறல், குறி சொல்லி வந்தமை கூறல், தலைவி குறி வினவல், குறத்தி தெய்வம் பராவல், குறி தேர்ந்து நல்வரவு கூறல், தலைவி பரிசில் உதவி விடுத்தல், குறவன் வரவு, புள் வரவு கூறல், கண்ணிகுத்தல், புட்படுத்தல், குறத்தியைக் காமுற்றுத் தேடல், குறவன் பாங்கனொடு குறத்தி அடையாளம் கூறல், குறவன் குறத்தியைக் கண்ணுறல், குறவன் அணி முதலியகண்டு ஐயுற்று வினவலும் ஆட்டாண்டு குறத்தி விடை கூறலுமாகக் கூறல் — பெரும்பான்மையும் இவ்வகை உறுப்புக்களால், அகவல், வெண்பா, தரவு கொச்சகம், கலித்துறை, கழிநெடில் விருத்தம், கலிவிருத்தம் இச்செய்யுள் இடைக்கிடைக்கூறிச் சிந்து முதலிய நாடகத் தமிழால் பாடுவது.

**35. கேசாதி பாதம் :**

கலி வெண்பாவால் முடி முதல் அடி அளவும் கூறுவது.

**36. கைக்கிளை :**

ஒருதலைக் காமத்தினை ஐந்து விருத்தத்தால் கூறுவது, அன்றி. வெண்பா முப்பத்திரண்டு செய்யுளால் கூறுவதும் ஆம்.

**37. கையறு நிலை :**

கணவனொடு மனைவி கழிந்துழி அவர்கட்பட்ட அழிவுப் பொருள் எல்லாம் பிறர்க்கு அறிவுறுத்தித் தாம் இறந்து படாது ஒழிந்த ஆயத்தாரும் பரிசில் பெறும் விறலியரும் தனிப்படர் உழந்த செயலறு நிலையைக் கூறுவது.

**38. சதகம் :**

அகப்பொருள் ஒன்றன் மேலாதல், புறப்பொருள் ஒன்றன் மேலாதல் கற்பித்து நூறு செய்யுள் கூறுவது.

**39. சாதகம் :**

திதிநிலை, வாரநிலை, நாள்மீன்நிலை, யோகநிலை, கரணநிலை, ஓரைநிலை, கிரகநிலை, இவ்வேழ்வகை உறுப்புக்கள் நிலையையும் சோதிட நூலால் நன்கு உணர்ந்து அவற்றை அமைத்து அவற்றால் தலைவற்கு உறுவன கூறுவது. மற்றும் யுகாதியாண்டு முதலி யனவும் கொள்க.

**40. சின்னப்பூ :**

நேரிசை வெண்பாவால் அரசனது சின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்து விரித்து நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது என்னும் எண்படக் கூறுவது.

**41. செருக்களவஞ்சி :**

போர்க்களத்திலே அட்ட மனிதர் உடலையும், யானை குதிரை உடலையும் பேயும் பிசாசும் கழுகும் பருந்தும் காகமும் தின்று களித்து ஆரவாரமாய் இருக்க, பூதமும் பேயும் பாடி ஆட இங்ஙனம் இருந்த சிறப்புப் பாடுவது. இதையே **பறந்தலைச் சிறப்புப் பாட்டும்** என்ப.

**42. செவியறிவுறூஉ :**

பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண் அவிதல் கடன் என அவையடக்கியற் பொருளுற வெண்பா முதலும் ஆசிரியம் இறுதியுமாகப் பாடுவது.

**43. தசாங்கத்தயல் :**

அரசன் தசாங்கத்தினை ஆசிரிய விருத்தம் பத்தினால் பாடுவது.

**44. தசாங்கப் பத்து :**

நேரிசை வெண்பாவால் அரசன் படைத்த தசாங்கத்தினைப் பத்துச் செய்யுளால் கூறுவது.

**45. தண்டகமாலை :**

வெண்பாவால் முந்நூறு செய்யுள் கூறுவது. இது **வெண் புகழ்ச்சி மாலை** எனவும் படும்.

**46. தாண்டகம் :**

இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்தும் குருவும் லகுவும் ஒத்து வந்தன அளவியல் தாண்டகம் எனவும், எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வந்தன அளவழித் தாண்டகம் எனவும் வரும்.

**47. தாரகை மாலை :**

அருந்ததிக் கற்பின் மகளிர்க்கு உள்ள இயற்கைக் குணங்களை வகுப்பால் கூறுவது. தூசிப்படையின் அணியைப் புகழ்ந்த வகுப்பு என்பாரும் உளர்.

**48. தானை மாலை :**

அகவலோசையில் பிறழாது ஆசிரியப்பாவான் முன்னர் எடுத்துச் செல்லும் கொடிப்படையைக் கூறுவது.

**49. தும்பை மாலை :**

மாற்றரோடு தும்பைப்பூ மாலை சூடிப் பொருவதைக் கூறுவது

**50. துயிலெடை நிலை :**

தன் வலியால் பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசற்கு நல்ல புகழினைக் கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலெடுப்புதலாகப் பாடுவது.

**51. தூது :**

ஆண்பாலாரும் பெண்பாலாரும் அவரவர் காதற்பாணன் முதலிய உயர்திணையோடும் கிள்ளை முதலிய அஃறிணையோடும் சொல்லித் ‘ தூது போய் வா ’ எனக் கலிவெண்பாவால் கூறுவது.

**52. தொகைநிலைச் செய்யுள் :**

நெடிலடிச் செய்யுளால் தொகுத்தது நெடுந்தொகையும், குறளடிச் செய்யுளால் தொகுத்தது குறுந்தொகையும் கலிப்பாவால் தொகுத்தது கலித்தொகையும் போல்வன.

**53. நயனப்பத்து :**

கண்ணினைப் பத்துச் செய்யுளால் கூறுவது.

**54. நவமணிமாலை :**

வெண்பா முதலாக வேறுபட்டபாவும் பாவினமுமாக ஒன்பது செய்யுள் அந்தாதித்துப் பாடுவது.

**55. நாமமாலை :**

அகவலடியும் கலியடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவால் ஆண்மகனைப் புகழ்ந்து பாடுவது.

**56. நாற்பது :**

காலமும் இடமும் பொருளும் ஆகிய இவற்றுள் ஒன்றனை நாற்பது வெண்பாவால் கூறுவது.

**57. நான்மணிமாலை :**

வெண்பாவும் கலித்துறையும் விருத்தமும் அகவலும் அந்தாதித் தொடையாக நாற்பது பாடுவது.

**58. நூற்றந்தாதி :**

நூறு வெண்பாவினாலேனும் நூறு கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையால் கூறுவது.

**59. நொச்சி மாலை :**

புறத்து ஊன்றிய மாற்றாருக்கு ஓடலின்றி நொச்சிப் பூமாலை சூடித் தன்மதில் காக்கும் திறம் கூறுவது.

**60. பதிகம் :**

ஒரு பொருளைக் குறித்துப் பத்துச் செய்யுளால் கூறுவது.

**61. பதிற்றந்தாதி :**

பத்து வெண்பா பத்துக் கலித்துறை பொருட்டன்மை தோன்ற அந்தாதித்துப் பாடுவது.

## சிறப்பு விதி

**915.** ஒருசார் விலங்கும் அதுஎன மொழிப.

**இஃது ஒருசார் மாவிற்கு எய்தும் சிறப்புக் கூறுகின்றது.**

**இ – ள் : மக்கள் யாக்கையில் பிறந்து ஆறறிவு உற்ற உயிரினங்கள் வினைவயத்தான் விலங்காய்ப் பிறந்துழியும் முன்னை ஆறறிவு உறுதலும் ஒரோவழி உண்டு என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. (155)**

### விளக்கம்

*கசேந்திரன், சடாயு போல்வார் விலங்காகவும் பறவையாகவும் தோன்றினர் எனினும் பண்டைப் பிறப்பின் நினைவால் மன உணர்வு உடையராயினர் என்பது.*

*'மாடு பற்றி இடங்கர் வலித்திட*
*கூடு பற்றிய கொற்றவற் கூயதோர்*
*பாடு பற்றிய உணர்வின் பயத்தினல்*
*வீடு பற்றிய விலங்கும் விலங்கதோ.' – கிட். வாலி. 115*

*'சிந்தை நல்லறத் தின்வழிச் சேறலால்*
*பைந் தொடித்திரு வின்பரி வாற்றுவான்*
*வெந்தொ ழில்துறை வீடுபெற் றெய்திய*
*எந்தை யும்எரு வைக்கர சல்லனே.' – கிட். வாலி. 116*
*155*

## ஆண்பால் மரபு பெயர்கள்

**916.** ஏறும் ஏற்றையும் ஒருத்தலுங் களிறும்
சேவும் சேவலும் இரலையுங் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் உம்பலும்
போத்தும் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பால் பெயர்என மொழிப.

இஃது அஃறிணை இடத்து ஆண்பாற்கு உரிய மரபுபெயர் இவை எனத் தொகுத்து உணர்த்துகின்றது.

இ–ள்: ஏறு என்பது முதல் கடுவன் என்பது ஈருகக் கிடந்த பதினைந்தும் அவைபோல்வன பிறவும் அஃறிணை ஆண்பாற்கு உரிய பெயர்களாம் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

**அவை உணர்த்துமாறு :**

களிறு என்பது வேழத்து ஆணினையும் பன்றி ஆணினையும், ஒருத்தல் என்பது யானை பன்றி புல்வாய் புலி மான் கவரி கராம் எருமை இவையிற்றின் ஆணினையும், ஏறு என்பது பன்றி புல்வாய் உழை கவரி எருமை மரை பெற்றம் சுறு இவையிற்றின் ஆணினையும், போத்து என்பது பெற்றம் எருமை புலி மரை புல்வாய் மயில் எழாஅல் நீர் வாழ் சாதியுள் அறுவகைப் பிறப்பு இவையிற்றின் ஆணினையும், இரலையும் கலையும் புல்வாய் முசு இவையிற்றின் ஆணினையும், மோத்தையும் தகரும் உதளும் உம்பலும் யாட்டின் ஆணினையும், கண்டி என்பது எருமை ஏற்றினையும், கடுவன் என்பது குரங்கின் ஏற்றினையும் பூனை ஏற்றினையும், சேவல் என்பது மயில் அல்லாத சிறகோடு கூடிய பறவை ஆணினையும், ஏற்றை என்பதும் ஆண் என்பதும் எல்லா ஆணினையும் உணர்த்தலாம். (156)

விளக்கம்

**களிறு :**

*'வேழக்கு உரித்தே விதந்து களி றென்றல்*
*கேழற் கண்ணும் கடிவரை யின்றே.'* – தொல். பொ. 589

**ஒருத்தல் :**

*'புல்வாய் புலிஉழை மரையே கவரி*
*சொல்லிய கராமோடு ஒருத்தல் ஒன்றும்.'* „ 590

**62. பயோதரப் பத்து :**

முலையினைப் பத்துச் செய்யுளால் கூறுவது.

**63. பரணி :**

போர் முகத்து ஆயிரம் களிற்றியானையைக் கொன்ற வீரனைத் தலைவனாகக் கொண்டு கடவுள் வாழ்த்தும், கடை திறப்பும், பாலை நிலனும், காளிகோயிலும், பேய்களோடு காளியும், காளியோடு பேய்களும் சொல்லத் தான் சொல்லக்கருதிய தலைவன் சீர்த்தி விளங்கலும், அவன் வழியாகப் புறப்பொருள் தோன்ற வெம்போர் வழங்க விரும்பலும் என்றிவையெல்லாம் இருசீரடி முச்சீரடி ஒழித்து ஒழிந்தவற்றடியாக ஈரடிப் பஃறொழிசையால் பாடுவது.

**64. பல்சந்தமாலை :**

பப்பத்துச் செய்யுள் ஒவ்வோர் சந்தமாக நூறு செய்யுள் கூறுவது.

**65. பவனிக்காதல் :**

உலாக் காட்சியால் எய்திய காமம் மிக்கால் அதைப் பிறரோடும் உரைத்து வருந்துவது.

**66. பன்மணிமாலை :**

கலம்பகத்துள் வரும் ஒருபோகும் அம்மானையும் ஊசலும் இன்றி ஏனைய உறுப்புக்கள் எல்லாம் அமைய அவ்வாறு கூறுவது. இதையே கலம்பக மாலை என்ப.

**67. பாதாதிகேசம்.**

கலி வெண்பாவால் அடிமுதல் முடி அளவும் கூறுவது.

**68. பிள்ளைக்கவி :**

காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் இவற்றை முறையே அகவல் விருத்தத்தால் பப்பத்தாகக் கூறுவது ஆண்பால் பிள்ளைக்கவி. இவ்வுறுப்பினுள் கடை மூன்று ஒழித்துக் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைக் கூட்டி மேற்சொல்லியவாறு கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவியாம்.

**69. புகழ்ச்சிமாலை :**

அகவலடியும் கலியடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவால் மாதர்களது சீர்மையைக் கூறுவது.

**70. புறநிலை :**

நீ வணங்கும் தெய்வம் நின்னைப் பாதுகாப்ப நின் வழி வழி மிகுவதாக எனக் கூறுவது.

**71. புறநிலை வாழ்த்து :**

வழிபடு தெய்வம் நிற்புறங்காப்பப் பழிதீர் செல்வமொடு ஒருகாலைக்கு ஒருகால் சிறந்து பொலிவாய் என வெண்பா முதலும் ஆசிரியம் இறுதியுமாகப் பாடுவது.

**72. பெயர் நேரிசை :**

பாட்டுடைத்தலைவன் பெயரினைச் சார நேரிசை வெண்பாவால் தொண்ணூறேனும், எழுபதேனும், ஐம்பதேனும் பாடுவது.

**73. பெயரின்னிசை :**

பாட்டுடைத்தலைவன் பெயரினைச் சார இன்னிசை வெண்பாவால் தொண்ணூறேனும், எழுபதேனும், ஐம்பதேனும் பாடுவது.

**74. பெருங்காப்பியம் :**

தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் இவற்றிற்கு இயைய வாழ்த்து முன்னுளதாய், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளும் பயக்கும் நெறியுடைத்தாய், நிகரிலாத் தலைவனை உடைத்தாய், மலையும் கடலும் நாடும் நகரும் பருவமும் இருசுடர்த் தோற்றமும் என்று இவற்றின் வளம் கூறுதலும், மணமும் முடி கவித்தலும் பொழில் விளையாட்டும் நீர் விளையாட்டும் உண்டாட்டும் மகப்பேறும் புலவியும் கலவியும் என்று இவற்றைப் புகழ்தலும், மந்திரமும் தூதும் செலவும் போரும் வெற்றியும் என்று இவற்றைத் தொடர்ந்து கூறலும் ஆகிய இவை முறையே தொடர்புறச் சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் என்னும் பகுதியை உடைத்தாய் வீரம் முதலிய சுவையும் அவற்றை விளக்கும் கருத்தும் விளங்கக் கற்றோரால் இயற்றப்படுவதாம். நாற்பயன் ஒழிந்து ஏனைய உறுப்புக்களுள் சில குறைந்து இயலினும் குற்றமின்று.

**75. பெருமகிழ்ச்சிமாலை :**

தலைவியின் அழகு குணம் ஆக்கம் சிறப்பு இவற்றைக் கூறுவது.

**76. பெருமங்கலம் :**

நாடோறும் தான் மேற்கொள்ளுகின்ற சிறை செய்தல் முதலிய செற்றங்களைக் கைவிட்டுச் சிறைவிடுதல் முதலிய சிறந்த தொழில்கள் பிறத்தற்குக் காரணமான நாளிடத்து நிகழும் வெள்ளணியைக் கூறுவது.

**77. போர்க்கெழுவஞ்சி :**

மாற்றார்மேல் போர்குறித்துப் போகின்ற வயவேந்தர் வஞ்சிப்பூமாலை சூடிப் புறப்படும் படைஎழுச்சிச் சிறப்பை ஆசிரியப்பாவால் கூறுவது.

**78. மங்கலவள்ளை :**

உயர்குலத்து உதித்த மடவரலை வெண்பா ஒன்பதாலும் வகுப்பு ஒன்பதாலும் பாடுவது.

**79. மணிமாலை :**

எப்பொருள்மேலும் வெண்பா இருபதும் கலித்துறை நாற்பதும் விரவி வருவது.

**80. முதுகாஞ்சி :**

இளமை கழிந்து அறிவு மிக்கோர் இளமை கழியாத அறிவில் மாக்கட்குக் கூறுவதாம்.

**81. மும்மணிக்கோவை :**

ஆசிரியப்பாவும், வெண்பாவும், நேரசையும் நிரையசையும் கொண்டு எழுத்தெண்ணிப் பாடப்படும் கலித்துறையும் முறையே தொகை முப்பது பெற அடுக்கிய அந்தாதித் தொடையால் பாடுவது.

**82. மும்மணிமாலை :**

வெண்பாவும் கலித்துறையும் அகவலும் அந்தாதித் தொடையால் முப்பது பாடுவது.

**83. மெய்க்கீர்த்திமாலை :**

சொற்சீரடி என்னும் கட்டுரைச் செய்யுளால் குலமுறையில் செய்த கீர்த்தியைக் கூறுவது.

**84. வசந்தமாலை :**

தென்றலை வருணித்துப் பாடுவது.

**85. வரலாற்று வஞ்சி:**

குலமுறை பிறப்பு முதலிய மேம்பாட்டின் பல சிறப்பையும் கீர்த்தியையும் வஞ்சிப்பாவால் கூறுவது.

**86. வருக்கக்கோவை:**

அகரம் முதலாகிய எழுத்து வருக்கம் மொழிக்கு முதலாம் எழுத்து முறையே காரிகைத்துறைப் பாட்டாகப் பாடுவது.

**87. வருக்கமாலை:**

மொழிக்கு முதலாம் வருக்க எழுத்தினுக்கு ஒவ்வொரு செய்யுள் கூறுவது.

**88. வளமடல்:**

அறம் பொருள் இன்பம் ஆகிய அம் முக்கூறுபாட்டின் பயனை எள்ளி, மங்கையர் திறத்து உறும் காம இன்பத்தினையே பயன் எனக் கொண்டு, பாட்டுடைத் தலைமகன் இயற்பெயருக்குத் தக்கதை எதுகையாக நாட்டி உரைத்து, அவ்வெதுகைபடத் தனிச் சொல்இன்றி இன்னிசைக் கலிவெண்பாவால் தலைமகன் இரந்து குறை பெறுது மடல் ஏறுவதாய் ஈரடி எதுகைவரப் பாடுவது.

**89. வாகைமாலை:**

மாற்றுரை வென்று புகழ் படைத்து வாகைமாலை சூடுவதை ஆசிரியப்பாவால் கூறுவது.

**90. வாதோரணமஞ்சரி:**

கொலைபுரி மதயானையை வயப்படுத்தி அடக்கினவர்கட்கும், பற்றிப் பிடித்துச் சேர்த்தவர்கட்கும் வீரப்பாட்டின் சிறப்பை வஞ்சிப்பாவால் தொடுத்துப் பாடுவது.

**91. வாயுறை வாழ்த்து :**

வேம்பும் கடுவும் போல்வனவாகிய வெஞ்சொற்கள் முன்னர்த் தாங்கக் கூடாவாயினும் பின்னர்ப் பெரிதும் பயன்தரும் என மெய்ப்பொருளுற வெண்பா முதலும் ஆசிரியம் இறுதியுமாகக் கூறுவது.

**92. விருத்த இலக்கணம் :**

வில் வாள் வேல் செங்கோல் யானை குதிரை நாடு ஊர் குடை இவ்வொன்பதனையும் பப்பத்து விருத்தத்தால் ஒன்பது வகையுறப் பாடுவது.

**93. விளக்கு நிலை :**

வேலும் வேற்றலையும் விலங்காது ஓங்கியவாறு போலக் கோலோடு விளக்கும் ஒன்றுபட்டு ஓங்குமாறு ஓங்குவதாகக் கூறுவது.

**94. வீரவெட்சிமாலை :**

சுத்த வீரன் மாற்றூர் ஊரில் சென்று பசுநிரை கோடற்கு வெட்சிப்பூ மாலை சூடி அவ்வண்ணம் போய் நிரை கவர்ந்து வரில், அவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப் போய்வந்த வெற்றி பாடுவது.

**95. வெற்றிக்கரந்தை மஞ்சரி :**

பகைவர் கொண்ட தம் நிரை மீட்போர் கரந்தைப்பூ மாலை சூடிப்போய் மீட்பதைக் கூறுவது.

**96. வேனில்மாலை :**

வேனிலையும் முதுவேனிலையும் சிறப்பித்துப் பாடுவது.



பிற்சேர்க்கை-5

## இந்நூல் குறிப்பிடும் பிரபந்த வகைகளும் அவை பற்றிய நூல்களின் நூற்பா எண்களும்

| | பிரபந்த வகைகள் | இ. வி. பா. | பன். பாட். | வெண். பாட். | நவ. | சித. | பி. ம. | ச. அ. | மு. வீ. | பி. தீ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பிள்ளைத்தமிழ் | 46–51 | 174–198 | 6–8 | 25–13 | 28 | 2, 3 | 68 | 78 | 5 |
| 2 | கலம்பகம் | 52, 53 | 213, 214 | 10–12 | 32–34 | 29, 39 | 4–6 | 29 | 80 | 7 |
| 3 | பன்மணி மாலை | 54 | — | 18 | 5 | 30 | 7 | 66 | 94 | 12 |
| 4 | மும்மணிக்கோவை. | 55 | 262–65 | 13 | 35 | 31 | 13 | 81 | 84 | 7 |
| 5 | அகப்பொருட்கோவை | 56 | 341–43 | 15 | 52 | 30 | 10 | 1 | 81 | 8 |
| 6 | தொகைச் செய்யுள் | 57 | 344–48 | | 3 | 38 | — | 52 | 120 | 18 |
| 7 | இணைமணிமாலை | 58 | 252, 53 | 17 | 36 | 31 | 12 | 8 | 89 | 10 |
| 8 | இரட்டைமணி மாலை | 59 | 254, 55 | 17 | 36 | 31 | 11 | 10 | 88 | 10 |
| 9 | மும்மணி மாலை | 60 | 256 | 16 | 35 | 33 | 20 | 82 | 106 | 14 |
| 10 | நான்மணி மாலை | 61 | 257–59 | 16 | 35 | 33 | 20 | 57 | 91 | 11 |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 11 | இருபா இருபஃது | 62 | 339, 40 | 17 | 36 | 31 | 15 | 11 | 128 | 21 |
| 12 | ஒருபா ஒருபஃது | 63 | 338 | 18 | 15 | 34 | 23 | 24 | 127 | 21 |
| 13 | ஒலி அந்தாதி | 64 | 267–69 | 13 | 38 | 31 | 14 | 25 | 121 | 18 |
| 14 | இன்னிசை | 65 | 288 | 14 | 10 | — | — | 20, 73 | 131, 32 | 22 |
| 15 | வருச்கமாலை | 66 | 283 | 36 | 5 | 33 | 19 | 87 | 98 | 12 |
| 16 | கைக்கிளை | 67 | 295–97 | 15 | 41 | 36 | 30 | 36 | 148, 49 | 20 |
| 17 | மங்கலவள்ளை | 68 | 302–04 | 32 | 9 | 36 | 27 | 78 | 150 | 26 |
| 18 | பிறிதோரிரட்டை மணிமாலை | 69 | — | 36 | — | — | — | — | — | — |
| 19 | நேரிசை | 70 | — | 14 | 10 | — | — | 18, 72 | 133 | 23 |
| 20 | மெய்க்கீர்த்தி | 71 | — | — | 7 | — | — | 83 | 99 | 13 |
| 21 | காப்பு மாலை | 72 | — | — | 6 | — | — | 32 | 100 | 13 |
| 22 | வேனில்மாலை | 73 | — | — | 6 | — | — | 96 | 101 | 13 |
| 23 | பல்சந்த மாலை | 74 | 251 | 9 | 37 | 35 | 24 | 64 | 93 | 11 |

| | பிரபந்த வகைகள் | இ. வி. பா. | பன். பாட். | வெண். பாட். | நவ. பாட். | சித. பாட், | பி. ம. | ச. அ. | மு. வீ. பி. தீ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 24 | அங்கமாலை | 75 | — | 29 | 42, 43 | 35 | 26 | 2 | 85 | 9 |
| 25 | வசந்த மாலை | 76 | — | — | 4 | — | — | 84 | 102 | 13 |
| 26 | நவமணி மாலை | 77 | 294 | 24 | 50 | 34 | 23 | 54 | 90 | 11 |
| 27 | பரணி | 78, 79 | 242-45 | 38, 39 | 54-59 | 40 | 40 | 63 | 79 | 6 |
| 28 | தசாங்கப்பத்து | 80 | — | 20 | — | 32 | 16 | 44 | 140 | 25 |
| 29 | பதிற்றந்தாதி | 81 | — | 9 | 37 | 30 | — | 61 | 122 | 19 |
| 30 | நூற்றந்தாதி | 82 | — | 9 | 37 | 30 | 8 | 58 | 123 | 19 |
| 31 | அட்டமங்கலம் | 83 | 300, 01 | 24 | 50 | 34 | 22 | 3 | 86 | 9 |
| 32 | அலங்கார பஞ்சகம் | 84 | — | 22 | 41 | 34 | 21 | 6 | 147 | 24 |
| 33 | ஊசல் | 85 | — | 23 | 49 | 33 | 18 | 17 | 161 | — |
| 34 | சின்னப்பூ | 86 | 239-41 | 20 | — | 32 | 16 | 40 | 164 | — |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 35 | சதகம் | 87 | — | — | 9 | — | 34 | 38 | 156 | — |
| 36 | எண்செய்யுள் | 88 | — | — | — | 38 | — | 21 | 116 | 15 |
| 37 | ஐந்திணைக் கோவை | 89 | — | — | — | — | — | 23 | 82 | 8 |
| 38 | நாழிகை வெண்பா | 90 | 292, 93 | 23 | 18 | 40 | 38 | 26 | 163 | — |
| 39 | நாற்பது | 91 | — | — | — | 38 | — | 56 | 152 | 26 |
| 40 | நயனப்பத்து | 92 | 334 | 25 | 49 | 31 | 15 | 53 | 143 | 23 |
| 41 | பயோதரப்பத்து | 92 | 333 | 25 | 49 | 31 | 15 | 62 | 144 | 23 |
| 42–50 | வில் முதலிய விருத்தம் | 93 | 290 | 21 | 40 | 32 | 17 | 92 | 165 | — |
| 51 | காப்பியம் | 94 | — | 40–43 | 60–63 | 41, 42 | 41, 42 | 31 | செ-9, 10 | — |
| 52 | வளமடல் | 96 | 246–49 | 28 | 46 | 37 | 31 | 88 | 126 | 20 |
| 53 | உலா மடல் | 97 | — | — | -10 | 38 | 32 | 13 | 125 | 20 |
| 54 | உலா | 98–103 | 215-238 | 26, 27 | 44-45 | 37 | 31 | 12 | 124 | 19 |

| | பிரபந்த வகைகள் | இ. வி. பா. | பன். பாட். | வெண். பாட். | நவ. பாட். | சித. பாட். | பி. ம. | ச. அ. | மு வீ, | பி. தீ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 55 | அநுராகமாலை | 104 | — | — | 4 | 37 | 33 | 4 | 87 | 9 |
| 56 | மெய்க்கீர்த்தி மாலை | 105 | 313, 314 | 34 | 51 | 36 | — | — | — | — |
| 57 | புகழ்ச்சி மாலை | 106 | 285-87 | 35 | 47 | 36 | 29 | 69 | 96 | 12 |
| 58 | நாம மாலை | 106 | 284 | 35 | 47 | 36 | 29 | 55 | 92 | 11 |
| 59 | தாரகை மாலை | 107 | 305 | 32 | 8 | 38 | 36 | 47 | 108 | 13 |
| 60 | உற்பவ மாலை | 108 | 298, 99 | 25 | 50 | 39 | 37 | 16 | 104 | 13 |
| 61 | தானை மாலை | 109 | — | 31 | 8 | 38 | 35 | 48 | 105 | 14 |
| 62 | வரலாற்று வஞ்சி | 109 | — | 37 | 47 | 39 | 39 | 85 | 111 | 15 |
| 63 | செருக்களவஞ்சி | 109 | 319 | 37 | 47 | 39 | 39 | 41 | 112 | 16 |
| 64 | பலபொருள் வஞ்சி | 109 | — | 31 | 47 | — | — | — | — | — |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 65 | குழமகன் | 110 | — | 26, 27 | 44 | — | — | 33 | 153 | 26 |
| 66 | பாதாதி கேசம் | 111 | 332 | 29 | 42, 43 | 35 | 26 | 67 | 145 | 24 |
| 67 | கேசாதி பாதம் | 111 | — | 29 | 42, 43 | 35 | 26 | 35 | 146 | 24 |
| 68 | உலாத் தொழில் | 112 | 270-82 | 33 | 48 | 39 | 39 | — | — | — |
| 69-72 | ஆற்றுப்படைகள் | 113 | 320-22 | 30 | 51 | 35 | 25 | 7 | 129 | 21 |
| 73 | தூது | 114 | — | — | — | 33 | 33 | 51 | 151 | — |

பிற்சேர்க்கை 6

# தொல்காப்பியனார் காலத்துச் செய்யுள் வகைகள்

1. அங்கதச் செய்யுள்
2. அவையடக்கியல்
3. ஆற்றுப்படை
4. இயன்மொழி வாழ்த்து
5. உரைச் செய்யுள்
6. ஊரொடு தோற்றம்
7. ஓம்படை
8. கடைக்கூட்டு நிலை
9. கண்படை நிலை
10. கந்தழி
11. கல்நடுதல்
12. களவழி
13. குடைநாட்கோள்
14. குடைநிழல் மரபு
15. குரவைப்பாட்டு
16. கைக்கிளை
17. கையறுநிலை
18. கொடிநிலை
19. கொற்றவள்ளை
20. செவியறிவுறூஉ
21. துயிலெடைநிலை
22. பிசி
23. புறநிலைவாழ்த்து
24. பூவைநிலை
25. பெருமங்கலம்
26. மண்ணுமங்கலம்
27. முதுமொழி
28. வள்ளி
29. வள்ளைப்பாட்டு
30. வாள்மங்கலம்
31. வாயுறைவாழ்த்து
32. வாள்நாட்கோள்
33. விளக்குநிலை
34. வெறியாட்டு
35. வேள்விநிலை முதலியன.

பிற்சேர்க்கை 7

# பிற்காலச் செய்யுள் வகைகள்

1. அம்மானை
2. அலங்காரம்
3. அனந்தல்
4. அநுபூதி
5. அஷ்டகம்
6. ஆனந்தக் களிப்பு
7. உந்தியார்
8. எச்சரிக்கை
9. ஏணிஏற்றம்
10. ஏலப்பாட்டு
11. ஏற்றப்பாட்டு
12. ஒயில்கும்மி
13. ஓடப்பாட்டு
14. கட்டியம்
15. கண்ணி
16. கப்பல்பாட்டு
17. கவசம்
18. காவல்
19. கிளிக்கண்ணி
20. கீதை
21. கீர்த்தனம்
22. கும்மி
23. குழமணிதூரம்
24. சமுத்திரவிலாசம்
25. சாழல்
26. சிங்காதனப் பாட்டு
27. சிங்கிப்பாட்டு
28. சிந்து
29. சிலேடை வெண்பா
30. வீட்டுக்கவி
31. சேவல்பாட்டு
32. சோபனம்
33. தண்டிசைக் கவிதை
34. தாலாட்டு
35. திக்விசயம்
36. திருக்கோலக் கவிதை

37. திருப்பணிமாலை
38. திருப்புகழ்
39. துதி
40. தும்பிப் பாட்டு
41. தெம்மாங்கு
42. நலுங்கு
43. நாடகம்
44. நாமாவளி
45. நிரோட்டக யமக அந்தாதி
46. நொண்டி நாடகம்
47. பஞ்சகம்
48. பஞ்சரத்தினம்
49. பத்து
50. பதம்
51. பதிகம்
52. பந்தடிப் பாட்டு
53. பல்லாண்டு
54. பள்ளியெழுச்சி
55. பாமாலை
56. பாவைப்பாட்டு
57. புலம்பல்
58. பொங்கத்தம்பொங்கம்
59. மயில்பாட்டு
60. மாலை
61. முளைப்பாட்டு
62. லாலி
63. லீலை
64. வகுப்பு
65. வண்ணம்
66. வரிப்பாட்டு
67. வாகனமாலை
68. வில்லுப்பாட்டு
69. விலாசம்
70. வினவெண்பா – முதலாகப் பல உள.

[ குறிப்பு : இவை நவநீதப் பாட்டியல் பிற்சேர்க்கையிலிருந்து எடுக்கப்பட்டவை. ]



# இலக்கண விளக்கம் - பாட்டியல்
## சுருக்கெழுத்து விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | — | அகநானூறு. |
| இராமா. | — | கம்பராமாயணம். |
| இ. வி. | — | இலக்கண விளக்கம். |
| இ. வி. பு. | — | இலக்கண விளக்கம் – புறத்திணையியல். |
| கலி. | — | கலித்தொகை. |
| கிட். வாலி. | — | கிட்கிந்தா காண்டம் – வாலிவதைப் படலம். |
| குறுந். | — | குறுந்தொகை. |
| ச. அ. | — | சதுரகராதி. |
| சித. பாட்.<br>சிதம். பாட். | — | சிதம்பரப் பாட்டியல். |
| சிந்தா. | — | சீவகசிந்தாமணி. |
| திருமுருகு. | — | திருமுருகாற்றுப்படை. |
| திவா. | — | திவாகரம். |
| தொல். | — | தொல்காப்பியம். |
| தொ. சொ.<br>தொல். சொல். | — | தொல்காப்பியம் – சொல்லதிகாரம். |
| தொ. பொ.<br>தொல். பொ. | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம். |
| தொ. பொ. உரை | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம் – உரையாசிரியர் உரை. |
| தொ. பொ. நச். | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம் – நச்சினார்க்கினியர் உரை. |
| தொ. பொ. பே. | — | தொல்காப்பியம் – பொருளதிகாரம் – பேராசிரியர் உரை. |
| தொ. வி. | — | தொன்னூல் விளக்கம். |
| நன். | — | நன்னூல். |
| நவ. | — | நவநீதப் பாட்டியல். |
| பன். பாட். | — | பன்னிரு பாட்டியல். |

| | | |
|---|---|---|
| பி. தீ. | — | பிரபந்த தீபிகை. |
| பி. ம. | — | பிரபந்த மரபியல். |
| புறநா. | — | புறநானூறு. |
| பெரும்பாண். | — | பெரும்பாணாற்றுப்படை. |
| மாறன். | — | மாறன் அலங்காரம். |
| மு. வீ. அ. செ. | — | முத்துவீரியம் – அணியதிகாரம் – செய்யுளியல். |
| மு. வீ. யா.<br>மு. வீ. யா. ஒ. | — | முத்துவீரியம்-யாப்பதிகாரம்-ஒழிபியல். |
| யா. கா. | — | யாப்பருங்கலக் காரிகை |
| வரை. பா. | — | வரையறுத்த பாட்டியல். |
| வீ. சோ. | — | வீரசோழியம். |
| வெண். பாட். | — | வெண்பாப்பாட்டியல் – மொழியியல். |
| வெண். பாட். செ. | — | வெண்பாப் பாட்டியல் – செய்யுளியல். |
| வெண். பாட். பொ. | — | வெண்பாப் பாட்டியல் – பொதுவியல். |
| வெண். பாட். மே. | — | வெண்பாப் பாட்டியல் மேற்கோள். |



## அச்சுப்பிழையும், திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 111 | 16 | அஆ | ஆஓ |
| 113 | 21 | 468 | 840 |
| 137 | 8 | பண். | பன். |
| 151 | 6 | மன் | உன் |
| 153 | தலைப்பு | 45, 46 | 45 |
| 182 | 26 | 13 | 31 |
| 239 | 16 | ஆரி | ஆறி |
| 239 | 16 | தாளை | தானை |
| 249 | 9 | 29 | 39 |
| 250 | 21 | பண். | பன். |
| 253 | 16 | உயிரே | உகிரே |
| 293 | 12 | 281 | 391 |
| 295 | 2 | யாப்ப | யாத்த |
| 295 | 12 | 312 | 392 |
| 331 | தலைப்பு | 151, 152 | 180 |

பிறவும் உளவேல் திருத்திக் கொள்க.

'வார்கோட்டு யானையும் பன்றியும் அன்ன.' – தொ.பொ. 591

'ஏற்புடைத்து என்ப எருமைக் கண்ணும்.' ,, 592

**ஏறு :**

'பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறுஎனப் படுமே.' ,, 593

'எருமையும் மரையும் பெற்றமும் அன்ன.' ,, 594

'கடல்வாழ் சுறவும் ஏறுஎனப் படுமே.' ,, 595

**போத்து :**

'பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே.' ,, 596

'நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய.' ,, 597

(முதலை, இடங்கர், கராம், சுறு, வரால், வாளை.)

'மயிலும் எழாலும் பயிலத் தோன்றும்.' ,, 598

**இரலை, கலை :**

'இரலையும் கலையும் புல்வாய்க்கு உரிய.' ,, 599

'கலைஎன் காட்சி உழைக்கும் உரித்தே.' ,, 600

'நிலையிற்று அப்பெயர் முசுவின் கண்ணும்.' ,, 601

**மோத்தை, தகர், உதள், அப்பர் :** (உம்பல்)

'மோத்தையும் தகரும் உதளும் அப்பரும் (உம்பலும்)
யாத்த என்ப யாட்டின் கண்ணே.' ,, 602

**கண்டி :**

'எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்' ,, 623

**கடுவன் :**

'குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்' ,, 623

**(பூனையைக் கடுவன் என்றல் பிற்கால வழக்கு.)**

**சேவல் :**

'சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே.' – *தொ. பொ. 603*

**ஏற்றை :**

'ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிளவி 'உரித்தென மொழிப.' ,, *604*

**ஆண் :**

'ஆண்பால் எல்லாம் ஆண் எனற்கு உரிய.' ,, *605*

ஒத்த நூற்பாக்கள்

*முழுதும் – தொல். பொ. 557 பே.* *156*

## பெண்பால் மரபு பெயர்கள்

917. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகுங் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.

**இது பெண்ணிற்கு உரிய மரபுபெயர் இவை எனத் தொகுத்து உணர்த்துகின்றது.**

**இ-ள் : பேடை முதலாகப் பிடி ஈருகச் சொல்லப் பட்ட பதின்மூன்றும் பெண்ணினை உணர்த்தும் பெயர் களாம் என்றவாறு.**

**அவை உணர்த்துமாறு : பேடை பெட்டை என்பன ஒட்டகம் குதிரை மரை இவையிற்றின் பெண்ணினையும், புள்ளின் பெண்ணினையும்,**

**அளகு என்பது கோழி கூகை மயில் இவையிற்றின் பெண்ணினையும்,**